உ

# கந்தபுராணம்

## (வசனம்)

இது

திருப்பாதிரிப்புலியூர்

ஞானியார் மடாலயத்து

மகா சந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ

சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்

மாணவர்

வித்துவான்

என். வி. முத்துக்கிருஷ்ண ரெட்டியாரவர்கள்

இயற்றியது

கே. பழனியாண்டிப் பிள்ளை கம்பெனி,

திருவல்லிக்கேணி,

சென்னை.



[விலை ரூ. 2-8-0

# முகவுரை

அநாதி நித்த சித்துருவாகிய சிவபெருமான் உலகுயிர்த் தொகை உய்யும் வண்ணம் தாமே ஆறுமுகனைத் திருவுருக் கொண்டார் என்பதும் அவ்வாறுள் வடிவத்தின் திருத்தோற்றத்தைக் குறித்து எழுதப் பட்ட அருமை நூல்களும் பாடப்பட்ட அழகிய செய்யுட்கள் எண்ணிறந்தன என்பதும் யாவரும் அறிந்த உண்மைகளாம். முருகப் பெருமான் திருவவதாரத்தைப் பற்றி உரைக்கும் நூல்கள் யாவற்றினும் சிறந்தது கந்தபுராணமே ஆகும். அதுவே முருகவேள் வரலாற்றை முற்ற முடிய நவரசம் பொருந்த இனிய தமிழ்ச் செய்யுட்களால் சைவ சித்தாந்த நெறிதிறம்பாமல் கூறிச் செல்கின்றது. கந்த புராணத்தைச் சைவர் படனஞ்செய்தலோடு அமையாது பூசித்தும் வழிபாடு செய்கின்றனர். பிறசமயத்தாரும் முருகனை வழிபட்டும் அவன் அற்புத மான்மியம் நனிவிளங்கும் திருப்புகழ்ப் பாடல்களை இசையுடன் ஓதியும் இன்புற்று வருகின்றனர். ஆகலால் கந்தன் அருமை பெருமைகளை அனைவரும் அறியவேண்டுவது இன்றியமையாததாகும். கந்த புராணம் செய்யுள் வடிவத்திலே பரந்து இருத்தலின் அதனைப் பயிலுவோர் இலக்கண இலக்கியப் பயிற்சி உடையவராக இருந்தால் அன்றி அது மிக்க பயன் விளைக்கமாட்டாதாகும். இப்போதுள்ள வசன நூல்களும் மிக விரிந்தும் செய்யுட்களின் போக்கைத் தழுவாமலும் எழுதப் பட்டிருக்கின்றன. இக்குறையெல்லாம் நீங்கும்பொருட்டும் கந்தர் சஷ்டிவிரதம் அனுட்டிப்போர் ஆறு நாட்களில் முழுதும் பாராயணம் செய்துமுடித்துச் சித்தியடையும் பொருட்டும் பொருத்தமாக இந்நூல் தெள்ளிய இனிய செந்தமிழ் நடையிலே கந்தபுராணச் செய்யுட்களின் கருத்துக்களையும் முறைமையையும் தழுவிச் சுருக்கமாக வித்துவான் ஸ்ரீ முத்துக்கிருஷ்ண ரெட்டியார் அவர்களால் எழுதப்பட்டுள்ளது. இதனைப் படிப்போர் மனமுருகி அன்புவசப்பட்டு முருகதாசர்களாக விளங்குவார் என்பது திண்ணம். இத்தகைய அரிய நூலிலே கண்ணுக்கினிய திருவுருவப்படங்கள் சிலவற்றையும் சேர்த்திருக்கிறோம். இதனைப் பெண்பாலாரும் சிறுவரும் முதியோரும் எளிதில் படித்து உணரலாகும். இது தமிழழகு பூத்துச் சைவசித்தாந்த நறுமணம் வீசி, பத்தித் தேன் சொட்டி ஞானக்கனிந்து நிற்றலைக் கண்டு அன்பர்கள் நுகர்ந்து இன்புறுவார்களாக.

பதிப்பாளர்.

# பொருளடக்கம்.

## படங்கள்

சிவமயம்.

# நூல் வரலாறு

திசட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயக
னகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்

உலககாரணனாகிய சிவபெருமான் திருவருளால் தோன்றிய வேத முதலிய முதனூல்கள் முன்னொருகாலத்தில் ஆன்மாக்கள் செய்த தீவினையின் காரணமாகத் தலைதடுமாற்றங் கொண்டன. அதனால் திருமால் முதலிய தேவர்கள் ஒன்று கூடி நாம் இவற்றை ஒழுங்குபடுத்துவதென்றால் அசாத்தியமாகும், ஆனதால், யாம் சிவபெருமான் சந்நிதியில் விண்ணப்பிப்போமென்று, திருக்கைலையை அடைந்து, நந்திதேவர் உத்திரவால் சிவ சந்நிதானம் அடைந்து துதித்து நின்றார்கள்.

அதற்கிரங்கிய சிவபெருமான், உங்கள் அரசியல் நன்றாய் நடக்கின்றனவோ? என்று வினவ அவர்கள், பெருமானை நோக்கி,: இறைவனே! தேவரீர் கிருபையால் செவ்வனே நடக்கின்றன: ஆயினும், ஆன்மாக்கள் மாயையால் மூடப்பட்டுத் தேவரீர் பரத்துவத்தை உறுதியாக எண்ணாமல் எங்கள் மேலேற்றி ஒப்பிடுகின்றார்கள், அந்தணர் முதலியோர் தத்தம் வருணத்திற் கோதிய ஒழுக்கத்திற்றவறி நடக்கின்றனர். ஆதலால், இத்தீமைகள் ஒழிய அருள்புரிய வேண்டுமென்று வேண்டினார். சிவபெருமான், திருமாலே! ன்கலைகளில் ஒன்றைக் கொண்டு வியாசமுனியாக அவதாரஞ் செய்து, வேதங்களை ஆராய்ந்து, நான்காகத் தொகுத்து, மாணாக்கராயினார்க்கு உபதேசிப்பாய்; வேதாகமங்களுக்கு மாறுபாடில்லாத பதினெண்புராணங்களையும், நந்திதேவனுக்கு அருளினோம். அவன், சனற்குமாரனுக்கு உபதேசித்தான் அவனிட[illegible]ல அப்புராணங்களைக் கேட்பாயாக என்றருளிச்செய்தனர். அவ்வருளைப்பெற்ற அனைவரும், தத்தம் பதிபுகுந்

திருந்தனர். பின்னர்த் திருமால், பிரமனது மரபில் பராசர முனிவன் யோசனைகந்தியைச்சேர, அவ்விருவர்க்குப் புதல்வனாய் அவதரித்துச் சிலநாள் கழித்துப் பதரிவனமடைந்து, இறைவன் திருவருளால் வேதாக மாதி பலகலைகளையும் ஓதாதுணர்ந்து வாதராயணனென்னுங் காரணப் பெயர்பெற்றிருந்தான். வேதங்களைத் தொகுத்தமையான், வேதவியாச னெனப் பெயரிய அவன், சனற்குமாரமுனிவனிடம் புராணம் பதி னெட்டனையுங் கேட்டு, ஐயமறத் தன்மனத்தமைத்தான். வேதங்களை யறிந்த நுண்ணறிவால் வேதாந்தசூத்திரஞ்செய்து, அவற்றை அவ் வேதங்களோடு பயிலவர், வைசம்பாயனர், சைமினி, சுமந்து என்னும் நால்வருக்கும் போதித்தருளினன். பிறகு வியாசமுனிவன் ஆணையின் படி அந்நால்வரும், வணங்கும் மாணாக்கருக்குப் பக்குவம் நோக்கி உணர்த்தி வந்தார்கள். வியாசபகவான் அருளால் வேதபுராணங்க ளெல்லாம் உலக முழுமையும் பரந்தன.

புராணம் பதினெட்டனுள் சிவபுராணம் பத்து; விஷ்ணு புராணம் நான்கு ; பிரமபுராணம் இரண்டு ; சூரிய புராணம் ஒன்று ; அக்கினி புராணம் ஒன்று ; அச்சிவவபுராணம் பத்தினுள் அறுமுகன்திரு வவதார முதலியவற்றைக் கூறுங் கந்தபுராணத்தைத் தொகைவகை விரியாற் கூறுவேனென்று முனிவரை நோக்கிச் சொல்லத் தொடங்கி னன் சூதமுனிவன்.

தக்ஷப்பிரஜாபதிக்கு மகளாகிய தாக்ஷாயணி யென்னும் இறைவி யானவள், அப்பெயரை ஒழிக்கக் கருதி, மலையரசன் தவத்தால் அவன் விருப்பப்படி மகளாயவதரித்து, அவனிடம் வளர்ந்துவந்தாள்.

காசிபமுனிவனுக்கு மாயையினிடம் சூரபன்மன் முதலிய மூவர் தோன்றிச் சிவபெருமானைக் குறித்துத் தவமியற்றிப் பெருஞ் செல்வ மடைந்திருந்தனர். அவருள் சூரபன்மன் மகேந்திர நகரத்திலிருந்து ஆயிரத்தெட்டு அண்டங்களையுங் கொடுங்கோன்மையால் ஆண்டுவந் தான். இஃது இவ்வாறாகத் திருக்கைலையில் சனகர் முதலிய நால் வர்க்கும் மோனமாகிய ஞானநிலையினைக்காட்டி சிவபெருமான் அமர்ந் திருந்தருளினன். சூரன் கொடுஞ்செயல்களைப் பொறுக்ககில்லாத தேவரிற் சிலர், சிறைப்பட்டு மாழ்க, சிலர் மறைப்பட்டு நொந்து பிரம னோடுகலந்து, மீனக்கொடியோனை இறைவனது மோன நிலையைக் கலைக்கும்படி விட, அவன் அத்தொழிலுக்கு முயன்று, சிவபெருமான் நெற்றிக்கண் தீயினால் சாம்பராயினன்.

பிறகு சிவபெருமான் முனிவ ரெழுவரை யனுப்பி இமாசலனி டம் பெண்பேசித் திருமணத்திற்குச் செல்லப் பூதகணங்கள் ஒருங்கு சூழ்ந்த பாரத்தினால் வட திசை தாழ, அது சமமாக அகத்தியனைத் தென் திசைக்குச் செலுத்தி, மலைமகளை மணந்து, மன்மதனை உயிர்ப் பித்தருளினன், அதன்பின் திருக்கைலாயத்தில் அமர்ந்தருளித் தனது ஆறு முகங்களினு முள்ள ஆறு நெற்றிக்கண்களால் ஆறுதீப் பொறிவுருவாய்க் குமார மூர்த்தியைத்தந்து, ஒன்பது வீரர்களையும், இலக்கந் தம்பிமார்களையும் அக்குமாரனுக்கு உதவியாகும்படி அம்மை யின் காற்சிலம்பின் மணிகளினின்றுந் தோன்றச் செய்தான். குழந்தை வடிவாகி வளர்ந்த அக்குமரன், அற்புதத் திருவிளையாடல் பலபுரிந்து அறியாது அவமதித்துப் போர்புரிந்த தேவரைக்கொன்று, வியாழபக வான் வேண்டுகையால் மீண்டுமவரை யெழுப்பித் தன் காட்சிதந்தருளி னன்.

பிறகு நாரதனியற்றிய வேள்வியிற் றோன்றிய தகரை, உலகினரை நலியாவண்ணம் வாகனமாக்கி அடக்கியும், பிரமன், ஓமெனும் பொருட்கு உரைதெரியாது மயங்க, அவனைக் குட்டிச் சிறையிலிட்டுத் தான் சிருட்டித்தொழிலை நடாத்தியும், இறைவன் கேட்க அவனுக்கு ஆசானாக எழுந்தருளி அப்பொருள் கூறியும், வழிபட்ட அகத்திய னுக்கு வேதாகமப் பொருளை உபதேசித்துமிருந்தான். பிறகு சிவ பெருமான், சூரன் முதலியோரைக் கொன்று தேவர்களிடரைத் தீர்க் கக் கடவையென்ன, அவ்வாறே தாரகனைக் கொன்று, தேவர் பூஜை ஏற்றுத் தென்திசை நோக்கிச்சென்று, இறைவன் அமர்ந்த பதிபலவும் சென்று பூஜித்துத் திருச்சேய்ஞலூரிற் பெருமானை வணங்கிப் பாசு பதம் பெற்றுத் திருப்பரங்குன்றிற் செல்லச் சரவணப் பொய்கையில் மீன்களாயிருந்துத் தனதருளால் சாப நீங்கி, அங்கு வசிக்கும் பரா சரன் புதல்வர்கள் அறுவரும் வந்தனர். பெருமான் அவரை நோக்கி யாம் இங்குவருவோம், அச்சமயம் வேதாகமங்களின் முடிவுப் பொருள் களை யுமக்கு அருளுவமென்று விடையளித்துப் பிறகு திருச்செந் தூரை யடைந்து, சூராதிகள் வரலாற்றை வியாழபகவானாற்கேட்டு, வீரபாகுவைச் சூரனிடந் தூதனுப்பி, அச்சூரன் இசையாமையால் படைகொடு மகேந்திர நகரடைந்து, சூரன் கிளைஞர் முதலியோரைச் சங்கரித்துச் சூரன் மார்பையும் வேற்படையாற் பிளந்து நிற்க, அவன்

மயிலுஞ் சேவலுமாக உருவெடுத்துவர, மயிலைவாகனமாக்கியும், சேவலைக்கொடியாக்கியும் அருள்புரிந்தான்.

மீண்டு சென்றகுமாரன், திருச்செந்தூரிற் சிலநாள்தங்கிப் பின் பரங்குன்றடைந்து, அங்குத் தெய்வயானையம்மையைத் திருமணமுடித்துப் பராசரர்புதல்வருக்கு வேதாகம முடிவுணர்த்தி, இந்திரனுக்கு விண்ணரசீந்துத் தேவசேனாபதி யென்னுந் திருநாமங்கொண்டருளித் தெய்வயானையம்மையாரொடு திருக்கைலை யடைந்து, இறைவனைவணங்கிக் கந்தகிரியடைந்துப் பின்தொண்டை நாட்டின்கணுள்ள திருத்தணிகைமாமலையை அடைந்தருளினான். இவ்வாறிருக்க ஓர்நாள் நாரதமுனிவன் சென்று வணங்கி, வள்ளிமலையில் மான்வயிற்றிற் பிறந்து, வேடரால் வளர்க்கப்பட்டு வள்ளிநாயகி யென்னுந் திருநாமத்தையடைந்துள்ள அப்பெண்ணின் அழகு முதலியவற்றை யெடுத்துரைத்தான் ஆறுமுகன், அவளை மணம்புரிய விரும்பி அம்மலையை அடைந்து, அவளுக்குப் பலதிருவுருக்களைக் காட்டித் தமிழிற்குப் பரமாசாரியனாகிய தான், களவியற் பொருளை உண்மையெனக் காட்டுதற்கேற்ப அக்களவியலுக்கு இலக்கியங் காட்டத் துணிவு கொண்டு, களிறுதரு புணர்ச்சியால் வள்ளியைக்கொண்டு செல்ல, அதனையறிந்த வேடர்கள் தொடர்ந்து போர் செய்ய, அவர்களைத் தன்கொடிச்சேவலின் பேரொலியால் மயங்கி வீழ்ந்திறக்கச் செய்து, பின்னர் அம்மையால் அவர்களை யெழுப்பி, அவளையுந் திருமணம் புரிந்துசென்று அவளோடு தணிகைவரையில் சிலபகல் வைகியருளினான்.

பிறகு கந்தகிரியை யடைந்து தெய்வயானையார், வள்ளிநாயகியார் ஆகிய இருவரும் கிரியாசக்தி, இச்சாசக்திகளாக இருபுறம் வீற்றிருக்கத் திருக்கரத்தில் வேற்படையாகிய ஞானசக்தியை ஏந்தி யெழுந்தருளியிருந்தா னென்று சூதமுனிவன், கூற அதனைக் கேட்டமுனிவர், இதனைப் பத்தியோடுங்கேட்போம் இதுபோல வேறு கந்தையைக்கேட்க விருப்பமில்லேம், இதனைச் சுருக்கி யுரைத்த அடிகள் விரித்துரைக்க வேண்டுமென்று பணிய, அவர்களின் பணிவுக்கிரங்கிய சூதமுனிவன், குமாரக்கடவுளின் சரிதத்தை விரித்துக் கூறத்தொடங்கினான்.

சுபம்.

உ

சிவமயம்

ண்முகக் கடவுள் துணை

# கந்த புராணம்

## முதலாவது

## உற்பத்தி காண்டம்

### திருக்கயிலாயப் படலம்

திருக்கயிலாய மலையானது தன்னை வழிபடும் அன்பருக்குப் பாசத்தை நீக்கி அருள் பாலிக்கும் இறைவன் தன்மையெனத் தன்னை யடைந்தாரது ஒளியை மாற்றித் தனது சிறந்த ஒளியை வீசுவது; கங்காதரனாகிய சிவபெருமான் ஏறும் இடபமும், அவனது திருநீற்றுக் கோலமும், அவனைத் தெளிந்த அன்பரது உள்ளமும் போலத் திகழ்வது; தேன்பிலிற்றுங் கொன்றையங்கானும் வில்வமுஞ் செறிந்த நற்பூஞ் சோலையைச் சிரத்தினுடைமையானும், வான்யாறு தவழப்பெறும் வண்மையினானும், அன்று ஆலமுண்டவனைப் பொருவியது. அது ஆயிரங்கோடி சந்திரர்கள் ஒருங்கே உதித்தாற் போன்று ஒளி வீசப்பெற்று நந்திதேவனால் காவல் செய்யப்பட்டுள்ளது. இந்திரன் முதலிய தேவரும் முனிவரும் நெருங்கி நின்று வணங்குவதும், அரமகளிர் ஆடல் பாடல் புரிவதும், தன் சிகரத்தால் மேலுள்ள சுவர்க்க லோகங்களையும் அடியால் அதோ லோகங்களையும் ஊடுருவித் தாண்டியதாயு மிருக்கும்.

அடிமுடி காண்டதற் கரிதாகிய அம்மலையினிடை மாற்றுயர்ந்த பொன்மலை போன்று மணித்தொகுதிகளின் ஒளி வீசப் பொற்கோயி லொன்று பொலிவுறும். அதனுள் மணிமண்டபமும், அதனிடை ஆதனங் குயிற்றிய அரியாசனமும் விளங்க, அதன்மேல் சருவலோக மாதாவாகிய உமாதேவியாரொடு இறைவனாகிய சிவபெருமான் வீற்றிருந்து, வழிபடும் அடியவருக்கு அனுக்கிரகத்தைச் செய்தருளுவன்

## பார்ப்பதிப் படலம்

அங்ஙனம் அமர்ந்திருக்குங்கால் உமையம்மையார், பரமபதியை நோக்கி ஒன்றியம்பத் தொடங்கினள்:—"நான் தேவரீரிடத்து அன்பில்லாத தக்ஷனுக்கு மகளாகித் தாக்ஷாயணி யென்னும் பெயரையுடையளாக இருப்பது எனக்கு மனக்கவலையை உண்டு பண்ணுகிறது. ஆதலின், அவன் சம்பந்தமாகிய இப்பெயரினை ஒழிக்க எண்ணினேன்." அதனைக்கேட்ட சிவபெருமான், "நீ கொண்ட கருத்து மிகவும் நன்று. அதற்கியைய மலையரசன் நம்மாட்டு அன்பு மிகுதியால், உன்னைத் தன் மகளாகப்பெற்று எனக்குத் திருமணஞ் செய்துகொடுக்கக் காதலுடையனாய்க் கடுந்தவம் இயற்றுகின்றான். நீ அவனுக்குப் புதல்வியாய்ச் சென்று தவமியற்றுதி" என்றருளினார். அம்மையும் அவ்வாறே இமாசலத்திற் கேகி அதனிடத்துள்ள தாமரைத் தடாகத்தில் ஒரு தாமரை மலரின் மேல் குழந்தைத் திருவுருவங் கொண்டிருந்தனள்.

அதனருகே தவங்கிடந்த மலையரசன், அக்குழந்தையைக் கண்டு, தன் தவத்தின் பயனெனக் கருதி, எடுத்துக் கண்ணினில் அன்பு நீர்வார ஏந்திச் சென்று, தன் மனைவி மேனை என்பாளிடத்துக் கொடுக்க, அவளிடைத் தலையன்பு கிடந்தமையால், இருதனமும் பால் சொரியப் பெற்றனள். பின்னர் மேனையானவள், அக்குழந்தையை அணிகளணிந்து அழகு பார்த்து ஆனந்தங் கொண்டு, வளர்த்து வருங்கால், ஐந்தாண் டெல்லை அணுகியது. அப்பெண்கள் திலகம், "இறைவனை நோக்கித் தவஞ்செய்ய எண்ணினேன். அவனையே நாயகனாகக் கருதினேன்; ஆதலின், இம்மலையின் ஓர் சார் தவச் சாலையிலிருந்து நோற்பேன், விடைதருவீர்." என்றாள். அதற்கு மலையரசன், "ஐந்து வயதில் தவமியற்றலாகாது. உடல் வருந்தும் வேண்டாம்" என்றனன். அம்மையானவள், இறைவனிடத்து வைத்த அன்பினைத் தடை செய்யற்கவென்று அவன் இணங்கு மாற்றாற் கூறி, விடைபெற்றுத் தவமுயன்றிருந்தாள். அவளைச் சூழத் தவத்திற்குக் காவலாய்ப் பல சேடிமார்களிருக்கவும், வைகலும் அக்கிரியரசனும் மேனையும் சென்று அவளது தவத்தைப் போற்றிச் சென்றனர்.

இவ்வாறு அம்மை தவமியற்ற அங்குத் திருக்கயிலையில் அம்மை பிரிந்த பின்னர், சிவபெருமான் செய்தவற்றை இனிக் கூறத் தொடங்குவாம். காசிப முனிவனுக்கு மாயையால் தோன்றிய சூரபன்

மன் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் அரசு புரிந்து வந்தான்.' அக் காலத்தில் சனகனை முதலிட்ட முனிவர் நால்வரும் தவஞ் செய்து திருக்கயிலையை அடைந்து நந்திதேவன் ஆணையால் சிவபரஞ்சுடரைத் தரிசித்து வணங்கி ஆகமப் பொருளை அருள வேண்டினர். பெருமான், அவர்களுக்கு ஆகமத்தின் மூன்று பாதப்பொருளை யுபதேசித்து, ஞான பாதத்தை யுணர்த்த அருள் கூர்ந்து, அது வாக்கினுற் சொல்லக்கூடிய தன்று, இவ்வாறு சும்மாவிருத்தலே என்று தன் ஞானமுத்திரை யமைத்த திருக்கரத்தை மார்பி லமைத்து, ஒரு கணப்பொழுது யோகஞ் செய்வார்போன் றிருந்தருளினுன். முனிவர் நால்வரும் அவனருளால் ஞானபாத முணர்ந்து மோனத் திருந்தனர். நந்திபகவான் இறைவன் ஆணையின்படியே கிழக்குவாயிலில் காவல்போற்றியிருந்தான். அவ்வாறு நிகழ்ந்த ஒருகணம், மற்றைப் பிரமன் முதலியோருக்கு யுகங்கள் பலவா யின. அஃதன்றி விண்ணுறைவோரும் பெண்மயக்கின்றி, மண்ணுறை வோரும் மகளிரை விழையாது அருந் துறவினர்போல் அவாவற்றிருந் தனர். நிற்க.

சூரபதுமனுல் இடுக்கண் அடைந்த இந்திரன் தன்னகர்விட்டுக் கயிலையை யடைந்து தவமியற்றினுன். சிவபெருமான் எழுந்தருளி, வேண்டுவதியாதென, இந்திரன், சூரனைக் கொன்று விண்ணுல களிக்க அடியேன் வேண்டினே னென்ன, அதற்கு இறைவன், "நீ அஞ்சல், அஞ் சல், நம்பால் மதலையொருவன் உதிப்பன், அவனே உங்கள் வாழ்வினை யளிப்பன்" என்றுரைத்து மறைந்தருளினுன். பின்னர் இந்திரன், சிவ பெருமானு யோகிபோல் அமர்ந்திருக்கின்றுன், அம்மையோ அருந்தவ மியற்றுகின்றுள், இவர்பாற் குமரன் தோன்றுதல் எவ்வாறெனக் கலங் கத் தன் பட்டமகிஷியாகிய அயிராணியை மனோவதி நகரிற் கொண்டு போய்த் தன் ஆசான் மனைவியிடத்தே விட்டுத் தான் தேவர்களோடு சென்று பிரமனை யடைந்து தன் குறைகளைக் கூறினுன். பிரமன், வந்த தேவர்களோடும் விண்டுவினிடஞ் சென்று சிவபெருமான் யோகம் செய்வதும், அதனுல் உலகம் அசைவற்றிருப்பதும் தனது சிருட்டித் தொழில் நடவாததும் இயம்பிச் சூரனுல் பொறுக்க இயலாத் துன்ப மனுபவித்தலையும் பகர்ந்து தீர்வுக்கு வழியென்னை யென்று துதித்து நின்றனர். அதற்குத் திருமகள் கணவன் கூறுகின்றுன்:—"சிவபெரு மான் மோனநீங்கி உமையை மணந்தாலன்றி நங்குறையனைத்தும் தொலை யாதாகலான், அவ்வாறவனை மயலுறுத்துதற்கு ஞானிகளை யெல்லாம்

பெண்மயக்கில் அழுத்துவோனுகிய மன்மதனுல். அன்றி ஏனையோரால் இயலாது. ஆனதால், அவனை அழைத்துச் சிவபெருமான் மோனத்தின் நீங்கி மயலுறுமாறு செய்வித்தால் உமையை மணந்து குமரனை யளிப்பான். நமது இன்னல் நீங்கும். ஆதலால், அதனை விரைந்து செய்ம்மின்' எனவும் பிரமன் சம்மதித்துத் தன்னகர் அடைந்தான். அடைந்து தன் மலர்ப்பீடத்திலிருந்து மீனகேதனனை அவ்வுழி வருமாறு தன் மனத்தின் எண்ணினன்.

## காமதகனப் படலம்

அவன் நினைத்தபடியே மன்மதனனவன் விரைந்தெய்தி, "என்னை வ'ருமாறெண்ணிய தென்கொல்?" என்னவும், பிரமன், "பரமசிவன் கொண்டுள்ள மோன நீங்கி மலைமகளை விரைந்து மணம் புரியுமாறு நின் பூங்கணையால் அவனை மயக்கி வெல்லக் கடவை" என்றான்.

அதற்கவன், இருகாதையும் கைகளாற் பொத்தி "என் தாதையாகிய திருமாலையும், நின்னையும் ஏனைய உயிர்களையும், என் அம்புகளால் மயலுறுத்திக் கலக்கி ஆயிழையாரை அருந்தெய்வ மென்றெண்ணி, அவர் கூறிய ஏவலைக் குறைவிலாக் கிரியையால் அவர்பணியியற்றி அலமரல் அடையச் செய்குத லல்லது கண்ணுதலானைக் கலக்க வல்லேன் கொல்? அவனிடைச் செல்லேன், அவனிடைச் செல்லேன், ஆ! ஆ!" எனக் கூறினன். அம்மொழி கேட்ட பிரமன், "நீ செல்லி னல்லது தேவரடைந்துள துன்பம் நீங்காது; அவர் நிமித்தம் உன்னுயிர் நீங்கினும், உனக்குப் புகழே. நீ செல்ல வேண்டுவ தவசியம்; அவ்வாறன்றித் தடுத்து மொழிவையேல் நின்னைச் சபிப்பன்" என, அம் மீனக்கொடியோன், அச்சாபத்தினும் சிவபெருமானது வெகுளியே சீர்மையுடைத்து என்றெண்ணி நடுக்க மடைந்து, அவ்வாறே செய்வனெனப் பிரமனிடம் விடைபெற்றுத் தன் கருவிகளுடன் திருக்கயிலையை அடைந்து நந்தியம் பண்ணவனைக் கண்ணுற்று நடுங்கி வணங்கி, உற்ற தியம்பி உட்செல்ல வேண்டினன். கேட்ட நந்திபெருமான், "நலமே இவன் செய்கை! 'இவன் வரிற் றடாது ஏனைத்தேவர் வரில் விடாது காக்குதி' என்று பரமன் அன்றே ஆணை தந்துளானன்றே; ஆதலின் இவனைப் பெம்மானிடம் புகவிடுவேம்" என்று கருதி மேலைவாயிலால் ஐங்கணைக் கிழவனை உட்செல அனுப்பினன்.

புகுந்த மன்மதன், கறைமிடற் றிறைவனைக்கண்டு, சரபப்பட்சியைக் கண்ட சிங்கம் கலங்குவது போன்று கலங்கிக் கீழே விழுந்து, இரதி

தேவியின் உபசாரத்தாற் றெளிந்தெழுந்து, முப்புர மெரித்த மோனி யின் எதிரில் முனைந்து நின்றான். நிற்க, இந்திரனை முதலிட்ட தேவர் கள் கூட்டத்தோடு பிரமன், அம்மலையின் ஓர்புறம் பரமனைப் பரவி நின்றான். போர்த்திறம் உன்னி நின்ற காமன், மலர்க்கணை ஐந் தினையும் அறிவன்மேற் செலுத்த, அச் சிவபெருமான் நெற்றிவிழி சிறிதே விழிக்க, அவ்விழிக்கனல் காமனைச் சுட்டுப் பொடி யாக்கியது. அச்செயலைக் கண்ட இரதியானவள், கலங்கி உடல் பதைத் துப் பொடிமேல் விழுந்து புரண்டு,

"நேயமொடு மறைபயிலுந் திசைமுகனைப் புரந்தரனை நின்னைத் தந்த
மாயவனை முனிவர்களை யாவரையும் நின்கணையான் மருட்டி வென்றாய்
ஆயதுபோன் மதிமுடித்த பரமனையு நினைந்திவ்வா றடைவுற்றாயே
தீயழலின் விளக்கத்திற் படுகின்ற பதங்கத்தின் செயலி தன்றோ"

என மொழிந்து புலம்பி நின்றாள்.

## மோன நீங்கு படலம்

காமனை எரித்த கண்ணுதற் பெருமான் பின்னரும் மோனஞ் செய விண்ணவருணர்ந்து, "காமனும் பட்டான், நங்கடுந்துயர் பட்டி லது அந்தோ! என் செய்வது?" என்று ஆவலித்து, அச்சிவனன்றி அரு ளுருவாரில்லையாகலான், அவனையே துதிப்பாமென அணுகிச் சென்று கோ விலின் மாடே குறைமொழிந்து நின்றனர். துதித்து முறை வேண்டிய தேவரை நந்தியம் பண்ணவனால் அழைப்பித்து, வணங்கி நின்ற அவரை நோக்கிக் குறையினை வினவ அவர், "பெருமான் உணராப் பெற்றியு முண்டோ? தேவரீர் உமையை மணப்பதும், குமரனைத் தருவதும், அன்னோன் சூரனைக் கொன்றெம் வாழ்வினை யளிப்பதும், அடியேம் வேண்டும்வரம்" என வணங்கினர். அவர்க்கிரங்கிய சிவபெருமான், "அவ் வண்ணமே செய்குவம் அஞ்சலீர்" என்று அவரை அனுப்பிக் காரிகை இரதியை நோக்கி, "நீ கவலற்க. நம் மண நிகழ்காலை உன் கொழுநனைத் தருதும்" என்றவளையு மனுப்பி, தேவர் நிமித்தம் உமையினை மணக்க விரும்பி, முனிவர் நால்வரையு நோக்கி 'இவ்வாற மோனவரம்பில் நீவுர் நிலைத்து நிற்பிரேல் வீடுபேறு நுமக்கெளிது' என அவர்க்கும் விடை யளித் தருளினன்.

## தவங்காண் படலம்

அம்முனிவர் நீங்கியபின்னர்ச் சிவபெருமான் இமாசலஞ் சென்று மலைமகள் அன்பை அனைவருக்குங் காட்டவிரும்பிச் செஞ்சடையும்,

திருவெண்ணீறும், முப்புரிநூலும், கமண்டலமுமாகிய இவற்றுடன் வயோதிக மறையோர் வடிவுகொண்டு அம்மையின் அருந்தவச் சாலையை அடைந்தருளினன். அங்குள்ளவர், "அருந்தவத்தீர், இவண் புகுந்த காரிய மென்னை?" என்று வினவ, "உமையவள் தவத்தினைக் காணிய வந்தேன்; என் வருகையை அவட்கு அறிவியுங்கள்" என்ன, ஆங்கவர் ஓடி, "அம்மையே! முற்றத் துறந்த முனிவர் ஒருவர்போந்தனர், நின் தவங் காண விரும்பினர்" என்றனர். உமாதேவி, "விரைந்து தம்மின் அருந்துறவினரேல் யானுங் காணுங் காதலுடையேன்" என, அச் சேடியர் அவரை யண்மி அழைத்துச் சென்று உமையவள் அருகில் விடுத்து உபசரித்து நின்றார். அம்மை வணங்கி ஆசனந் தந்து அருகிலிருப்ப அருந்துறவினன் அம்மையை நோக்கிக் கூறுகின்றான். "உமையே, நின்னுடல் வருந்த இக்கடுந்தவ மியற்றல் என்பயன்கருதி?" என்ன "உயிர்ப்பாங்கி விஜயை, ஆலமுண்ட ஐயனை அருமை நாயகனாக அடைதல் வேண்டி" என்றனள். அக்காலை அத்துறவோன், "அவள் அருந்தவத்தினை விரும்பி மணப்பவன் அச்சிவபெருமானோ? வேதமுங் காணு விழுப்பொருளாகிய அவனை யடைதல் ஆ! ஆ! அரிது, இவளது தவமும் அவமாம். ஆதலின், தவத்தினை யொழித்திருத்தல் நலம்" எனக் கூறியதைக் கேட்ட அம்மை, பெருந்தவ மியற்றியும் பெறுவன் சிவனை, அல்லுழி யாக்கையை அழிப்பனென் றுரைத்தாள். அருந்தவன், "உமையே! நீ அவனை யடையினும், அவன் உடை புலித்தோல், ஏறவதெருது, அணி பாம்பு, என்பு வெண்டலை மாலை, உணவு ஆலம், நடம்புரி அரங்குஞ் சுடுகாடாகும். அணியும் பூ நொச்சி, பூசுவ நீறு, கையில் ஏந்துவது அழல் இன்ன மங்கலங்களே அவற்குளவாவன, இவற்றை விரும்பியோ வரைதல் எண்ணினை" என்றான். அவ்வுரை கேட்ட அம்மை, விருப்பு வெறுப்பில்லா இறைவன் இவற்றையெல்லாம் ஆன்மாக்கள் வீடு பெறுதல் கருதிக் கொள்ளுங் கோலங்காண், இறைவன் புகழைச் சிறிதும் அறியாது இகழ்ந்து கூறிய பொய் வேடத்தாய்! நீ புறதது போதி." என்றனள். அருந்தவன், "நங்கையே, நின்னை வேட்டு நலம்பெற வந்தேன்" என்றான். தன் செவி பொத்தித் தாயு மொருபுற மேகினள். அவளன்பின் பெருக்கைக் கண்ட சிவபெருமான், அவ்வேட நீத்து இடபமூர்ந்துடனுய்க் கணங்கள் சூழ ஆகாய வீதியில் காட்சி தந்தருள, அருந்தவரைய் வந்தவர் இவரன்றோ என மனங் கசிந்து பன்முறை வணங்கி அடியாள் செய்த பிழையை மன்னித்தரு

ளல் வேண்டுமென்று இறைஞ்சி நாணி நின்றவளைப் பார்த்து, "நீ யொன றிற்கும் வருந்தாதே. நின்பால் குற்ற மொன்று மிலது. நாளையே யாம் வந்து திருமணமுடிப்பேம்." என்றகன் றருளினன். உமையின் தவத் தால் பரமன் வந்து அருளிய அனைத்தும் மலையரசன் கேட்டு உவந்து அங்குச் சென்று அம்மையை அழைத்துத் தன் அரண்மனை யெய்தினன்.

## மணம் பேசு படலம்

உமையம்மைக்கு அருள் புரிந்து திருக்கயிலை யடைந்த சிவபெரு மான், முனிவரெழுவரைத் தன்னிடம் வருமாறு மனத்தில் நினைத் தருளினன். அஃதுணர்ந்த முனிவர், தம்மாட்டுவைத்த கருணை போலும் சிவபெருமான் தம்மைப் பொருட்படுத்தி அழைத்ததென் றுணர்ந்து, அங்ஙனமே பெருமான் சன்னிதானஞ் சென்றடைந்தார் கள். அம்முனிவரிடம் இறைவன், இமாசலஞ் சென்று மலையரசனைத் தன் மகள் உமையைத் தமக்கு விதிப்படி மணமுடித்துத் தர வினவி வாருங்களெனக் கூறினர். அவர்கள் வணங்கி அவ்வாறே இமாசல மடைந்தனர். முனிவரைக் கண்ட மலையரசன், அவர் திருவடிகளை வணங்கி அன்புகூர்ந்து வந்தகாரியத்தைத் தெரியவேண்டினன். முனிவர், "உன் மகள் உமையை, உயர் பரம்பொருளுக்கு முறைப்படி நன்மணம் பேசவந்தனம், ஈதே அவனது கருத்து" என்றனர். மலையரசன், "என் உமையையும் அளிப்பேன், யானும் அவனடிக்குத் தொண்டனவேன்" என்றான். அயலில் நின்ற அவன் மனைவியாகிய மேனை யென்பாள், "முன்பொரு ஞான்று தக்ஷன் புதல்வி தாக்ஷாயணியைச் சிவபெருமான் மணந்து, அத்தக்கன் மாமனாகிய பின்னர் அவன் தலையைத் தடிந்து ஆட்டின் தலையை அவனுக்கு அமைத்தானல்லவா? அதுபோல் என் கணவன் தலைக்குத் தடுமாற்றந் தந்நீர்கள் போலும்! ஐயோ! உமையை அளித்தல் எவ்வாறியலும்?" என்றனள். முனிவர், "நீ யாதொன் றினுக்கும் இரங்காதே, தக்ஷன்செய்தது மிக்கதாய சிவாபராதம். அவ் வாறு நீங்கள் ஒரு போதுஞ் செய்யமாட்டீர்கள். சிவபெருமான் உங்க ளிடத்து அருளையே பாலிப்பன்" என்று அவனது அளவுகள் எடுத்துக் கூற, மலையரசனும் மேனையும் மணத்திற்கிசைந்து முனிவருக்கு விடை கொடுத்தார்கள். முனிவ ரெழுவரும் திருக்கயிலையை அடைந்து பர மனை வணங்கி நிகழ்ந்தவற்றைக் கூறினார்கள். பெருமான், அவர்க்கு விடை யளிக்கருளினன். அங்கு மலையரசனைவன் தேவ தச்சனை

யழைத்து, பொன்னுலகினும், அளகையினும், அழகுற அமைக்கச் செய்து தன் பரிஜனங்களோடும் கயிலையை அடைந்து நந்தியம் பண்ணவனுல் நாதன் திருமுன்னர் சென்று பணிந்து, "பங்குனி உத்தர நன்னாள் இன்றே யாதலின் உமையைக் கடிமண முடிக்க வரவு அருளுதி" என்று வேண்டினன். பெருமான் தேவர் முதலியோரும் கணங்களுஞ் சூழ அப்பொழுதே வருவதாக மலையரசன் விரைந்து தன் பதியணைந்

அச்சமயத்துச் சிவபெருமான், திருமால், பிரமன் முதலிய தேவரையும் அகில ஜனங்களையும் வருமாறு நந்திதேவனுக்குணர்த்த, அவன் அவ்வாறே நிகழ்த்த, அவர்கள் வந்து பெருமானை வணங்கித் துதித்து, அவரவர் தகுதிக் கேற்ப இருந்தனர். பிரமன், தான் கொணர்ந்த மணியணிகளை அணிய வேண்டுதலும், அவ்வாறே திருக்கரத்தை வைத்து அனுக்கிரகித்துப் பின்னர்த் தன் மேலுள்ள பணிகளை அணிகளாகும்படி சங்கற்பித்து மணக்கோலங் கொண்டு யாவருங் கண்டு வணங்க, இமாசல நோக்கிக் கணங்கள் சூழ எழுந்தருளினன். இவ்வாறு ஞான ரூபமாயுள்ள எற்றின் மீது சிவபெருமான் திகழ்ந்துவர, கணேசர் முன்னின்று துதிக்க, மற்றைத் தேவர்களும் கணங்களுஞ் சூழ்ந்து புகழ் பாடியு மாடியும்வர, எழுந்தருளி வந்த சிவபரஞ்சுடரை இமாசலன் எதிர் சென்று வணங்கித் தன்னகரிடத்து அழைத்துச் செல்ல, அப்பொழுது அவ்வீதிகளில் உள்ளோரது அரகர முழக்கம் கடலொலி போன்று இருந்தது. பிரமன் பத்தினுஞ் சிறந்துள்ளனவும், இலக்குமியும் விரும்பி அமரும் படியான அவ்வீதிகளை நோக்கிக் கொண்டு பராபரையாகிய உமையம்மை எழுந்தருளி யிருக்கும் மாளிகையை அடைந்தருளினன். அரம்பையரையொத்த மாதர் பலர் மங்கல தீர்த்தம் அட்ட மங்கலங்கள் ஆலத்தி முதலிய ஏந்தி உபசரிக்கச் சென்ற ஞான நாயகன் திருவடிகளை மேனையானவள் பசுவின் பாலினுல் அபிடேகஞ் செய்து வணங்கவும், திருமால் பிரமன் முதலியோர் துதித்துப் பாங்கரில் வரவும், நின்மலனுகிய சிவபெருமான், திருமணச் சாலையில் இடப்பட்டு இந்திர நீலத்தா லாக்கியுள்ள ஆசனத்தி லெழுந்தருளி யிருந்தான். அம்மகா சபையின்கண் தேவர் முனிவர் முதலிய அளவிறந்தார் குழுமி இருந்தமையால், பூமியின் வடதிசை தாழ்ந்து தென்திசை உயரவும், அனைவருந் துண்ணென நடுக்கமடைந்தனர். அவர் அச்சம் நோக்கிய சிவ

பெருமான், அகத்திய முனிவனை விளித்து, "நீ நமது ஆணையால் தென் பாலுள்ள பொதிகைக்கு ஏகுவாய். அங்கு நம் மணக்கோலங் காட்டுதும்" என்றனன். அவ்வாணை தாங்கி முனிவனேகி இருப்பப் பூமி சமநிலை யாயது.

பின்னர் உமாதேவியானவள், தேவமாதர்கள் சூழ்ந்து வரவும், திருமாது கைலாகு கொடுக்கவும், கங்கை முதலிய மாதர்கள் கவரி வீசவும், ஏனைய மாதர் பல்பணி இயற்றவும், சென்று திருமணச் சாலையில் அமைத்திருந்த மணப் பீடிகையில் முன்னர் அமர்ந்துள்ள முதல்வனைப் பணிந்து, அவனருளால் பாங்கரில் அமர்ந்தருளினள். அது காலை அளவிறந்த வாத்தியங்கள் இயம்பாநின்றன. மேனையும், மலையரசனும் புனித தீர்த்தம் புஷ்பம் சந்தன முதலியன கொண்டு முன்னவன் திருவடிகளை அபிஷேகித்து, அருச்சனை இயற்றி அவனருள் கொண்டு நிற்ப, திருமணச் சடங்குகள் யாவும் செவ்வனே நடைபெற இமாசலன், அம்மையின் திருக்கரத்தை இறைவன் திருக்கரத்தில் பிடித்துக் கொடுத்து மந்திரவிதிப்படி தாரைவார்த்துக் கொடுத்தான். அந்த விபவத்தைக் கண்ட தேவர் முதலியோர் தாங்கள் எய்துதற்குரிய போக மோக்ஷங்களை எளிதில் எய்தியவராயினா. அப்பொழுது மலையரசன், பசுவின்பால், வாழைக்கனி, பலாக்கனி, நெய், தேன் முதலியன கலந்த திருவமுதைப் பொன்வட்டிலில் கொடுபோந்து இறைவன் திருமுன்னர் வைத்து, அமுது செய்யும்படி வேண்ட, அப்பெருமான் திருக்கரந்தொட்டுப் புனிதமாக்கினன். அவ்வமுதத்தினை வந்திருந்த அனைவருக்கும் வினியோகித்துத் தானும், மேனையும் ஆனந்தக்கடலில் ஆழ்ந்திருந்தனர். நிற்க, கணவனை யிழந்த இரதிதேவியானவள் இறைவனைப் பணிந்து வேண்ட, ஐங்கணைக் கிழவனை அவளுக்கு மாத்திரம் ரூபனாய் ஏனையோர்க்கு அரூபனாயிருக்கும்படி எழுப்பியருளி, அவர்க்கு விடையளித்து, திருமணிப்பீடத்தின் இறைவியோடும் இழிந்து, கணத்தொகை சூழ இடபாரூடனாய் உமையம்மையை ஓர் புறம் இருக்க அருள்புரிந்து, மலையரசனுக்கும், மேனைக்கும், அவர் பரிஜனர்க்கும் அருள்பாலித்து, இமய நீங்கித் திருக்கயிலை யடைந்தருளினன். அதன்பின் திருமால் முதலிய தேவர்கள் தத்தம் பதி புகுமாறு அவர்க்கருள் புரிந்து, இறைவன், தன் துணைவியாகிய உமையம்மையோடு அத்தாணி மண்டபத்து அரியணை வீற்றிருந்தருளினன்.

## முருகன் திருவவதாரப் படலம்

இவ்வாறு திருமணம் முடிந்த பின்னர் இறைவன், அம்மையோடு திருக்கயிலையில் அமர்ந்திருக்கத் தேவராயினோர் அனைவரும் மேருமலையில் குழுமி சூராதியர் இயற்றுந் துன்பச் செயல்களைப் போக்கித் தமக்கருள் செய்ய ஓர் புதல்வனைப் பெற்றாரில்லை அச்சிவ பரஞ்சுடர் எனவும், இனித் தாம் செய்வதென்னை எனவும் உன்னிக் கலங்குமெல்லை, பிரமன், வாயுதேவனை அழைத்து, "நீ கைலைக்கேகிச் சிவபெருமானிடம் நம்குறைகளைக் கூறி அருள் கொடு வருதி" என்றான். அதனை மறுத்துரைக்கவல்லுநர் இன்மையால், ஒருவாறு ஏருட்பட்டுத் திருக்கயிலையடைந்து, நந்தியம் பண்ணவனை நணுகி நடுக்கமுற்றுக் கீழேவிழுந்து ஒருவாறு தெளிந்து எழுந்து உயிர்கொடு மீண்டனன். அதன்பின் தேவர்கள் ஒருங்கே திரண்டு சென்று நந்தியாணையால் நம்பன்பால் குறுகி, வணங்கி, "தேவரீர் முன்னருளியபடியே ஒரு புதல்வனைத் தந்து எம்மை வாழ்விக்க வேண்டுகின்றோம்" என்றனர்.

அவர்க்கு இறைவன் அருள்கூர்ந்து, ஈசான முதலிய ஐந்து முகங்களோடு அதோ முகமுங்கொண்டு தோன்ற, அவ் ஆறு முகங்களிலுள்ள நெற்றிக் கண்களினின்றும் ஆறு தீப்பொறிகள் வெளிவந்தன. அவற்றின் வெப்பத்தைக் கூறமுடியாதேனும், ஒருயிர்க்கும் துன்பமுண்டாக்காத அப்பொறிகள் மிக்க பயங்கரமானதால், தேவர்கள் நடுங்கிப் பரமனை வேண்டினார்கள். சிவபெருமான், வாயுதேவனையும், அக்கினிதேவனையும் நோக்கி, "நீங்கள் நம்மாணையால் இவற்றைக் கொடு சென்று, கங்கையில் உய்க்குதிர் அக்கங்கை சரவணத்திற் செலுத்தும்." என்று அவருக்கு அப்பொறிகளைத் தாங்கிச்செல்ல பெருவலியையுந் தந்தருளினான். அவ்வாறு எடுத்துச்சென்ற தேவர்களை நோக்கி, "இப்பொறிகள் சரவணத்தில் எமது மதலையாக விளங்கும், நீங்கள் செல்லுங்கள்" என, அவர்கள், அப்பொறிகளை வாயுவும் அனலும் தாங்கிச் செல்ல உடன்சென்று கங்கையில் விட்டார்கள். அக்கங்கை சரவணத்திற் செலுத்த, அப்போது ஜோதியாகிய அப்பிழம்பு ஓர் வடிவதாகி ஆறு திருமுகங்களும், பன்னிரண்டு திருக்கரங்களுங்கொண்டு, ஒப்பற்ற முருகப்பெருமானாக உதயஞ் செய்தருளினான்.

"அருவமு முருவு மாகி யநாதியாய்ப் பலவா யொன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்

கருணைகூர் முகங்களாறுங் கரங்கள்பன் னிரண்டுங் கொண்டே
யொருதிரு முருகன் வந்தாங் குதித்தன னுலக முய்ய."

உதித்த அம்முருகப் பெருமான், வானதுந்துபி முழங்க, தேவர்கள் வாழ்த்த, அச்சரவணப் பொய்கையே மலரணையாக இனிது வீற்றிருந்தருளினன். அளவிடற்கரிய பல வளப்பங்கள் நிறைந்த அச்சரவணப் பொய்கையில், தேவர் சூழ்ந்து நின்று துதிக்கும் அக்குழந்தை, அமுதுண்ணும் பொருட்டுக் கார்த்திகைப் பெண்கள் அறுவரையும் நோக்கி, "நீங்கள் இக்குழந்தையை அமுதூட்டி வளர்த்து வாருங்கள்" என்று சூழ்ந்துள்ள அத்தேவர் கூற, அம்மாதரும் தந்தவப்பயனால் ஓருருக் கொண்ட அக்குழவி, ஆறு குழந்தைகளாக, அவ்வறுவரையும் அவர் போற்றி வளர்த்து வந்தனர். இவ்வாறு ஆறு குழந்தைகளும் பாலுண்டு அற்புத விளையாடல் புரிந்து வருங்கால், பெண்கள் அறுவரும் குழந்தைகளென்று கருதாது, தமது வழிபடு கடவுளென்றே அன்பால் போற்றி வந்தனர். இதுகாறும் முருகன் தோற்றமும் அவன் திருவிளையாடலுங்கூறிய யாம், இனி அம்பிகையின் காற்சிலம்பின் மணிகளிற் றோன்றிய ஒன்பது சத்திகளிடம் இலக்கத் தொன்பதின்மர் முருகவேளுக்குத் தம்பியர்களாயும், படைத்துணைவர்களாயும் வந்த வரலாற்றைப் பகர்வோம்.

சிவபெருமான் நெற்றிக் கண்களிற் றோன்றிய பொறிகளை அஞ்சியகன்ற அம்பிகை, தேவர்களிடங் கோபங்கொண்டு, புதல்வன் தன்மாட்டுத் தோன்றாது நெற்றிக்கண்களிடமாகத் தோன்றச் செய்த தங்கள மனைவியருக்குப் புதல்வரில்லாமற் போகவெனச் சபித்தனள். அன்றியும் தான் அஞ்சி யோடும்போது தன் காற் சிலம்பினின்றுந் தெறித்த ஒன்பது வகைப்பட்ட மணிகளில் தன்னுருவம் தோன்ற, அவ்வுருவங்களைச் சிவபெருமான் விழைந்தழைக்க, நவசக்திகளாகவந்து இறைவனை விரும்ப அப்போதே கருப்பமடைந்தனர். இறைவி அவர்களைக் கோபித்து நோக்கி, "எனக்கு மாறாக வந்த நீங்கள் இக்கருவுடன் நெடுங்காலம் வருந்தியிருக்கக் கடவீர்" என்று சபிக்க, அதனால் அவர்கள் அஞ்சி, உடல் வெயர்த்து நின்றார்கள். அவ்வெயர்வை யினின்றும் இலக்கம் வீரர்கள் வந்துதித்தனர். அவர்களை இறைவன் நோக்கி, "அவுணரை யழிக்க வந்த அறுமுகனுக்குப் படைத்துணை யாவீர்"என, அவர்கள் வணங்கித் துதித்து அமலன் சன்னதியின் அணைந்து

ஒழுகி வந்தனர். அந் நவசக்திகளின் வயிற்றில் நந்தி கணத்தவர் குழந்தைகளாய்க் காளைப் பருவம்வரை சுக முனிவன் போன்று வெளிப்படா திருந்தமையால், அச்சத்திகள் வருந்தி இறைவன் இறைவியரை வேண்ட, அம்மையார் அருள்புரிய, வீரவாகு, வீரகேசரி, வீர மகேந்திரன், வீரமகேச்சுரன், வீரபுரந்தரன், வீரராக்கதன், வீரமார்த் தாண்டன், வீராந்தகன், வீரதீரன் என்னும் நவவீரர்களும் நவசக்திக ளிடத்து உதித்தனர். அவ்வீரரைப் பெருமான் வியந்து, அவர்களுக் குக் கூரிய வாட்களைக் கொடுத்து, "இலக்கத்தவரோடு நீங்களும் பிரியா திருந்து, உங்களுக்கு இறைவனாகிய முருகவேளின் ஏவலைப் புரிவீர்" என, அவ்வாறே அவர்கள் ஒழுகி வந்தனர். சத்திகளும் இறைவியிடம் ஏவல் புரிந்து வந்தனர்.

திருவிளையாடற் படலம்

இனி, சரவணத்தில் திருவிளையாடல் புரியும் அறுமுகனை அழைக்க விரும்பிய சிவபெருமான் இறைவியை நோக்கி, "நம் முருகன் சரவணத்தில் ஆடல் புரிவதைக் காணச் செல்லுவேம்" என, அம்மையாரும் உவப்புடன் இடப்பாகத்தமர, இருவரும் நந்தி வாகனத்திற் சென்று சரவணமடைந்த போழ்து, இறைவன் பார்வதியைப் பார்த்து, "உன் புதல்வன் முருகனைக் கொண்டுவா" என்றனர். அவள் அக்குழந்தையை அணைத்தெடுத்த அளவில் திருமுகமாறும் திருக்கரம் பன்னிரண்டும் உருவம் ஒன்றுமே யாகிய அக்குழந்தையைக் கண்டு, தலையளி செய்யத் தன்னிரு தனத்திற் சுரந்த பாலை மணிக்கிண்ணத் தேற்று உண்பித்து, இறைவனை வணங்குவித்துத் தம்மிருவரிடையே சோமாஸ்கந்தராக அமர்த்தத், தேவர்களெல்லாந் துதித்து நின்றனர். அங்கு நின்று வணங்கிய கார்த்திகைமாதர் அறுவரையும் நோக்கிச் சிவபெருமான், "உங்களால் இவன் வளர்க்கப் பட்டமையால் கார்த்திகேயன் எனத் திருநாம மிட்டோம். அன்றியும் உங்கள் நாளாகிய கிர்த்திகையில் இம்முருகனை அருச்சித்தார்க்குப் போக மோக்ஷங்களை அளிப்போம்" என்று அருள் புரிந்தான்.

இறைவி தனத்தினின் றிழிந்த பாலைச் சாபத்தால் மீன்களா யிருந்த பராசரர் புதல்வர் அறுவரும் உண்டு சாபநீங்கி, அச்சரவணப் பொய்கைக் கரையில்வந்து, இறைவனை வணங்கி மெய்ஞ்ஞானப் பொருளைப் போதித்தருள வேண்டும் என்றனர். இறைவன் அம்முனிவரை நோக்கி

"உடனே நீங்கள் திருப்பரங்குன்ற மெய்தித் தவமுஞற்றங்கள். இக்கும ரன் அங்கு வந்து உங்களுக்கு ஞானோபதேசஞ் செய்வான்" என்று அவர் களுக்கு விடைகொடுத்தருளினன் பின்பு இறைவன், பிரமன் முதலி யோரைத் தத்தம் பதி புக விடையளித்து, இறைவியோடுங் குமரனே டுந் திருக்கயிலை சென்று வீற்றிருந்தருளினன்.

இலக்கத்தொன்பது தம்பி மார்களும் குமாரக்கடவுள் திருவடி யைத்தொழுது, அகலாது ஏவல்புரிந்து வந்தனர். இவ்வண்ணம் நிகழ, அறுமுகப் பண்ணவன், தன் பின்னவர்களோடு பலமன்று தோறுலாவி யும், பூஞ்சோலை தோறுலாவியும், குன்று தோறுடல் புரிந்தும், பலதிருப் பதிகளிலும், பிரமன் மால் முதலியதேவர் பதங்களில் உலாவியும் ஆடல் புரிந்து வந்தான். அப்பால் அட்டகுலாசலங்களை ஒன்று சேர்ப்பதும், எழு கடலையும் ஒன்றாக்குவதுமான அளவிறந்த அற்புதத் திருவிளையாடல்களைப்புரிந்துவர, அவற்றைக்கண்ட தேவர்,"இவ்வரியன வற்றை, இயற்றுபவன் யாவன்? சூரபன்மனைச் சேர்ந்தானு மல்லன்" என்று திகைப்படைந்து, இந்திரனோடு சேர்ந்து சென்று குமாரனுகிய குமரனை எதிர்த்துப் போர்புரிந்து வலியிழந்து வீழ்ந்து மாண்டனர். அதனை நாரதமுனிவன் தேவகுருவுக்குக்கூற,அவ்வியாழபகவான் முருக னிடஞ் சென்றுஅடி வணங்கி,அவர்களை எழுப்புமாறுவேண்டிக்கொள்ள, அத்தேவர்களை எழுப்பி யருளினன். அவர், குமாரநாயகன் திருவடி களைப் பணிந்து ஏத்தி நிற்க அவர்களை நோக்கி, "தேவர்களே! நம்மைக் குழந்தையென்று நினையன்மின்" என்று கூறித் தனது பேருருவத்தினைக் காட்டி, அவர்கள் அதனை முழுவதும் தரிசிக்க ஆற்றலும் கொடுத்தரு ளினன். சேவித்த தேவர்கள், அடங்காப் பெருமகிழ்ச்சி யுடையராய்த் திருக்கயிலை மலைக்கு அருகில் உள்ள ஓர் மலையில் தேவ கம்மியனுல் சிருஷ்டிக்கப்பட்ட திருக்கோயிலில் அறுமுகத்து அண்ணலை அமர்வித் துப் புனித நீராட்டி, ஆகமமுறைப்படி அருச்சித்து வணங்கி நின்று, தேவ சேனைகளாகிய தமக்குச் சேனுபதியாக அவர் இருந்தருளல் வேண்டுமென்றுவேண்டினர். அவன் அவ்வாறே தேவசேனுபதி என்றும் பெயர் அமைந்து, அவ்வுழி நின்றும் காத்தருளினன். அந்நிமித்தத்தால் அம்மலை, கந்தகிரி எனப் பெயர் பெற்றது. அதன் பின் தேவர்கள் தத் தம் பதி புக இந்திரன் மனோவதி நகரினை அடைந்தான்.

## தகரேறு படலம்

இவ்வாறு திருக்கயிலையில் சண்முகப்பெருமான் எழுந்தருளி இருக்க நாரத முனிவன், சிவபெருமான் உலக்கு மாற்றால் ஓர் வேள்வியினைச் செய்தான். அவ்வேள்வியினின்று ஓர் ஆட்டுக்கடா ஊழித் தீயினை ஒத்துத் தோன்றி, யாண்டும் உலவி உயிர்களை வருத்த, அக்கொடுஞ் செயலைக் கண்ட நாரதன் முதலிய முனிவர்கள் குமார மூர்த்தியின்பாற் சென்று, அகில உலகங்களையும் அழிக்கும் ஆற்றலமைந்த அத்தகரின் தீமைகளை விண்ணப்பித்து வேண்ட, முருகப்பெருமான் அவருக்கு அருள் புரிந்து தன்னுழையனுய வீரபாகுவை விளித்து, அச்செச்சையினைக் கொண்டுவர ஆணை தந்தருள, அவ்வீரபாகு பிரமபதத்தில் உலாவிச் செல்லும் அவ்வலிய ஆட்டினைக் கொம்பைப் பிடித்து ஈர்த்துச் சென்று பெருமான் சந்நிதியில் விட, அன்று முதல் அத்தகரினை ஊர்தியாகக் கொண்டருளினன். நாரதன் முதலிய முனிவர்கள் அச்சேயினை வணங்கித் துதித்து, விடைபெற்று உலகினிற் போந்து வேள்வியை முடித்தனர்.

## அயனைச் சிறை செய் படலம்

அத்தகர்தனை ஊர்ந்து விண்ணுலகும் மண்ணுலகும் எங்கணும் உலவித் திருவிளையாடல் செய்து திருக்கயிலையில் அமருநாட்களில் ஓர் நாள், பிரமன் முதலிய தேவர்கள் திருக்கயிலையை அடைந்து, பரம பதியை வணங்கி விடைபெற்று மீண்டு வருங்கால், வாசலின் புறத்து இலக்கத் தொன்பது இளைஞர் சூழ இருந்த குமாரக்கடவுள், அமரரொடு ஏகிய பிரமனை அழைக்க, அப்பிரமன் வந்து நின்று வணங்காதிருத்தலைக் கண்டு, முருகப்பெருமான் அவன் தொழில் யாதென்று வினவ, அவன் நான் "பிரமன், இறைவன் ஆணையால் படைப்புத் தொழிலை நடத்துகிறேன்" எனக் கூறினன். தருக்கியுரைத்த அப்பிரமன் சொல்லைக்கேட்ட முருகன் புன்சிரிப்புச் செய்து, "படைத்தற்றொழிலில் வன்மையுடையனுயின், வேதத்தின் முதற்கண் அமைந்த குடிலைக்குப் பொருள் பகர்வாய்" என்றான். அவன் அஃதறியாது மயங்க, "இதுதானே நின் சிருட்டித்தொழிலின் திறம்" என்று அவனொரு சிரத்துத் தன் கரத்தினை யோச்சிக் குட்டிக் கந்தகிரியிற் சிறைப்படுத்தி, அச்சிருட்டித் தொழிலைத் தான் செய்தருள, உடன் சென்ற தேவர்




முருகன் சிவபெருமானுக்கு உபதேசித்தல்

கள் உண்ணடங்கிப் பிழைத்தது பெரும் பேறென்று விரைந்து, திசை யறியாது ஓடினார்கள்.

இவ்வாறு சண்முகப்பெருமான், நெடும்பகல் படைப்புத் தொழில் புரிந்து வருகையில், திருமால், பிரமனது சிறைத் துன்பத்தை நீக்கக் கருதி, திருக்கயிலை யடைந்து, இறைவனைப் பணிந்து வேண்டுதலும், இறைவன் நந்தியண்ணலை விளித்து, "நீ குமாரனிடஞ்சென்று அயனைச் சிறைநீக்க யாம் உரைத்ததாகத் தெரிவிப்பாய்" என்று அவனை விடுப்ப, அந்நந்தி சென்று அவ்வாறே யுரைக்க, அறுமுகன் வெகுண்டு, "சிறை விடோம் என்றலும்," நந்திதேவன் நடுநடுங்கி மீண்டு சென்று நம்ப னிடம் உரைத்தான். நாதன் தானே சென்று முருகனைத் தேற்றிப் பிரமனைச் சிறை நீக்குமாறு புரிந்தருளினான். சிவபெருமான், முரு கனை நோக்கி, "அப்பிரணவப் பொருளை நீ பகரவல்லையோ" என, அச்சேய், இறைவன் திருச் செவியில் மறைப் பொருளாக உரைத் தருளினான். பின்னர் வணங்கி நின்ற பிரமனை முதலிட்ட தேவர் களுக்கு விடையளித்துத் திருக்கயிலைக்குப் பெருமான் எழுந்தருளி யிருந்தான். சண்முகப்பெருமான், கந்தகிரியில் வழிபட்டு வேண்டிய அகத்திய முனிவனுக்கு ஓமெனும் பொருளையும், பதிநூலையும் உணர்த்தி யருளினான்.

## விடைபெறு படலம்

அத்தன்மை நிகழுங்காலத்துத் திருமால் புதல்விகளாகிய அமுத வல்லி, சுந்தரி என்னும் இருவர், குமரவேளை விதிப்படி மணஞ்செய விரும்பிச் சரவணப் பொய்கையில் தவம்புரிந்து இருந்தனர். அவரது தவத்திற் கிரங்கி அறுமுகப்பெருமான், அவ்வுழிபோகி, அம்மாதர் வணங்கிக் கூறியவற்றைக் கேட்டு, "நம்கருத்தின் வண்ணமே நம்மை மணம் புரிகுவம்" என்று, அமுதவல்லியை நோக்கி, "நீ இந்திரனுக்கு மக ளாகி வளர்குவாய்" என்றும், சுந்தரியை நோக்கி, "நீ பூமியின்கண் சிவ முனிக்கும் மகளாய் வேடர்பால் வளர்குவாய்" என்றும், அவ்வாறு வள ருகையில் தாம் வந்து மணம் புரிவதாகக் கூறி மறைந்தருளினான்.

அவர்கள் அவ்வாறே சென்று இந்திரனிடத்துத் தேவயானையால் வளர்க்கப் பட்டமையால், தேவயானையென்றும், குறிஞ்சி நிலத்து,

வள்ளி யகழ்ந்த பொள்ளலிடமாகக் கிடந்தமையால், வள்ளிநாயகி என்றும் திருநாமங்கள் அழைக்கப்பெற்று வளர்ந்து வந்தனர். நிற்க, முருகப் பெருமான் வெள்ளியங்கிரியில் சிவபெருமானைத் தரிசிக்கச் சென்றிருக்கையில், இந்திரன் முதலிய தேவர்கள் சென்று பரம்பதியை வணங்கி, "சூரன் முதலியோரின் துன்பச்செயல்களைப் பொறுக்ககில்லோம்! இறைவனே. காத்தருளல் வேண்டும்" என்று இரங்கினார்கள். சிவபெருமான், குமார மூர்த்தியைப் பார்த்து, "சூரன் முதலியோரைக் கொன்று, இந்திராதி தேவர்களுக்கு மேம்பாடளிக்குதி" என்றருள, அதற்கிணங்கிய முருகப்பெருமானுக்குப் பதினொரு உருத்திரர்களையும், தோமரம் முதலிய பதினொரு படைகளாக ஆக்கியளித்து,

> "ஆயதற் பின்ன ரேவின்மூ தண்டத் தைம்பெரும் பூதமு மடுவ
> தேயபல்லுயிரு மொருதலை முடிப்ப தேவர்மேல் விடுக்கினு மவர்தம்
> மாயிருந் திறலும் வரங்களுஞ் சிந்தி மன்னுயிருண்பதெப் படைக்கு
> நாயகமாவ தொருதனிச் சுடர்வே லல்கியே மதலைகைக் கொடுத்தான்".

இவ்வாற்றல் கூடிய வேற்படையையுங் கொடுத்தபின்னர் உக்கிரன், சண்டன் முதலிய கணத்தலைவரையும், இலக்கத் தொன்பதின்மரையும், படைத்துணையாகச் செலுத்தி, இலக்கம் பரிபூண்ட அற்புதத் தேரையு மளித்து, வணங்கி நின்ற இளையோனை வாரியணைத்து, உச்சிமோந்து, அருள் உருவினராகிய அம்மை அப்பர்கள், வெற்றிகொடு மீளுவாயென வாழ்த்தி யனுப்பி, வணங்கி நின்ற தேவர்களையும் துணையாகச் செல்லுங்களென அருள்விடை தந்தான். சிவபெருமானது அருள் பெற்றுச் செல்லுந் தேவர்களுள் வாயுதேவன் முருகப்பெருமான் இரதத்தைச் செலுத்தவும், ஏனையதேவர், புகழ்பரவி சூழ்ந்து நடித்துச்செல்லவும், பூதவெள்ளம் புடைசூழ்ந்து ஆர்த்து வெற்றி முரசறையவும், அம்முருகப் பெருமான் சென்றருளினன்.

## தாரகன் வதைப் படலம்

வீரரும் பூதருஞ் சூழ விரைந்து சென்ற சண்முகன், யாவரையும் மயக்குவிப்பதும், தாரகனுக்கு உறைவிடமாகியதும். ஆகிய கிரவுஞ்சகிரியை அணுகினன். அப்பொழுது நாரத முனிவன் வந்து, "அண்ணலே! திருமாலையும் எளிதே வென்றவனும், சூரனுக்கு இளையனுமாகிய இவனை முன்னர்ச் சங்கரிக்க வேண்டும்" என்றனன். முருக

வேள் அதனைக்கேட்டு, வீரபாகுவை அழைத்து, "நீ முன்னர்ச் சென்று மாயாபுரியிலுள்ள தாரகனை வென்று வருவாய்" என்று கூறித் தேவர் கம்மியனைக் கூய், அவ் வீரபாகு முதலியோர்க்கு எண்ணிறந்த தேவர்களைக் கொடுக்க ஆணையருள், அவன், அவ்வாறே படைத்துக் கொடுக்க, அவ்விரதங்களைப் பெற்று, வீரபாகுதேவன் படைகளோடு மாயாபுரியை அடைந்து நிற்க, பூதர்கள் அவுணரோடு போரியற்றத் தூதர் ஓடித் தாரகனுக் குரைக்க, அத்தாரகன் போர்கோலங் கொண்டு தன் படைஞரோடும் போந்து வீரபாகுதேவன் நின்றுழிப் புகுந்தக்கால், தன் படைகள், வீரபாகுதேவன் படைகளொடு எதிர்க்கத் தான் போர் புரியலாயினன்.

அப்போரில் அவுணர் படை அளவில்லாது மடிதரப் பூதப்படையிலும் சிலர் மாண்டனர். அதுகண்ட தாரகன் பொருது, தேரினின்றுங் குதித்து ஓர் தண்டத்தினைத் தாங்கிப் பூத சேனையைத் தரைப்படுத்தி, அண்டமழிடியும்படி ஆர்த்து, அடிகளால் கலக்கிச் சென்றான். அக்கடும் போரில் தாரகன் தண்டத்தினால் அழிந்த பூதசேனையைக் கண்டு நின்ற பூதவெள்ளத் தலைவர் நடுக்கமடைந்து, உடைந்து போயினர். வீர கேசரியானவன், நூறு அம்புகளை ஏவித் தாரகன் முடியைத் துணித்து, ஆரவாரிக்கத் தாரகன், தன் கைத்தண்டினை எறிந்து, அவனைத் தரைப் படுத்தினன். அதுகண்ட வீரபாகுதேவன், பலகணைகளைச் செலுத்தித் தாரகன் பிடித்தவில்லைத் துணித்து வீழ்த்த, அவன் ஓர் சூலத்தால் அவனை மயங்கி வீழச் செய்தான். எஞ்சி நின்ற வீரரெழுவரையும், அவ்வண்ணமே மயக்கி வீழ்த்த வீரபாகுதேவன் எழுந்து, "மயக்கினேமென்று நின்னை வியந்து எம்மை இகழற்க. இன்னே உன்னைக் கோறல் புரிவேன்" எனக் கொடுமையான போர் புரிந்தான். வலிய தாரகனும் சமமாக நின்று போர் புரிந்து, அனேகமான தெய்வதப் படைகளைச் செலுத்தியும், வீரபாகு தோல்வியடையாமையால், அவனைத் தம் மாயையால் அன்றி வெல்ல முடியாதென்று கருதி, வேறு பல வடிவங்களை எடுத்துப் போர் முயன்றான். பூதவீரரும் அஞ்சி ஓடினர்கள்.

அப்பூதப்படையின் அச்சச் செயல்களைக்கண்ட வீரபாகுதேவன், தன்னிடமிருந்த வீரபத்திரப் படையை எடுத்தலும், மாயை பொழிந்து தனித்து நின்ற தாரகன்மேலும் மாயமியற்றக் கருதித் தேரினின்றுங் குதித்துத் தனக்கு மாயகதானமாகிய கிரவுஞ்சகிரியை

நோக்கி ஓடினான். வீரபாகு அப்படையினைத் தூணியிற் செருகி, அவனைப்பிடித்துப் பிணிப்போமென்று பின்றொடர்ந்து ஓடுகையில், அம்மலையில் அவன் சென்ற இடந்தெரியாது இருளால் மயங்கித் திரும்பவும் முடியாது, அக்கிரவுஞ்ச கிரியின் மாயையால் அவ்விடையே மயங்கித் துயின்றான். சென்ற வீரபாகுதேவன் வாராமையால், வீரரெண்மரும், இலக்கந் தம்பியரும் பூதவீரரும் போர்புரிய எண்ணி, அண்ணனுக்குத் துணையாவோ மென்று செல்ல, அம்மலையின் மாயையால் அவரும் மயங்கிக்கிடந்தனர். அவ்வீரர் மயங்கிக்கிடந்ததைக் கண்டதாரகன் வெளியே வந்து, அங்கு நெருங்கியுள்ள பூதப்படைகளைக் கணைமழையால் கலக்கி இரிந்தோடச் செய்தான். அக்கடுஞ் செயல்களைக் கண்ட இந்திராதியரும், நாரதமுனிவனும் அறுமுகப் பெருமான் சன்னதி யடைந்து, விண்ணப்பிக்க, எம்பெருமான், "நாமே சென்று அத்தாரகனைச் செற்றுக் கிரவுஞ்ச கிரியையும் பொடியாக்கிவருதும்" என்றருளி, வேற்படையையும், மற்றைப்படைகளையுங் கொண்டு இரதமேறிப் பூதவெள்ளஞ் சூழப் போருக் கெழுந்தருளினான். முன்னணியிற் சென்ற பூதவெள்ளம் அவுணப்படையை அழித்து முருக்குதலும், அதனால் அவுணர்ப்பட்டமையுங் கண்டதாரகன் எதிர்த்து வந்து, சிவகுமாரனாகிய சிங்கத்தினை நோக்கி, "திருமால் பிரமன் முதலியோரிடத்தன்றி எங்களுக்குச் சிவபெருமானிடத்துப் பகையில்லையே. அவ்வாறிருக்க, அவனது குமாரனாகிய நீ எங்களோடு போர்புரிய நேர்ந்ததென்னை?" என்று உரைக்க, இளையோன், "நீங்கள் தேவர்களைச் சிறையிலிட்டு வருத்துவதால், உங்கள் வாழ்வினைப் போக்கி, உங்களையும் கிளையுடன் முடித்துவரும்படி அச்சிவபெருமான் ஏவினன். ஆகலான், உங்களை வேரறுக்க யாம் போந்தனம்" என்று விளம்பி நின்றான்.

அதுகேட்ட தாரகன், "திருமால், பிரமன் முதலியோர் எம்மிடத்து அமருக்கு வந்து தோல்வியுற்றதை அறிந்தும், எங்களை எதிர்த்துப் போர்புரிய வந்தது மிக்கவியப்பே. சிறுவனே செல்லுவாய் சிவன்பால்" என்றனன். முருகப் பெருமான், "இன்னுஞ் சிறிது நாழிகையிற் செல்லுவேன்" என்று, தன் வில்லை வளைத்துச் சரங்களைத் தூற்றி, அவனது வில்லையும் தேரையும் அழித்துப் பாகனையும் வருத்தித், தாரகனையும் அவசமாகும்படி செய்து, அவுணப் படையை நாசமாக்கினான். பின்னர்த் தாரகன் தெளிந் தெழுந்து

தன்னிரு தந்தமும் துதிக்கையு மிழந்து, சூழ்ந்த அவுணப் படைகளு மின்றித் தமியனாகிய அவன், அனேக தேவாத்திரங்களைத் தூண்டியும் பயன் படாமையால், பசுபதியின் கணையை எடுத்து அருச்சித்து விடுத்தான். அக்கணை அகில உலகங்களும் நடுங்கச் சென்றதாயினும், இளையோனை அணுகிய அக்கணை அப்பெருமான் திருக்கரம் நீட்ட, தன் ஆற்றல் அடங்கி அவன் திருக்கரத்து அமர்ந்தது அதனைக்கண்ட தாரகன், தன் வாழ்வு அன்றோடு தொலைந்த தென்று எண்ணி, இனித் தான் செய்யத் தக்கது மாயமன்றி மற்றொன்று மில்லை எனத் துணிந்து, அம்மாயைகள் வல்ல கிரவுஞ்சகிரிக் கருகிற் சென்று நின்று, "நீ வல்ல மாயைகளைப் புரிந்து மயக்குவாய்" என்றான்.

அம்மலை முப்புரங்கள் போன்றும், ஏழுகடல் போன்றும், அட்டதிக் கஜங்கள் போன்றும், கவிந்த பேரிருள் போன்றுந் தோற்றி, எண்ணிறந்த மாயைகளைச் செய்து நிற்க, அவற்றைக் கண்ட முருகப்பெருமான், தன் திருக்கரத்திலுள்ள ஞானசக்தியாகிய வேற்படையால் அம்மலையைய்யும், தாரகனையும் சங்கரித்து, மயங்கிக் கிடந்த வீரர் ஒன்பதின்மரையும், இலக்கத்தவரையும், பூதத்தலைவரையும் எழுப்பியருளினான். அவ்வேற்படையின் சக்தியையும், முருகப் பெருமான் ஆற்றலையுங் கண்ட தேவர்கள் துதித்து நிற்க, வீரபாகு முதலிய வீரர்கள் போற்ற நின்ற குமாரக் கடவுள், தனது கையிற் கொண்ட பசுபதியின் படையை வீரபாகு தேவனுக்குக் கொடுத்துக் கருணைபுரிந்து, போரில் இறந்த பூதவீரரை எழுப்பி, அங்கிருந்து புறப்பட்டருளினான்.

## தேவகிரிப் படலம்

எழுந்தருளிய முருகவேள் தேவகிரியை அடைய திருமால் முதலிய தேவர்கள், திருவடி பணிந்து, "தேவரீர் இம்மலைக்கண் எழுந்தருளவும், அடியேம் தேவரீரை அருச்சிக்கவும் அதிக அவாவுடையேம்". என்றனர். அதற்கிணங்கிய அறுமுகன் தேவகம்மியனால் அப்பொழுது இயற்றப்பட்ட அந்நகரத்திடையே உள்ள அரதனக்கோயிலில் எழுந்தருளுதலும், தேவர்கள் விதிமுறை பூசை புரிந்து வந்தனர்.

முருகப்பெருமான் வேற்படையினால் தாரகன் இறந்துபட்ட செய்கையைத் தூதர் சென்று அவன், பட்டமகிஷியாகிய சவுரிக்கு உரைக்க, அவள், அமர்க்களங் குறுகி, ஆண்டு இறந்து கிடந்த

தன்னுயகன் களேபரத்தின் மேல் விழுந்து, புரண்டு ஏனைய மனைவிய ரோடும் புலம்பிக்கொண்டிருக்கையில், அவன் புதல்வனாகிய அசுரேந் திர னென்பவன், கேட்டுச் சென்று, ஆராத்துயருடையனாய்த் தன் அரு மைத் தந்தைக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களை முடித்துத் தாயர் வேண்டியபடியே பெருந்தீயுண்டாக்கிக் கொடுத்து, அவர்கள் தமது நாயகன் சென்ற உலகிற் சென்று, உடன் இருத்தற் பொருட்டுச் செய்ய வேண்டிய நிப்பாய்தலைச் செய்தபின், அந்நகரியை நீங்கி மகேந்திர நகர மடைந்தான்.

அடைந்த அசுரேந்திரன், தன் மூத்த தந்தையாகிய சூரபன்மன் அரசுபுரியும் அத்தாணி மணிமண்டபம் புக்குக் கீழேவிழுந்து, அவனடி யைப்பற்றி அரற்றி அலமந்து, தன் தந்தைபட்ட செய்தியை அறியக் கூறினன். அச்செய்தியைக் கேட்ட சூரன், உடற்பிறந்த இளவல் இறந்ததால், மிக்க வருத்தமடைந்து, சீற்ற மிக்குடையனாய், "நானே அக்குமரனைக் கொல்லுவேன்" என்று தனித்தெழுந்த சூரனை, அமோ கன் என்னும் அமைச்சருள் ஒருவன் அடிபணிந்து, "அடியேன் கூறுவ தைக் கோபியாமற் கேட்டருள வேண்டும். அஃதாவது, அண் டங்களனைத்தையும் தனித் தரசாளும் இறைவனாகிய நீ, தனித்துப் போருக்கெழுதல் முறைமையன்று. தூதரை ஏவி, வலியறிந்து செல்லு தலே தகுதியாகும்" என்றனன். அவ்வுறுதி மொழியைக் கேட்ட அவு ணர்காவலன், பகன், மயூரன் முதலிய ஒற்றரை விளித்து, "நீவிர் சென்று அறுமுகன் வலியையும், அவனது துணை வலியையும் அறிந்து வம்மின்" என ஆணைதந்து தன்னரசு புரிந்திருந்தான். அப்பால் தேவகிரியினின்றும் பூதகணங்கள் சூழ எழுந்தருளிக் கேதாரம், காசி, திருப்பருப்பருப்பதம், வடவேங்கடம், திருக்காளத்தி, காஞ்சி, திரு வண்ணாமலை, வெண்ணை நல்லூர், விருத்தகிரி, தில்லையம்பதி முதலிய சிவபெருமான் இறைவியோடு எழுந்தருளியிருக்கும் திருப்பதி பலவும் சென்று தரிசித்து, மண்ணியாற்றங்கரையை அடைந்தருளி அமலன் அங்கு வைகினன்.

## குமரபுரிப் படலம்

அடைந்தருளிய அறுமுகனைத் திருமால் முதலிய தேவர்கள், "இவ் விடமானது மிகத்தூய்மையின் விளங்குவதால், தேவரீர் இங்கு எழுந்த

ருள வேண்டுகின்றோம்" என்றலும், தெய்வக் கம்மியனால் ஆண்டமைத்த அப்புது நகரின்கண் உன்னதமாக அமைத்துள்ள மணிமண்டபத்துள் முருகப்பெருமான் தேவர்கள் சூழ, அரியணை அமர்ந்தான். அப்புதிய நகரினுக்குத் திருச்சேய்ஞலூர் என்று பெயரிட்டனர். பிற்றைநாள் பரிதி யுதித்தலும், குகப்பெருமான், பகவானை நோக்கி, "யாம் பரம்பொருளை அம்மையொடு அருச்சிக்க உபகரணங்கள் அமைக்கவேண்டும்" என, உடனே அமைத்தலும், அவற்றைக்கொண்டு, பார்வதி பரமேஸ்வரர்களை, ஆகமவிதிப்படி அருச்சனை செய்து, அவர்கள் ஆசிகூறி அளித்த சருவசங்காரப் படையினைப் பெற்றுப் பணிந்து, அப்பதியினை நீங்கித் திருமயிலாடுதுறை, திருவாவடுதுறை, திருப்பறியலூர் முதலிய பதிகளைச் சென்று வணங்கி, ஆரூரையடைந்து, வீதிவிடங்கப்பெருமானைத் தரிசித்தமர்ந்தான்.

பின்னர் திருவாரூரைச் சேர்ந்த பல பதிகளையும் வணங்கிச் சென்று, வடவைக்கனலையும் வாட்டுங் கொடுமையினையுடையதோர் சுடுசுரஞ் சேர்ந்தான். அத்தீயுருவாகிய பாலைநிலம், முருகப்பெருமான் திருவருளால் இருண்டு செறிந்த இளமரக்காவின் சூழலையொத்துக் குளிர்ந்திருந்தது. நிற்க, முருகப்பெருமான் எழுந்தருளி வருவதை ஞானநோக்கினால் உணர்ந்த பராசரன் புதல்வர் அறுவரும் திருப்பரங்குன்றினின்றும் வடதிசையாக எதிர்நோக்கி வந்து, இளையோனைப் பணிந்து நின்றனர். அவர்களின் வரலாற்றை இந்திரன் முருகப்பெருமானுக்கு எடுத்து மொழிந்தான்.

## திருச்சேந்திப் படலம்

அதுபோழ்து அப்பாலை நீங்கிய முருகப்பெருமான், செங்குன்றூரைத் தரிசித்துத் திருச்செந்தூரை நண்ணி, தேவதச்சனால் நிருமிக்கப்பட்ட திருக்கோயிலில் எழுந்தருளியிருந்தான். அச்சமயத்தில் அருகில் வணங்கி நின்ற சதமகனை நோக்கி, "அவுணர்களால் அளவிகந்த இன்னலை நீங்கள் அனுபவித்தற்கு ஏது வென்னை? அவ்வவுணர் அத்தகைய ஆற்றலுடைமைக்கு அவரியற்றிய பெருந்தவமென்னை? ஆகிய இவைகளை அறியக்கூறுதி" என்று அவ்விளையோன் அறியாதார் போன்று வினவியருளினன். அறுமுகப்பண்ணவன அருள் வினவுக்கு அறிவு நிறைந்த வியாழனே கூற வல்லானாதலின், இந்திரன் அத்தேவ

குருவை நோக்கி, "தேவரீர் பெருமான் திருவுளம் உவக்குமாற்றால் உத்தரங் கொடுத்தருள வேண்டும்" என்ன, அதற்கிணங்கிய வியாழப்புத்தேள், சேயோனை வணங்கி, "தேவரீர் அறியாதனைத்தக் கூறுவேனல்லேன், அனைத்தும் எம்பெருமான் அறிவிற்கிடப்பினும், அடியேனைப் பொருட்படுத்தி வினவிய வற்றால் ஒருவாறு அவுணர் வரலாறுகளைக் கூறுவேன்" என்று தொகுத்துக்கூறத் தொடங்கினான்.

---

# இரண்டாவது

## அசுர காண்டம்

---

### மாயைப் படலம்

**தீ**வப் பெருமையினையுடைய காசிப முனிவனுக்குப் புதல்வர்க ளாகிய அறுபத்தாறு கோடி அவுணர்களுக்கு அரசனானவன், மங்கல கேசி யென்னும் அரக்கியை மணந்து, சுரசை யென்னும் ஓர் மகளைப் பெற்றான். அந் நற்புதல்வி வளர்ந்து வருங்கால், அசுர குருவாகிய சுக்கிரன், அவளுக்குத் தீயமாயைகள் பலவுங் கற்பித்து, மாயையென்று பெயரையுங் கூறி, அருள் கூர்ந்து, தன் உபதேச மொழியைக் கேட்பாயாக வென்று கீழ்வருமாறு கூறத் தொடங்கினான். "திரு மகள் கணவனாகிய திருமாலினாலும், ஏனைய தேவர்களாலும் எண் ணிறந்த அவுணர்கள் வலிதொலைந்து இறந்தனர். நின்தாதையும் வலி யிழந்திருக்கின்றான். ஆதலினால் உன்பொருட்டால் அவர்களின் குலந் தழைக்கவேண்டும். அதற்கு நீ செய்ய வேண்டுவதென்னை யெனின், திருமகளும் ஒவ்வாத பேரழகொடு சென்று, அருந்தவ மியற்றுங் காசிப முனிவனை மையலுட்படுத்தி, உன் வயமாக்கி, அல்லில் அவனைப் புணர்ந்து, அசுரரைப் பெற்று, அங்கவர் வளம்பெற அசுரருக் கியலும் வேள்வியும், விரதமும் உணர்த்திப் பின்னர், அவுணர் வாழவும், தேவர் தாழவும் அருந்தவம் புரிவாய்."

அம்மொழிகேட்ட மாயை, குருவை வணங்கி நன்றெனமகிழ்ந்து, விடைபெற்றுக் காசிபன் நோற்குங் கடிவன மடைந்து, திருவு மிரதியுந் திலோத்தமை தானும், வெருவி நாண, விளங்கு அழகுடையதோர் வடி வினைக்கொண்டு, வாசமாமலர்ச் சோலையும், வாவியும், காசு மேவு செய் குன்றும், தடங்களும்,தேசு பெற்று விளங்க அமைத்து, அக் காசிபற்குக் காணரிதாகி மறைந்தாள். ஆண்டமைந்த வனப்பனைத்தையும் அக்காசி பன் கண்டு களிகூர்ந்து, "இதனைச் செய்தாரை இவ்விடை காணேன், அவர் யாவரோ? அவரெங்குற்றனரோ?" என ஏங்கித் திரிந்துங்

காண்கிலனாகி, இவ்வனைத்தும் நமக்கு மிகையன்றோ ?" என்று கூறித் தன் தவத்தினில் முன்னேபோல் வைகினான்.

பின்னர் நவமணி குயிற்றிய செய்குன்றில் வனப்புடைய அம் மாதராள் தோன்ற, அவளைக்கண்ட காசிபன், தன் தவத்தின் முடிந்தபயன் ஆண்டோர் மாதாகியுற்ற தென்று பெரு மகிழ்ச்சி யோடு, அங்குற்றவளை அணையவிரும்பி, அருந்தவ வலியும் போதமு மகன்று, அன்றிலை யொத்து ஆற்றாத் துயர் அடைந்தான். அத்துயரடைந்த அருந்தவன், மாதினைக் கண்டு, அவள் நோக்கினைக் குறித்துக் கூட்டம் அமையுமென்று குறித்த மனத்தனாய், அருகு சென்று நின்று, அம்மாதினை, "மான் விழிகொண்ட மாதே! நின் பதி யாது ? நீ கருதிய தென்னை ? அதனைக் கூறுவையேல், யான் முடிக்கவல்லேன்" என்றான். மங்கை, "வடபுலத்து வதிவேன், வான் புனலாடி யான் தவமியற்றி, வீடு பேறடைய விருப்ப மிக்குடை யேன்" என்று மறைமொழி கூறினாள். அவள் மொழிகேட்ட காசிபன், "விண் புனலனைத்தும் விரைந்திவண் தருவல், கண்மணி யென்பால் கருணைகூர்ந்து கடைக்கணித்தருள்வாய்" என, அம்மாய மங்கை, முனி வனை மையலுட்படுத்தி, ஆண்டு நின்றும் துண்ணென மறைந்தனள். காசிபன் கடுந்துயரெய்திக் கலக்கமுற்று, இங்குமங்கும் ஓடி, அலமந்து, அக்கானிடைக் கண்ட யானை, மான், வண்டு முதலிய அஃறிணைப் பொருள்களை முன்னிலைப் படுத்தி, 'என் அருமை நாயகியைக் கண்டீர் கொல்?' என்று மனங்கரைந்து, மதிமயங்கி, ஆற்றுதல் செய்யாது, அம் முனிவன் புலம்பி மாழ்கலும், அவன் மனத்தளர்ச்சியின் அளவினை நோக்கி, அவனிடை அன்பினைக் காட்ட அம்மாயை யானவள், காதல் மலரும் அம்மாலைப் போதினில், அம்முனிவன் காணுமாறு வந்து எதிர் நின்றனள்.

மின்னற் கொடியைப் பொருவும் மாயையானவள் தோன்றி நின்றதைக் கண்ட காசிபமுனிவன் அருகணைந்து, "அடியேன் செய்யும் பணியாது சொல்லியருளுக. அதனை இன்னே முடிப்பன்" என; மாயை, "யானுவக்கும் பேரழகினைக் கொண்டு என்னிடை வருவையேல், யான் உன்னிடத்து அன்பு கொண்டு அணைகுவன்" என்றாள். அம்மொழி கேட்ட காசிபன் மனங்களித்து, மன்மதனுக்கும் அரிதாகிய அழகுடை யதோர் யாக்கையோடு தோன்றி நின்றான். அவ்வழகனைக் கரத்தாற்

பற்றிய மாயை அவன் செயல் நன்றாயிருக்கிறதென்று மொழிந்து, மலரணைக்கு அழைத்துச் சென்று, அவ்வணையின் மிசை காமநூல் துறைப்படி விரும்பி கலந்த காலையில்; அம்முதல் யாமத்துப் புணர்ச்சியால் அவ்விடையே சூரபன்மனென்பவன் அருந்திறலுடையனாய்த் தோன்றினான். அவ்விருவர் உடம்பின் வெயர்வினின்றும் முப்பதினாயிர வெள்ளந் தானவர் தோன்றினர். சூரபன்மனோடு அவர்களை அம்மண்டபத்திடை நிறுவி, இரண்டாவது யாமத்தில் வேறோர் மணிமண்டபம் புக்கு, மாயையானவள் பெண்சிங்கமாகவும், காசிபன் அரியேறாகவும் உருக்கொண்டு புணர, அப்பொழுது ஆயிரமுகங்களும், ஈராயிரங் கரங்களுமுடைய சிங்கமுகாசூரன் தோன்றினான். அவ்விருவர் உடம்பின் வெயர்வையால் சிங்கமுகங் கொண்ட பதினாலாயிர வெள்ளம் அவுணர்கள் தோன்றினார்கள். அவர்களைச் சிங்கமுகாசூரனோடு ஆண்டே நிறுத்தித் தாம் வேறோர் மண்டபமடைந்து, மூன்றாம் யாமத்தில் பெண்யானையும் ஆண்யானையுமாகிப் புணர, நான்கு தந்தங்களோடும் யானை முகங் கொண்டு தாரக னென்பவன் தோன்றினான். அவரது வெயர்வையினின்றும் நாற்பதினாயிரம் வெள்ளம் யானை முகமுடைய அசுரர் தோன்றினார்கள். அவ்வசுரரைத் தாரகனுடனிறுத்திப் பின் நான்காம் யாமத்தின் ஆட்டுருக்கொண்டு அவ்விருவரும் புணர, அஜமுகி யென்பவள் தோன்றினாள். அவரது வெயர்வையினின்றும் ஆட்டு முகங்கொண்ட அசுரர் முப்பதினாயிர வெள்ளத்தொகையினர் உண்டாயினர். அவர்களையும் அஜமுகியினிடம் நிறுத்தி, அப்பால் கரடி, புலி, முதலிய பல்வேறு வடிவங்களை எடுத்து விடியும்வரை புணர, அவ்வவ் வுருவினையுடைய அசுரர், அறுபதினாயிர வெள்ளத்தராய்த் தோன்றினர்.

அப்பால் அவ்விரவு கழிதலும், மாயையும், முனிவனும் ஆகிய இருவரும் முன்னையுருக்கொண்டு நின்றார்கள். சூரபன்மன் தன் தம்பியரோடு சென்று தாய்தந்தையரை வணங்கி நின்று, "யாம் செய்யக்கடவதனை உரைத்தருள்க" என்று வேண்டினான். முனிவன், "யாதினுஞ் சிறந்தது தவமே, எல்லாப்பொருளையும் முத்திப்பேற்றையும் அளிப்பதும் அதுவே. அத்தகைய தவத்தினை நீவிர் புரியுங்கள், தீவினையை விடுங்கள், அறத்தை ஆற்றுங்கள். இஃது உங்கள் மனத்தில் உறுதியாகும்படி இதற்கிலக்கியமாய் ஓர் கதையினைக்கூறுகின்றாம். அதனைக் கேட்பீராக" என்று இயம்பத் தொடங்கினான்.

"கடகம் என்பதோர் ஊருண்டு; அதில் நாற்பாற்குலத்து முதற் கண்வந்த அருந்தவத்தனாகிய குச்சகனென்பவன் ஒருவனுளான். அவனுக் கோர் அரும்புதல்வனுண்டு. அப்புதல்வன், முத்திப்பேறடைய விரும்பி, ஓர் தடாகத்தருகிற் சென்று கடுந்தவமியற்றுவானாயினன். பரமனை நினைந்து, மெய்யினை மறந்து, குற்றிபோலசைவற்றிருந்து நோற்றமை யால் அங்ஙனே செல்லும் மிருகங்களெல்லாம் அவனைக் குற்றி என் றெண்ணி உடற் றினவுகளைப்போக்க, அவன் மீது உராந்து செல்லுவது வழக்கம். அவ்வண்ணம் நிகழ ஓர்நாள் திருமால் அம்முனிவன் தவத்தை வியந்து, அவனருகிற் சென்று முதுகைத் தடவ, அம்முனி வன் விழித்தெழுந்து, பணிந்து துதித்து நின்றனன். திருமால் அவ னுக்குச் சிவபெருமான் அருள் கைகூடுமென்று கூறி மறைந்தருளினன்.

முனிவன் மகிழ்ந்து இல்லமடைந்து, தன் பிதாவினிடம் நிகழ்ந்த தைக் கூறி, அவனருள் பெற்றிருந்தான். அப்புதல்வனாகிய கவுச்சி கனைத் தாதை நோக்கி "அனைத்தையும் அறிந்த நீ என் சொற் படி ஒழுகவேண்டிய தொன்றுண்டு. அஃதென்னை எனின், நல்லற மாகிய இல்லறமே நீ நடாத்துவது தான் சிறப்பு" என்றான். அம் மொழி கேட்ட கவுச்சிகன், "மன நடுக்கமடைந்து அருந்தவ மியற்றி வீட்டினைப் பெற எண்ணிய யான், இவ்வுலகிடை மடவார் வலைப்பட்டு மயங்ககில்லேன். யான் மறுத்துரைத்ததற்கு மனங் கவலல். இஃதொன்றனையுந் தவிர்தி" என்றான். பிதா பலவகை யாக எடுத்துரைத்து இல்லறமே சிறந்ததென்றுங் கூறி, அவ் வில்லறத்தினால் பின்னர்த் தவமும் இயற்றலாமென்றும், அனைத்தையு மாராய்ந்து, அவனுக்கு உறுதிகூறும் அதனை மறுக்கலாகாது என்றும், ஆணையிட்டு அப்புதல்வன் ஒருவாறு இணங்கும்படி செய்தான். குர வன் உரையை மறுக்க அஞ்சிய அப்புதல்வன், பின்வருமாறு மொழிவா னாயினன்:—"இதுகாறுங் கூறிவந்த இல்லொழுக்கமாவது நன் மனை யாட்டியைக் கூடி நடாத்துவதே. அவ்வில்லொழுக்கமே புகழினையும், புண்ணியத்தையும் பயக்குமாகலான், அதற்குத் தக நல்லிலக்கண மடைந்த பெண்ணொருத்தி கிடைப்பதுண்டாயின், அடியேன் அவளை மணந்து இல்லறத்தை நடாத்துகின்றேன்." பிதா மனமகிழ்ந்து, "அற் றாயின், மிகநன்று. நீ கூறும் இலக்கண மமைந்த பெண்ணை யான் தேடி நினக்கு மணமுடித்தல் செய்வேனாயின், யானியற்றிய தவம் குறை

மதியை ஒத்து நாளுந் தேய்ந்தொழியக் கடவது" என்று உறுதிகூற, கவுச்சிகன், அப்பெண் இலக்கணங்களை எடுத்துக் கூறத் தொடங்கினான்.

"என் அருந்தாதையே! பிதா இல்லாதவரும், தாய் மாண்டவரும், தங்கையில்லாதோர், ஆண்மக்களோடு பிறவாதார், அன்னோர் பிறந்து இறக்கப் பெற்றவர், பரவிய சுற்றமில்லாதார், நல்ல செல்வமில்லாதார், நற்குடிப்பிறவாதார், நோயுடைய தாய் தந்தையர்க்குப் பிறந்தார், சிவபெருமான் முதலிய தெய்வப் பெயர் கொள்ளாது, ஆறு, மாக்கள், அலைகைகள் முதலிய பெயரினைக் கொள்வோர், இழிந்த சமயத்தினர், தோயர், ஊமையர், பிறர்மனை செல்பவர், பொதுமகளிர் போல் விழிப்பவர், ஆடவரைப் பன்முறை நோக்கி ஆவலோடு முன்கடை நிற்போர், அழகு பெற அலங்கரிப்போர், தணியாத உறவினர், பேருறக்கத்தினர், வயதின் மூத்தவர், ஒத்த கோத்திரத்தர், உயர்ந்து வளர்ந்தவர், குட்டையானவர், பருத்த உடம்பினர், மிகமேன்மையர், பயனற்று கருநிறமுடையவர், பொன்னிறத்தையுடையவர், நாணமில்லார், நகைப்பவர், பலமற்றவர், மிக்க பலமுடையவர், பெற்றோர் மொழி கேளாதார், வெகுளியர், சண்டையிடுவோர், நடனம் முதலியவை காண விரும்புவோர், விரசமுடையோர், ஈசனிடத்து அன்பில்லார், முனிவரைப் பழிப்போர், குலநெறியில்லாதார், தீய குணத்தினர், கற்பிலார், குருவை மனிதனென்று அவமதித்தவர், கடவுளைக் கல்லெனபவர், பத்தின் மேம்பட்ட வயதினர், பூப்புப் பருவ மனுகினோர், இடியை யொத்த சொல்லினர், அன்னையட்யர்கள் ஈவதன்முன் தாமே ஒருவர்பால் வைத்த சிந்தையர், பிறவிக் குருட்டினர், பின்னர் குருடானோர், குற்றமுடைய கண்ணினர், படலக் கண்ணினர், கூர்ந்து குறித்துப் பார்க்குங் குருடர், சாய்ந்த பார்வையர், பூனைக் கண்ணர், சுழல் கண்ணர், செங்கண்ணர், நீண்ட மூக்கினர், குறிய காதினர், அன்னமொத்த நடையினை இல்லாதார் ஆகிய இத்தன்மையரும், இவரையொத்த ஏனையோரும் கடிமணத்திற்குரியவரல்லர். ஆகலான், மேற்கூறிய குற்றமற்ற பெண்ணொருத்தி யுண்டெனின், மணப்பெண் அவ்வியலுடையாளைத் தேடித்தருவாய்."

இம்மொழியின் திறத்தினைக் கேட்ட பிதா வியமித்தனுப், அவ்வண்ணமே துருவத் தருகுவனென்று கூறிப் புறப்பட்டு, மணிகள் பதித்த பதகத்திற்கு நடுநாயகமாக தேடுவானை யொத்துக் கன்னிகை

யைத் தேடுவானாயினன். அவ்வாறு வருந்தித் திரிந்து தேடுகையில், சில முனிவர் எதிர்ப்பட, அம்முனிவர், சோழநாட்டில், அநாமயமென்னும் வனத்தில் உசத்திய முனிவன் பால் ஓர் கன்னிகையுண்டென்று கூற, அம்முனிவன் அந்த வனஞ்சென்று, முனிவனை யெய்தி அவன் முகமன் பெற்று, அவனொடு அளவளாவிச் சில்பகல் ஆண்டு வைகினன். அவ் விடை யோர்நாள் அம்முனிவன் மகள் விருத்தை யென்பாள் சேடிய ரோடு மலர்வனம் புக்க போழ்து, மதயானையொன்று துரத்தியதால் வெருவித் தனித்து ஓடிய அவள் அவ்விடை செறிந்த புதர்க்குள் தாழ்ந்த பாழ்ங்கிணற்றில் வீழ்ந்திறந்தாள்.

அஃதறிந்த இருமுது குரவர் கன்றினையிழந்த பசுப்போல் கவன்று அழுது வருந்துகையில், குச்சக முனிவன், அவர்களை நோக்கி "கவலன் மின்! இவ்வுடலைத் தயிலத்திடை இட்டுச் சேமியுங்கள். யான் தவமியற்றி உயிர்ப்பிப்பன்" என்று கூறி, ஓர் தடாகத்துத் தவமுயன் றான். அவன் முயலுங்கால், அத்தடத்து முன்னர் அப்பெண்ணைத்துரத் திய மதயானை புக்கு நீரைக் கலக்கி, அம்முனிவனைத் தன் பிடரியிலேற்றி வைத்துச் செல்லுகையில், அந்த மதயானையின் ஊழ்வினையை ஞான நோக்கினால் அம்முனிவன் உணர்வானாயினன். அஃதாவது, கலிங்க நாட்டில் அரிபுர நகரில் தேவதத்தனென்பான் ஓர் வணிகன். அவன் தவப் புதல்வனாகிய தருமதத்தனென்பவன் தன் தாய் தந்தையர் இறந்த காரணமாக வருந்தி மயங்கி இருக்குங்கால், அச்செல்வமிக்க அக்குமரன் பக்கல் அவனது பொருள் வௌவுவான் ஓர் வாதி வந்த னன். முண்டிதசிரமும், குண்டலக் காதும், முப்புரிநூல் மார்பும், புண்டர நீற்றிற் பொலிந்த நெற்றியும், ஆகிய இவற்றாற் பொலிந்து கட்டகந்தாங்கிய ஓர் புதியனாகி உருத்திராக்க மாலையைப் புனைந்து, பிரம்பைக் கையிற்கொண்டு, சென்ற அவ்வாதியை நோக்கிய செல்வ வணிகன், "அடிமுறை வணங்கி ஆளவந்த என் குருவே! தேவரீர் இங் கெழுந்தருள யான் முன்னரியற்றிய பெருந்தவம் யாதுகொல்?" என்று பன்முறை துதித்து உபசரித்து உடன்கொண்டு இல்லினுட் சார்ந்தான்.

உட்சென்ற வணிகன், அருமையிற் சமைத்த அறுசுவையுண்டி யைப் பொன்னின் நற் கலத்துப் பெய்து, நல்லுரை சொல்லியே உவந்து, அத்துறவனை அருத்தினன். அருத்திய பின்னர், "அடிகளிங் கேகக் கருத்தெதுகொல்? மெல்லக் காட்டுமின்" என்றான். அவ் வின்சொற்

கேட்டவாதி, "ஈசன் தந்த விஞ்சையொன்று எம்பால் உண்டு, அஃது எவர்க்கும் இயம்பொணாதது. தேசிகன் பால் அன்புடைய சீடர்களுக்கே இயம்பத்தக்கது. ஆகலின் குற்றமற்ற மனத்தினாய்! நினக்கு யாம் சொல்லக் கருத்துடையேம். அஃதாவது, இரஸவாதம் இரசத்தைப் பொன்னாக்குவது. இதுபோன்ற விஞ்ஞைகள் அளவிறந்தன நம்பா லுள ஆயினும் நமக்கவ்வ யருமையல்ல. ஞானிகள் விரும்பார். ஏனைய யாவரும் விழையத்தக்க விழுப்பொருள்." என்று, மேலும் இவை கூறுவான்:—"காரிரும்பையும் நாகத்திற் காட்டுதும், கரிய இரும்பைப் பொன்னென உரை பெறவுஞ் செய்வம். மேருகிரு, கயிலையங்கிரியாகிய இவைகளை யாவரும் அறியக் காட்டுதும். ஈயமும், இரஸமும் வெள்ளி யெனவாக்குவம். இரும்பினிற் செம்பு வாக்குவேம், அகில அண்டங் களையும் பொன்னுருவாக்குவம், நம் ஆற்றலை யுரைக்கப் புகின் ஆண்டு அளப்பிலவாம். ஒன்றினைக் கோடி பொன்னாக்குவம், கோடியைக் குன்றமாக்குவம், நினக்குள பொருளெலாந் தருதியேல் நின் மன்றன் மாளிகை நிதி வைப்பதற் கிடமின்மையதென வாக்குவம்." என்று அக் கள்வன் உரைத்தனன். அவனது வஞ்சமோராத வணிகன், துறவனை வணங்கித் தன் முன்னோர் ஈட்டி வைத்தவும், தான் ஈட்டியவுமாகிய பொருளும் சேமித்துள்ள பூண்களுமாகிய பொருளனைத்தையும் கொணர்ந்து, அக்கள்வன் முன் வைத்தான். அவற்றைக்கண்ட வாதி கைகொட்டி நகைத்து, "இதுவேபோலும் உன் முன்னோரும் நீயுமீட் டிய பொருள். சாலவு நன்று." என்று பரிகசித்து, வணிகனை நோக்கி, "நீ நம் பின் திரிந்து வருகுவையாயின், அளவிறந்த பொருள் நினக் களிப்பேம். நமது உருக்குக் குகையில் ஒழுகும் பொன்னுக்கும் நின் பொன்னனைத்து மீடாகாது" என்று உரைத்தான். அம்மொழிகேட்ட இழவூழெய்திய வணிகன், "அடிகளாவீர் வெகுளற்க," என்றவனடி பணிந்து சென்று, தனக்குள் நிலம் முதலிய பொருளும், அறச்சாலை களும் அதற்கு மூலதனமாக இடப்பட்ட பொருளும், கைப்பொரு ளாகுமாறு மாற்றிக் கொணர்ந்து, வாதி முன் வைக்க, அவற்றை மகிழ்ந்து வாங்கி அவ்வாதி தீயிடை வைத்து உருக்கி, உருக்கிய அப் பொன்னை, நூற்றெட்டுப் புடம் வைத்து, "பழுக்கும் வராகியால் மயங் காதே" என்றுரைத்து, ஓர் காற்றியங்காத அறையைக் காட்டென்று கேட்க, அப்படி காட்டிய அறையுள், இந்தனம் அடுக்குவராகி

மேலிட்டு, ஈமத் தீயைக் கொண்டுவந்து மூட்டிப் புகையை அங்கமர்ந்த அவ்வணிகன் எதிரிலே செலுத்தினான்.

அப்புகையால் கண்கணீர் பெருக, ஆருயிர் வருந்த, மெய்வெதும்ப, உடல் வெயர்க்க நின்ற அவ்வணிகன் எய்திய துன்பத்தினை யுரைப்ப வர் யாவர்? அத்தருணத்தில் பொதிந்த பொன்னின் குகையை மெல்ல எடுத்துத் தன் ஆடையில் மறைத்து, அக்கள்வன் விரைவில் அக் குகையை யொத்துத் தயாரிக்கப்பட்டிருந்த மற்றொரு குகையைப பக் கத்தில் வைத்துப் புகையையும் அவித்தான். பின்னர் வணிகனை நோக்கி அவ்வாதி, "தருமதத்தனே இக்குகையை நினது கையினாலே தாங்கி வைக்கக்கடவாய்" என்று கூறி, அவன் கையில் ஏந்த, அவனும் அவ்வாறே தாங்கி அத்தீயிடை வைக்க, அக்கள்வன் அதற்கு வேண்டுஞ் செயல்களைச் செய்துமுடித்துத் தத்தனை நோக்கி, "நீ உணவின்றியும், யாவருடனும் உரையாடாமலும், பெண்களோடு சேராமலும், பிறரைக்காணாமலும், எம்மையே கருத்திற்கொண்டு மூன்று வைகல் விரதமாக இருக்கக் கடவாய். யான் நீலியின் கோயில் சென்று நோன்பினை முடித்து நாலாம் வைகலில் அவ்வுழிவருவேம்" என்று கூறி அகன்றான். அகன்ற கள்வன், கன்னலொன்றிற்குக் காவதமொன் றாகக் கடுநடை நடந்து, உருமாறி வேற்றூர் எய்தி மறைந்தான்.

அவன் பணி தலைநின்ற வணிகன், அவன் கூறிய நாளெல்லை இகந் தும், அவன் வருகையைக் காணாது வருந்திப் பல இடங்களிற் சென்று தேடியுங்காணாது, கலங்கி இல்லமடைந்து, தீயின் கண்வைத்த குள கையை எடுத்து நோக்க, அஃது இரும்பாயிருத்தலைக்கண்டு துண்ணென மயங்கி வீழ்ந்தான். வைத்த பொன் காணாது மயங்கி வீழ்ந்த தத்தன், பித்தேறிப் பேய் போலலைந்து, திரிந்து சின்னாளில் இறந்தொழிந்தான்.

அவ்வணிகன், அறப்பொருள் பகர்ந்த அதிகபாபத்தினால் இந்த மதயானையாகிப் பிறந்தானென்று, குச்சகமுனிவன் மனத்துண்மதித்து, "இப்பிறப்பினை இப்பொழுதே மாற்றுவன்" என்று அருள்கூர்ந்து, தான் முன்னரியற்றிய தவத்தினில் ஓர் நாள் இயற்றிய தவம் இவ்வேழத் திற்காகுக என்றான் இவ்வாறு கூறிய அளவே அத்தவப்பயனால், அம்மத யானை உருவொழிந்து தேவசரீரத்தொடு திகழ்ந்து நின்றது. நின்றவன் முனிவனைப் பணிந்து விடைபெற்று, அரமகளிர் ஆடல்பாடல்கள் செய் யவும், தேவர்கள் சூழவும், விண்ணிழிந்த விமானமீதமர்ந்து, வானுலகிற்

சென்றான். பிறகு குச்சகமுனிவன் முன்போலத் தடாகத்தில் தவமியற்றத் தென்திசைக் கிழவன் ஆண்டு நண்ணினான். அவனைக்கண்ட முனிவன் அவனடிதாழ்ந்து, "அண்ணலே! உசத்தியன் மகளாகிய விருத்தையை உயிர்ப்பித்துத் தரவேண்டுகின்றேன்" என்றான். கூற்றவன் மகிழ்ந்து தன்னொற்றனொருவனை நோக்கி, "அப்பெண்ணின் உயிரினைக் கொடுவந்து விடுக" எனவாணைதந்து மறைந்தான். தூதன் அவ்வாறு புரிய அப்பெண் உயிர்பெற்று உறக்க நீங்கினாரொத்து மெல்ல எழுந்தனள். பெற்றோர் அவளைத் தழுவி பெருமகிழ்ச்சியாகிய கடலில் ஆழ்ந்து, பின்னர் முனிவனைப் பலவகையாகப் புகழ்ந்தனராகி, அக்குச்சகன் விரும்பியவண்ணமே அவன் மகன் கவுச்சகனுக்கு அக்கன்னிகையை மண நேர்ந்தார்கள். அக்கவுச்சகனென்னும் மிருகசண்டேயன், தன் மனைவியாகிய விருத்தை யென்பவளோடு இல்லற நடாத்தி வருங்கால், அவனது அருந்தவப் பயனாக மிருகண்டு என்னும் ஓர் புதல்வன் அவனுக்கு உதித்தான். அப்புதல்வனுக்கு ஆண்டாறாக, உபநயன முடித்துத் தன் தந்தையைப்போலத் தானும் தவமியற்றச் சென்றான். பிதா ஏகிய பின்னர், முற்கலனென்னும் பெயரினையுடைய முனிவன் குமரியாகிய மருத்துவதி யென்பாளை மணந்து, அநாமய மென்னுங் காட்டிடை வதிந்துவருகையில், புத்திரப் பேறின்மையால், மனைவியொடு சுற்றத்தினரைக்கொண்டு காசிநகரடைந்து கங்கைப் புனலாடி, மணிகர்ணிகை அடைந்து, அங்குள்ள சிவபரஞ்சுடரைப் பணிந்து, அக்கோயிலுக் கருகில் ஓர் சாரிருந்து புத்திரப்பேற்றை விரும்பி, வெயில், பனி, மழை, காற்று முதலியவற்றைப் பொருட்படுத்தாமல் ஒரு வருடம் கடுந்தவம் புரிந்தான்.

அவனது தவத்திற் கிரங்கிய முக்கட்பெருமான், காட்சி தந்தருளி, வேண்டுவதென்னென, முனிவன், சிவபெருமான் திருவடி மிசை வீழ்ந்து, தனக்குப் புத்திரப்பேறு வேண்டுமென்று இரந்து கூறினான். அதனைக் கேட்டருளிய சிவபெருமான், புன்னகை புரிந்து, "தீயகுணமும், அறிவின்மையும், ஊமையும், செவிடும், முடமும், குருடும், நோயின் மிகையும் ஆகிய இவற்றொடு வயது நூறுடைய புதல்வனை வேண்டுதியோ? அன்றி, யாக்கையின் அழகும், உறுப்பிலக்கணமும், நோய் சிறிதின்மையும், எம்மிடத் தன்பும், பலகலை பயில்தலும் ஆகிய இவற்றொடு வயது ஈண்ணிரண்டாம் புதல்வனை

வேண்டுதியோ? நின் கருத்தென்னை? எனக் கேட்டனன். அப்பரம் பொருள் உரைத்தவற்றை யோர்ந்து முனிவன், ஆண்டு சுருங்கியிருப்பினும், அறிவு மிக்கோனாய், நோயில் யாக்கையனாய், இறைவன்பால் அன்புடையோனாய புதல்வனை வேண்டுமென்றான்.' அவ்வாறே வரமருளி இறைவன் மறைந்தபின், முனிவன் மனமகிழ் வடைந்து மனையொடு கெழுமி வாழ்ந்து வருகையில், புவியின் கண்ணுள்ள துன்ப நீங்கவும், அறம் வளரவும், முனிவரோங்கவும், வைதிகசைவம் வாழவும், பரமன் கிருபையால், அம்முனிவன் மனைவி வயிற்றில் கருப்பம் வந்தெய்தியது. அது நிமித்தமாக மாதந்தோறும் செய்யவேண்டிய சடங்குகளைச்செய்து முடித்துச் சிவனடியார்க்கு வேளாண்மை செய்தல் முதலியவற்றைச் செய்யா நிற்பப் பத்துத் திங்கள் நிரம்பின. ஆண்டுச் சோதிடர் குறிக்கும் நன்னாளின் ஓர் அருமைப் புதல்வன் உதயமாயினான். அவ்வமயம் உலகில் நன்னிமித்தங்கள் காணப்பட்டன. தேவர் வாழ்த்தினர், பிதா செய்யவேண்டிய கடன் முறையைச் செய்து முடித்தான். பிரமன் அங்குச் சென்று, அக்குழந்தைக்கு மார்க்கண்டேயனென்று நாமகரணஞ் செய்தான். அக்குழவி வளர் மதியினை யொத்து வளருங்கால், ஓராண்டிற் செய்யவேண்டு வனவும், மேலாண்டிற் செய்ய வேண்டுவனவும் செய்து முடித்து, ஐயாண்டின் முந்நூல் விதிமுறை முடித்துப் பதி நூல்களாயினவற்றைப் பயிற்றுங்கால், சிவனே பரனென்று தெளிந்தானாகி, அவனடிக்கே அன்புபூண்டு, ஒழுகிப் பிரமசரியங் காத்து வந்தான்.

அவ்வண்ணம் ஒழுகுநாளில், அக்குமரன் தாய்தந்தையர் தனித்தனி இருந்து வருந்துகின்ற செய்கையைக் கண்டு, அவர்களை அவ்வாறு வருந்துதற்குக் காரணமென்னை என்று கேட்டான். அவனை நோக்கி, "அருமை மைந்தனே! நீயிருக்க எமக்கோர் குறையுமுண்டோ? யாம் புத்திரப்பேறு கருதிய அன்று, சிவபெருமான் நினக்கீந்தது வயது எண்ணிரண்டு. அவ்வெல்லை எய்திற்று. ஆதலின், நின்னை இழத்தலை யஞ்சி வருந்துகின்றோம்" என்று மொழிந்தனர்.

அங்ஙனங்கேட்ட மார்க்கண்டேயன், "அஞ்சன்மின், அஞ்சன்மின். யான் அருளுடை அண்ணல்பாற் சென்று, அருந்தவமியற்றிக்கூற்றினை யகற்றி ஆண்டினைப் பெருக்கி வருகின்றேன். விடை தருமின்" எனப் பணிந்தான். பணிந்து தன் குரவரிடம் பெற்ற விடையும்,

பரமன் அருளுந் துணையாகச் சென்று மணிகர்ணிகாலயத்தின் அமர்ந்த ஈசன் திருவடிகளை முடிக்கணியாகப் பணிந்து, பலவாறு துதித்து அவ்விடைத் தென்சார் ஓர் சிவலிங்கம் தாபித்துப் பூசனையியற்றி வருகையில், அருளுருவாகிய சிவபெருமான், ஆண்டெழுந்தருளி, "நீ வேண்டிய தென்னை" என, முனிமைந்தன் அடிமுறை வணங்கி, "அருண்மூர்த்தியே! கூற்றுவன் வந்தென்னைக் குமையாவகைப் பேரருள் சுரந்தருள வேண்டினேன்" என்றான். அதற்குச் சிவபெருமான், "நீ, அந்தகற்கு அஞ்சலை" என்று திருவடி தீக்ஷை செய்து மறைந்தான்.

மறைந்த பின்னரே பதினாறு வயது நிரம்ப, விண்ணிடை முகில் போல் நடுவன்தூதன் ஒருவன் தோன்றி, மார்க்கண்டேயன் சிவபெருமானிடம் அன்பு வைத்துப் பூசை புரிவதைக் கண்ணுற்று, அவனது தவக்கனலினால் அவனை அணுகமுடியாது, மீண்டும் நமனிடஞ் சென்று நிகழ்ச்சியைக் கூறினான். அப்புதுமையைக் கேட்ட நமன், அச்சிறுவனென்னீ ஈறிலாஇறைவனோ எனச் சீறிச் சித்திரகுத்தர்களை அழைத்து, அச்சிறுவன் ஆயுளின் கணக்கென்னை என்றான். அவர், "அண்ணலே! இறைவன் அன்றருளிய ஆயுள் ஆண்டு எண்ணிரண்டு, அவ்வெல்லையும் இகந்தது. அறத்தினையுடையான் ஆகலான் அமரருலகு எய்துவான், நிரயம் எய்தான், ஈதவன் நிலைமை." என்றனர். அம்முறைமையைக் கேட்ட சண்டன், வெகுளியெய்தி அமைச்சனாகிய காலனை விளித்து, "காசியில் அந்தணச் சிறுவன் ஒருவன் உளன். அவன் ஆவியைக் கொணர்தி ஈண்டே" என்றனன்.

அவ்வாணை தாங்கிய காலன், நில உலகிற் காசிநகரடைந்து, அம் முனி மைந்தன் கோதின்றித் தவமியற்றுங் கொள்கையைக் கண்டு, அந் நற்றவனை நணுகவு மியலாதென்று அவன் கண்முன் தோன்றி, வணங்கி நின்றான். அவனைக் கண்ட மார்க்கண்டேயன், அவன் யாரென, அவன், "முழுதுலகுயிரையும் முற்ற முடிக்கும் கூற்றுவன் அடிமையான், என் பெயர் காலனென்பர். என்ன என் செயல் எனின், இயம்பக்கேள், கன்றமிடற்றிறை நுமக்கியம்பிய ஆண்டு நந்நான்கு. அவற்றிற்கடையுறு மாண்டு கழிந்தது றென்னலே. ஆதலிற் றென்புலமெய்த வேண்டினேன். அன்றியும், ஈதலும் அழித்தலும் இறைவன் ஆணையே. அதனைத் தடுப்பரிதாகுஞ் சதுர்முகத்தவற்கும், நும்மைக்

காணிய நேசமொடு நின்றான் எம்பிறை கூற்றுவன். ஆதலின் தவத்தினீர்! போதல் வேண்டினேன்" என்றான். அக்கடுமொழி கேட்ட முனிவன், "சிவன்செயல் புரியும் பெருமையுடையோர்க்கு நமனால் கேது? நட, நட" என்றுரைப்ப, அஞ்சி நடுங்கி, நன்றென அகன்றான்.

அகன்ற காலன் நமனை நண்ணி, உற்றனயாவும் ஒழிவின்றியுரைக்க, அக்கூற்றுவன், உடல் வெயர்க்கவும், விழிகனல் பொழியவும், புருவக்கடை நிமிரவுங் கொதித்து, மேதியைத் தருதிர் என்று கூறிவந்த அதன் வெரிநிடையிருந்து கவிகையுகம் துவசமும் நிவப்ப, வீரர்கள் சூழ்வரப் புறப்பட்டுப் போந்து முனிவன் நோற்றுழிச் சென்று எதிர்த்தான். செம்மயிரும், முகில் மேனியும், கனல் கண்ணும், உடையனாய்ப் பாசம் பிடித்துத் தண்டமேந்திச் சூலத்தொடு நின்ற அவன் தோற்றத்தை மார்க்கண்டன் கண்டு, சிவபிரானது திருவடிகளை ஏத்திப் பூசிப்பானாயினன். அவனது செயலைக் கண்ட நமன், "அடா மைந்தா! நீ என்ன நினைந்தாய்? யாது செய்கின்றனை? முன்னைய ஊழும், முக்கணன் உரைத்த நெறியையும் துடைத்திடல் ஆமோ? சிறிதும் ஓராய், பெருந்தவர்க்குங் கூடாத இது கூடுமென்றுன்னி இன்றளவும் முயல்கின்றாய். ஈசனிடத் தன்பினால் நீ நித்தலும் புரியும் பூசை, கொடிய பிறப்பை அகற்றுமே யன்றி யான் வீசும் பாசத்தையும் விலக்கவல்லதோ? கடலின் மணலை எண்ணிக் கடையிலக்கங் கூறலாம். உடுக்கணத்தினை ஒவ்வொன்றாக எண்ணித் தெரியலாம். ஆயினும் என்னாணையின் மாண்டிடும் இந்திரர்தமை எண்ணவும் இயலுமோ? தாமரைக் கண்ணற்கு முண்டு இறுதி. சதுர்முகற்கு முண்டு. எனக்கு முண்டு என்றபின் நினக்கு முண்டென்பதைப் பேசவும் வேண்டுமோ? என் அரசேந்திய பாசம், சூலம், படை, மழுதண்டம் ஆகிய இப்படைகளை முற்போது தவத்தால் ஈசனிடம் பெற்றுள்ளேன். ஆனதால், தேவர் காப்பினும், படைப்பு, அளிப்பு, அழிப்பு ஆகிய முத்தொழிலியற்றுவோர் காப்பினும் காக்க, இன்று நின் உயிரினைக் கொண்டன்றி யான் மீளேன். நீ துன்பங் கொள்ளற்க. சிவனுக் கன்பராயினும், இறுதியெய்தின் தென்புலத்து உய்ப்பன். இஃது உறுதி என்பின் போதருவாய்" என்றியம்பினன்.

மார்க்கண்டன், "எம்பிறையின் அடியவர் திருக்கயிலை அடைவதன்றித் தென்புலமெய்தார், அவர் மாதவந்தரேனும் இல்லறத்தினரேனும் வினையினீங்கிய வீட்டினை யெய்துவர். அன்னோர் உன்னையும்

மற்றைத் தேவரையும், இந்திரன், பிரமன், மால், உருத்திரரையும் சிறிதும் பொருட்படுத்தார். அன்னோர் தன்மை தேர்கிலே, வையத்தார் போல நினைக்கின்றாய். அவருள் ஒருவனாகிய என்னுயிர்க்குத் தீங்கு நினைத்தாய். இவை யெல்லாம் உன் தலைமைக்கும், உன் உயிர்க்கும் தீதாம். என்செவி கேட்கத் தீதாகிய மாற்றஞ் செப்பி நின்றாய். மேல் வருவிளைவினை எண்ணிலே. நீ இவ்விடை நிற்றலுந் தகுமோ? பேதாய் பேதாய், போதி, போதி" என்றனன்.

அம்மொழி கேட்ட நடுவன், அவன் நேரே வருபவனாகத் தோன்ற வில்லை என்றெண்ணி, விண்ணிடை இடியென ஆர்த்துத் தன்கைப் பாசத்தை அவன்மீது வீசி இழுக்குங்கால், முனிமைந்தன், ஈசன் இணையடி மறவாமல் ஏத்தி நின்றான். கண்ட தேவர்கள் அவன் மாய்ந் தானென்று மறுகுற்றனர். வீசி யிழுக்கும் பாசம் கழுத்திலமைந்தும், இடரிலானாகிய மார்க்கண்டன் முன், சிவபெருமான் தோன்றி, "நீ அஞ்சாதே" என்று கூறி அக்கூற்றுவனைத் தன்னிடது காலினால் உந்தி உதைத்தலும், விண்ணினின்றும் வீழும் முகிலையொத்துக் கீழே விழுந் திறந்தான். பக்கத்தில் அணைந்த கடாவும் வீழ்ந் திறந்தது. அக் காலத்து முனிமைந்தன் தொன்னூற்றுறைபே துதித்துநிற்கையில், சிவ பெருமான், "நினது பூசையை உவந்தாம். நினக்கு ஆயுள் அந்தமின்றி அளித்தனம்" என்று உரைத்து, மார்க்கண்டன் பூசித்த இலிங்கத் துள் மறைந்தருளினன்.

மார்க்கண்டேயன், அன்பு மிகையால் மணிகர்னிகாலயத்துச் சென்று, பெருமானை வழிபட்டுத் தன்னிமித்தம் வருத்த மெய் திய தாய்தந்தையரின் இன்னலை நீக்கிச் சிவாலயங்கள் பலவுஞ் சென்று, தரிசித்துச் சீவன் முத்தனாய், அநேக மால் பிரமர்களின் இறுதியைக் கண்டவனாயினன். நிற்க.

"சண்டன் இறந்தகாரணத்தால் உலகில் இறப்பென்பதே இல்லாது; மக்கள் முதலிய எல்லா உயிரும் மல்கியதால், பூமிதேவியானவள், திரு மாலின் அடியிணை பணிந்து, சுமையின் மிகுதியைக்கூற, அன்னவன், பிரமன், இந்திரன் முதலிய தேவர்களோடு திருக்கயிலையை நண்ணிச் சிவபெருமானுக்கு விண்ணப்பிக்க, அவ்வருள் மூர்த்தி நமனை எழுப்பி, "நீ நம் அடியவரிடத்துப், பயமும், பக்தியையும் உடை யனாதல் அன்றி, அவர்க்கிடாழைப்பாரை நரகத்து உய்த்தும், அவரை

யுவப்பாரைத் துறக்கத் துய்த்தும் வருதி. அவ்வடியார் நம்பக்கல் அணை தற்குரியராதலின், அவரிடை நினக்குத் தொழில் யாதுமில்லை" என்று பணித்து, முன்னைத் தலைமையையுங் கொடுத்து அருள்புரிந்தான்.

பின்னர்த் திருமால் முதலிய தேவர்கள், வணங்கித் தத்தம் பதிபுக்கனர். மேதியொடு எழுந்தருள் பெற்ற கூற்றுவன், மார்க்கண்டன் சரிதங் கூறுவோரையும் குறுக அஞ்சுவான். ஆதலின், குச்சகன் அருந்தவத்தினால் விருத்தை தன் உயிரளித்தான். மதயானையைக் கொடுமையொழித்துத் தேவனாக்கினான். அவன்பெற்ற மிருகண்டேயன், மூவரும் புகழ்தரு முதன்மை பெற்றனன். அவன்பெற்ற மிருகண்டு ஒப்பிலாப் புதல்வனைப் பெற்றான். அப்புதல்வன், தன்மேல்வந்த கூற்றனைக் கெடுத்து, அழிவிலா ஆயுளைப் பெற்றான். ஆகலான், தவமே பெரிது, தவத்தாலன்றோ இன்னோர் இத்தகுதியடைந்தனர்." என்று கூறி, அவர்களையும் அருந்தவம் செய்யச் சொன்னான்.

இவ்வாறு காசிபமுனிவன், சூராதியரை நோக்கிக் கூறியவற்றைக் கேட்ட மாயை நகைத்து, முனிவனை நோக்கி, "மறைமுதல் நூல்களை மாசின்றி யுணர்ந்த மாண்புடையோய்! நீ கூறிய அனைத்தும் உண்மையே. ஆயினும், நின்னையொத்த வீட்டினை விழையுந் தவத்தினர்க் கல்லாது, இன்பநுகர்ச்சியால் யாம் பெற்ற இச்சிறுவர்க்கு ஒல்லுமோ? இவர்கள் பெற வேண்டுவது இளமை, இன்பம், பொருள், நீண்ட ஆயுள், அதிகாரம், ஆற்றல் முதலியன அன்றோ? அவற்றையே பெற அருள்புரிவாய்" என்ன, முனிவன், "நின் கருத்து இற்றாயின், நீயே அவர்களுக்கு உபதேசிப்பாய்" என்றான்.

அவள் தன் மக்களுக்கு வகுத்துரைக்கத் தொடங்கினாள்:—"மைந்தர்காள்! நுந்தையாகிய முனிவன் கூறியயாவும் உண்மையே. ஆயினும், நுமக்கவை இயலா. நீங்கள் அடையத் தகுவன கல்வி, செல்வம் ஆகிய பொருள்களே. அவற்றுள்ளுஞ் செல்வமே சிறப்புடையது. எல்லா நன்மையும் அதனாற் பெறலாம். அவற்றையெல்லாம் பெருந்தவ முயற்சியால் தேவர்கள் பெற்று, நேற்றுத் தோன்றிய உங்களுக்கு வழிப்பகையோடு பகையாயு முள்ளார். ஆதலின், அத்தேவரினும் நீங்கள் சிறந்து தோன்ற வேண்டின், அரியதோர் தவமியற்றி, அரும் பெறல் அரசும், ஆணையும், திறலும், ஆயுளும் பெறுங்கள். அத் தவத்திற்குரிய இடம் இங்கிருந்து நேரே உத்தரதிசை ஏகினாற் காணலாம். அது, தான

வர் தவமியற்றத் தகுந்த சூழல், நீவிர் மூவரும் இப்பரி ஜனங்களோடு சென்று, வேள்விச் சாலையியற்றி அங்கண் சிவபெருமானைக் குறித்துத் தவமியற்றுங்கள். யான் அதற்கு வேண்டும் உபகரணங்கள் யாவும் தந்து அமைப்பேன்." என்று மந்திரம் முதலியவைகளை யுபதேசிக்க, அவற்றைப் பெற்றுக்கொண்டு, இருமுது குரவரையும் வணங்கி, விடைபெற்று, அவுணர் தலைவனாகிய சூரன், தன் பின்னர் குழுவி னோடும் போயினான்.

## மாயை நீங்கு படலம்

சூராதியர் சென்ற பின்னர், மாயை, மோகமாய் நின்ற முனிவனைப் பார்த்து, "இனி வருந்தற்க" யான் புதல்வரைக் காக்கப்போகின் றேன்" என்று கூறிப் பெயர, முனிவனும் பின்றொடர்ந்து, அயலவரைப் போலத் தன்னைவிட்டுச் செல்லுவது அழகோ என்று இரங்கிக் கூற, மாயை, "யான் புத்திரப் பேற்றைக் கருதி நும்பாலணைந்தேனன்றி, நும் மிடை நித்தலுங் கூடி, இன்பம் நுகர நோக்கி வந்தேன் அல்லேன்" என்றுரைத்து மறைந்தாள். அக்கணமே ஆங்கமைந்த சோலை, தடாகம், மண்டபம், செய்குன்று, பூம்பள்ளி முதலிய அளவிறந்த இன்பந் தரும் பொய்ப் பொருள்கள் யாவும் துண்ணென மறைய, முனிவன் கண்டு மயங்கிப் பிரிவாற்றாது, நிலத்திடை வீழ்ந்து புலம்பித் தவித்தான்.

புதல்வனாகிய காசிபன், மதிமயங்கி மாழ்குவதை அறிந்த பிரமன், ஆண்டணைந்து, தவத்திற் சிறந்த காசிபனை நோக்கி, "அறிவிற் சிறந் தோய்? நீ இவ்வாறு செயலழிதலுஞ் சீர்மைத்தோ? நின்னை நீ எண் ணிலை, பெண் ணொருத்திபால் மையல்கொண்டு நின் போத மிழந்தாய். மண்ணிடை வீழ்ந்து மயங்குகின்றாய், காமத்திற் கொடிது பிறிதொன் றில்லை. நீ புணர்ந்த மாதரும் மாயை. நீ தவறு செய்தாய். ஆயினும் போதமுற்று நின் தவத்தினி நிற்பாய்" என்று பன்முறையால் தேற்றி அன்னவன் ஏகினான். திசைமுகன் சென்ற பின்னர், முனிவனாகிய காசிபன் சிவபரஞ்சுடரைக் குறித்து, முன்போல் தவமிழைத் திருந்த னன். அவனை நீத்தகன்ற மாயை, தன் புதல்வன் இயற்றுங் கொடிய வேள்விக்கு வேண்டிய பொருள்களை உதவ நினைந்து, புகரோன் ஏவல் கொடு, கறைமிடற் றிறையைக் கருதிப் பெருந்தவ மியற்றி வைகினள்.

இதுகாறும் காசிப முனிவன், மாயையைக் கூடியதும், சூராதியர் தோன்றியதும் உரைத்தாம். இனி, அச்சூரன் முதலியோர் சிவபெருமான் திருவருளால் பெற்ற நல்வரங்கள் முதலியவற்றை இயம்புவாம்.

அசுரர் யாகப படலம்

அன்னையின் ஆணையின்படி கொடுந்தவமியற்றச் சென்ற சூரபன்மன், தன் தம்பியருள் சிங்கமுகாசூரனைத் தன் தானைக்கு நெற்றியிலும், தாரகனைக் கடையிலும், காவலாக நிறுவித்தான். இடையே நின்று செலுத்தத் தானவரின் அனிகவெள்ளந் தரைமிசை படர்ந்து சென்றது. அப்பெரும் பாரத்தை யாற்றாது நிலமகள் வருந்தவும், அநந்தனும், நாகமெட்டும் கவற்சி யெய்தவும், குலவரைகள் சலிக்கவும், மண்டி எழுந்த பூழியீட்டம் மலரயன் உலகினைத் தாவவும், வீரர் சுழலொலி கடலொலியை அவிக்கவும், செல்லாநின்ற படையைக்கண்டு சுக்கிரன் வியப்புற்று, இடையில் நின்ற சூரபன்மனை அணுகவும் மாட்டாதவனாய், ஓர் வசிய விஞ்சையால் அவனை அணுகிச்சென்று, ஆசி கூறி நின்றான். அவனைக்கண்ட சூரபன்மன், "விண்ணுலக வாசியோ? அதன்மிசை யுலகவாசியோ? அன்றிப் புவியின் கண் வாழ்குவையோ? நின்னையான் அறிய கில்லேன், என் மனம் நின்னைக் கண்டமையின் உருகுகின்றது. அன்றியும், அன்பு மிகுதலால் என்பும் உருகுகின்றது. அனைத்துயிர்க்குந் தாயனையாய்! நின்னை அறிய விரும்பினேன்" என்றான்.

அதைக்கேட்ட கவி, "யான் அசுரராகிய உங்கள் குலத்திற்கெல்லாம் ஒரு பெருங்குரவன். விண்ணிடைச் செல்வேன, புகரெனும் நாமமுடையேன். ஓர் உறுதிகூறி நின்னிடை வந்தேன்." என்றான். அம்மொழி கேட்ட சூரன், உவகையாலணைந்து, கரங்குவித்து அஞ்சலி செய்து நிற்கப் புகரோன், "நீ தவமியற்று மெல்லையில் பகைவர் உன் தவத்தைக் கெடுக்க முயல்வார்கள். அன்னோர் கெடுதிகள் உன்னை அணுகாவண்ணம் இம்மந்திரத்தினை உபதேசிக்கிறேன். இதை நித்தலும் சுத்தனாயிருந்து ஜெபித்துத் தவம் புரிகுவாய்" என்று, மிருத்தியுஞ்சய மந்திரத்தை அவன் காதில் உபதேசித்து, வணங்கி நின்ற சூரனை ஆசி கூறி அவ்வாசான் மீண்டேகினன். சூரபன்மனும் தவமியற்ற வட்புலத்திலுள்ள ஓர் ஆலவனத்தின் ஓர் புடை யெய்திப் பகியைிரம்

யோசனை உள்ளிட்டதாக இடமமைத்து, அதனைச் சூழ மதிலமைக்க நினைத்துத் தன் சேனையைக் கூவி, உலகிலுள்ள மலைகளைக் கொணர்ந்து, பெருமதில் சூழவைத்து, அதனிடை வாயிலு மியற்றச்செய்து, நான் முறை செய்து முடித்த அம்மதிலின் புறத்து, வரம்பிகந்த தானையைப் போற்றும்படி நிறுவினான். அப்புரிசையின் நாற்புறத்து மமைத்த பெரு வாயிலைக் காத்து நிற்கும் படி மந்திரத்தால் அழைக்கப்பட்ட துருக்கை, காளி முதலிய தெய்வங்களை வைத்துப் பின்னர் வயிரவ கணங்களையும், மந்திரத்தாற் கூவி வணங்கிக் காவல் வைத்தான்.

காவலிட்ட அதனுள் ஆயிரவாயிர யோசனை நீளமும், ஆழமு முள்ள ஓமகுண்டத்தை அதனிடை அமைத்து, அதைச் சூழ நூற் றெட்டுச் சிறுகுண்டங்க ளமைத்து, அவற்றைச் சூழ ஆயிரத்தெட்டு வேதிகை யமைத்துப் பின் வேள்விக்குவேண்டும் பல பொருள் அடைய விரும்பித் தன் தாயை அங்கு வரும்படி அன்புடன் நினைத்தான். அங் கெய்திய மாயையாகிய தாய், அவ்வேள்விக்கு வேண்டிய அளவறு பொருள்களை அங்ஙனே தொகுத்து, அக்குண்டத்திடையே வச்சிர கம்பமொன்றை நிறுவதற்பொருட்டு உய்த்துச் சோறு, அரிசி, வாசனைப் பொருள்கள், சுருவை, தருப்பை முதலியவற்றைத் தொகச்செய்து, நஞ்சினையுடைய வேம்பு முதலிய விறகுகளைச் சமித்துக்களாக மலை போலமைத்துச் சென்றாள். மூவாயிரம் யோசனைப் பரப்பில் அமைக் கப்பட்ட பொருள்களைப் பார்த்துச் சூரன், இனி நாம் வேள்வி இயற் றுவதற்கு ஆரம்பிக்கலா மென்றெண்ணி, விண்முக உராயத்தகுந்த பல மமைந்த அவ்வச்சிரத் தம்பத்தைத் தன்னொரு வலிமையால் எடுத்து நிறுவினான். பின்னர் திசைவாயில் காக்கும் காளிகளுக்குத் தன் பணி வும் ஆடு முதலிய ஊன் பலிகளுந் தந்து சென்ற சூரன், மதிலுக் குள் நெருங்கி நின்ற பூதகணத்திற்கும், பேய்க்கூட்டத்திற்கும் சோர்த லில்லாது உவக்குந் திறமமைந்த ஊன்பலியானவற்றைக் கொடுத்து, காளிகளையும் பயிரவத்தொகைகளையும் அருச்சித்து, வணங்கிப் பலி ஈந்து ஆயிரத்தெட்டு குண்டங்களிலும் நஞ்சுவிறகிட்டுத் தீமூட்டி, ஊன் அவி முதலிய பெய்து, சிவபெருமானுக்கு உவக்கும்படி செய்து தாரகனையும் சிங்கமுகனையும் பார்த்து, "நீவிர் இவ்வேதி தோறும் தாழாது சென்று ஊக்கத்தோடும் போற்று வருதிர்" என்று கூறி, அவர் களை நிறுவி, அப்பால் இடையே அமைத்துள்ள பிரதான வேதியின்

அடைந்து, மந்திர விதிப்படி அருச்சித்து, நஞ்சு விறகால் தீக்கடைந் தெடுத்து மூட்டி நெய், ஊன், உதிரம், சோறு, எண்ணெய், பால், தயிர் முதலியவற்றைச் சொரிந்து, வெண்பொரி தூவி செய்யுங் கடமைப் பாடுகளைச் செய்து, சிவபெருமானை நினைந்து, வேள்வி இயற்றுவானு யினன்.

இவ்வாறு சூரன், பெருவளம் விரும்பி இயற்றிய வீரவேள்வியின் கனல், யாவரும் அஞ்சுமாறு ஓங்கி மேற் சென்றது எவ்வா றிருந்த தெனில், இப்பாரையுண்டு விண்ணுலகையும் உண்ண எழுந்ததொத் திருந்தது. இவ்வண்ணம் இறுதிக்காலத்து உலகினை மொய்த்து நிற் கும் வன்னிகளைப் போலக் குண்டங்கள் எரிவதையும், சூரனது அரிய செயலையுந் தெரிந்த இந்திரன், பெரிதும் அஞ்சி, அவ்வேள்வியைக் கெடுக்க முயன்று, அதனது காப்பின் வன்மையால் அதனைச் செய்ய மாட்டாதவனாய், நடுக்க மடைந்து, துன்பக்கடலில் அமிழ்ந் தான். இவ்வண்ணமே ஒரு பதினாயிரம் ஆண்டுகள் தன்னிள ஞர்களுடன் சூரனானவன், கடுந்தவமுயன்றும், முக்கண் முதல் வன் அங்கெய்தி அருளாமையை யுன்னித் தன்னிளையரை வேள்வி புரியும்படி பணித்துத் தான் விண்ணிடை யெய்தி நின்று, வாளி னால் தன் உடம்பினினுள்ள தசையை அறுத்து, அறுத்துக் குண்டத் தில் அவியாகப் பெய்து, குருதியை நெய்யாகச் சொரிந்து நின்றான். அவ்வாறு உடலிற் குறைத்த தசையெல்லாம் அவ்வப்போழ்தே வளர, அதைக் கண்ட சூரன் வியப்படைந்து, ஈது சிவபெருமானுக்கு விருப் பம்போலும் என்றெண்ணி, அவ்வகையே அந்தரத்தினின்று ஓராயிர மாண்டு தசைப்பெரு வேள்வியை ஆற்றினன். இயற்றிய பின்னரும் பெருமான் அருளாமையைத் தெரிந்த சூரன் பிரதானகுண்டத் தீயிடை மந்திரவிதியால் நடப்பட்டுள்ள கூரிய வச்சிர தம்பத்தில் குதித்தலும், அதன் நுனியிலிருந்து உருவி அடிகாறும் சென்று சூர பன்மனது உடல் முழுதுஞ் சாம்பராய் விட்டது. அச்செயலினைக் கண்டு அருகினின்ற சிங்கமுகாசுரன், கவலை மேற்கொண்டு வருந்தி அவசமாய் வீழ்ந்து, ஒருவாறு தெளிந்து, எழுந்து திரிந்து, பலவாறு மொழிந்து புலம்புகையில், தாரகனும் அவ்வாறே அவ்வின்னற் கட லுள் அழுந்தி, அவ்வேள்விக் களமுழுவதும் புரண்டு, விண்ணவரும் அச்சமுறும்படி தரையைப் புடைத்துச் சோர்ந்து கிடந்தான். அச் செயல் கண்ட தானவர் கடல்போல் பொருமிப் புலம்பினர்கள்.

அவ்வேள்வியில் நிகழ்ந்த விஷயங்கள் அனைத்தையும் தூதர்களால் அறிந்த இந்திரன், மனமகிழ்ந்து தேவர் புடைசூழ, வெள்ளை யானை மீதேறிச் சென்று, அவ்வேள்வியை அணுகி, விண்ணிடை நின்று, வேள்வித் தீயில் சூரன் மாண்டொழிந்ததும், இளைஞர் அவனுக்காக அழுது மாழ்குவதுமாகிய அனைத்தையுங் கண்டு, உவப்பெனுங் கடலில அழுந்தியிருந்தான். அப்பால் சிங்கமுகன், தன் உயிர் போன்ற முன்னோன் இறந்ததற்குத் தான் ஆற்றுதவனுப், வீரம் பேசித் தனது ஆயிரஞ் சிரங்களில் பலவற்றைத் தன் வாள்கொண்டு தடிந்து, அத்தலைமைக் குண்டத்தி லிடுதலும், பின்னருஞ் சிரங்கள் வளர்தலைக் கண்டு, தன் முன்னவனுகிய சூரனைப் போல வீழ்ந்திறக்கத் துணிவுடையனுகி, வானத்தெழுதலும், ஞானப் பொடி யணியும் நம்பன் அவன் கருத்தை அறிந்தருளினுன்.

## வரம்பெறு படலம்

அறிந்தருளிய சிவபெருமான், ஒரு கிழ மறையோன் வடிவங் கொண்டு தண்ணென்றி வந்து, சிங்கமுகனைக் குறுகி, "நீங்கள் இவ்வாறு அழுங்குதற்குக் காரணமென்னை?" என்று வினவியருளினுன். சிங்கமுகன், வேதியனை வணங்கித் தமது வரலாற்றையும், வேள்விமுயன்றமையும், தன் முன்னவன் முடிந்ததையும், தாங்கள் முடிய நின்றதையும் கூறி, "அருளுடை அந்தணரே! உம்மைக் கண்டதனுல் யாங்கள் இறவாது இத்துணைப் போழ்து தாமதித்தனம்" என்றுன். அவ்வுறுதிமொழியினைக் கேட்ட சிவபெருமான், "உங்கள் தலைவனுகிய சூரனை இத்தீயிலிருந்து எழுப்பித் தருகின்ளும். நீங்கள் வருந்தாதிருமின்" என்றுரைத்து, விண்ணுலகத்திருந்த கங்கையை நினைக்க, அக்கங்கை, ஆயிர முகங்கொண்டு பரவி இழிந்து, சிவபெருமான் பதத்தினைப் பணிந்து, அக்குண்டத்திற் புகுதலும், அக்கணமே, கடலில் ஆலாலம் உதித்தெழுதல் போன்று, அவுணர்கோமான் ஆர்த்து, ஆண்டெழுந்தான். எழுந்த சூரனைக்கண்ட இளைஞரும், ஏனையரும், அடைந்த மகிழ்ச்சியைக் கூற வல்லுநர் யாவர்?

இவ்வாறு அவுணராயினுர் பெருமகிழ்வடைய, விண்ணிடை நின்ற மகபதியாதியர், நடுநடுங்கிக் கவலை மக்கொண்டு, தத்தம் ஊரினை எய்தினர். வேதியனுகி வந்தருளிய சிவபெருமான், சூராதியர் காண, முக்கண்ணும், நான்குதோளும் உடையனுகி உமாசமேதனுய் மால்

விடைமீது விண்ணிடையே காட்சி தந்தருளினன். அக்காட்சியினைக் கண்ட சூரபன்மன், துணைவரொடு பூமியில் வீழ்ந்து, பன்முறை பணிந்து போற்றி, ஆராப்பெருமகிழ்வொடு தொழுது நின்றான். தொழுது நின்ற சூரபன்மனை அருளால் நோக்கி, "நெடிதுகாலம் வலிய தவமாற்றி உடல்நொந்தனை, நீ வேண்டிய வரங்களைக் கேட்பாயாக." என்று அண்ணல் கூறினன். சூரன், "பிரதிவி சம்பந்தமான புவனங்கொண்ட அண்டக் குழுவினுக்கெல்லாம் யானரசனாகவும், அவைகளைக் காக்க ஆக்ஞா சக்கரமும், விரைவிற் செல்லும் ஊர்திகளும், வச்சிரயாக்கையும், மால் முதலியோரை வெல்லுதற்குரிய தெய்வப்படைகளும், வேண்டும்." என்றான். அருளை திருவுருவங்கொண்ட அண்ணல், அவன் வேண்டியவாறே அருள் புரிய எண்ணி, ஆயிரங் கோடி அண்டங்களுள் ஆயிரத்தெட்டு அண்டங்களை நூற்றெட்டு யுகம் வரையில் ஆளுந்தலைமையும், அவ்வண்டப் பரப்புகளில் நினைத்த அளவிற்செல்லத் தகுந்த இந்திரஞாலத்தேரும், அவற்றையாள ஆக்ஞா சக்கரமும், சிங்கவாகனமும், அவுணர்களுக் கெல்லாம் அன்று முதல் முதல்வனாகும் மேன்மையும், பாசு பதக்கணை முதலிய படையும், அழியாத வச்சிரயாக்கையும், பதினாயிரங்கோடிவெள்ளம் இரத கஜாதி சேனைகளையும், சூரபன்மனுக்குக் கொடுத்துப் பின்னர் வணங்கிநின்ற அவன் இளைஞரைப் பார்த்து, "சூரனைப்போல் நீங்களும் வீரம் படைத்து நூற்றெட்டு யுகங்களும் மேவுவீர்கள்! தேவர் முதலியோரை வெற்றிகொள்ளக்கடவீர்கள். நமது சத்தியன்றி உம்மை வெல்லுவாரில்லை," என்றருளி மறைந்தான்.

## சுக்கிரன் உபதேசப்படலம்

அவ்வண்ணம் நிகழவும், சூழ்ந்துள்ள சேனைத்தலைவரும் தானவரும், சூரபன்மன் பெருவரங்கள் பெற்றமை தெரிந்து, ஆர்த்து நெருங்கி வணங்கி நிற்ப, அவர்களுக்கு நல்லுரை பகர்ந்து, தம்பியர்களோடு சென்று, தாதையாகிய காசிபமுனிவனை வணங்கி நிகழ்ந்தவற்றைக்கூற, முனிவன், "இச்செல்வம் இடையறுவண்ணம் உங்கள் குருவாகிய சுக்கிரனை வணங்கி அவனிடத்து ஆசி பெறுங்கள்." என்று விடையளித்தனுப்பினன். சூரன் பரிஜனங்களோடு சுக்கிரன் இருப்பிடம் அணைதலும், அவ்வசுரகுரு அறிந்து, உவந்து, எதிர்சென்று, சூரனைத் தழுவிக்கொண்டு, தன்னில்லினுள் அழைத்துச்சென்று, ஆசனமளிக்கச்

சூரனும், சிங்கமுகனும் அமர்ந்தார்கள். அவர்களைப் புகரோன் நோக்கி, "நீவிர் இங்கு ஏகியதற்குக் காரணமென்னை?" என்று வினவ, அவர்கள் தாங்கள் வரம்பெற்றுக் காசிபமுனிவன்பாற் சென்றமையும், அவன் கூறி விடுத்தமையுஞ் சொல்ல, சுக்கிரன் மிகக்களித்துக் கீழ்வருமாறுகூறினன்.

"உலகில் பதி, பசு, பாசம் என்றிசைக்கும் மூன்றும் கடவுள் உருவே. புண்ணியம், பாவமென்றும், அதற்கு இன்பதுன்பமென்றும், இம்மையிற் செய்ததின் பயனை மறுமையில் அனுபவிப்பரென்றும், அறியாதார் கூறுவர். உலகில் கிடைத்த சுகத்தை அனுபவிப்பதே அறிவு. நீ அவற்றில் மயங்கக்கூடாது, இந்திரன் உனக்குப் பகைவன். அவனை உடனே மறைந்து ஓடாவண்ணம் பிடித்துச் சிறைபிடுவாய். கொலை, களவு முதலியவற்றைச் செய்ய அஞ்சுவையாயின், உலகில் உன்னை ஒருவரும் அஞ்சார். உன் ஆணையுஞ் செல்லாது, எல்லாம் இறைவனது ஆடல். அவன் அருளை உனக்குக் கிடைத்திருப்பதால், எல்லா அண்டங்களுக்கும் நீ உன் சேனையோடு சென்று, உன் ஆணையை ஆண்டாண்டு நிறுவித் திக்குவிஜயஞ் செய்து வந்து, உன் அரசினை ஆளவேண்டும்."

இவ்வாறு கூறிய சுக்கிரன் தீய உரையை நல்லுரையாகக்கொண்டு, தனக்கு ஈசன் உதவிய அண்டப்பகுதியின் நிலைமையினைக் கூற வேண்டும் என்று அக்குரவனை வேண்ட, அவன், அவ்வண்டப் பகுதிகளை விவரமாக எடுத்துக்கூறி, அவனையே சென்று நேரில் கண்டு தெரிந்து கொள்ளென்று சொல்ல, சூரபன்மன் ஆற்றவு மகிழ்ந்து, குருவின் தாள்தொழுது, சிங்கனொடு விடைகொண்டு, வெளியே ஏகி, சேனைக்குட புகுந்தான். சேனைகாத்திருந்த இளவலாகிய தாரகன் அணுகி, அடிபணிந்து நிற்க, ஆசானிடம் நிகழ்ந்தவற்றை அவனுக்குக் கூறினன். அவனும், அப்படியாயின், அப்பொழுதே தம்படையொடு புறப்படுதல் நலமென்றிசைத் திருக்கையில், சூராதியருக்குத் தாயாகிய மாயை வந்து, ஆசி கூறி, "நீவிர் எப்பொழுது நினைப்பினும் யான் அக் கணமே சென்று நுமக்கருள் புரிவேன். நீங்கள் தேவர் முதலியரை வென்று நெடுங்காலம் அரசு செய்யுங்கள். யான் அடிக்கடி வந்து உம் மைக் கண்டு செல்லுவேன்." என்று கூறி வணங்கி நின்ற புதல்வரிடம் விடை பெற்றேகினள். அதன்பின் சூரன், அவுண சேனையை அழைத்து, "நாம் குபேரன் நகரினுக்குச் செல்லப் பறையறையுங்கள்."

என்றனன். அவர் அவ்வாறே அறைந்து உணர்த்த, ஊழிக்காலத்துக் கடல்போல சேனைவெள்ளம் புறப்பட்டுச்சென்று, அளகையைச் சூழ்ந்து நிற்கச் சூரன் குபேரனுக்குத் தூது போக்கினன். தூதனால் அறிந்த அளகேசன், "இவன் வலிக்கு நாம் ஆற்றலிலோம்" என்று பணிவுடன் போந்து சூரனை வணங்கி நிற்க, அவ்வசுரேசன் மகிழ்வடைந்தான். அவனது சேனை குபேரன் நகரத்துள்ள அரும் பொருள்களை யெல்லாம் கொள்ளையிட்டுக் கவர்ந்து போயிற்று. பிறகு கீழ்த்திசைக்கு இறைவனாகிய இந்திரனை நாடிச் செல்லுங்கால், இந்திரன், சூரன், படையொடு வருதலை யுணர்ந்து, அஞ்சியோடிப் பதுங்கினன். அதை யறிந்து, அவனது நகரத்தைத் தீக்கிரையாக்கி, அடுத்த திசையிலிருக்கும் அக்கினியோடு எதிர்க்க அவன் கடுங்கோபம் கொண்டு, சூரன் படைகளையெல்லாம் நாசமாக்கி நின்றதை யறிந்த தாரகன், சிவபெருமான் படையாகிய பாசுபதாஸ்திரத்தை எடுத்துப் பிரயோகிக்க முயலும். அஃதறிந்த தீக்கடவுள், "இக்கணைக்கு எதிராக வேறோர் கணையுமில்லை. இல்லையில் அகில லோகங்களையும், நம்மையும் முடிக்கும்" என்று அச்சங்கொண்டு, தன் மேனியைச் சுருக்கிக்கொண்டு, தாரகனிடஞ் சென்று, பணிந்து நின்றான்.

அஞ்சிப் பணிந்து நின்ற தீயின் இறையை நோக்கிய தாரகன், இரக்கங் கொள்ளவும், அவனது சேனை, தீக்கடவுளின் நகரத்துள்ள பொருள்களை வாரிக்கொண்டு சென்றது. பிறகு சூரன், தன் படையொடு . தென்திசைக் கிறைவனாகிய நமனுலகிற் செல்ல, அஃதறிந்த தருமன், "சிவபெருமானிடம் பெறுதற்கரிய வரங்களைப் பெற்றுள்ள இவனை, நாம் எதிர்த்தல் கூடாதென்று சூரனெதிரில் வந்து பணிந்து நிற்க," சூரன், "நீ உன்னுடைய உத்தியோகத்தைப் புரிந்து வரக் கடவை." என்றனன். தானவர்கள் நடுவன் நகரியின் கண்ணுள்ள பொருள்களைக் கவர்ந்து சென்றனர்.

பின்னர் நிருதி முதலிய திக்குப்பாலகர் திசைகளிற் சென்று வெற்றிகொண்டு, பாதாளத்திற் சென்று சேடனை வென்று, திருமால் யோகநித்திரை செய்யும் பாற்கடலிற் சென்று, அத்துயிலைக்கலைக்க, அத்திருமால் கடுஞ்சினங் கொண்டு, தானவர் குழுவை யெல்லாம் நாசப்படுத்தினன். அதனைக்கண்ட தாரகன் திருமாலுடன் எதிர்த்துப் பன்னிரண்டு ஆண்டு போர்புரிதலும், 'திருமால் தன் சக்காராயுதத்

தைத் தாரகாசூரன் மீது எவ அது, தாரகனது கழுத்தில் பூமாலை போல் விழுந்து தங்கிற்று. அதுகண்ட திருமால் இனி அவர்களை வெல் லுதல் அருமை யென்றுணர்ந்து, அவனை அணுகிச் சென்று நின்று, "தாரகனே! நீ உன் முன்னவரோடு சுகமாக வாழக்கடவாய். உன்னை வெல்லுவார் இவ்வுலகத் தொருவருமில்லை." என்று வாழ்த்தித் திரும்பி னான்.

அதன் பின் நான்முகத்தோன் உலகத்துச்செல்ல, அப்பிரம னறிந்து மனங்கலங்கிச் சூரனெதிரில் சென்று, "நீ இவ்விடம் வருதற்கு யான் முன் தவமுடையேன்." என்று புறவுபசாரங் கூறி, "உன்னைப் பெற்ற காசிப முனிவனுக்கு யான் பிதாவாகையால், நினக்கு யான் பாட்டனாவேன். வேறு அல்லன்." என்று இளைஞருக்குத் தெய்வப் படைகள், வில், தேர் முதலிய உதவி, நல்லுரை விளம்பி, விடைபெற்று மீண்டான். பிறகு வைகுண்டத்தை யடைந்து, திருமாலினால் உப சரிக்கப்பட்டுச் சிவலோகமடைந்து, சேனையைப் புறத்தே நிறுவி, நந்தி பெருமான் ஆணையால் உட்சென்று, தம்பியரோடும் சிவபெருமானை வணங்கி நிற்கச் சிவபெருமான், மற்றைய அண்டங்களையும் வெற்றி கொண்டு ஆளக்கடவன் என, அவ்வாசியைப் பெற்று, வணங்கிச் சேனையுடன் சென்று, வயிரவக் கணங்களைத் தரிசிக்க, அவர் மற்றைய அண்டங்களுக்குச் செல்லும் வாயில்களைக் காட்டினர்.

அவ்வாயிலினால் சூரன், படைஞரொடு அடுத்த அண்டத்துச் சென்று, எல்லோரையும் இது போல வெற்றிகொண்டு, மற்றைய அண் டங்களுக்கும் சிவகணங்கள் வழிகாட்டச்சென்று, அங்குள்ள தேவரை வென்று, வளங்களைக் கவர்ந்து தன்னொடு சார்ந்த அசுரரை ஆங்காங்குத் தனது ஆணை செலுத்த அரசராக நியமித்து, அவ்வகையே எல்லை யில்லா அண்டங்கள்தோறும் தமராகியுள்ள அவுணர்களை வேந்தர்க ளாக்கித் துணைவரோடு மீண்டு, அண்டப்பித்திகையுட் சென்று, பெறு தற்கரிய துறக்கம் நாடுற்றான்.

விண்ணுலகடைந்த சூரன் செயலை தூதர்களால் கேள்வியுற்ற அவுணர் தலைவன் குருவாகிய சுக்கிரனை அழைத்து, சூரனைக்காணும் படி முன்னர்செலுத்திப் பின்பு, தான் தன் பரிஜனங்களோடு சென்றான். முன்னர்ச்சென்ற சுக்கிரன், சூரபன்மன் முதலியோரால் உபசரிக்கப் பட்டுச் சூரனை நோக்கி, "அவ்விடை வருகின்றவன் அவுணர்களுக்குத்

தலைவன். உன்தாயாகிய மாயையைப் பெற்றவன் அநேகநாள் இந்திரனிடத்துப் போர்புரிந்து, அவனால் நைந்து ஒடுங்கி யுள்ளவன். நின் தவத்தையும், ஈசன் உங்களுக்குத் தந்த வரம், உரம் முதலியவைகளையுங் கேட்டு, ஆராமகிழ்வோடு நின்னைக்காண வருகின்றான்." என்றான். அவனும் அதுபொழுது அணுக வந்தனன்.

சமீபத்தில் வந்தெய்திய பாட்டனை உபசரித்து, அளவளாவி விடைபெற்றப், பூவுலகில் வந்து சேர்ந்தான். அவன் வருகையைக் கண்ட பிரமன் முதலிய தேவர்கள், அச்சமடைந்து, இனித் தாம் செய்வதென்னை யென்று தேர்ந்து பாற்கடலில் துயிலுறும் திருமாலை அடைந்து, தங்கள் இன்னல்களை எடுத்துக் கூறினார்கள். அவர் மொழி கேட்ட திருமால், அறப்பனாகிய தக்கன் யாகத்திற்கு யாஞ் சென்று சிவாபராதத்தைப் பெற்றுளோம். ஆகலான், அது நம்மை வருத்தியே விடுவதல்லது வாளாகழியாது. சூரனோ அனேக அண்டங்களை வெற்றியடைந்து வருகிறான், அவனை யாம் எதிர்த்தல் கூடாது. யாம் அனைவரும் அவன் அருகே சென்று, அவனது நட்பைக் கொண்டே வாழவேண்டும். என்று கூறி வந்த பிரமன், இந்திரன் முதலிய தேவரை அழைத்துச் சென்று சூரனையடைந்து ஆசிகூறி நிற்ப, அக்குழுவினில் சிவரூபமடைந்த உருத்திர கணங்களிருக்க, அவர்களைக் கண்டு சூரன், அவர்கள் யாவரென்று வினவத், திருமால், அக்கணங்களின் வரலாற்றைக் கூறத் தொடங்கினான்.

"மன்னர் மன்னனாகிய சூரபன்மனே கேட்பாயாக! முன்னோர் கற்பத்தில் மூவகை யுலகங்களையும், அனைத்துயிரையும் சிருட்டித்துப் பிரமன், தானே முதல்வனென அயர்ச்சியடைந்து, முழுமுதலாகிய சிவபெருமானை மறந்ததனால், பின்னர் அவனது சிருட்டி மல்காதிருந்தது. அதனைத்தெரிந்து, அதற்குக் காரணம் என்னை என்று ஆராய்ந்து, 'எந்தையை மறந்தேனல்லவா?" என்று தெளிந்து, அப்பரசிவத்தினை நோக்கி அருந்தவ முஞற்றினான். நெடுநாளாகியும் சிவபெருமான் அருளாமையால், பிரமன் பெருந்துயர்கொண்டு, பேதையர்போன்று கண்ணீர்விட்டழுதலோடும், அக்கண்துளி விழுந்த இடமெல்லாம் அலகைக்கூட்டம் மல்கிற்று. அதனால் கடுந்துன்பமெய்தி, கீழேவிழுந்து, அவசமாகி மாண்டனன் போன்றிருக்க, அதுபோழ்து, அனைத்துயிர்க்குயிராகிய இறைவன், கனவிடை நண்ணி, "நீ கவலல்! நின்னை நீ பரமென்று மதித்தனை, ஆதலால் இத்துயர் எய்தினை. ஆயினும் நம்பக்கலில் உள்ளவரை

அனுப்பி உன்தொழிலை உணர்த்துவிக்கின்றோம்." என்றருளினான். பிரமன் உறக்க நீத்தெழுந்து, விம்மித மடைந்து, மனந்தெளிந்து, தியானத்தில் இருத்தலும், தனது நெற்றித்தலத்தில் பதினொருஉருத்திரர் தோன்றி நின்றனர். அவர்களைநோக்கி, "என் நெற்றியில் நீங்கள் வந்ததென்னை?" என்று வினவ, அவ்வுருத்திரர் "நின் சிருஷ்டித் தொழிலைச் செய்ய நின்பால் ஈசன் எம்மை விடுத்தனன்." என்ன, பிரமன், "அற்றேல், சிருஷ்டித் தொழிலைச் செய்யுங்கள்." என, அவர்கள், பதினொருகோடி உருத்திரரைத் தம்மைப்போல் படைத்தனர். அவரைக் கண்ட பிரமன், வினைக்கீடாக உயிர்களைத் தருதலன்றி அவ்வாறு செய்தல் நெறியல்லவென்னலோடும், அவர்கள், "இவ்வண்ணமே நினது தொழிலியற்றுவாய்" என்று கூறிப் பிரமனைத் தெளிவடையச்செய்து, இந்த சிவசாரூபமுள்ள கணங்களைத் தேவர் கூட்டத்து விருத்திப் பரமனால் தங்களுக்குத் தரப்பட்டுள்ள பழைய புவனங்களிற் புக்கனர்.

## நகர்செய் படலம்

திருமால் உரைக்கக் கேட்ட சூரபன்மன், அருகில் நின்ற தேவகம்மியனைத் தான் அரசியற்றி இனிதே உறைதற்குரிய ஒப்பற்ற நகரமொன்றினை விரைவிற் செய்யச் சொன்னான். தேவதச்சன் வணங்கி அந்நகரினுக்கு எல்லை உரைத்தால் அப்பொழுதே செய்து முடிப்பதாகக் கூற, அடுத்திருந்த குரவனாகிய சுக்கிரன், நூன்முறைப்படியே நகரின் எல்லையும் ஏனையவும் அறிவிக்க, அப்பொழுதே தென் சமுத்திரக் கரையை அடைந்தான். அவன் அத்தென் சமுத்திரத்தின் மத்தியில் பதினெண்ணாயிர யோசனை பரப்புள்ளதாகக்கோலி, முன்னவன் அரசியற்றி வைகுதற்கு இடமாக்கினான்; செம்பொன் மதிலியற்றி, வாயில் அமைத்து, ஞாயிலும் வகுத்தான்; நாற்பெரு வாயிலூடு மேரு வொத்த கோபுரங்கள் மணி வெயிலெறிப்பச் செய்தான்; சிற்பநூற்றுறைப்படி நூறுயோசனை பகுதிப்பட மாடவீதிகள் பற்பல இயற்றினான்; முப்புரமொன்றுஇயைந்தாற்போன்று, மூன்றுமதில்கள் அவற்றுள் இட்டு, ஒப்பற்ற திரு மிகுந்த வீதிகள் அளவில்லாகப் புரிந்தான்; சோமனது வைப்பெனும்படி செம்பொன் மாடங்கள் வரம்பிலவாக வகுத்தான்; மாதர் மெய்ப்படும் ஆடல்கள் இயலிடம் பல வியற்றினான்; மாளிகை தோறும் திண்ணை, மண்டபம், மணி குயிற்றிய முன்றில், சிங்கங்கள் கட்டிய கோபுரம், செய்குன்று, அம்பொற் சூளிகை, நடன சாலை, அவைக்களம், மேற்றலம், சாளரம், சோலை, வாவி இவைகள் அழகுபெற அமைத்தான்; இவற்றின் இடையில் பதினாயிரம் யோசனை பரப்பில் நெடுமதில் அமைத்

தான். இவ்வளவு அமைப்புக்களுடன் சூரன் வதிவதற்கு ஆங்கொரு கோயிலை அழகுபெற இயற்றினன்; அதன்சார்பில் இரதகஜ துரகங்கள் போதற்குரிய தோரண வாயில்களிற் றொடர்ந்த திண்ணைகள், சிறப்ப மைந்த பொற் சிகரங்கள் அமைத்த கோபுரங்கள், மேகமண்டலத்தை உராயும்படியான அழகிய மணிகுயிற்றிய கட்டு மலைகள், யானைக்கூடம், புரவிபயிலிடம், சேனைகள் உறைவிடம், தேர்கள் வைகுமிடம், அசுரத் தலைவர் சாருமிடம், மற்றை யரக்கர்களிருக்குமிடம், அரம்பையர் நாடக மியற்றுஞ் சபாமண்டபம், பாடலிசைக்கும் பைம்பொன் மண்டபம், யாழ்பயிலும் வயிரமண்டபம், மயில், புறவு, அன்னம் முதலியவை குலவுமண்டபம், சந்ததமும் மறையொலி தழங்கும் மண்டபம், வேள்வி முயலு மண்டபம், மந்திர இயல்பினோர் சேருமண்டபம், இந்திரன் முதலினோர் இருக்குமண்டபம், திருமிகுந்த நிருதர்க்கிறை தேவர்கள் போற்றி நிற்க அரசுபுரியும் ஆஸ்தான மண்டபம், பொருள் குவிக்கும் பொக்கிஷ மண்டபம், பரனருளிய படைக்கலங்கள் பயிலுமண்டபம், அடிசிலர்க்கு மண்டபம், கஸ்தூரி, புழுகு, சந்தம், அகில், வெற்றிலை, பாக்கு முதலிய நிறைந்திடும் எழில்கொள் மண்டபம், மங்கையர் பலர் மருவு மண்டபம், அன்னோர் ஊசல் மண்டபம், நிலாஉமிழ் பளிங்கு மண்டபம், வானுபர் சந்திரகாந்த மண்டபம், மணி இமைக்கும் வசந்த மண்டபம், பவளமண்டபம், மரகத மண்டபம், தாமரை முத்தாலாகிய மண்டபம் ஆக இவ்வண்ணம் நகர் முறைமைக் கேற்றன யாவையும் படைத்து, அவற்றிற்கிடையே சூரபன்மனும், அவன் பட்டமகிஷியும் பொருந்தி உறைவதற்கோர் உறையுள் இயற்றி, அதனைச் சூழ்தர எண்ணிலாத மங்கல நிறைந்த மாடவீதிகள் அவன் மனைவியராகிய நங்கையர் வதிய நலத்தொடு நல்கி, நீலமும், குமுதமும், கமலமுஞ் செறிந்த வாவிகள், ஓடைகள், பொய்கைகள், விண்ணுலாவும் பூவியற் சோலைகள், பொன் குன்றுகள் முதலிய யாவையும் முறைப்படி தேவதச்சன் செய்து வைத்தனன்.

திரைகடலை அகழாகவைத்து, உள்ளமைத்த அங்கரிடை உறையுங் கோயிலில் தழைத்த பொன்னின் சுடரால் மேலுள்ள பொன்னகர், வெள்ளியாய் மழுங்கிற்று. இன்னவும் ஏனவுமாகிய எண்ணிகந்த பொருள்களை மனத்தாலுன்னி, இயற்றித் தன்னிகரில்லாத் தலைவனாகிய சூரபன்மன் வீரத்தோடு அரசுபுரிதற்கு அமைத்த நகரமாதலின், அங்கரினுக்கு வீரமகேந்திரபுரி என்னும் நாமமிடப் பெற்றது. அதன் எட்டுத் திசையிலும், எட்டு நாக்ங்களை யுண்டாக்கி அவ்வீர

மகேந்திரத்தை யொப்ப வடகடலிடையே, சிங்கமுகாசுரன் இருந்தரசு செலுத்த ஆசுரபுரமென்றும் நாமத்தொடு ஓர் நகர்மியற்றி அளித்தான். மேலும் மற்றைக் கடல்களிலுள்ள தீவுகள்தோறும், சூரன் படைஞர் சுற்றமொடு வாழ நகர் பலவமைத்து, அப்பாலேகி, நீண்ட மேருகிரிக்குத் தென்பால் நாவலந்தீவினிற் கூடிய ஏமகூடம் பக்கலிற் சென்று, மாயாபுரமென்றோர் நகரினைச்செய்து, இளவலாகிய தாரகா சுரனுக்கு அரசு செலுத்தும் நகராக்கிச் சென்று சூரனுக்குரைத்தலும், சூரபன்மன், உவந்து சேனையோடு ஏகித் தன்னகரை யடைந்தான்.

பட்டாபிஷேகப் படலம்

அவ்வீர மகேந்திரபுரியை எய்திய சூரன், அந்நகர்வளம் முழுமையும் நோக்கி, மகிழ்வடைந்து, தன்னொரு கோயிலை எய்தினன். அப்பொழுது நான்முகன் முதலியோர் சூரனாகிய அண்ணலுக்கு முடி புனைய வேண்டும் பொருள்கள் யாவையும் வைத்து, உயர்ந்ததோர் ஆசனத்துச் சூரனை அமர்த்திப் புண்ணிய நீர்த்தங்களால் அபிடேகம் செய்தார்கள். அழகிய பொன்னுடையும், அணிகலன் பலவும் உடுத்தணிந்து, மலர்சூடித் தன்னிளஞர் பக்கலில் போதர, நிருதர் போற்ற, புகரும் முனிவரும் புகழ, விண்ணவர் நடுங்கி நாணிப்போற்ற, மனந் தளர்ந்து மகபதி பின்செலச் சென்று, சூரபன்மன் சீயந்தாங்கிய செம் மணித் தவிசின் மேல் ஏறிச் சிறப்புடன் வீற்றிருந்தான்.

அவ்வெல்லையில் அரிக்குத் தருமென்றுரைக்கத் தகுந்த அரும் பெறன் முடியை நான்முகன் ஏந்திச் சூட்டினன். தானவர் அன்புடன் அடியில் வீழ்ந்து பணிந்து, அளவிலா மகிழ்வெய்தினர். தேவரும் முனிவரும் ஆசிகூறிப் பூமழை பொழிந்தனர். சூரன் தனது தவிசின் மருங்கு, திருமால், பிரமன், ஆகிய இருவரையும் இருத்தினன். அவன் ஏவலின் முறையால் இந்திரன் தாம்பூலப் படிகமும், குபேரன் அடைப்பையையும், வாயு கவரியும், நிருதர்க்கிறை உடைவாளும் கொள்ள, பரிதியும், மதியும், பனிக்குடை நிழற்ற, வருணனும் மகாரும், ஆலவட்டம் வீச, கருட கந்தருவர் சித்தர் முதற்குழுவினோர் கான யாழ் இசைப்ப, நடுவனும் கனலனும் கையிற் பிரம்பேந்தி, யாவரும் ஒதுங்க எரி விழித்து இடிபோலார்த்துக் குழுவினை வரிசையின் நிறுத்திச் சூரபன்மன் புகழினைப் பரவி நிற்ப, தேவகுரு, அசுரகுரு, முனிவர் ஆகிய முதியோர் புண்ணியப் புனல் தெறித்து ஆசிகூறி நிற்க, அரம்பை முதலிய

அரமகளிர் பாடலோடு நடனம்புரியப் பெரிய. மிதத்தொடு, அவ்வரத் தாற் பெரியோன் ஆண்டுத் திருவொடு அமர்ந்தனன்.

பின்னர் அவன். மருங்கமர்ந்த திருமாலை நோக்கி, "நீ என் பிதா வுக்குப் பாட்டனாகிய படியால் யான் விரும்பிஅழைக்கும் போதெல்லாம் இங்கு வரவேண்டும்." என்றான். பின்னர் அவன் அருக்கனை கோபுரச் சாளரவாயில் வழியே நுழைந்து இளங்கதிர் பரப்பித்திரிதல், வேண்டும் என்றும், மதியினைக் குறைதலும் வளர்தலு மின்றி என்றும் பரிதிபோல் வரவேண்டும் என்றும், தீயினைத் தன் மூதாருள்ளார் யாவரே எனி னும் நினைப்பின், அவர்பாலேகி இட்ட பணியைப் புரிந்து குளிர்ந் திருத்தல் வேண்டும் என்றும், நமனைத் தனது யானைகளையும், குதிரைக ளையும் காலாட்களையும் கொல்லக்கனவிலும் கருதாது இருத்தல் வேண் டும் என்றும்,வாசவனைத் தேவருடனும், திசைகாப்பாளருடனும், அருந் தவருடனும் வந்து, சொல்லிய பணிகளாற்றிப் பிழையாமற் போதல் வேண்டும் என்றும் மொழிந்தான். பலவாறாக அவன் அனைவருக்கும் ஆணையிட, ஆன்றோர் நடுநடுங்கி, அச்சத்தோடு அவ்வண்ணமே ஒழுகி வர அரசுபுரியுங்கால், கடிமணம் முடிக்கக் கருத்துடையனாயினான்.

அவன் கருத்தறிந்த சுக்கிரன், தேவகம்மியன் புதல்வியாகிய பது மகோமளையை விதிமுறை மணம் புணரச்செய்தான். பின் சூரன், தேவர் அசுரர் முதலியோர் ஈன்ற குலமகளிரை மணமுடித்துக் கூடி இன்பம் நுகர்ந்திருந்தான். சிங்கமுகா சூரனுக்கு அந்தகன் குமரி, விபு தையையும், தாரகா சுரனுக்கு நிருதி மகள் சவுரியையும் மணம்பேசி முடித்தான். இவ்வண்ணம் மணமுடிந்த பிறகு, இளைஞரைப் பார்த்து, "நீங்கள் உங்களுக்கியன்ற மூதூரின் ஏகி, இரண்டு கோடி வெள்ளம் படையொடும் இருங்கள்." என்று விடையளித்தான்; படைத் தலைவரிற் சிலரை, "நீங்கள் கடல்கள் தோறும் உள்ள தீவுகளில் அமைத்த நகரங்களில் இரண்டு கோடிவெள்ளம் படையொடும் மேவுங் கள்." என்று விடையளித் தனுப்பினான்.

பிறகு எட்டுத் திசைகளிலும், வானேழ் உலகிலும், பாதலங்கள் யாவினும்,ஒழிந்த இடங்களிலும் தனது ஆணைசெல்ல அளவிறந்த வீரர் களை ஆறுகோடி அனுகத்தொடும் அனுப்பினான். அப்பால் யானைமுகங் கொண்ட வீரனை முதலிட்ட எண்மராகிய தலைவர்களுக்கும், மகேந்திர புரியைச் சூழ்ந்த எட்டு நகரங்களைக் கொடுத்துப் பதினாயிர வெள்ளம்

சேனையுடன் தன்னகரைக் காக்கச்செய்து, மகேந்திரபுரத்து இலக்கம் வெள்ளம் சேனையை வைத்து, ஆங்காங்கு காவல் புரியும்படி ஆணையிட்டுத் துர்க்குணன், தருமகோபன், துன்முகன், சங்கபாலன், வக்கிரபாலன், மகிடன் முதலாயினோரை அமைச்சராகக் கொண்டு, வானவர் போற்ற, வளத்துடன் வீற்றிருந்து, ஆணை செலுத்தினன்.

தேவரை ஏவல்கோள் படலம்

இவ்வண்ணம் அரசுசெய்யும் நாட்களில், இந்திரன் முதலியோர் தத்தமக்கிட்ட பணிகளைச் சூரபன்மனிடத்தும், அவன் இளைஞரிடத்தும் வழுவாது செய்து வருங்கால் ஒரு நாள், சூரன், இந்திரன் முதலிய தேவரை வலிந்தழைத்து, "நீங்கள் தானவருக்குத் தம்பியரன்றோ? ஆதலால், அவர் பணி உம்பணி. நீங்கள் அவருண்ணும் பொருட்டுத் திரைகடலிலுள்ள மீன்களைப் பிடித்துக்கொண்டுவாருங்கள்." என்று உத்தரவிட்டான். அம்மாற்றங் கேட்ட இந்திராதியர், இனித் தாம் செய்யக்கிடந்த தென்னையென அஞ்சி, உண்ணடுங்கி, உத்தரவின்வண்ணமே செய்வதாகக் கூறிக் கடலினை நோக்கிக் கலங்கி அழுது நின்று, அக்கடலினுக் கிறைவனாகிய வருணனை வேண்டினார்கள். அவ்வருணன் இந்திராதியர் பரிபவத்தினை ஓர்ந்து, திமிங்கிலம் முதலாகிய பெருமீன்களைக் கையாற் றடவிப் பிடித்துக் கரையிற் கொணர்ந்து மலைபோல் குவித்தனன். அம்மீனின் குவியலை நோக்கிய இந்திரன், தேவர்களை நோக்கி, "உமது ஆற்றலினால் அவற்றைச் சுமந்து செல்லல் உங்களுக்குக் கடன்." என்று மொழிய, அவரெல்லோரும் நடுக்கமுடன் உளம் பதைப்ப, விழிபனிப்ப, கரங்களைக் குவித்து, நாணமடைந்து, அம்மீன் குவியலைச் சுமந்து, அவுணர் பரிகசிக்கப் புலம்பிச்சென்று, சூரன் கோயிலில் காவல் போற்றும் அசுரர் உத்தரவு பெற்று, உள்ளே புகுந்து, அதற்குரிய இடத்தினில் குவித்தனர். அதனைக் கேட்ட சூரன், "இந்திரனை முதலிட்ட தேவர்காள்! உங்கள் திறம் நன்று. நித்தலும் இவ்விதமே கொண்டு வந்து குவிக்கக் கடவீர்கள்." என்ன, அத்தேவர், அவ்வாறே செய்வதாக மொழிந்து ஏகினர்.

ஏகிய வானவர் வேத வொழுக்கத்திற்குப் பதிலாக மீன் பிடித்து உய்த்தலாகிய புன்தொழிலிலே நின்று துன்பம் உழந்திருந்தனர். நிற்க, சூரன் ஆற்றிய தவத்தின் சீரினால், பதுமகோமளை என்னும் பாவை வயிற்றில் மதிக்குழவி போலும் பொற்பு வாய்ந்து, மறலிக்கும்

மறலிபோல் ஓர் மதலை உதித்தான். அந்த மதலையை மன்னர் மன்னன் கண்டு, முடிவற்ற மகிழ்ச்சியுடையனாய்த் தங்கிளைஞராயினர்க்கு அம்பொன் அளவின்றி யளித்தான். பிறகு வானோர், மங்களிர், அவுணர் மாதர் ஆகியோர் ஆசிகூறி அம்மைந்தனைக் கொண்டு சென்று, வயிர முத்தம் கதிர்காலும் பொன்னங்தொட்டிலிற் சேர்த்தனர். அம்மைந்தன் மதிக்குழவிபோல மெல்ல மெல்ல வளர்வானாயினன். அவ்வாறு வளருங்கால், ஓர் பகல் தொட்டிலில் அமரும்போது, சாளரவழியாகச் சூரியன் கிரணம் தன்மேல் தீண்டுதலும், அம்மதலை மிக்க கோபமுடையனாய்ப் பரிதிமேற் பாய்ந்து அவனைப் பிடித்துத் தன் தொட்டில் காலில் கட்டி வைத்தான். சின்னாள் கழிந்தும், பரிதியை விடாமையால், பிரமன் முதலியோர் அருக்கனில்லாக் குறையை நினைந்து, அதனைச் சூரனிடஞ் சென்று விண்ணப்பித்துச் சிறைவிட வேண்டினர். சூரன், அவர்களைத் தம் மைந்தனிடமே சென்று, நல்லுரையுரைத்துப் பரிதியை அழைத்துச் செல்லுமாறு கூறினன். பிரமன் நன்றென உரைத்துத் தேவரோடு சென்று, பொன்னூட்டின் மேனகை முதலினோர் பாடலின் நலத்தால் ஆடும் தொட்டிலின் மேவும் அண்ணலருகே சென்று, அளவிலா ஆசிகள் புகன்றான். அவ்வாசிகள் கேட்ட மைந்தன், "நீ வேண்டுவது என்னை?" என, பிரமன், பரிதியைச் சிறையினின்றும் விடவேண்டும் என்றான். அக்காலை, "நினது படையினைத் தருவையேல் ஆகும்." என்றான். அவ்வாறே பிரமன் தன் படையைக் கொடுத்துப் பரிதியை மீட்டனன்.

விடுபட்ட இரவியும், அக்குழவியின் திறத்தை மெச்சித் தன் மோகனப் படையைக் கொடுத்தான். அதனைப் பெற்ற சூரன் காலை அப்பிரமனாதியர்க்கு விடையளித்தான்.

பானுவைக் கோபித்தமையால், பானுகோபனென்று அழைக்கப்படும் அவன், மாதர் மயங்கும் வனப்புடையனாய்க் காளைப்பருவமடைந்து, அதன்பின் திருமாலையும் போரில் வென்றிருந்தான். சில பகல் கழிந்ததும் பதுமகோமளை, அக்கினிமுகன், இரணியன், வச்சிரவாகு என்னும் புதல்வர்களைப் பெறவும், மற்றைத் தேவியார் மூவாயிரம் மக்களைப் பெறவும், சூரபன்மன் மக்கட் பேற்றினால் களித்திருந்தான். இளவலாகிய சிங்கமுகன், அதிசூரன் என்பவனையும், மற்றும் நூறு புதல்வர்களையும் பெற்று மகிழ்ந்திருந்தான். பின்னவனாகிய

தாரகாசுரனிடத்துக் குற்றமற்ற குணத்தினையுடைய ஓர் புதல்வன் தோன்ற, அவனுக்குச் சுக்கிரன், அசுரேந்திரனென்னும் பெயர் தரத் தாரகன் உவக்கக் கடலில் ஆழ்ந்திருந்தான்.

## வில்வலன் வாதாவிப் படலம்

அம்மூவரோடு பிறந்தவளாகிய அஜமுகி என்பவள், ஒருவன் மனைவி யென்னு முறைமையின் அடங்காது, தன் மனஞ் சென்ற வழியே சென்று, கற்பிகந்து ஒழுகியும், வானவர் மனைவிகளைத் தன் முன்னவர்க்குக் கொண்டு வந்து கொடுத்தும், முனிவர் தவங்களை அழித்தும், கொடுந்தொழில் பலவியற்றி வருபவளாயினள். அத்தீயவள் ஒரு நாள் துருவாச முனிவன் உறையும் தவவனஞ் சார்ந்து, அவனைக் கண்ணுற்று, "இவன் தவத்தைச் சிதைத்தலே யன்றி, இவனை அணைந்து புதல்வரையும் பெறுவேன்." எனக் கருதி, அம்முனிவனை அணுகினள். முனிவன், சூரனுக்கு அவள் பின்னவளென்றுணர்ந்து, "நங்கையே! நீ வேண்டுவதென்னை?" என்று கேட்க, அவள், "நின் தோள் தோய்வு." என்றாள். முனிவன் அதனைக் கேட்டுத் தன் தவக்கேட்டையும், பழியையும் அஞ்சி, அவள் கூறியதை மறுக்க, அஜமுகி கேளாதவளாகி, முனிவனை வலிந்து புல்லி, மக்களிருவரை ஈன்றாள்.

முனிவன் உருவத்தோடும், அவள் உருவத்தோடும் முறையே தோன்றிய அம்மக்கள், தாயுபதேசப்படி தந்தைபாலணுகி வணங்கி நிற்ப, முனிவன் அவர்கள் கருத்தென்னை என, அவர்கள் அவன் தவமுழுவதும் வேண்டும் என்றனர். முனிவன், "அஃது உங்களுக்குத் தக்கதன்று. வேறு பொருள் வேண்டுவீராயின், தருவேன்." என்று கூற, பிதாவைச் சிறுவர் சினந்து, அவனை வதை புரியக் குறுகினார்கள். அஃதுணர்ந்த முனிவன், "நீங்கள் வைகலும் முனிவர்க்கேஇடரிழைத்துக் கடைமுறை ஆழியுண்ட குறுமுனியால் மாளக் கடவீர்." என்று சபித்து, மறைந்தான். பிறகு வேறோர் வனமடைந்து, அத்தீயோர் பிரமனைக் குறித்துத் தவமியற்றப் பிரமன் வாராமைபால் மூத்தோன், இளவலாகிய வாதாவியை வாளால் வீசி, ஓமத்தீயிடை அவியாக இட்டுத் தவஞ் செய்தனன். அதன்பின்பிரமன் தோன்றி, "நீ வேண்டுவதென்னை?" என்ன, வில்வலன், "என்தம்பியாகிய வாதாவி உயிர் பெற்று எழ விரும்பினேன்." என்றான். அவ்வாறே எழுப்பிக் கொடுக்க, வில்வலன், "இவ்வாறே இவன் உயிர் நீங்கி அழியினும், யான்

அழைத்த அளவில் அவன் நிறைந்த உருவம்பெற்று வரவேண்டும்." என்றனன். பிரமன் அவ்வாறே நிகழுமென்று கூறி மறைந்தான். வரம் பெற்ற அச்சிறுவர் இருவரும் சூரனிடஞ்சென்று முறையைக் கூறித் தாம்பெற்ற வரத்தின் சீரையுமெடுத்துரைத்து, அவனால் உபசரிக்கப் பட்டிருந்தனர். சில நாட்களானபின், மேற்றிசையிற் சென்று ஓர் வனத்தில் நான்கு வீதிகள் கூடும் இடத்தினில், ஓர் ஆச்சிரமமைத்து அதில் எப்பொருளும் நிரம்பவைத்து, அவ்வழியிற்செல்லும் முனிவரை யுபசரித்து அழைத்து, முனியுருவாகிய வில்வலன், ஆட்டுருவுடைய வாதாவியைக் கொன்று சமைத்து அம்முனிவரை அருத்திப் பின்னர் வில்வலன், "வாதாவிவருக" என்றழைக்க, அவன் அம்முனிவர் வயிற்றைக் கிழித்துக்கொண்டுவந்து, இறந்த முனிவர் உடலை இருவரும் உண்டுகளித்து, முனியும், ஆடுமாகி அங்கிருந்து, நாள்தோறும் இச்செயல் நடத்திப் பல முனிவரை ஒழித்து வந்தனர்.

### இந்திரன் மறைந்துறை படலம்

இவ்வண்ணம் இருவரும், மற்றை அசுரரும், முனிவர், தேவர், மனிதர் ஆகியோரைத் துன்புறுத்த, மாயையின் மகனாகிய சூரபன்மன் அரசு புரிந்து வந்தான். அவன் தன்னிந்திரஞாலத் தேரினிலேறித் திருமால் முதலியோர் உலகங்களிலும், பாதலங்களிலும், ஏனைய அண்டங்களிலும் திரிந்து, விரைவில் மகேந்திர நகரடைந்து அரசு வீற்றிருந்தான். அரசு புரியுநாட்களில், இந்திரனைச் சிறையிலிட்டு அவன் தேவி புலோமசையை அபகரிக்க எண்ணங்கொண்டவனாய் அத்தீயோன், சில அவுணரை விளித்து, "நீங்கள் இந்திரனைப்பற்றி என்முன் கொண்டுவாருங்கள்." என்றும், வேறுசில படைத்தலைவரை அழைத்து, "நீங்கள் மாதருடன் சென்று இந்திராணியைப் பிடித்து என்னிடம் கொண்டுவாருங்கள்." என்றும் கூறி ஏவினான்.

அப்படைவீரர் அளவிறந்த சேனையோடும் ஏகி, அமரர்கோன் நகரை அணுக, அஃதறிந்த தூதர் இந்திரனுக்கு அறிவிக்க, இந்திரன் அயிராணியோடும் மாயையால் மறைந்து மண்ணுலகு எய்தினான். நாடிச் சென்ற படைத்தலைவரும், மாதரும் ஏனைய அவுணரும் இந்திரன் உறைவிடம் அனைத்தினுந் தேடியும், அவனையும் இந்திராணியையும் காணாது கவற்சி எய்தி, விண்ணவரைப் பிடித்து வருத்தியும், அவர் சென்ற இடம் அறியவில்லை. பின்னர் அவர்கள் மகேந்திர நகர

மடைந்து, சூரபன்மனைப் பணிந்து, நிகழ்ந்தவற்றைக் கூறினார்கள். அவ்வினைத்துங்கேட்ட சூரன், பெருங்கோபங் கொண்டதுமன்றி; மணி யிழந்த அரவுபோல் பெருந்துயரமும் எய்தி, ஒற்றரை விளித்து, "நீவிர் எங்கணுந்திரிந்து அவ்விருவர் உறைவிடந் தெரிந்து வந்து அறிவியுங் கள்." என ஏவினன். அவர் அவ்வாறே சென்று எங்குந் தேடியும் காணுதவராய்த் திரிந்து கொண்டிருந்தனர். நிற்க, விண்ணுலகத்தில் நடந்தவற்றைக் கூறத் தொடங்குவாம்.

இந்திரன் மகனாகிய சயந்தன், தன் சிறிய தந்தையைக் காண வைகுண்ட நகரினுக்குச் சென்றிருந்தான். அவ்வாறிருக்கும் போழ்து, அமராபதி அவுணரால் எய்திய கேட்டினைக் கேட்டு, இருந்து மறைந்த தன் தாய்தந்தையரின் துன்பத்தினை நினைக்கச் சகியாதவனாய், பெருந்துயர் உழந்து, விண்ணுலகடைந்து, அவுணரால் அலைக்கப்பட்ட அமரரைத்தேற்றித், தந்தையைப்போல் அந்நகரினைக்காத்து வருங் கால், நாரதமுனிவன் அச்சயந்தனிடஞ் சார்ந்தான். வேந்தன் புதல்வன் மிக்க மகிழ்வடைந்து, அம்முனிவனை உபசரித்துப் பணிந்து, தன் துய ரனைத்தையுங் கூறி, அதன்பின் தன்பெற்றோர் செய்தியை வின வினன். நாரதன், அவனைத்தேற்றி, "உன் தந்தை அவுணர் அழிய அருந்தவம் முயல்வான். நீ அஞ்சற்க."என்று கூறி, அங்கிருந்து அகன் றான். நிற்க, சயந்தன் முனிவனைத் தெளிந்து மகிழ்வடைந்திருந்த பின்னர்த் தேவர்களைத் தேற்றியும், சூரனது ஏவல் புரிய விண்ணவரை அனுப்பியும், விண்ணுலகத்தில் தேவரோடிருந்தான். இனிப் பூமியிற் போந்த இந்திரன் செயல்களைச் சிறிது கவனிப்போம்.

தருநிழலை இழந்து, தரணியிற்போந்த சதமகன், சோழநாட்டிடைப் பன்னிரு திருநாமம் படைத்த சீர்காழியை நண்ணி, அத்தலம் இறை வனைப் பூஜித்தற்கு ஏற்ற தென்றுணர்ந்து, சந்தனம், அகில், பலா, மா, தேக்கு, அசோகு, புன்கு முதலியவற்றால் வேலி கோலி, ஜாதி, கோங்கு நாகம், சண்பகம், இதழி, ஞாழல், பாதிரி, பாரிஜாதம், செருந்தி, நரந்தம், வில்வம், மௌவல், செவ்வந்தி, முல்லை இவை முதலாகிய மரங்களும், புதல்களும் வைத்தான். அவையெல்லாஞ் செவ்வனே மலர்கள் பூத்தன. அம்மலர்களை இந்திரன் வைகலும் கொண்டு உமாபதி யாகிய சிவபெருமான் திருவடிகளில் அருச்சித்து, அத்தலத்தில் தன் தேவியோடும் உறைந்திருந்தான். அவ்வாறு உறையுங் காலத்துச் சூர

பன்மனால் விடப்பட்ட தூதர், உலகெங்கும் தேடி அங்கு வருதலும், அதனை இந்திரன் அறிந்து, அவர்காணுவகை மூங்கில் வடிவங் கொண்டு தவமியற்றியிருந்தான். தூதுவர் அஃதறியாது சென் றனர். அக்காலத்தில் சூரபன்மன் ஆணையால் வானம் மழை யின்றிப் பொய்க்க, இந்திரன் வைத்த நந்தனவனம் நீரின்றி வாட்டமடைய, சதமகன் மனநொந்து இறைவனை நினைந்து வருந்தி னன். வருந்திய மகவான் கேட்க, "இந்த க்ஷேத்திரத்தில் ஓர் நதி வரப் போகிறது. நீ கவலையுற வேண்டாம்." என்று விண்ணிடையே ஓர் அசரீரி வாக்குண்டாயிற்று. அச்செம்மொழி கேட்ட மகவான், அது சிவபிரான் திருவருள் என மகிழ்ந்து, அப்பெருமானைப் போற்றி இருந்தான். அவ்வாறு இருக்கும் காலத்து நாரதமுனிவன், விந்தகிரியை அடைந்து, மேருமலையானது தனக்கு ஒருவரும் நிகரில்லை என்றெண்ணித் தருக் குட னிருக்கிறதென்று கூற, அந்நாரதன் மொழியினைக்கேட்ட விந்த கிரி, அனேக கோடி விஷ்ணுக்கள் மாயையால் நீண்டிருந்ததுபோல, பரிதி, மதிகளின் கதியை அடைத்துப் பிரமன் உலகளவும் சேண் வழிப்போய் நிமிர்ந்தது. அவ்விந்தத்தின் செயலினைக்கண்ட பரிதி முதலிய கிரகங்கள், அஃது அவுணர் மாயையோ வென்று நினைத் துப் பரமனை உன்னி,ஞானத்தாலுணர்ந்து, அவ்விந்தம் அகத்திய முனி வன் தென்பாற் செல்லும்போது தருக்கொழிந்து தாழுமென்று எண்ணி, மேருமலைச்சாரலில் சிவபெருமானைக் குறித்துத் தவம்புரியும் அகத்திய முனிவனிடம் சென்றன.

## அகத்தியப் படலம்

மேருவின் சாரலை எய்திய கிரகங்கள், அகத்திய முனிவனை நோக்கித் துதித்துக் குறையினை மொழிந்து நின்றன. அவ்விண்ண வர் எய்திய இன்னலை அறிந்த முனிவன், "நீங்கள் அஞ்சன்மின்! நார தன் மொழியினைக் கேட்டு வானை அடைந்து உயர்ந்திருக்கும் விந்தத்தை அடக்கி, உங்களுக்கு நெறியினைத் தருவேன்." என்று விளம்பி, அரு ளுருவாகிய சிவபெருமானை வேண்டி நின்று, விந்தமடக்கும் சக்தியைப் பெற்றனன். அஃதே அன்றிச் சிவபெருமான் குறுமுனிவனைப் பார்த்து, "நீ தென்திசையிற் சென்று பொதிகையில் வதிவாய்." என்றலும், கும்பமுனி அதனை வணங்கி ஏற்றுக்கொண்டு, அவரது பூசனைவிடாது செய்தற்குத் தென்திசையின்கண் ஒரு புனித தீர்த்தம் அருளல் வேண்

டுமெனக் கேட்டனன். சிவபெருமான், திருக்கயிலாயத்தில் இனிது வைகிய ஏழு நதிகளில் புனிதமாகிய பொன்னியாற்றை வருமாறு திருவுளத்தெண்ணினன். அக்குறிப்பு அறிந்த காவிரி சென்று வணங்கி நிற்க, அமலன், அம்முனிவனோடும் தென்றிசைக்கு ஏகுமாறு ஆணையிட, அவனருட்டிறத்தை யறிந்த காவிரியாறு, ஆறிய ஐப்புலமுடைய அவ்வாண்டகைக் குண்டிகையின்கண் அமர்ந்தது. அப்போது சிவபெருமான், அக்குண்டிகையோடும் தென்பால் ஏகும்படி அருள் புரிந்து மறைந்தருளினன். அப்பெருமானது அருளைப்பெற்ற அம்முனிவன், அவணின்று தென்றிசை நோக்கிச் செல்லுவானாயினன்.

## கிரவுஞ்சப் படலம்

மேருவினின்றும் போந்த முனிவன், பூமியின் நெறிக்கொடுத்தெக்கிணைத் தேகுங்கால், சிங்கமுகாசுரனுக்கு இளையனாகிய தாரகன் உறையும் மாயாபுரத்தை அடைய, அங்குற்ற மாயையில் வல்ல கிரவுஞ்சனென்னும் அவுணன், அம்முனியின் வருகையை உணர்ந்தான். அவ்வவுணனே வானுலகை மண்ணுலகாக்குவான், பூமியை விண்ணுலகாக்குவான், கடலை மலையாக்குவான், மலையைக் கடலாக்குவான், பானுவை மதியாக்குவான், மதியினைப் பரிதியாக்குவான், அணுவை மேருவாக்குவான், மேருவை அணுவாக்குவான், வடவனலை நீராக்குவான், நீரினைக் கனலாக்குவான், ஒரு நாழிகைப் பொழுதில் பதினாயிரத்தொரு கூற்றைத் தேவராயினும் முனிவராயினும் மயங்கிப் பன்னெடுங்காலமென அயர மாயைகள் அளப்பில இயற்றுவான். அன்னோன் வன்மையை அளந்தறிந் துரைப்பவர் யாவர்?

அத்தகைய அவுணன், குறுமுனிவன் செல்லும் வழியில், பல சிகரங்களோடும் ஓங்கி, விந்தகிரியைப் போல உருக்கொண்டு, தன் பால் வருவதற் குரிய ஒரு வழியினைக் காட்டி நின்றான். அக் குறுமுனிவன், அம்மலைக் கிடையே செல்லுவதற்குரிய ஒருவழி யுண்டாயிருக்கிறதென்று நினைத்து, அவ்வழியே ஒரு குரோசதூரஞ் சென்றதும், அந்நெறி மறைந்து மற்றொரு வழிதோன்ற அவ்வாறாகச் செல்லுகையில், வழியில்லாமலிருக்க முனிவன் திரும்பிப் போகவும், முன்னுள்ளவழியையுங் காணாகி மயங்கி, ஓரிடைப் பின்னொரு வழிகண்டு, மனங்கலங்கிச் சென்றான். அவ்வாறு செல்லுகையில், நெருப்பு சூழ்ந்து நெருங்கவும், சுழற்காற்று அலைக்கவும், மேகம் இடியிடித்து மழை பொழியவும்,

இருள் கவியவும் ஆகிய மாயைகள் பலவும், அவ்வவுணன் செய்து மயக்கி நின்றான். கவலையுற்ற அகத்திய முனிவன், அஃதென்ன இயற்கையோ, அன்றி அறிவிலார் மாயச்செயலோ என்று ஐயமுற்றுப் பின்னர் அவுணர் மாயை யென்று தன் ஞானத்தா லுணர்ந்து, வெகுளி மூண்டு நகைத்துத் தனது கைத்தண்டினால் பூழைகள் படும்படி அம்மலையினைக் குத்தினான். பின்னர் அவன் அதைப் பார்த்து, "அறிவில்லாத தீயோய்! உன் பழைய உருவ நீங்கி மாயையாலாகிய இம்மலை வடிவாகவே இருந்து, தீய அவுணர்களுக்குத் துணையாகித் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் தீமைகள் பற்பல வியற்றி வருக. நமது கைத் தண்டத்தாலுண்டாகிய பூழைகளெல்லாம் பல மாயங்களுக்கும் இருப்பிடமாதுக. அதன் பின் எம்பெருமான் உதவிய குமரவேளின் வேற்படையினால் இறுதி யெய்துக." என்று சபித்துக் கமண்டலத்திலுள்ள நீரைத் தெளித்து, மாயையை நீக்கி, மீண்டுந் தென்திசையேகும் வழியினை நாடி, வண்தமிழ் முனிவன் செல்வானாயினான்.

## விந்தம்பிலம்புகு படலம்

"அக்கிரவுஞ்சனென்னும் அவுணன், அன்றுதொட்டு மலையுருவாக விருந்து மாயைகள் வல்ல பல அவுணர்களுக்கும் அரணமாய் நேற்றைக்கு முதல்நாள்காறும் நின்றான். வியாழதேவன், முருகனை நோக்கிக்கீழ் வருமாறு கூறினான். "என்னையாளும் பரம குருவாகிய குமார மூர்த்தியே! நீயல்லது அன்னவனை அடுவோர் வேறியாவருளர்? தமிழ் முனிவன் இமயம் நீங்கிக் காசிநகரடைந்து, விச்சுவநாதன் கோயிலுட் புகுந்து உமாபதியைத் தரிசித்துப் பன்முறை பணிந்து, பிரியா விடைபெற்று, பெரு மிதத்துள்ள விந்தகிரியின் ஒரு சார் ஏகி, அம்மலையினை நோக்கி, "மிக்க உயர்வினையுடைய விண்ணளவும் ஓங்கியிருக்கும் விந்தமே! கேள், யாம் பொதிய வெற்படைந்து இருக்கப் போந்தனம், அதனுக்கு ஏக இப்பொழுது நீ ஒரு சிறிது வழியினை விடுவாய்." என்றான். அக் குறுமுனிவன் மொழியினைக் கேட்ட நெடிய விந்தம், "பரிதியும் மதியமும் படர்தலுக் கரிதாய் நெடிய மால்போல நிவந்து நின்ற யூான், குறிய நிற்கஞ்சி வழியினைத் தருவனோ? ஏகு, ஏகு", என்றது.

"அறிவிலாது அகந்தை, கொண்ட, அம்மலையின் மொழியினைக் கேட்ட முனிவன், சீறித் தன் தவத்தினாற்றலால் விண்ணளவும் தன்

கையை நீட்டி, அம்மலையின் சிகரத்தில் வைத்து, வன்மையின் அழுத்து தலும், அம்மலை ஆற்றாது பாதலத்தில் அழுந்தியது. அழுந்திய உடனே அறிவு கொண்டு அகத்தியனைத் துதித்து, 'நின் பெருமையை ஓராது கெட்ட அடியேனுக்கு எழுச்சி எக்காலம்? அதனை அருள்புரிய வேண்டுகின்றேன்.' என்னலும், முனிவன், 'யான் தென்பால் பொதிய மேகிப் பின்னரும் இவ்விடை மீளின், அக்கால் நீயும் எழுதி' என்று சூழ்ச்சியின் நகைத்துரைத்துக் கையை முன் போலச் சுருக்கிக் கொள்ள, அம்முனிவனை அருக்கன் முதலிய தேவர்கள் துதித்து வணங்கி, 'யாங்களியற்றும் எதிருதவி அறிந்திலோம், ஆயினும் எங்கள் பொருட்டு, தாங்கள்! பொதிகையில் இருந்தருளல் வேண்டும்' என்ற தேவர்களைத் தத்தமிடத்திற் கேக விடையளித்துத் தெக்கி ணாங் தொடர்ந்து செல்லுங்கால், மேற்றிசையிலிருந்த வில்வலன், வாதாவியர் அம்முனிவனது வருகையைக் கண்ணுற்றனர்."

"கடல் குடித்த குறுமுனிவன் செல்லுகையைக் கண்ட அவ் இருவருள் வாதாவி என்பவன், ஆட்டுருவங் கொண்டு, மலைப்பக்கத் திலுள்ள ஒரு புதலில் மெல்லிய தழைகளை மேய்ந்திருக்கவும், வில் வலன் என்பவன், அருந்தவ முற்றிய சிவனடியார் உருக்கொண்டு, அகத்திய முனிவன் முன் சென்று பணிந்து, அன்பு காட்டித் தன்னில் லிற்குப் போந்து, நல்விருந்தாகுமாறு அம்முனிவனை வேண்டினன் அவனது வஞ்சமோராத முனிவன், அவ்வாறே உடம்பட்டு, அவனோடு இல்லிற்கேக, அவன், முறைப்படி உபசரித்து, நீரின் மூழ்கிப் பனித மாயிருந்து, அறுசுவை யுண்டியை அமைத்து, அதன் பின் அவவாட் டினைப் படிதது கொணர்ந்து, வாளால் இரு துணியாக்கிப் போர்வை நீக்கிக் காயங்களால் இனிய சுவைத் தாக்கி, முனிவனுக்குத் தாழ்மை கூறி, உபசரித்து அருத்தினன்."

"அருந்திய பின்னர் ஒரிடத்து அமர்ந்த முனிவன் பக்கலில் அமர்ந்த வில்வலன், அம்முனிவனைக் கெடுக்க எண்ணி, வழக்கம் போல இளவலை நோக்கி, 'வாதாவி மைந்த இளையாய் விரைந்து வருக' என்ற லோடும், அவ்விளையோன் ஆட்டுருக்கொண்டு முனிவன் வயிற்றில் சிங்கம்பால முழங்குதலும், முனிவன் அது அவுணர் மாயை என் றுணர்க. 'ஊன்கொண்ட கறியாகி உண்டய இயல்பே வாதாபி மாளக் கடவன' என்று கூறித் தன் வயிற்றைததடவலும, அக்கணமே அத்

தீயோன் சாம்பராய் ஒழிந்தான். அஃதறிந்த வில்வலன், முன்னையுருக் கொண்டு முனிவனை முனிந்து, தண்டேந்திச் சென்று, கொலைத் தொழில் முயலலும், குறுமுனிவன் தருப்பையைக் கிள்ளிப் பசுபதியின் கணையாக அருச்சித்து விட்டனன். அப்படை அவன் ஆவியை உண்ண, அகத்தியன் அக்கொடியோர் உறைவிடம் நீத்து அப்பாற் போயினன்."

## காவிரி நீங்கு படலம்

செங்கரத்திற் றாங்கிய குண்டிகை நீரொடு சென்ற குறுமுனிவன், கொங்குநாடு நோக்கி ஏகுதலும், இறந்த துருவாச முனிவன் மைந்தராகிய வில்வலனும், வாதாவியும், கரிய மேக நிறத்தையும், சுழற்கண்ணையும், பெருங்கோபத்தையு முடையராய்ப் பயங்கர உருவத்தோடு ஆரவாரித்து அணுகியும், அகன்றும், மறைந்தும், சூழ்ந்தும் தோன்றினர். அத்திண்மையைக் கண்ட அகத்தியன், அது அக்கொடியரைக் கொன்றதால் உண்டாகிய பாவம் என்றும், அவர்கள் முனிவன் மைந்தராகையால் பிரமபாவம் சேர்ந்த தென்றும் தெரிந்து, அது தீரும் பொருட்டு, அக்கொங்கு நாட்டின் ஓர் புறத்தில் சிவலிங்கம் தாபித்துச் சிவார்ச்சனை செய்து வருகையில், அவனை எய்திய கொலைப்பாவம் தொலைந்து போயிற்று. அது நிற்க.

அம்முனிவன் அங்கமர்ந்து தவமியற்றுதலை யுணர்ந்த நாரத முனிவன், சீர்காழியில் சூரன் கொடுமைக் காற்றாது மறைந்து வேறுவாகித் தவமியற்றிக் கொண்டிருக்கும் இந்திரனை நாடிச்சென்றனன். இந்திரன், முனிவன் வருகையைத் தெரிந்து சென்று, அடிவணங்க நாரதன், "இவண் நீ சுகமாக இருக்கின்றனையோ?" என்று வினவினன். இந்திரன், "இதுகாறும் நினதருளால் சுகமாகவே யிருந்தேன், இது போழ்து சிவபெருமானை அருச்சித்தற்கு ஓர் இடையூறு நேர்ந்துள்ளது. அஃதாவது சிவார்ச்சனைக் குரிய பூக்கள் நிறைந்த நந்தன வனம் நீரின்றி வாட்டமடைகின்றது. அதனால் பூக்களும் இல்லை. இது பெருங் குறை." என்று கூறினன். இந்திரனை முனிவன் நோக்கி, "இந்திரனே! உனது அரசும், வாழ்வும் விரைவில் அரனருளால் உன்னைச்சாரும். நீ வருந்தல் வேண்டாம்." எனக் கூறிப் பின்னும் மொழிகுவான்: — "நினது நந்தனவனம் நீரால் செழிக்கவும், சிவார்ச்சனை தீங்கின்றி முற்றுப் பெறவும், உன் துன்பம் நீங்கவும், நற்காலம் நேர்ந்திருக்கிறது. எவ்வாறெனின், முழுமுதற் கடவுளாகிய

சிவபெருமான், அகத்திய முனிவனைத் தென்பாற் செல்லென்று விடுப்ப, அம்முனிவன், ஆறு தாங்கிய குண்டிகையொடு தென் திசை நாடிச் சென்றான். அவன் எதிர்த்து வழியடைத்து நின்ற விந்த கிரியை அடக்கிச் சூரன் மருகாகிய வில்வலன் வாதாவியரைத் தொலைத்தான். அதனால் அவன் தனக்கு நேர்ந்த பாவம் நீங்கக் கொங்கு நாட்டைத் தவம்பற்றி அருள்பெற்று, இன்னும் அங்ஙனே அமர்ந்திருக்கின்றான். அவனது கமண்டலத்துள்ள காவிரியாற்றை இங்கு வருமாறு செய்குவையாயின், உன் மனக்குறை யனைத்தும் நீங்கும்." என்று உரைத்தான்.

அவ்வுறதி கேட்ட இந்திரன், அவன் சிரகத்தினுள்ள ஆற்றினை அவ்விடை ஒழுகச்செய்வது எத்திறம் எனலும், நாரதன், விநாயகப் பெருமானை வழிபட்டுத் தவம் புரிந்தால், அப்பெருமான் அதனை முடித்தருளுவன் என்றான். இந்திரன் மகிழ்ந்து, அப்பொழுதே தந்தி மாமுகற்கு இயன்ற பூசனை இயற்றுவதாகக் கூறலும், அவனிடம் முனிவன் நன்றென்று விடைபெற்றுச் சென்றான். பின்னர் இந்திரன், கணேசப்பெருமான் உவக்குமாற்றால் அருச்சனை ஆற்றிப் பண்ணியம், பல வருக்கங்கள் முதலிய நிவேதித்துப் பணிந்து நின்று ஏத்தினன். இந்திரன் பூசனை உவந்த கணேசப்பெருமான், அவனெதிரில் கணத்த வர் சூழ எழுந்தருளி, அவன் வேண்டியன யாவுங் கூறுமாறு கேட்ட னன். இந்திரன், சிவபெருமான் பூசனைக்காகும் மலர்வனம் நீரின்றி வாடத் தன் மனம் வாட்டமடைந்தது எனவும், அக்குறை தீர பெரு மான் அருளவேண்டும் எனவும் கூறினன். பிள்ளையார், "ஆகாய கங்கை வேண்டுமோ? அல்லது ஏழ் பெருந்தலத்துப் புனித தீர்த்தம் வேண்டுமோ? யாது வேண்டினை?" என்றார். இந்திரன், "அடி யேன் அவற்றை விரும்பினேனல்லேன், தேவரீருக்கு அரிய தொன் றில்லை. அடியேன் பெற விரும்புவது கொங்கின்பால் தவம்புரியும் அகத்தியமுனிவன் கரகத்தின் கண் உள்ள காவிரி தீர்த்தத்தையே. அதனைக் கவிழ்த்தால் அந்நதி இங்கு வந்து நந்தவனத்தைச் செழிக்கச் செய்யும். அடியேன் மனத்துயர் அகலும். ஈதே அடியேன் வேண்டு கோள்." என்று பணிந்தான். விநாயகப்பெருமான், அவ்வாறே தருவ தாகக் கூறி கொங்கினில் தவமியற்றுங் குறுமுனிவன் பாலணைந்தனன். சிவபெருமான் அகத்தியமுனிவன் குண்டிகையில் பொன்னியாற்றைப்

புகக் கட்டளை இட்ட ஞான்று, அப்பொன்னி பரமனை எக்காலம் தான் அம்முனிவனை விட்டு நீங்குவது என்று இரந்து கேட்டது. சிவபெருமான், "அம்முனிவன் உன்காரணம் நோக்கிக் கரங்காட்டு வான். அஞ்ஞான்றே நீ நீங்கக்கடவை." என்ற அப்பெருமான் சூழ்ச் சியை முடிக்கவெண்ணி, ஆண்டோர் காகமாக உருக்கொண்டு, அவ் வகத்தியன் பக்கலில் இருந்த கரகத்தின் மீது அமர, அம்முனிவன், ஐங்கரனென்றோராது, ஓர் பறவை என்ற உணர்ச்சியினால் அக் காகத்தை ஒட்டுங் குறிப்பால் தன் கையை நீட்டி ஒச்சினான், கணேசப் பெருமான் குண்டிகையைக் கவிழ்த்து "காவிரியே! முன்னாள் ஈசன் கூறியருளியவாறே இம்முனிவன் இதுபொழுது கையைக் காட்டி னான். இனி நீ பாரின்மீது படரலாம்" என்றனன். அப்பொன்னி யாறு, முற்காலத்து அண்ணலருளால் போந்த கம்பை ஆற்றைப்போல விண்ணும் மண்ணும் நடுங்க ஆர்த்துப் பொள்ளெனப் படர்ந்தது.

அங்ஙனமாகவும் உமை மைந்தன், காகவுரு நீத்து, மறைநூல் வல்ல பார்ப்பனச் சிறுவன் போலச் செல்லுதலைக் கண்ட முனிவன், "இவன் தேவனோ? அவுணனோ யானறிந்திலேன். திறலின் மிக்க இவனைப் பின் தொடர்ந்து அறிவேன்." என்று சீற்றத்துடன் அவன் பின்தொடர்ந் தனன். விநாயகப் பெருமான், அஞ்சினான் போன்று ஓட, முனிவன் தன் கையைக் கவித்தமாக்கிச் சிரசில் குட்டுவதற்காகப் பின் தொடர்ந்து துரத்தினான். இவ்வாறு மாணியாம் உருக்கொண்ட அப்பெருமான், அகத்தியனை நெடுந்தூரம் அலைபச் செய்தலும், முனிவன் களைப் படைந்து, செயலற்று நிற்க, அவனது தளர்ச்சியைக் கண்ட தயாநிதி உண்மையான தனது உருவத்தைக்காட்டி நின்றான். தாரகப் பிரமமாகிய விநாயகப் பெருமான் திருவுருவத்தைக் கண்ட முனிவன், அச்சமுற் றுக் கலங்கி, அடிபணிந்து நின்று, குட்டுவதற்காகக் கவித்த தனது கரத்தினால் தனது நெற்றியில் குட்டிக் கொண்டு, பலகாலும் அடிப்பணிந் தான். முனிவனைப் பார்த்து, பெருமான் அருள் சுரந்து, "வருந்தலை, வருந்தலை, நீ வேண்டியதென்னை?" என்று மொழிந்தனன். முனி வன், "தேவரீரை அறியாது குட்டுவதற்காக எடுத்த இக்கையால் யான் குட்டிக் கொண்டு அப்பாவத்தின் நீங்கினேன். தேவரீரது திருவடியை யும், சிவபரஞ்சுடரின் அடித்தலத்தையும் மறவாத அன்பு தான் அடியேனுக்கு வேண்டும். அன்றியும், இவ்வாறு தேவரீர் சந்நிதா

னத்தில் யாவர் ஒருவர் தம் கையால் நெற்றியில் தாக்கிக்கொண்டு குறை இரக்கிறரோ அவர்க்கு அருள் சுரக்க வேண்டினேன்." என்றான்.

இவ்வாறு வேண்டிய முனிவனைப் பார்த்து, விநாயகப்பெருமான் "நின் கருத்தின் வண்ணமே அருளினம், இவற்றையெல்லாந் திருவிளையாடலாகக் கருதினம். அன்றியும், இந்திரன், சிவபெருமானைக் குறித்துச் சீர்காழியில் தவஞ்செய்துகின்றான். அவன் வைத்த மலர் வனம் செழிக்க அவனது வேண்டுகோளின்படி யாம் இவ்வாறு செய்தனம்." என்று அருளினான். முனிவன், "இக்கரகத்தில் புனித தீர்த்தம் சிறிது மில்லையே யான் செய்யக் கடவதென்னை?" என்று கேட்டனன். வேழமுகத்து வள்ளல் தமது திருக்கரத்தை நீட்டிக் காவிரியின் புனலைச் சிறிதே அக்கமண்டலத்தில் பெய்தருளினான்.

அகத்திய முனிவன் மகிழ்ந்து பலவாறாகத் துதித்து வணங்கி நிற்றலும், அவனுக்குப் பெருமான் அருள் புரிந்து மறைந்தருளினான். பிறகு பரவையுண்ட குறுமுனிவன், அக்கொங்கு நாடகன்று தென்திசை நோக்கி நடந்தான்.

## திருக்குற்றாலப் படலம்

சிவபெருமான் திருவடியை மனத்துக் கொண்ட அகத்திய முனிவன், திருமால் வதியும் குற்றாலமென்னும் வளநகரைக் குறுகினான். அம்முனிவன் வருகையைக்கண்ட வயிணவப் பிராமணர், மனம் பொறாது, எதிரில் நின்று, "நீயோ தகுதியற்ற கண்டிகையும், நீறும் அணிந்துளாய். எல்லோரும் அறிய ஐயமேற்ற புராந்தகனுக்கு அடிமை பூண்டுளாய். கையில் தண்டமும், குறியஉருவமும் உடைய நீ இவ்விடம் வருதல் தகாது. எம்பெருமான் நகரினின்று, அகல், அகல்" என்று அத்தகுதியில்லார் கூறினர். அகத்திய முனிவன், வெகுளாது நகை செய்து, "வேதநெறி கடந்துளீர்! நீவிர் இவ்விடம் நெருங்கி உறைவதை யான் அறிந்திலேன். இத்தினம் யாவரும் மொழிந்தாருமிலர். நல்வழியினர் என்று கருதி வந்தேன். உமது பான்மையை உணர்ந்திருப்பின், யான் இம்மூதூர் சென்றிடவும் நினையேன். வெகுளற்க யான் மீண்டு செல்லுவேன்." என்று அக்குறுமுனிவன் புகன்றனன். அவர் பொறாது, "இத்தலம் நீ வருவதும் பாவமாம்; மீண்டு நீ செல்." என முனிவன், "நன்று கூறினீர்! இதுவே உண்மை." எனறு கூறி, அவர்கள் நந்திதேவர், ததீசி முதலிய பெரியாரிட்ட சாப நீக்க வல்லுநரோ

வென்று நினைந்து, அப்பாற்சென்று சிவநிந்தை செய்த அவாது செருக்கை அடக்குவேனென்று சிவபிரானைத் தியானித்துத் தனது மாயையால் திருமாலைப் பரவும் பாகவத வேடம் பூண்டு, மீண்டும் அவ்விடையே வந்தனன். அவ்விரு பிறப்பாளர் அடி பணிந்து, உபசரித்து, திருமால் எழுந்தருளி இருக்கப் பெறுவதாகிய திருக்கோவில் அதுவேயென்று காட்ட, கண்ணனை மனத்திலுன்னிக் கரங்குவித்து வலம் வந்து, "யான் இன்று இவரை வழிபடுவதற்கு வேண்டிய திருமஞ்சன முதலியவற்றைக் கொணருமின்" என, அவ்வாறே அவர்கள், அப்பொருள் அனைத்தும் எஞ்சாமலுய்த்திடலும், அவரைப் பார்த்து முனிவன், "யாம் இன்று இவரை அருச்சிக்கு முறையைப் பாருங்கள்." என்று உட்புகுந்து, சிவபெருமானை மனத்துட்கொண்டு, சிறிய உருவத்தினனாகிய முனிவன், திருமால் முடியில் கையை வைத்து, 'குறுகு, குறுகு குற்றாலம்' என்று மேனியைக் குழைவித்துச் சிவலிங்கமாக்கி, சிவாகமத்தின்படியே அருச்சித்தனர். அதைக் கண்ட வைணவர், "இவன் முன் இங்குவந்து மீண்டவன், பின் மாயையால் இவ்வடிவங்கொண்டு இவ்விடம் புக்கு நம் சமயத்தை அழித்தான்." என்று வெகுண்டு, குறுமுனிவனை வளைந்தார். பற்றுவதெண்ணி நெருங்கிய அக்கூட்டம் சிதறியோடும்படி தனது வெகுளித்தீயை உய்த்தலும், அத்தீ அடர்ந்து அவர்களைத் துரத்த, அவர்கள் அந்நகரத்தை விட்டு அன்றே சிதறியோடி ஒழிந்தனர்.

அவ்வயிணவர் போய பின்னர், அன்று முதல் அது சிவபெருமானிடமாயிற்றென்று அப்பெருமானை அருச்சித்துப் பணிந்து விடை பெற்றுத் தென்பாற்சென்றனர், பிறகு பொன்னொடு மணி கொழித் திழியும் அருவிகளையுடைய பொதியவெற்பை நண்ணிக் காமனை எரித்த கண்ணுதல் அடியிணையை மனத்திலமைத்துத் தவத்தினைப் புரிந்து அமர்ந்திருந்தான்.

## இந்திரன் அருச்சனைப் படலம்

காகவுருவம் கொண்ட கணேசப் பெருமானால் காகத்தினின்றும் கவிழ்க்கப்பட்ட காவிரி தீர்த்தம் படர்ந்த தன்மை, விடற்கரிதாகிய பாசத்தளையினீக்கி, நன்னெறி படுத்தலோடும், குருவருளாற் செல்லும் ஆருயிர் போன்றும், தடைவல்லோன் பெருங்கடத்துத் தடைப் படுத்திய பாந்தள், அருளுடையோன் ஒருவன் அத்தடை நீக்கச் செல்

லுதல் போலுமிருந்தது. அன்றியும், சந்தனம், அகில், சங்கு, தரளம், கவரி, யானைமருப்பு, பொன், மணி ஆகிய இவற்றை அலைமேற்கொண்டு வந்திழியும் நதியின் தன்மையானது, வருணன் அப்பொருள்களை யெல்லாம் இந்திரன்பாற் செலவுய்த்தது போலும் இருந்தது. இத்தன்மையோடு அலைகளால் அகல்வான் முட்டி, காவதம் பல பரவிக் காசினியை அளந்து, கீழ்த்திசைச் செல்வதோர் பொன்னி நீத்தம், இந்திரன் இருந்து நோற்கும்போது நிறைந்த தண்டலை புக்கது. அக்காமர் காவினில் பீடுற எய்திய பொன்னி நீத்தத்தைக் கண்ட அகண்டலன் எழுந்து, ஆடியும், நகைத்தும், தங்கோன் அருச்சனை முற்றியதென்று பாடியும், முதல்வன் தாளைப்பரவியும், படர்ச்சி தீர்ந்தான்.

பருவரல் நீக்கிய பாகசாதனன், சூரனை வென்று தன்னரசும், வளமும் அடைந்தாற் போன்று, மதர்ப்படைந்த அவன் மனக்களிப்பை உரைப்பவர் யாவர்? அவ்வெள்ளம் பாய்தலும், அம்மலர்வனம், மகவானைப்போல் வாட்டம் நீங்கித் தளிர்த்து மாரிக்காலத்துத் தூவலால், கான் நிறை மரனும், பூடும், வல்லியும் கவினடைந்தாற் போன்று, மேல் நிறைந்த இலைகள் மல்கி, விளிந்த சினைகளும், போதும் மல்கிக் கவின் அடைந்தது. வானளாவிய புன்னைகள் அனைத்தும் வளம்பெற அரும்பிப் பூத்தன. தாரகை நெருங்கி மொய்க்க, விண்ணின் முகிலினம் விளங்கியது ஒத்தது. பண் பயில் வண்டினம் பயிலுறச் சண்பகங்கள் கவர்வனப்பில் தயங்கிப் பூத்தன. வாவியும், கிடங்கரும் வண் தாமரையொடு காவிகள் பூத்துக் கவினைத் தந்தன. இவ்வாறு மரங்களும், கொடிகளும், ஏனவும், அரும்புதல், மலர்தல் ஆகிய காட்சி, மாலைச் செக்கரும், விண்ணின் மீனும் விரவியது ஒத்தது. இவ்வளம்படப் பூத்த மலர்வளத்தினை இந்திரன் மகிழ்வொடு நோக்கி, விடியற் காலத்து மேவி, வண்டுகள் வீழாமுன்னர்ப் புரையிலாக் கடிமலர் கொய்து, கொணர்ந்து, கண்ணுதலடிகளில் ஆகமவிதிப்படி அருச்சித்தேத்தினன். அந்நாள் முதல் இவ்வாறாக உம்பர் கோமான் வைகலும் நோற்று அச்சண்பக வனத்தில் தங்கியிருந்தான். இது நிற்க.

## தேவர் புலம்புறு படலம்

சூரபன்மனால் இடப்பட்ட இழிந்த ஏவல்களைச் செய்து தளர்ந்த சில தேவர்கள், எக்காலத்தில் அப்புன்மை தம்மை நீங்கு மென்று வருந்திப் பொன்னகரை விட்டுப் புவியினிற் போந்து, செந்தமிழ் நாடாகிய

மாதினும் சிறந்த வதனமெனத் திகழும் சீர்காழியை நண்ணி, அவ்வுழித் தவமுயலும் இந்திரனைக் கண்டு, அடிபணிந்து, "எம் மிறையே! எம்மை நீத்து இவ்வாறு தனித்திருப்பதுந் தகுதியோ? எங்கள் துன்பங்களைத் தீர்க்கக் கருதிலையோ?" என்று பலவாறு இரங்கிக் கூறி வருந்தினார்கள். இறைவனாகிய இந்திரன் அம்மொழிகளைக் கேட்டு அயர்ந்து, வெய்துயிர்த்து அவர்களை நோக்கி, "சூரன் வீரமாமகம் இயற்றிய ஞான்றே நம் அரசும் வாழ்வும் தொலைந்தன. தயாநிதியாகிய சிவபெருமான் உவக்குந் திறமுடைய தவமே யன்றி உயிர்க்குறுதி மற்றொன்றுண்டோ? ஆகலான், அப்பெருமானைக் குறித்து இதுகாறும் அரிதில் தவமுயன்றேன். யாம் அடைய வேண்டுவன யாவும் அவனருளால் விரைவில் அடைவதற்கு ஓர் உபாயம் யாதெனின், அவ்வுமாபதியார் அமருந் திருக்கையிலையை நண்ணி, ஒருங்கே அவனைப் பணிந்து நின்று, அவனருள் பெறுவது தான்." என்று கூறினன். அவ்வாறு கூறிய இந்திரனைத் தேவர் பணிந்து கயிலை செல்ல ஒருப்பட்டனர்.

அப்பொழுது வணங்கி நின்ற தேவர்களை இந்திரன் சற்று அங்கிருக்கச்செய்து, தான் தனித்து அயிராணியின்பால் அணுகினன். எய்திய இந்திரனை அன்னநடையினையுடைய புலோமிசை அடிபணிந்து, அவன் கருத்து யாதெனக் கேட்டனள். அம்மொழியைக் கேட்ட வேந்தன், "சூரன் பணியால் வருந்திப் போந்து, இரங்கிய தேவர்களின் இடுக்கணும் நமது துயரும் நீங்க, வரைமகள் கணவனாகிய கறைமிடற்று இறைவன் வைகும் அப்பொருவறு பொருப்பிடை, புத்தேளிரோடும் போகக் கருத்துடையேன். ஏந்திழாய்! ஈது நின்பால் கூறிப்போக வந்தேன்." என்றான். அப்பிரிவுக் குரிய மொழியினைக் கேட்ட அயிராணி, அயர்ந்து, மயங்கி, மண்ணிடை வீழ்ந்து, இந்திரன் தேற்றச் சிறிதே தெளிந்து, "பொன்னின் நாடிழந்து, புவியிற் போந்து, காடிடமாகக் கவன்றிருப்போர்க்கு உயிர்த்துணையாகிய ஒருவன் நீ அகன்றால், அவுணரால் கற்பு மழியப் பெறுவேன். ஆகலின், நின்னோடு அக்கயிலைக்கேகுவன்," என்றாள்.

அமுதினை யொத்த அவள் மொழிகேட்ட மகபதி, "உன்னைக் காக்கும் திறமுடையோன் ஒருவனுளன். அவன் மாசாத்தாவெனும் பெயருடையோன். விரிசடை அண்ணலும், புனல் துயில்வோனும் பொருந்தி யளித்த ஐயன். அவனை அன்பால் விளித்து, யான் கயிலை சென்று

இங்கு வருமளவும் காவலை இயம்பி, நின்னை அவன்பாற் கையடையாக் குவன். அஞ்சாதே, ஒன்றும் எண்ணி வருந்தாதே. அன்னமே!" என்று விண்ணவர் கோன் மொழிதலும், அயிராணி, அன்னவன் சிறப்பினை அறிய எனக்கு மொழிவாய்." என்று வணங்க, இந்திரன் ஐயன் வர லாற்றை எடுத்துக் கூறத் தொடங்கினன்.

"முன்னொரு காலத்தில தேவர்கள், சிவபெருமான் திருவருளினைப் பெறாது, பாற்கடலைக் கடைந்தனர். அக்கடலிடத்திருந்து ஆலாகல மென்னுங் கொடிய விடமெழுந்து, அனைவரையும் வருத்தியது. அதனை யஞ்சிய அவர், ஓடி ஓலமிட்டுத் திருக்கயிலை சென்று, சிவபெருமானை வேண்டிக்கொண்டனர். அப்பெருமான் அவ்விடத்தினைக் கண்டத்தடக் கிப் பின் அக்கடலைக் கடையச் சொன்னார். கடையச் சென்றவர், தந்திமுகத்து எந்தையை வழிபடாமையால், மத்தாகிய மந்தரமலை பாத லத்திலழுந்தியது. அதனை உணர்ந்த திருமால் முதலிய தேவர், கணேசப் பெருமானை வழிபட்டுக் கடைய ஊறு நீங்கி, அமுதமெழுந்தது. அவ் வமுதத்தினைத் தேவாசுரராகிய இரு பகுதியினரும் கடல் கடைந்த உரிமையால், தம்மால் வந்த அவ்வமிழ்தம் தமக்கே உரியதென்று தம்முள் மாறுகிப் பொரநினைத்தனர். அக்கணம் திரு மால், ஒரு மோகினி வடிவங்கொண்டு, சுரரும், அசுரரும் காணும்படி முன்னின்று, "அமுதமும் உள்ளது, யானும் உள்ளேன், இவ்விரண்ட னுள் நீங்கள்விரும்புவதுயாது?" என்று வினவினார். தவமற்ற அவுணர் கள், "யாம் விரும்புவது அமுதத்தினுஞ் சிறந்த நின்னையே." என்றனர். மோகினியாகிய திருமால், நன்றென அமுதினைத் தேவருக்களித்து, அவுணரொடு சென்று, அவரைநோக்கி, "என்னை இன்பெய்தும் புல்லும் வலியவர் இக்குழுவினுள் ஒருவரும் இல்லையே." என்றனர். அவ்வவுணக் குழுவில் இருந்த வீரர், "யான் வன்மை யுடையேன், யான் வன்மை யுடையேன்." என்று தம்முள் முரண்பட்டு மலைந்து மாண்டனர்.

அவ்வாறாகிய காலத்தில் சிவபெருமான், மோகினியாகிய திருமால் பெற்றிருந்த மயக்கும் வனப்பொடு அவளை அணையுங் கருத்துடன் அரு கிற் செல்ல; மாலாகிய மோகினி அஞ்சி அகன்றனள். அப்பெருமான் "நால்வகைச் சத்திகளில் நீ யொன்றல்லையோ? ஆதலின், நின்னை அணைய விரும்பினேன்." என்று கூறினன். மோகினி இசைந்து, சம்புத்தீவில் சாலவிருக்க நீழலில் மயங்கி உள்ளுருகி, அப்பெருமான் இன்புறுமாறு

கலந்தாள். அவ்விருவரும் கலந்தபொழுது, கருத்தமேனியும், செங்குஞ்சியும், செண்டுறு கையுமாய் உக்கிரத்தோடு ஓர் மகன் பிறந்தனன். முக்கண் எந்தையும் முயக்கினை நீத்து, அக்கணமே 'அரிஅரபுத்திரன்' என்னும் பெயரினை அவனுக்கு ஈந்து, உருத்திரர்கணத்தொடும்வைத்து, வரம் பல நல்கிப் புவனமும் நல்கி, அதற்கியைந்தமையும் நல்கி, அமரர் மாதவர் ஆகிய அனைவரும் ஏத்தும் மேன்மையும் கொடுத்தான். பிறகு திருமால் தனதுண்மை உருவொடு நின்று தொழலும், அப்புதல்வன் நின்று வணங்கவும், அவர்க்கு விடையளித்துச் சிவபெருமான் தன்னிடஞ் சென்றருளினன்."

"அவ்விருவரும் தத்தமிடஞ் சார்ந்தனர். தனதிடஞ்சார்ந்த அரிஅர புத்திரன், சாரதர் தம்மொடு எங்கணும் இருந்து, எல்லா உலகினையுங் காத்தனன். அத்தன்மையனாகிய மாசாத்தா என்னிடத்து வைத்த அன்பினால் இங்கு வந்து நின்னைக் காத்தருளுவன்." என்று உரைத்தனன். புலோமிசை இசைந்து நின்றாள். மாதின் இசைவு அறிந்த இந்திரன், அன்பால் ஐயனை விளித்து, "ஐயனே ! இவள் நின் அடைக்கலம், யான் வருந்துணையும், இன்னல் நேராது, இவளைக் காக்கவேண்டும்." என்று மொழிந்து, அவளை அங்கண்விடுத்துத் தேவரோடுங் கயிலையை அடைந்தான். காவலேற்ற ஐயன், தனது வீரருள் வாட்போர் நீந்திய வயத்தின்மிக்க மாகாளன் என்னும் வீரனை அருளால் நோக்கி, "இம்மாதினை ஏதமடையாவண்ணம் காப்பாய்." என்று ஆணை தந்தகன்றான்.

திருக்கயிலையைச் சார்ந்த இந்திரன், தேவரோடு ஏகி, நந்தியண்ணலை வணங்கிச் சிவ சன்னிதானஞ் செல்லவேண்டுதலும், அப்பெருந்தகை, "நீங்கள் இப்பொழுது காணுஞ் செவ்வியனல்லன் அச்சிவபெருமான். நால்வருக்கும் ஞான முதற்பொருள் காட்டி இருந்தனன்." என்று நவின்றான். இந்திராதியர் மனங்கவன்று, "அடியேம் உலகிற் செல்லுவமேல், சூராதியர் எம்மைப்பிடித்துச் சிறைசெய்குவர். ஆதலின், இவ்விடை யோர்புடை யாங்கள் இருக்குமாறு அருளவேண்டும்." என்றனர். அவ்வாறே நந்திதேவன் அவ்வாயிலின் ஓர்புடை இடங்காட்டியருள, இந்திரன் முதலிய தேவர் கவலை நீங்கி, அங்கிருந்தனர்.

புலோமிசையின் செய்கையையும், ஏனையோரது செயகையையும் இனிக் கவனிப்போம். இந்திரன் கயிலை சென்றதும், பாங்கரில் அணங்கினர் போற்ற அயிராணி அப்பூங்காவினில் தவம் புரிந்திருந்தாள்

இந்திரன் பிரிந்து கயிலைக்கேகி நீண்டகாலஞ் சென்றும் வாராமையால், தவமிழைத்து வருந்திய சசியென்பாள் தன்னுடல் வாடப்பெற்று, கவலையுற்றிருந்தாள். அதுபொழுது, சூரனுக்கு இளையவளும், இளையார் பலர் புணரினும் இளையாதவளுமாகிய கற்பிழந்த அஜமுகி என்னும் பெயரினையுடைய அத்தீயாள், துன்முகி என்னுந் தோழியோடுந் திரிந்து வருகையில், சீர்காழியை யடைந்து, அப்பூங்காவினிற் புகுந்து, அதன் கவின் முழுதும் நோக்கிச் செல்லுங்கால், காவல் பூண்டிருந்த மாகாளனாகிய வீரன். அத்தீயாள் வருகையை உணர்ந்து, அவளைத் தண்டித்தல் கருதி, அவள காணுவகை அங்கு மறைந்திருந்தான். அஜமுகி அழகுமிக்க அயிராணியைக்கண்டு, அவளருகணைந்து, தன் முன்னோனாகிய சூரபன்மனது தோளினைத்தோய ஒருப்படும்படி, அப்புலோமிசைக்கு உரைத்து நின்றாள்.

ஆட்டு முகத்து அழகி கூறிய அக்கொடு மொழியை அயிராணி கேட்டு, மனங்கலங்கிக் கூறுவாள்:—“நான்முறைப்படி அரசு செய்யாதவரும், பிறனில் விழைவாரும், கடுநரகில் விழுதல் திண்ணம். உமது அரசும், வாழ்வும், வீரமும் ஆகிய அனைத்தும் இனிச் சின்னாளில் அழியும். அறிவிலி! அடாதன சொல்லாதே.” உடனே அஜமுகி, இந்திராணியை வலிந்து, தன் கரத்தாற்பற்றி ஈர்த்தனள். அவள் கலங்கி, மகா சாத்தாவை நினைத்து அழைத்துப் புலம்புதலும், அங்கிருந்த மாகாளன் விரைந்து வந்து அஜமுகியை எதிர்க்க, அவள் சசியைத் தோழியிடஞ் சேர்த்துப் போர் புரிந்து, மீண்டும் சசியைப் பிடித்தலும், மாகாளன், அவளது கரத்தையும், துன்முகியின் கரத்தையும் துணித்துக் காலால் உதைத்துருட்டித் தேய்த்தலும், அவ்விருவரும் புலம்பிக்கொண்டிருந்தார்கள். அவருள் மருண்டு பதை பதைத்து, மறித்தகையளாகிய அஜமுகி எழுந்து, சசியை நோக்கி, அவளை உண்பதாகக் கூறிச் சென்று, மீண்டும் பலவாறு கையிழந்த காரணத்தால் கதறினாள். பின்னர் துன்முகியால் தேற்ற மடைந்து, சசியை நோக்கி, “என் முன்னோனால் ஆகாத காரியமில்லை, அவனுக்கு அடங்காதவருமில்லை. அவனை அஞ்சி மறைந்துறையும் உன் கணவனைச் சிறை செய்து. உன்னை அவனுக்கு ஆக்குவன் காணடி.” என்று சூளுரைத்துத் தோழியோடு சென்றாள்.

## இந்திரன் மீட்சிப் படலம்

அஜமுகி அகன்ற பின்னர், அங்கு நின்ற வீரமாகாளன், வருத்த முற்றிருந்த சசியை நோக்கிக் கூறுவான்:—"அன்னையே! அசுரரைக் குறித்து நீ சிறிதும் அஞ்சற்க. உன் தலைவனாகிய இந்திரன் வருந் துணையும் இடர் வாராமல் நின்னைக் காப்பேன். நீ இவ்விடையே கவலாது உறைவாய்." அவ்வாறு கூறி, அவன் சென்ற பின் னர், புலோமிசை அப்பூஞ்சோலையின் ஓர் சார் தன் கணவன் ஆக்கத்தினைக் கருதித் தவமியற்றிக் கொண்டிருந்தாள். அச் செய்தியை நாரத முனிவன் அறிந்து, வெள்ளி வெற்பினுக் கேகிக், காலம் பெறாது இருந்திடும் இந்திரனிடம், வையத்தின் கண் உள்ள புலோமிசைக்கு நேர்ந்த இன்னலனைத்தையும் ஒழியாது மொழிந்தான். அத்தீமையைக் கேட்ட இந்திரன், பெரிதும் உள் ளங் கவன்று, சிறிதே தேறிச் சீற்றமடைந்து, தன்னை நொந்து, இரங்கிச் சூழ்ந்த தேவரோடு சிவபெருமானைத் துதித்து, நந்தி யண் ணலை வணங்கி, "கணக்கிறந்த நாள் செவ்வி நோக்கியும், பரமன், யானிழைத்துள்ள தீமையால் கருணை செய்தானிலன். ஆகலான் நீலகண்டத் தெந்தையாகிய நிமலனை நோக்கித் தவஞ் செய்து, பேறு பெறுதற்குரிய மண்ணுலகத்திற் செல்ல அடியேங்களுக்கு அருள் புரிய வேண்டும்." என்றான். நந்தியம் பண்ணவன் நன்றே செல்லுமாறு கூறவும், இந்திரன் வணங்கித் தேவரொடு புவியிற் போந்து, சீர்காழியை நண்ணி, காவல் பூண்டிருந்த மாகாளனைக் கண்டு, உவகையாற் புல்லி, அன்பால் முகமன் பல உரைத்து, ஐயன்பால் போக விடையளித் துத் தனது அன்பிற்கு, அருங்கலமாகிய அயிராணி நோற்றிருக்குஞ் சூழலிற் சென்று, அவ்வணங்கினைக் கண்டு, அன்பாற் புல்லி, அவள் துயராற்றினன். சூளுரைத்துச் சென்ற அஜமுகியின் சொற்களைக் கேட்டு, நடுக்கமடைந்து செய்வதென்னென்று மனத்திலுன்னிப் பின் னர் அவன் அதுவே துணிவென்று கொண்டவனாய், இந்திராணியை தேவர்களோடு மேருமலையில் கொண்டுபோய் மறைந்திருந்தான்.

## சூரன் அரசுசெய் படலம்

இந்தப் பான்மையில் மகபதியானவன் இருப்ப, முன்னரே சென்ற அஜமுகி, கொடிய துன்முகத்தாளோடும் மகேந்திர நகரை யடைந்தாள். அன்னகாலையில் சூரன் அரசு வீற்றிருந்ததைச் சிறி

தறைகுவாம். மேலே உயர்கின்ற விண்ணின்றிழிந்த விழுமிய மானிலப் பரப்பில் ஆயிரங்கோடி கொண்ட அண்டத்தில் உள்ள, ஆடகத்தால் திசைமுகத்தவர்கள் செய்ததென்ன, ஒப்பின்றி விளங்கும் பொற் பொது ஒன்று, ஆயிரயோசனை யுள்ளதாய்ச் சூரன் அரசியல் நடாத்து தற் குரிய அவைக்களத்தில், ஆயிரங்கோடி பத்தியில் நிறுத்திய பொற் றாணம் பரந்துள்ள அப்பெருமையைப் பகர்வார் யாவருளர் ? அந்நலம் வாய்ந்ததோர் மன்றத்து அரியணையின்மிசை ஆயிரங்கோடி அண்டத்தி லுள்ள மேனிமிர்ந்த வடவைக்கனலும், விடமும் பொருந்தி யழியாத படி மேவித் தானவர் துதிக்கக் கூற்றெலாம் ஒன்றாய்ப், பரிதவில்லாப் பேரணி தயங்க வானிமிர்ந் தற்றாலென்ன, வெஞ்சூர மன்னவர் மன் னன் அரசு வீற்றிருந்தான்.

இவ்வாறு சூரபன்மன் அரசு வீற்றிருக்க, அவ்வமயத்து, அந் நகர்க் கணித்தாய்த் துன்முகத்தனோடும் அத்தீய ஆட்டு முகத்தாள் வந்துற்றாள். அஃது எவ்வாறிருந்ததெனின், மேன்மை தங்கிய மகேந் திர மென்னும் சிறந்த நகரின்கண், கூட்டிவைத்துள்ள பொருளெல்லாம் அழியத் தக்கவை யென்னும் மூத்தாள், அடுத்ததோர் துணையொடும் வந்துற்றாற்போல் இருந்தது. அவ்வண்ணம் கீழ்த்திசை வாயிலைக் கிட்டிய அஜமுகியின் பழிபடு கரத்தினைப் பார்த்த அவுணர், அழிபடு மனத்தினராய், அக்கொடிய தொழிலை இயற்றினார் யாவரெனச் சீற்றமடைந்தார். மானம் நீங்கிய அஜமுகி, மகேந்திர நகரம் உறு துயர்க்கு ஒருவழி காட்டுவாள்போல உதிரம் ஒழுகச் சென்றதை அங்குள்ள அசுரர்கள் கண்டு ஆகுலித்துக் கூடினார்கள்.

யானைப்போர், ஆட்டுப்போர், சூதுபோர், வாரணப்போர் முதலிய போர்களை நோக்கி நின்ற அனைவரும் அவற்றைவிட்டு விரைந்து வந்து குழுமினார்கள். குதிரை ஏற்றம் முதலிய வாகனப் பயிற்சியினை விட்டும், விற்பயிற்சி, வாட்பயிற்சி முதலிய ஆயுதப் பயிற்சிகளை நீத்தும், சிலர் அவ்வுழி வந்தனர். யாழிசை, குழலிசை, மிடற்றிசை முதலிய இசை பேத இனிமையை விட்டுவந்தனர் சிலர். நாடகம் கழைக் கூத்து முதலிய கூத்து வல்லார் இயற்றும் கோட்டிகள் அகன்று குலைந்த மெய்யினராய்க் கூடினார் சிலர். மங்கலப் பொருள்கொடு வது வைகள் நடத்திக் கேளிரொடு சுமமி அளவளாவுதலை நீத்து, அவ் வுழிக் கைகுலைத்து அடைந்தனர் சிலர். வாளையொத்த கண்ணையுடைய

வனிதையரோடும், அன்பாய் மாடங்கள் தோறும், செய்குன்றுகள் தோறும், தடாகங்கள் தோறும், நந்தனவனங்கள் தோறும், ஆடல் பயின்றவர் அவ்வாடலை வெறுத்து அடைந்தனர் சிலர். இத்தன்மையராகிய பலவகைக் கூட்டத்தினரும் அஜமுகியைக் கண்டு, நீரைத்துளிக்கும் கண்ணும், பதைபதைக்கும் நெஞ்சும், தீயொடு புகையைக் காலும் மூச்சும், முனிவும் ஆகிய இவற்றை யுடையராய், கீழ்வருமாறு மொழியலாயினர்:—"திரிபுரத்தை எரித்தும், தானவரை யழித்தும், தீக்கொடு விடத்தை மிடற்றிடை அடக்கித் தேவரைக் காத்தும், சரபமாகி அரியைப் படுத்தியும், நான்முகன் ஓர்தலை நகத்தாற் கிள்ளியும், தானுடை வலியைத் தெளித்துக் காட்டிய சம்புவின் செயல் அதுபோலும். நஞ்சினைப் பில்கும் எயிற்றினையுடைய சேடன்மேற் றுயிலும் நாரணன் செயல்கொலோ? கஞ்சமாமலர்க் கிழவன் நெஞ்சினும் அதனை இயற்ற நினைவனோ? ஆ, ஆ, அவன் அஞ்சும் அஞ்சும். புரந்தரன் சூழ்ச்சியால் புரிந்த செயலோ? அவன் அது செய்யவும் வல்லனோ! நறவினையுண்டு அறிவினை இழந்தார் நாட்டமின்றி இயற்றியதேயோ? பித்தேறினர் தாம் பிழையோராது வைத்து செய்கை யாகுவதீதோ? இழைத்த நாளெல்லைக்கு இறுதி சென்றோர் யாவரே இத்திரமியற்றினர்? விழுமிய முனிவர் பழுதுரை கூற இயற்றனர் கொல்லோ? இவர் இருகரமும், அன்றிச் சூளுரைத்துத் தம்முன் வாட்போ ரியற்றி, முறையின் வாங்கினர்கொல்லோ? யாரிவள் கையை அடவல்லார்? எவனோ ஒருவனை நண்ணினளாகி, அவன் பால் காதல் ஆற்றவு முடையளாய், பெண்மதி மயக்கித் தன்னை யுன்னாது, சீரிய உறுப்பில் ஒன்றைச் சின்னமாகத் தருவேனென்று, கூரிய வாள்கொடு ஈர்ந்து கொடுத்தனள். இது தான் உண்மை."

சிலர், கேட்டினை அடைந்த அவளைக் கேட்பதெவ்வா றென்றனர். சிலர், "இளையோர் நாடி நாம் கேட்கில் நம்மையும் முனிவள். ஆயினும், காடும், புவியும், ஓடியே திரிந்து இதனை அறிவோம்." என்றனர். இனையன உரைத்து, இடும்பை யுற்றுச் சூரன்தங்கை தோழியோடு கை போய்ச்செல்லுதல் கேட்ட அவுணமாதர், எல்லையில் தெருக்களில் வார்ந்த கண்ணீரோடும், செறிந்து, சூழ்ந்து திகைத்தனராயினர். இவ்வாறு அந்நகர் மாதர் ஆடவர் யாவரும் கலங்க வருந்த, அவள் அப்பெருந் தொகுதியின் அகன்று, அரசன்வைகும் அவைக்குச் செல்லலாயினள்.

## அஜமுகி புலம்புறு படலம்

ஆட்டு முகத்தினையுடைய அத்தியாள் அரசவைக்கு அணியளாகி, மாயம் புரியும் அன்னைதன்னையும், மருகரையும், திறலுடைய முன்னோரையும் நினைத்து, ஆண்டு நின்ற திருமகள் பயந்து, அப்புறஞ் செல்லக் கதறிப்புலம்புதல் செய்தாள். அவள் புலம்பிக் கூறியதாவது :—"மண நிரம்பிய கொன்றைத் தொடையல் அணிந்த மாதொருபாகன் அருளிய அஞ்ஞான்று நீ வந்து எம்மை நோக்கி, எங்களைப் பிரியாது போற்றித் திரிவேன் என்ற மொழியுந் தவறினையோ? என்கரம் அறுபட்டதறியாயோ? அஞ்சலென்று கூறினையில்லை. இது உனக்குத் தகுதியோ? அன்னையே! அன்னையே! சிறியேன் பெண்பிறந்து பட்ட துன்பம் என்று தீரும்! ஐயோ? உலகில் தந்தையர் தாம்பெற்ற மைந்தர்களை விரும்பிக் காப்பர். தாயரோ தாம் பெற்ற மாதரை விரும்பி அருள்செய்வர். இது பண்டைக்காலந்தொட்டு வந்த வழக்கல்லவோ? ஆகியும், என் துயரம் நீக்கினையில்லை. ஐயோ, ஆருமின்றி ஏதிலாரைப்போலத் தனித்து யான் கையிழந்து இவ்வுயிர் கொண்டிருக்கவுந் தகுமோ? நீங்கள் எங்கணும் தடையின்றித் திரிவீரென்று, யானெண்ணி அஞ்சாது புலோமிசையை வலிதிற் பற்றி எடுத்து வந்தேன். எனது கரத்தைத் துணித்துப் பின்னே சென்று பெருந்திறலுடைய மாகாளன் அவ்விந்திராணியையும் மீட்டேகினன். அம்மலர் வனத்து நீங்கள் யாவரும் செல்லலீர்கொல்? அவனை யஞ்சி நீங்களும் பதுங்கினீர்கொல்! எள்ளின் சிறுமையதாயினும், உட்பகையாவது, ஓகோ! கொடியது என்று கண்டேன். தள்ளத் தள்ளக் குற்றேவல் அணுகிப் புரியும் சதமகன், கள்ளத்தால் மறைந்து இருந்தே எனது கரந்துணிப்பித்தான். ஐயோ காண்மின். கடலில் அடங்கிக் கிடக்கும் வடவைத் தீயெனுந் தெய்வம் தனக்குக் காலநேர்வதைப் பார்த்திருந்து, நேர்ந்துழி உலகமனைத்தையும் ஒருங்கே யழிக்கும் தன்மை யொத்து, அங்கிருந்தே என் கரந்துணித்த ஒருவன், பின்னர் உங்களையும் படுப்பன் கண்டீர்."

"அவ்வானவராய வஞ்சகரை வலியிலார் என்று கருதினீர்போலும்! இரணியனுக்குச் சிரமூன்றும், அக்கினிமுகனுக்குச் சிரமிரண்டும், மற்றை வச்சிரவாகுவுக்குச் சிரம் ஒருபதும் உள்ளனவன்றோ? அவற்றை வாளா வளர்த்தனரே. இச்சிரங்களென் செய்யும்? ஒரு சிரத்தோன் என்கரத்தை இறுத்தானன்றோ? பிறைபோல் வளைந்த சிறு பரு

வத்து, வானில் உலவிய பரிதியின் சுடர்தீண்ட, அன்றே அவனை முனிந்து, தண்டமியற்றிய திறலுடை மருகாவோ! மருகாவோ! இன்றெனைக் கரந்துணித்த மாகாளன் சிரந்துணிக்க வாராயோ! இஃதென்னை நிமை அந்தோ! நெடிய கடல் சூழுலகை ஓரடியால் அளவிட்ட நெடியோன் கைந்நேமியை, நீ ஆரமெனப் பூண்டுள்ள அண்ணாவோ? குறும் பகைஞன் என் கரத்தைத் துணித்திடவும், குறிக்கொள்ளாது! அரசியற்றும் தாரகவோ, தாரகவோ!"

"கூரிய குலிசத்தண்ணலைத் தந்தியொடும் வான்வீசி, மீண்டு வீழுந்தானை யுதைத்தான் என்பர். அது மெய்யென்று வியந்திருந்தேன் பட்டிமையோ? அவள் தூதன் வெகுண்டு, எனது கரந்துணித்தான். சிங்கமுகவீர! இது காண்கிலாயோ! சூரனெனும் பெயர்படைத்த அவுணர்கள் தம் பெருவாழ்வே! தொல்லை அண்டம் யாவும் புரந்தனையே. நின் பரிதியும் செங்கோலும், குடையும் எங்குஞ் செல்லாநிற்கும். ஆகலான், மாகாளன் என்கரத்தைத் துணித்ததுவும் வியப்பன்றோ!' பகைவர் தம் சூழ்ச்சியினால் குறமுனியைக்கொண்டு என் மக்களுயிர் மாள்வித்தார். இன்று என் கை ஒருவனைக் கொண்டிழைப்பித்தார். இவற்றையெல்லாந் தள்ளாது நின்னரசு புரிகின்றாய் மன்னாவோ! மன்னாவோ! யான் பட்ட இழிவை மதிக்கிலாயோ? உலகளிக்கும் அண்ணாவே! அண்ணாவே! கரமற்றேன் கண்டிலையோ? ஊனமுற்று வாழ்தலினும், உயிரிழத்தல் நலமன்றோ? பாவியேன் பெண்பிறந்த பயனிதுவோ?" என்று பல மொழிந்தழுதாள்.

## சூரன் தண்டஞ்செய் படலம்

இன்னவாறு பல மொழிந் தழுத அஜமுகி, தோழியோடுஞ் சென்று, ஆவலித்து இரங்கி, அரசுவீற்றிருக்கும் சூரபன்மன் அடிகளின் முன்னர் வீழ்ந்து புரண்டாள், புரண்டு சகடக்காற்போல் உருண்டகாலையில், அரசவையினர் அஞ்சிமறுகினர், சுத்த வீரனாகிய சூரனென்னும் அவுணர்கோன், தன்னிரு கண்களினும் தீயெழ விழித்து, அவளை நோக்கி, "புலம்புகின்ற அஜமுகத்து இளையாய்! உன்னை அறிகிலாது, என்னையும் நினைகிலாது, உன் கைதன்னையும், இவள் ஒருகரத்தையும், வாளாற்றடிந்து, உயர்ந்தவராகத் தங்களை மதித்துளார் யாவர்?" என்றனன். அஜமுகி, "புரந்தரற் காய

புலோமிசைதன்னை கண்டு விரைந்து, நின்றனக்கெடுத்தேம். ஆங்கவள் நோற்க அணுகிக்காக்கும் வீரமாகாளன் என் கரத்தைத் துணித்தனன்.'' என்னக்கேட்ட இமையோர் பகைவன், விழிகனல் சொரியவும், துண்டந் தீப்புகைப் படலமொடு திக்காலுயிர்க்கவும், மின்னலைக்காலும் எயிறி தழ் தின்னவும், அண்டம் வெடிபட கடுநகைதோற்றவும், இதழ்துடிக் கவும், புருவம் நிமிரவும், எயிற்றணி கறகறவென்று சலிப்போடு கடிக் கவும், உடல் வியர்வொடு தீப்பொறி காலவும், நெஞ்சினில் வெஞ் சினங் கொண்டனன். ஆகர் இக்கடு நிகழ்ச்சியைக்கண்ட திசைகாப் பாளர் ஒடினர். ஒட, முனிவரும் கலந்தனர். தெய்வக்கணிகையர் நாட கம் விட்டும், கிளைப்பாடுநர் பாடலைத் தவிர்த்தும், பதைபதைத் திரங் கினர். தாங்குதல் புரியும் திசைக்கரியோடின. மேருவும் குலைந்தது, வானவர் ஏங்கினர். இரவி நீங்கு நாடியே சென்றுந் திரும்பியும் திகைத் துத் திரிந்தான். பாரும் விண்ணும், பரவை நன்னீரும் நடுங்கின. அயன்பதம் தன்னொடு மால்நகர் நடுங்கிற்று. அவுணர் நடுங்கினர். உலகத்து ஆர் நடுங்காரே? அவன் சினஞ் சிறிதோ ? அண்ணலென் றறையும் புன்மனத்து அவுணர்கோன் அமரர் யாரையும் அழித் தல் கருதி, இளையரைப் பார்த்து, "மீன் சுமந்து நம் ஏவலில் திரிந்த விண்ணவர்கோன், கான் மறைந்து, ஒரு காளனைக் கொண்டு, இவர் கரங்களை ஒங்கியே துணித்தனனென்றால், இனி மானிடச் சிறவோரும் ஈங்கு நம்மை யடுவர். இனி, இதனைப் புரிந்தோன் அப் பரமனும் அல்லன். பங்கயத்தவிசோனும் அல்லன். திருமாலும் அல் லன், இரியும் வாசவனுமின்றி அவன் பணி இயற்றுஞ் சிறுவனே இவர் கரந் துணித்து, இன்னமும் ஆவி கொண்டுறைவான். நன்று, நன்று. முன்னர் என் சேனையாளர் பிணித்துக் கொணர்ந்து, என் எதிரில் தேவரை நிறுத்தியபோது அவுணரைத் தம் கடும்பசி யொழிய அவர்களை உண்ணுமாறு கூறுது விடுத்தது அறத்தினை நோக்கி யன்றோ ?''

"மறைந்துறையும் வாசவனையும், இந்திராணியையும் சிறியரென்று எண்ணி, யான் சிறை வைக்காது விடுத்தது, தயான் எச்சத்தைச் சிறி தென்று அவமதித்ததை யொத்த தன்றோ? மலைச் சிறகெறிந்த வாசவனையும், அவன் மனைவியையும் தேடுதற்கு யான் விட்ட தூதர்கள் இப்புவியிலிருந்தே துணிவாற்றிக் குறும்பிழைக்கும் இன்

ஞேரை இன்னங் கண்டிலர் கொல்?" என்று கூறி, இளையரைப் பார்த்து, "நீவிர் இருந்தீர், மதலையர் இருந்தனர். நிகரிலாத் தேரி ருந்தது, நேமியும் இருந்தது. சிறிதென். பெயரிருந்தது. யானிருந்த னன்? யாரிருந்து மென்? இருந்து மற்றுவதென்? அந்தோ! மலையொத்த பஞ்சுப் பொதியில் சிறிய தீப்பொறி பற்றி அழித்தாற் போல இவர் கள் கரங்களற்ற ஏதும், அண்டங்களனைத்தையும் அகப்படுத்தி நின்ற என் புகழை அழித்ததல்லவா? வளப்பமுடைய தேர்களும், கஜங்களும், புரவிகளும், காலாட்களுமாகிய நாற்பகுதிச் சேனை யெல்லையற்று யாங் கணும் நிறைந்தும், மறிமுகமுடைய மாது என் தங்கை படுவதித் திறமோ? நன்று, நன்று, என் அரசியல் முறைமை." என்றுரைத்து நகைத்தான்.

இத்திறம் மொழிந்து, சூரன், நகைத்தகாலையில், பானுகோபனென் றுரைக்கும் வலியர்க்கும் வலியனாகிய புதல்வன், ஊழித் தீப்போல, அவ்விடைத் தோன்றி, வணங்கி நின்று, "ஐயனே கேள், நமது குற்றே வலைச் செய்ய அஞ்சிய இந்திரன் ஓடி மறைந்துள்ளான். ஏனைய தேவரோ இத்திறஞ் செய்ய நினைக்கவும் வலியிலார். உன் தங்கை கையிழந்ததென்ன மாயமோ? இது வந்தி பெற்றதோர் புதல்வன். வான் தவழும் இந்துவைக் கரங் கொண்டனன் என் னும் அத்தகுதியே. அன்றி வலியடைந்து இத்திறம் செய்யினும், அத்தேவர் மெலியரே. நீ வெகுளும் தரத்தரோ? மீன் சுமந்து, நின் கடைதோறும் உழன்ற அவ்வானோர் அலியரன்றி ஆண் தகையர் என்பதற் குரியரோ? எறி புனற்சடை யண்ணலை வெகுளினும் நன்று. அன்றி, நறைமலர்க் கமலத்தனை, நாரமேற்றுயில் அத்திரு மாலை, நீ வெகுளினும் இயல்பே. அன்றி இச்சிறியர் தம்மை நீ வெகுளு தல் சிறப்போ? முத்தேவரேயன்றி மற்றையோர் உன் வெகுளிக்கு எத் துணையர்? உன் இளையர்க்கும் போதியரல்லர். ஆதலின், சித்தமுற்றிய வெகுளியைத் தீர்ப்பேன். யான், இம்மாதர் கைத்தலங்களை அற்றதோர் விடத்தினைக் குறுகி, விஜயவாளனும் காளனேயன்றி, நின்மனம் உவக்கச் சசியென்னுந் தையலையும், இந்திரப் பெயர்க் கள்வனையும் தம்துயிரின் மேற் சிறிதும் பசையிலாத அவ்வமரரையும் பற்றியே கடிதின் கொணர் ருவேன். அங்கண் உற்றிலராயினும், அகில மெங்கணுந் துருவி, அவ ரைத் தீக்கு உணவாக்கி மீள்வேன். விடை கொடு." என்றனன்.

அத்திறங்கேட்ட சூரன், மனந்தெளிந்து விடையளித்தலும், பானுவின் பகைஞன் அடிதொழுது, தன்னில்லிற் கேகினன். அப்பொழுது சூரபன்மன், உமையரை நோக்கி, "அந்த நான்முகனை ஈங்கு என் முன்னர் கொடுவருவீர்." என்றனன். அவ்வுமையர், நான்முகனை நாடிச்சென்று, இறைமொழி கூறி, அழைத்துவந்து, அரசன் முன் உய்த்தனர் சூரனுக்கு நீயோன், அவனை நோக்கி, "அரிய சிந்தையால் அகிலமும் படைத்தல் செய்யும் பிரம! பிரியலுற்றதோர் இவர் கரம் படைப்பாய்." எனலும், பிரமன், "அங்ஙனே புரிகுவன் அரசே!" என்று கூறி, அவரருகணைந்து, "கூடுக இவர் கரம்" என்றனன். அக்கணமே, அக்கரங்கள் வளர்ந்தன. அவ்விம்மிதம் நோக்கிய சூரன் மகிழ்ந்து, முகமனுரைத்துப் பிரமனுக்கு மேன்மை யளித்தான்.

பிறகு சூரபன்மன், அஜமுகத்தியை நகருள் வைத்துத் துன்முகியைப் பானுகோபன்பாற் செலுத்திப்புலோமிசை இருக்கும் இடத்தினைக் காட்டுமாறு கேட்டனர். அதன்பின் உமையர் சிலரை அழைத்து,அவர்களைப் பார்த்துச் செங்கதிர், தாரகாகணம், கோள்கள் ஆகியவற்றை இவ்விடைக் கொண்டு வாருங்கள்." என்றான். அவ்வுமையர் அவ்வாறே அவர்களைப் பற்றி வந்துயபப, கடுங்கோபத்தினை யுடைய சூரன், அவர்களைப் பார்த்து, "நீவிர் ஒப்பின்றி நாளுமே வானிடைத் திரிவீர். நீவிர் அறிகிலா விஷயம் ஒன்றில்லை. என் தங்கையின் தன் செங்கரந் துணித்தானைக் கண்டும் வாளாயிருந்ததென்? கரங் குறைத்த இமையவன் உயிரைக் களைந்திலீர். ஆயினும், அவ்வனைத் தனை செய்து இவ்விடை தந்துமிலீர். அன்றி, அவ்விஷயத்தை வந்து எமக்கு உரைத்துமில்லீர். நும்திறம் நன்று, நன்று. மறத்தின் திறத்தால் என் தங்கையின் காத்தை குறைத்தவற்கு, நீங்கள் அகத்தரே யன்றிப் புறத்தரல்லீர். நமது ஆணையை அஞ்சி இவ்வேவல் புரிகின்றீர். நம்மாட்டு அன்பு சற்றும் அகத்துள் கொண்டிலீர். இது உங்களுக்கு முறையோ?" என்று கடுகடுத்தான்.

நீதியற்ற சூரபன்மன், இவ்வாறு குற்றஞ் சுமத்தலும், அருக்கனை முதலிட்டோர், "அரசனே! எங்களை ஏதும் வெகுளல் வேண்டாம் தங்கள் தங்கையின்கரங்களைத் துணித்தானைக் கண்டுமிலேம். பிறருரைக்கக் கேட்டுமிலேம். வான்வீதியில் யாம் செல்லும் நெறியில், எமது கண்கள்

சென்றன." என்று நடுங்கி உரைத்தனர். அவர் மொழிகேட்ட சூரன் "துண்டுபட்ட இவள் கரங்கண்டிலார்களாய், வழியிமைச் சென்றனவா விழிகள்? நன்று, நன்று இவர் சூழ்ச்சி அண்டராகும் இத்தீயரை சிறையில் அடையுங்கள்." என்று தம் வேலையாட்களிடம் கூறினான். அவ்வாறே, அத்தீயோர் பகலவன் முதலிய பண்ணவரைச் சிறை செய்தனர். பின்னர் அவுணர் இறை, சிலரை அழைத்து, விரைவிற் சுழலும் மருத்துவர் தொகையைப் பற்றி வாருங்களென, அவர் விரைந்து ஓடி, அம்மருத்துக்களை வலிந்து பற்றி வந்து சூரன்முன் விடுத்தனர். அவன் அம்மருத்துக்களைப் பார்த்து, "நீங்கள் வானினும், மண்ணினும், மாதிரத்தினும், மீன் திகழ் கடலினும், வியன் பிலத்தினும், ஊனினும், உயிரினும் ஒழிந்த மற்றெவையினும் ஒருமையிற் கலந்திருக்கின்றீர். எனது வலிய தங்கையின் எழில் கரத்தினை, மாணிலாப் பகைவர் வாளால் துணித்ததைக் கண்டிருக்கின்றீர்கள். உமக்கொளித்திருப்பார் ஒருவருமில்லை. ஆயினும், இங்கர் வந்து மொழிந்தீரல்லீர். பகைவர் சூழ்ச்சியால், தகுந்தவர்க்குப் பழிவருவது நன்றென மகிழ்ந்தீர்கள்போலும்! உங்கள் பெருமிதம் நன்று." என்று கூறினான். அச்சமடைந்த அவ்வாயுக்கள், எதிர்மொழி கொடாது, ஏங்கி நிற்ப, அவரைச் சூரன்கண்டு, கடுஞ்சிறையிடுமாற ஆணைதந்தான். திரிதரும் மருத்துக்களைச் சிறையிலிட்டபின், சூரன் வினைஞர் சிலரை விளித்து, ஆண்டு, இருது, மதிமுதலிய கூறுபாட்டினரை விரைந்து கொண்டுவரும்படி சொன்னான். அவர் அங்ஙனம் விரைந்து சென்று அன்னோரைப் பற்றிவந்து அரசன்முன் விடுத்தனர். சூரன் அவரை நோக்கிச் சீற்ற மிகக்கொண்டு, "இந்திரன் இயற்றிய சூழ்ச்சி தக்கதே யென்று, அதற்கு உவந்து எங்கணும் துன்றிய நீங்கள் எம்மிடம் கூறாதிருந்ததென்? எம்பணி நித்தலும் ஆற்றித்திரிவீர், உம்மாற் பயனென்னை? தேவரைச் சார்ந்த தீக்குணமுடையீர்!" என்று கூறி அத்தேவர் தம்மையும் கடுந்தளை யிட்டனன். பின்னர் அருகினின்ற உழையரை நோக்கி, "நீவிர் இப்புவி மன்னர் அனைவரையும் விடாது கொண்டு வாருங்கள்." என்றான். அவர்கள் அளவற்ற தூதரோடு சென்று, ஆங்காங்குள்ள காவண மன்னரைத்தேடிப் பிடித்துவந்து அவுணர் மன்னன்முன் நிறுத்த, அம்மன்னர்கள் யாக்கையில் வியர்வும், மனத்தில் அச்சமும், நாணமும், தளர்வு முடையராய்க்கைதொழுது நடுங்க, அம்மன்னர் தொகுதியை நோக்கிச், சூரன் வெகுண்டு, "நமது ஏவலை

நீங்கி இந்திரன் சசியொடு இவ்வுலகிடை மறைந்துறைகின்றான். விண்ணுலகில் அவனில்லை. அவ்வாறாக நீங்கள் இப்புவியைக் காவலியற்றிவருவது மிக நன்றாக இருக்கின்றது. அன்றியும் அவ்வாசவன் ஆணையைப் போற்றி நின்ற தூர்தனொருவன், என் தங்கையின் கரங்களை அறுத்தனன். அதுவும் ஓர்கிலீர், அதற்கேது வென்னை? கள்ளுண்டு களித்துக் கலங்கிருந்தீர்கொல்? உறங்கினீர் கொல்? பெருந்திரு வளமையில் பித்துற்றீர் கொல்? மறைந்த என்பகையொடு மனங் கலந்தீர் கொல்? அன்றி யவரை அஞ்சினீர் கொல்? மடவார் மயக்கில் மயங்கிருந்தீர் கொல்? நீவிர் இருந்த நிலைமை என்ன? மொழியுங்கள்." என்றான்.

அக் கடுமொழி கேட்ட புவி மன்னவர், "எந்தையே! நீ யுரைத்த தன்மையில் யாங்கள் இசைந்திலம். பண்டையிற் றொட்டு இன்றளவும், பாரினைக் காக்கின்றேம். பகைஞரைக் கண்டிலோம், அன்னோர் கரந்துறை கந்தயுங் கேட்டிலோம். எமது அன்னையாம் அவ்வுழித் துன்முகியோடு வந்ததும் அறியோம். அன்னோர் கரங்களற்றதும் அறியோம். இஃதுண்மை, உண்மை. எம்மன்னனே! மாயம் இது." என்றனர். அதற்குச் சூரபன்மன், "திரண்ட செல்வத்தால் செம்மாந்து மயங்கி, உலகினைப் போற்ற உள்ளங் கொண்டிலீர். என் வயின் இப் பழி எய்தியது உமக்கு மாயையாய்த் தோன்றியது அழகே." என்று கூறி, கடலிடைக்கிடந்த வடவை வெங்கனல் இறுதியில் மேலெழும் தன்மை போலச் சூரன் உட்கிடந்த சினம் மீக்கொள்ள, மருங்கின் நின்றதானைத் தலைவரை ஏவித் தனித்தனி தண்டஞ் செய்வானாயினன். அவையாவன:—

சிலர் செங்கையையும் நாவையும் சேதிக்கச் செய்தான். சிலர் மூக்கையும், செவிகளையும் களைதல் செய்தான். சிலரது தாள், தோள், சென்னி ஆகியவற்றைச் சேதிப்பித்தான். அவ்வாறு சூரன், புவிமன்னருக்குப் பலவாறாகிய தண்டங்களைப் புரிவித்து அரியாசனத்திருந்து, வீரமுள்ள இளைஞன் ஏகுமாறு விடைகொடுக்க, அமருகையில், மலர்க்கிழவன் வந்து, அவுணர்க்கிறைவை நோக்கி, "மன்னர்மன்ன! கேட்பாயாக! வான்கதி செல்லும் செங்கதிர், உடுக்கள், மற்றையோர், இந்நிலவெல்லைக்காவலர், ஆகிய அனைவரும் உன்னுடைய ஏவலில் தவறாது நிற்பவர். இவரின்றி உலகம் நடவாது. ஆகலான், பிழையினைக் கொள்ளாது

அவரைச் சிறைவிடுக்க வேண்டினேன்." என்றான். குறை இரந்து பிரமன் வேண்டலும், சூரபன்மன், நன்றென்று இசைந்து, உழையரை நோக்கி, "நமது சிறைக்களத் துள்ளாரைக் கொணர்மின்." என்றலும், அவர் ஓடிச்சென்று, அன்னோரைக் கொடு சென்று, அரசன் முன் உய்த்தனர். அவ்விறைவன், அப்பண்ணவரை நோக்கி, "நீங்கள் முன்போல உமது தொழிலைத் தவறாது நடத்திவாருங்கள். இந்திரன் பக்கம் சேராதீர்கள், செல்லுங்கள். என்றான். அவர்கள் அவ்வாறே செய்குவோம்."என்று பணிந்து நயமொழி கூறிச்சென்றனர். பின்னர் பிரமனுக்கும், புதல்வருக்கும், அமைச்சருக்கும், முனிவருக்கும்,படைத்தலைவருக்கும், மற்றையோர்க்கும் விடையளித்துத் தன்னில்லிற் கேகினான். நிற்க.

## அமரர் சிறைபுகு படலம்

முன் விடைபெற்றுச் சென்ற பானுகோபன் தன் உறைவிடம் சேர்ந்து, போர்க்கோலங்கொண்டு, தும்பையைச் சூடி, உயர்ந்த படைகளைக் கையிற் கொண்டு வாயிலில் வந்து, தானை வெள்ளஞ் சூழத் தேரேறி, விரைவிற் சென்றான். சென்ற பானுவின் பகைஞன், மகேந்திர நகரை நீங்கிக் கடலைக் கடந்து, நில வெல்லையை அடைந்து, அருகில் வந்த துன்முகியைப் பார்த்து, "உங்கள் கரங்களைத் தடிந்த இடமெது?" என்று பானுகோபன் கேட்டனன். துன்முகியானவள், "இந்திராணி தவமியற்றி இருந்த இடமும், மாகாளன் காவலியற்றி எங்கள் கரந்துணித்த இடமும் இதோ தோன்றுகின்ற மலர் வனமே." என்று தன் விரலாற் சுட்டிக்காட்டியதும், அவன் பன்னிரண்டு திருநாமம் படைத்த சீர்காழி நந்தவனத்தைச் சார்ந்தான்.

அக்கணமே அவன் முன்சென்ற தூசிப் படை, அக்காவினையழித்து, வெள்ளிடையாக்கச் சசி முதலியோரைத் தேடி எங்கணுங் காணாதவனாய்க், கவலை யடைந்து, அவ்விடம் விட்டுப் பொன்னாட்டினை நோக்கிப் படையொடும் சென்றான். அவ் விந்திரலோகம் அழியுமாறு நால்வகைச் சேனைகளும் சென்று, அந்நகரினை முற்றியதைத் தூதர் அறிந்து, விரைந்து சென்று, தந்தை தாயரைப் பிரிந்து, தங்கேளிராய தேவரையும் பிரிந்து, தனித்துச் சில தேவர்களோடும் வருந்தியிருந்த வாசவன் மதலையாகிய ஜயந்தனிடம் உரைத்தனர். அச்சிறுவன், "அந்தோ பெற்றோரையும், உறவினரையும் பிரிந்து, ஆகுலமடைந்து பகைவரை அஞ்சி, அவரது குற்றேவலை ஆற்றி நாட்கழித்து வரும் எனக்கு இத்தீமையும் வரற்பாலதோ? இதோ வந்திருக்கிற பானுகோபன் ஏதோ என்மேல்

பெரும் பகைகொண்டு போர் புரிதலைப் பொருளாக வைத்து நண்ணி யுள்ளான். ஆனால், யான் அத்தீய அவுணரைப் பணிந்து, உயிர் வாழ் தலினும் இன்றே இவனோடெதிர்த்துப் போரில் ஒழிதல் மிக்க நலம்." என்று தீர்மானித்து, சூழ்ந்திருந்த தேவரைப் பார்த்து, "நீங்கள் அஞ் சாதீர்கள். யான் இப்பொழுது இப்பானுகோபனை எதிர்த்து யுத்தஞ் செய்கிறேன். எனக்குத் துணையாக நீங்கள் வாருங்கள்." என்று கூறினான். ஜயந்தனைத் தேவர்கள் நோக்கி, "எங்களை யாளும் இறைவன் நீ ஆகையால், இப்பொழுது நன்றேயாயினும் அன்றி இப்போரில் தீதேயாயினும் ஆகுக. நாங்கள் நின் சொல்லைக் கட வோம். அவ்வாறே போருக்குடம்பட்டு வருவோம்." என்றார்கள். பிறகு அவன் ஐராவதத்தினை நினைத்தான். அஃதுணர்ந்த ஐராவதம் உடனே இந்திரகுமாரனை அடைந்து வணங்கி நின்றது. அவ் வெள்ளையானையை வாகனமாகக்கொண்டு சயந்தன் போர்க்கெழுந்தான். மற்றைத் தேவர் கள், தாங்கள் செல்லுதற்கு வேறு இடமின்மையால், ஒருவாறு துணிந்து, அச்சம் நீங்கினவர் போன்று, பலபடைகளுந் தாங்கி வந்து, சயந்தனைச் சூழ்ந்து நின்று, போருக்கெழுந்தனர்.

பெருமையினையுடைய வெள்ளையானையின் பிளிற்றொலியும், உட் கவலைகொண்ட வானவரின் ஆரவாரவொலியும், பல இடங்களின் ஒலி யும் ஒன்றாகி எழுந்தது எத்தன்மைத்தெனின், சொர்க்கலோகம் தனக்கு அழிவுவரப் போகிறதென்று வாய்விட்டு அலறுதல்போன் றிருந்தது. இம்முறை நிகழ வலிய தெய்வயானையின் மீது ஏறிச்சென்ற இந்திர குமரன், பானுவின் பகைஞனாகிய கொடியோன் சேனையுட் புகுதலோடும், தேவரை வருத்திய அவுணர்கண்டு, "ஈதென்னபுதுமை? இதுகாறும் மகேந்திரத் திறைவன் சொன்ன பணி புரிந்து இத் தேவர் திரிந்து கிடந்தனர். இன்றோ பானுவின் பகைவன் ஆற்றலெண் ணாது போருக்குத்துணிந்து திரண்டு வந்துளார்." என்று தானவர்கள் தேவரை இழித்துப் பேசினார்கள். அவ்வுழியே தேவப்படையும், அசு ரப்படையும் கலந்து, வில்யுத்தம், வாள்யுத்தம் ஆகியபலவகை யுத்தஞ் செய்து வருங்கால், இரத்த ஆறுகள் ஓடின. இவ்வாறு கடுமையாகிய போர்புரிந்து வருகையில், தேவசேனைகள் அசுர சேனைகளுக்குத் தோல்வியுற்றுச் சிதறியோடுதலும், அவுணர்கள் விடாது பின் தொடர்ந்து அத்தேவர்களைப்பற்றி, வலிவாகக்குத்திக் கயிறுகொண்டு

புயங்களைப் பிணித்து, ஈர்த்துச்சென்று, பானுகோபன் முன்னர் விடுத்தனர். அவன், "இத்தேவர்களை அகலாவண்ணம் காமின்" என்று உத்தரவு தந்திருக்கும் விஷயத்தை அயிராவதமூர்ந்து சென்ற சயந்தன் அறிந்தான். அறிந்த இந்திரகுமாரன், அநேக தெய்வப்படைகளை ஏவிக் கடும்போர் புரிதலும், அச்சயந்தனை அவுணப்படை நெருங்கிச் சூழ்ந்து, ஆரவாரித்து அக்களிற்றின் மீதும், சயந்தன் மீதும், அளவிறந்த கணைகளைத் தூர்த்து மறைத்தனர். இவ்வாறு பெருமழை போல் அம்புகளைச் சொரிதலோடும், ஜயந்தன், தன் அம்புகளால் அவற்றைத் தடுத்து, அவர்கள் பிடித்த வில், அம்பு, சூலம் முதலிய அனைத்தும் ஒழியும்படி செய்து, தானவர் சேனையில் உள்ள தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை ஆகிய ஒருநூறு வெள்ள முடைய சேனைத்தொகுதியை நாசமாக்கினன். அவன் ஏறிவந்த அயிராவதமானது வாலினால் அடித்தும், துதிக்கைகொடு வாரி யெற்றியும், காலாற்படுத்தும், மருப்பினால் குத்திக் கோர்த்தும், ஓவிட்டும் போர் புரிந்தது. அக்கடும்போரில் நீலகேசன் என்னும் அசுரன், சயந்தனை எதிர்த்துப் பலவகையாலும் வருத்தி, அவனணிந்த கவசத்தையும், வில் முதலியவைகளையும் அழித்த மாத்திரத்தில், ஒன்றுஞ் செய்யமுடியாத நிலையில் தனித்த சயந்தன், தான் முன்பெற்றுள்ள மாயையால் ஒருவருக்கும் தெரியாவண்ணம் அநேக விதமாகப் போர்புரிதலும், அவுணர்கள் தாங் கற்றவாற்றால் சிறிதும் அடக்க முடியாமல் அழிவெய்தியும், படைத்தலைவர் மெலிந்தொழிந்தும், திறலற்றும் போயினர்.

இவ்வண்ணம் தோல்வியுற்ற அவுணப் படையினையும், வெற்றியடைந்துவரும் சயந்தனையும் பானுகோபன்கண்டு, "இவன் மாயையால் யுத்தஞ் செய்கிறான். இவனது மாயையை இப்பொழுதே அழிப்பேன்." என்று கருதி, முன்னைநாள் அசுரகுருவாகிய சுக்கிரன் தனக்குதவிய மூல ஞானமந்திரத்தை உள்ளத்திற் செபித்தலோடும், இந்திர குமாரன் கொண்ட அநேக மாயா உருவங்களெல்லாம் அக்கணமே அழிந்து, தெய்வக்களிற்றின்மேல் தமியனாய்த் தோற்றினன். அவ்வாறாகிய காலத்துப் பானுகோபன், தனது தேரை அவனெதிரே செலுத்தி நின்று, "அடா இந்திரன் புதல்வனே! யான் உன்னைக் கருதி வரும் அளவிலேயே உன் மாயை யாவும் தொலைந்தன; இது பொழுது யான் நின்னைப் பற்றிச்சென்று, மகேந்திர நகரத்துச்

சூரியனைச் சிறை செய்ததுபோலச் சிறை செய்குவேன். நீ செப்பக் கிடந்ததினி என்ன? என்னை எதிர்த்துப் போர்புரிய ஆற்றலுண்டேல் புரிவாய்." என்றான். சயந்தன், "வல்லமையுடையார் வெல்வதும், அஃதிலார் தோற்பதும் உறுதியன்று. முன்னை யூழ்முறைப்படி முடிவெய்தும் ஆகலான், நின்னை நீ புகழ்தல் தகாதடா!" என்றான். பானுகோபன், "வலியிழந்தவர் கூறும் பழைய கதையினைக் கூறி நின்றாய். சுத்தவீரன் ஆகுவோன் இத்திறம் மொழிவனோ?" என்று கூறித் தன் ஆற்றற்கேற்ற பெருஞ்சிலையினைக் குனித்தான். சயந்தனும் கோபமீறித் தன் சிலையினை வளைத்தான். இவ்வாறு சீற்றமிக்க இருவருள் பானுகோபன் அனேக அஸ்திரங்களைத் தூண்டி, மழைபோற் சொரிந்த காலத்து, ஜயந்தன் அவற்றையெல்லாம் தன் கணைகளாற் றடுத்து, பானுகோபன் மேல் அவ்வாறு பல கணைகளைத் தூவ, அவன் அவற்றைத் தடுக்கவும், இவ்விதமே ஒருவருக்கொருவர் சமயுத்தஞ் செய்து வந்தனர். பின்னர், சயந்தன், பானுகோபனது வில்லின் நாணினை அறுக்க, அவன் சினந்து ஆயிரங்கணைகளைத் தூண்டி, அச்சயந்தன் ஏறிவந்த களிற்றையும், அவனையும் புண்படுத்தி வருத்தினான். அவ்வமயத்து, விண்ணவர் காளையின் உடல் முழுதும் கணைமழை தைத்துச் சோரி நீர் பெருகி ஓடுதலும், களைப்படைந்து அயர்ந்து அவசமாய்க் கிடந்தான். அது கண்ட வெள்ளையானை, மனங்கலங்கி, கடுஞ்சினங்கொண்டு எதிரில் நின்ற பானுகோபன் தேரை மோதி அழித்து நின்றது. அத்தேரினின்றும் கீழே பாய்ந்த பானுகோபன், அவ் வெள்ளையானையைச் சீறிச்செல்ல, அவ்வேழம் முனிந்து எதிர்த்து, அவ்வவுணன் மார்பில் தன் கொம்புகளால் குத்துதலும், 'மள, மள,' என்று அக்கணமே நான்கு மருப்பும் முரிந்து போதலும், பானுகோபன் அவ் வேழத்தின் துதிக்கையை ஒரு கையினாற் பிடித்து, மற்றொரு கையினால் அதன் கவுளிடைத் தாக்கினான். தாக்குதலும், அத்தெய்வக்களிறு கடலுடைந்த பேரொலிபோற் கதறி வீழ்ந்து அயர்ந்தது. அதுபொழுது சிறிதே தெளிந்து தனித்திருந்த இந்திரன் புதல்வனாகிய சயந்தனை தானைத்தலைவர் பற்றி, "இன்னோன் மிக்க வஞ்சமுடையவன். ஆதலின், இவனை நன்றாய் அடியுங்கள், குத்துங்கள், எற்றுங்கள்." என்று வலியுறுத்தும் போழ்து, பானுகோபன் அருகில் வந்து, அவர்களைப்பார்த்து, 'யான்

ஏவிய கணைகளால் இவன் பெரிதும் உடல் வருந்தியுள்ளான். ஆதலின், இவனைப்பகைவனென்று கருதி மிகுதியும் வருத்தாதீர்கள். இவனைத் தேவர்களோடு சிறைப் படுத்துங்கள்.'' என்றான். அவ்வாணை தாங்கிய அவுணர்கள், சயந்தனை வலிய நாணினால் மந்தகிரியைப் பிணித்தாற் போலத் தோளிரண்டையும் சேரப்பிணித்துத் தேவர் குழுவினில் உய்த்தனர்.

இத்தொழில் புரிந்தபின்னர், பானுகோபன் அருகில் நின்ற இளைஞரை நோக்கி, "சயந்தனும் இத் தேவருமே யன்றி, எஞ்சிப் பதுங்கிய தேவரையும் விரைந்து பற்றிவாருங்கள். அதன்பின், அம்மூதூர் தன்னைச் செந்தழற்குணவிட்டுச் சாம்பராக்குங்கள்.'' என்று கூறினான். கூறி முடித்ததும், அவ் ஏவலர் ஏகி வனப்புமிக்க அத்துறக்கந் திரிந்து தேவராயினர் யாவரையும், அத்தேவர் மகளிரையும் விடாது பற்றிவந்து அரசன்முன் விடுத்தனர். அதன்பின் திருமகள் உறைவிடம் போன்று திகழும் அழகிய அவ்வமரர் பதியினைத் தீக்கொளுவி நீறாக்கினார்கள். ஊழிக்காலத்தன்றி இடையே அழியாத அத்துறக்க மூதூர் பூழியாய்ப் போயினதன்றோ? அன்றிப் புரந்தரன் வறுமை பூண்டான். மற்றைத் தேவர் சிறைபுக்கனர். ஆயதால், செல்வமெங்கே? அதனது நிலையுமெங்கே? வண்டுகள் மொய்க்கா வளவிய மலர்களை நீங்காது என்றும் தருந் நற்பகங்களும், மண்டிய எரியால் மாய்ந்த பின்னர் அதனைச் சடலையா மெனக்கண்டனர். அதன்பின் பானுகோபன், "சயந்தனையும் அவனோடு சார்ந்த தேவரையும், மற்றையாவரையும் நீங்கள் கொண்டு, முன்னர் மகேந்திர நகரத்திற்கு ஏகுங்கள்.'' என, அவர் அவ்வண்ணமே அவர்களை அம்மூதூருக்குக் கொண்டு சென்றனர்.

பானுகோபன் உடனே அவ்விடம் விட்டு நீங்கித் தன் சேனையோடு நிலவுலகெய்தி, வீரமகேந்திர நகரம் புக்கு, அரண்மனைக்கு முன்னர் ஏகித் தன் இரதத்தின் இழிந்து, சேனையை அவ்விடையே நிறுவிப், பிணித்துச் சென்ற தேவரைக் கொண்டு சென்று, அவுணர் காவலன் முன்விடுத்துத் தான் வணங்கிநின்று, "எந்தையே! சசியையும், வானோர் காவலனையும் யான் தேடித்திரிந்துங் கண்டேனில்லை. தேவரோடு சயந்தனைப பற்றிவந்தேன். அன்றியும், விண்ணுலகை வெங்கனற்கு இரையாக்கினேன்.'' என்று கூறினான்.

சூரபன்மன் அத்தீயோன் கூறியவற்றைக் கேட்டு, மகிழ்ந்து தன் மார்போடு அவனைத் தழுவி அணைத்து, எதிரிலிருந்த தேவரைச்

சினத்தாலுற்று நோக்கி, "வாளேந்திய உழையரைப் பார்த்துக் குழுமி யுள்ள இத்தேவர்கள் உறுப்புக்கள் யாவற்றையும் துண்டு துண்டாகத் துணியுங்கள்." என்றான். வ்வாட் படைவீரர் அஜமுகி காணும் வண்ணம், அதமதவூா கூட்டத்துட் புலிபோற் பாய்ந்து, அத்தேவர் களின் கரங்கள், தாள்கள், தோள்கள், காதுகள், கண்டம், துண்டம், சிரம் ஆகிய உறுப்புக்களைத் துணிக்கவும், அவ்வுறுப்புக்கள் அறுப் பட்டவுடன் அவ்வப்பொழுதே பொருந்தலுற்றன. என்னையோ எனின், அவர் முன் தவஞ் செய்து அமிழ்தம் உண்டனர் ஆதலின், அவர் உடல்கள் அழியாத் தன்மை எய்தின. அவர்கள் வலிமையைக் கண்ட சூரபன்மன், வியந்து அவரை முனிந்து, அவரைக்கொல்லு தல் அரிதாம் என்று கருதி, அவர்களைக் கொடிய நிரயத்தினை யொத்த கடுஞ்சிறையில் இடும்படி ஆணையிட்டனன். அவ்வீரர், அச்சயந்தனை யும் ஏனைய தேவரையும் கடிந்து, பிடர் பிடித்து உந்தி, அங்ஙனமே கொண்டு சென்றனர். அவர்கள் சிறைக் களத்திற்கு அணியராகி அச் சிறைக் காவலரை நோக்கி, "நங்கோன், இத்தீயோர் யாவரையும் சிறை யிட ஆணை தந்தமையால், இவர்களைக் காவல் புரியுங்கள்." என்று கூறி, அச்சிறை காப்பாளர் மாட்டே விடுத்து நீங்கினர்.

அச்சிறை காவலர், அத்தேவர்களின் காலில் வல்லி பூட்டி சிறைக் களத்து உய்த்தனர். அதன்பின் சூரபன்மன், தன் மைந்தனுக்கு விடை யளித்து, அரசவை நீங்கித் தன் தனியில்லம் மெய்தினன். கடுஞ்சிறைப் பட்டவானோர், பெருந்துயரெய்தியும், அசுரரால் பற்றப்பட்ட அமரர் மாதர், வேடர் கரத்துட்பட்ட மயில்போல உளம்மாழ்கி, அவ்வசுரர் நகரத்தின்கண் காவல் செய்யப்பட்டு, ஏவல் புரிந்து வந்தனர்.

அங்கண் பானுகோபனோடு எதிர்த்துப் போர் புரிந்து, தன் மருப் பொடியப் பெற்ற அயிராவதம், அவ்வுழி நின்றும் வனத்திற் கேகி, முழுமுதற் பொருளாகிய முக்கண் மூர்த்தியைத் தானுவின் உருவொடு தாபித்துப் பின் சிவாகம விதிப்படி அறிவினையுடைய அக்களிறு அன்பினால் வழிபட்டு வைகும் எல்லையில், இற்ற மருப் பொரு நான்கும் மற்றுந்தோன்றின. அவற்றைக்கண்ட அக்களிறு பேரு வகைகொண்டு அவ்வுழியே தங்கியிருந்தது. அக்காலத்தில் சசியொடு மேருமேலை எய்தியிருந்த இந்திரன், தன் நகரமாகிய அமராபதியை நாசமாக்கித் தேவரோடு சயந்தனைப்பற்றிச் சென்ற பானுகோபன் செய்

கையைக் கேள்விப்பட்டவனாகிப் பெருந்துயரடைந்து, அம்மேரு மலையின் ஒரு சாரிருந்து, தயாநிதியாகிய சிவபெருமானைக் குறித்துப் பற்பல வருடம் அருந்தவ முஞற்றியிருந்தான். பன்னெடு நாள் இந்திரன் இயற்றிய பெருந்தவத்திற்கு உவப்பெய்திய சிவபெருமான், அவனுக்குக் காட்சிதந்தருளி, அவன் விரும்பும் பொருள் யாதென்று வினவ, இந்திரன் தளர்ந்த மனத்தோடும் அடிபணிந்து நின்று, கூப்பிய கரத்தொடும் சிவபெருமானை நோக்கி, "உயிர்தொறும் ஒழிவின்றி உறையும் இறையே! சூரனால் அடியேம் படுந்துயர்க்கு அளவில்லை. ஆகலான், அச்சூரபன்மாதிகளைச் செற்று அடியேம் துயரகற்றி அருளவேண்டினேன்" என்றான்.

அவனது துயர் மொழியைக் கேட்டருளிய சிவபெருமான், "யாம் உமையை மணந்து, ஒப்பற்ற ஓர் குமாரனை உதவுவம். அக்குமரனே சூராதியரை ஒழித்து, உங்கள் வாழ்வினைத்தருவன், வருந்தற்க." என்று கூறி மறைந்தருளினன். சிவபெருமான் அருளியதை மகவான் கொண்டு, திருமால், பிரமன் ஆகிய தேவர்களோடு ஆராய்ந்து துணிந்து, மீனகேதனனை அந்த ஞானமூர்த்தியின் பால் மையலுக்கு விடுப்ப, அவன் சிவபெருமானது நெற்றிக்கண்ணினால் நீறாக, அஃதுணர்ந்த தேவர்கள் இறைவனை வேண்ட, அப்பெருமான் அவரது வேண்டுகோளுக்கிரங்கி, அத்தேவர் கூட்டமும், கணத்தலைவரும் சூழ இமாசலஞ் சென்று, உமையை மணந்து, திருக்கயிலையை அடைந்து, பின் எமதிரக்கத்தினைக் கருதி, எந்தையே! நின்னை நெற்றிக் கண்ணினால் தந்தருளினன்."

"என் தந்தையாகிய குமாரமூர்த்தியே! நீ திருவவதரித்த பின்னர், திருமால், பிரமன் முதலிய தேவர்களும், முனிவர்களும் மற்றுமுள்ளவர்களும், இழந்த தத்தமுயிரை எய்தியவரை ஒத்துப் பெருங்களிப்படைந்தார்கள். புரந்தரன் முதலிய தேவர்கள், எந்தையே! நீ வாழ்வு தர வந்ததறிந்தும், சூரன்பாலுள்ள அச்சத்தினல் மறைந்து, மண்ணிலும் மற்ற இடங்களிலும் அடங்கிக் கிடந்தனர். அப்பொழுது சூரன் விடுத்த ஒற்றர்கள் உலகெங்குந் திரிந்து வருகையில், அவர்களைத் தேவர்கள் காணின்; உயிர் நீங்கிய உடலையொத்து அவசமாய்க் கீழே விழுவார்கள். அச்சூரன் பெயரை மொழியினும், கனவிற் காணினும், உண்ணடுங்கி மெய்வியர்த்து, இறந்த தன்மையராய்ப் பின் உயிர்பெறுவர். இவ்வாறு அஞ்சி மறைந்த

தேவர்கள் நீக்க, மற்றையோரைப் பற்றிக் கடுஞ் சிறைப்படுத்தி, அவரை யும் வருத்த அவன் எண்ணமிக்குளான். அச்சூரபன்மனே பெருந்திரு வினாலும், ஓங்கிய திறலினாலும், அழியாத யாக்கையினாலும், தேவரை வருத்தும் ஆற்றலினாலும் நிகரொருவருமின்றித் தனித்து விளங்குகின் றனன். கண்ணுக்குப் புலனாகின்ற இவ்வொரு அண்டத்தின் நிலைமை ஈதாகும். மற்றை ஆயிரத்தேழ் அண்டத்தில் நிகழும் செயல்களை யாங்கள் அறியோம். பரம்பொருளாகிய குமாரமூர்த்தியே! நீ யன்றி அவன் திறத்தை அறிய வல்லார் யாவர் உளர்? தொடர்ந்த சீரினைப் பெற்ற சூரனது ஆணை யென்றால் திருமால், பிரமன் முதலிய வானோர் அனைவரும், முனிவர் அடங்கலும், ஆயிரத்தெட்டு அண்டங்களிலுள்ள உயிர்களும் கடந்து நடவார்க ளென்னின், அவன் பெருமையை யாவர் அளவிடவல்லார்? முடிவற்ற இத்தகைய பெருவளங் களைப் பெற்றுள்ள அவனை, அமல மேனிப் பரஞ்சுடராகிய அண்ணலே! நீ யன்றி அடுதல் வல்லார் யாவருளர்? பிரமனே அவன்பாற் சென்று நித்தலும் அவனை வணங்கிச் செல்லு வன். திருமாலோ போர் புரிந்து அடங்கினன். சிவபெருமானே அவ னுக்கு வேண்டிய வரங்களை அளித்துள்ளான். ஆகலான் வெற்றிக் குரிய எந்தையே! நீயே அவனைக்கொன்று அவன் துணைவரையும், புதல்வர்களையும் ஒழித்து, சிறையிலுள்ள ஜயந்தன் முதலிய தேவர் களையும் விடுவித்துத், திசைமுகன், மகவான் முதலியோர் பதங்களை அவ்வவர்க்கு முன்போல் அளித்துக் காத்து, அருள்புரிய வேண்டும்."

இவ்வாறு கூறிய தேவ குருவின் மொழிகளை, மழலைச் சொற் களை மகவின் வாய்க் கேட்டு உவப்படையும் பெற்றோரைப் போன்று, முருகப் பெருமான் கேட்டு மகிழ்ந்து, முகமன் கூற, வியாழன், "எந்தை நீ யறியாத தொன்றில்லை. ஆயினும், அடியேம் உய்யுமாற்றால் வினவியருளிய நீ நினைத்த மாத்திரத்தில் சூரபன்மன் கிளையோடு அழிவெய்துதல் திண்ணம். அவ்வாறிருந்தும், அடியேம் முன்னா ளியற்றிய தவத்தினால் ஓர் ஆடல் கொண்டு இப்பொழுது வருத்தருளி யுள்ளாய். ஏழையேங்களைக் காத்தருள வேண்டும்." என்று, அன்பு ததும்பிய மனத்தனாய்த் திருவடிகளில் வீழ்ந்து, வணங்கினான். சண்முகப் பெருமான், அருள் சுரந்து, "என்றும் நமதருளுக்குப் பாத்திரமாவாய்." என்று அருகில் இருக்கச் செய்து, அன்புடன்

அருகினின்ற வாசவனை நோக்கி, "நீ மனத்திற் சிறிதுங் கவலை கொள்ளற்க. யான் சூரர் முதல் அவுணரை முடித்து, விண்ணவரைச் சிறையினின்றும் மீட்டு, விண்பதத்தினை நினக்கு ஆக்குவன். யாதும் ஐயுறல் வேண்டாம்." என்றருள் புரிந்தான். இம்மை மறுமையாகிய இரண்டின் இன்பத்தினையும் உதவும் எழிலுடைய முருகன் இவ்வாறு மொழிதலும், இந்திரன் அன்பொடு வணங்கி, வானவர் தொகுதியோடு பெருமானைப் போற்றிசெய்து, இன்னல் நீங்கிப், பெருமகிழ்ச்சியோடு ஐயன் பாங்கரில் இருந்தான்.

———

# மூன்றாவது

## மகேந்திர காண்டம்

### வீரபாகு கந்தமாதனஞ் செல்படலம்

" விரிஞ்சன்மாறேவ ராலும் வெலற்கரும் விறலோ னாகிப்
பெருஞ்சுரர் பதமும் வேத வொழுக்கமும் பிறவுமாற்றி
யருஞ்சிறை யவர்க்குச் செய்த வவுணர் கோனுயிர் கொள்வான்
பரஞ்சுட ருருவாய் வந்த குமரனைப் பணிதல் செய்வாம். "

இந்திராதிதேவர் அனைவருஞ் சூழ்ந்து போற்ற செந்திமாநகரில் திருக்கோயிலில் அரியணைமீது எழுந்தருளியிருக்கும் குமாரக்கடவுள் பேரருள் கொண்டு, "நான்முகனை முதலாகவுள்ள தேவர் கூட்டமும், முனிவர் குழாமும்போல, அவுணர் குழாமும் எம்மண்ணலுக்குப் பிள்ளைகளேயாகும். ஆயினும், கொடியவரை யழித்தல், நீதிநூல்களது துணிபாம். அத்தகைத்தாயினும் சூரபன்மனையும், அவன் கிளைஞரையும் ஒருசேரக் கொல்லுதல் நீதியல்ல. அவனிடத்துத் தூதுவனொருவனை அனுப்பிச் சிறைவைத்துள்ள சயந்தன் முதலிய தேவர்களைவிட்டு இன்னுஞ் சுகமாகவே வாழும்படி தெரிவிப்பாம். சென்றுணர்த்துந் தூதுவன் சொல்லினைக்கேட்டு அவன், தேவர்களைச் சிறையினின்றும் விடுப்பனாயின், அவன் உயிரோடு இன்னுஞ் சில பகல் வாழட்டும். அன்றி, மறுப்பானாயின், அவ்விடம் யாம் சென்று அவன் குழுவையும் அவனையும் அறக் களைகுவம். ஈதே அறத்தாறு," எனத் தனக்குள் எண்ணிக்கொண்டனன்.

இவ்வாறு திருவுளங்கொண்ட குமாரமூர்த்தி, திருமால், அயன் முதலிய பண்ணவரைப் பார்த்து, "அவுணர்தங் குழுவையெல்லாம் அழித்தற்கு இங்கிருந்து நாளை ஏகுவேம். அதற்கு முன்னர், சூரன் மனத்தை அறியும் பொருட்டு ஓர் தூதனை அனுப்ப எண்ணினேன்." என்றான். கடுவினைக்களத்துடைய அண்ணல் மைந்தன், இத்திறம் பகர, மடற்பதுமத்தன், மாயன் ஆகிய இன்னோர் கேட்டு, அடற் பெரும் போரினை ஆற்றுமுன், சூரன்புடை ஓர் தூது விடுத்தலே அறத்தாறு என்று கூறினர். கூறலும், குமாரக்கடவுள், இப்பெருங் குழுவினுள் சூரனிடஞ் சென்று உறுதி உரைத்து வருந் திற

லுடையோர் யாவர் என்றலும், நான்முகன் அச்சொல்லை ஆராய்ந்து, "அவ்வீர மகேந்திர புரத்துள் நுட்பமாகச் செல்லத் தகுந்த வாயுதேவனாலும் செல்லுதல் அருமை. என்னுடைய விஷயமும் அப்படியே. ஆயினும், நமது நவவீரருள் தலைவனாகிய வீரவாகுவே அவ்வூர் புகுந்து, சூரனைக்கண்டு, வகுத்துரைத்து வரும் ஆற்ற லுடையான்." என்று அறுமுகப்பெருமான் கருத்துக் கிணங்க உரைத் தனன். பெருமான் நன்றெனக் கருணை கூர்ந்து, வீரபாகுவை நோக்கி, "நீ நம் ஆணையைத்தாங்கி மகேந்திரநகரை நண்ணி, அமல மூர்த்தியால் கொடுக்கப்பட்ட வாழ்வினையுடைய சூரனைக் கண்டு, 'இந்திர குமாரனா கிய சயந்தனை முதலிட்ட அமரர்களைச் சிறையினின்றும் நீக்கி அறத்தாற் றினின்று பெருஞ்செல்வந் துய்த்து வாழ்வாய்' என்று சொல்வாயாக. அம்மொழி மறுப்பானாயின், அவுணனே உன் கிளைஞரை முடித்து உன்னையுஞ் சத்திவேலுக் கிரையாக்க நாளையே எம்மண்ணல் சேனை யோடு ஈண்டுறுவான். இத்தன்மை என்று கூறி மீளுக" என்றனன்.

வீரபாகு தேவன், "எந்தையாகிய முருகப்பெருமானே! அடியேற் கருளிய வண்ணஞ் சென்று, சூரன் மனத்தை அறிந்து வருகின்றேன்." என்று அடிவணங்கித் தொழுது போயினான். அவ்வாறேகிய வீரபாகு வின் பின்னே இந்திரன் சென்று, "திறலுடைய வீர! என் புதல் வன், சயந்தன் தேவர்களோடு மகேந்திரபுரியில் சிறை வைக்கப்பட்டுள் ளான். அவன்பாற் சென்று, அவனை முன்னர் தேற்றிப் பின்னர் உன் வினையை முடிக்க யான் நின்னை வேண்டிக் கொள்ளுகின்றேன்." என்றனன். வீரபாகுதேவன், "அவ்வாறே செய்வேன், நீ கவலைப் படாதே." என்றுரைத்துப் பின்தொடர்ந்து சென்ற இளையவீரர்களை யும், அன்போடு நன்மொழி புகன்று மார்புறப் புல்லியருளிப் பூத மன் னரும் அங்கு நிற்க அருள் புரிந்து, இடம்பரந்துள்ள அக் கடற்கரை யருகினிற் சென்றான்.

கடலருகிற் சென்ற வீரபாகுதேவன் கால்களில் வீரகண்டை 'கலீர்,' என்று சத்திக்க, மேருமலையினும் உயர்ந்துள்ள கந்தமாதன கிரியின் உச்சியில் விரைந்து ஏறி நின்றான். அவ்வீரன் அம்மலை யின் மீது நின்ற காலையில், அவனது பாரத்தைப் பொறுக்க மாட் டாது, அது குலைதலுற்றது. அங்குள்ள புலி முதலிய காட்டு மிருகங் கள், ஆங்காங்கு அலைதலுற்றன. அவ்வீரனது நீண்ட தோற்றத்தைக்

கண்ட தேவர்கள், அது சூரனையும் அவன் கிளையையும், அறவே யொழித்தற்காம் என்று நிச்சயித்தனர். அன்றியும் தேவர், முனிவர் முதலியோர் தத்தம் பதங்களினின்றும் வீரபாகு தேவன் கொண்ட நெடுந் தோற்றத்தில் தத்தம்க்கியலும் உறுப்பில் மண நிறைந்த மலர் களைத் தூவிக் கைதொழுது, "ஐயனே! கொடிய சூரனது நகரத்திற் சென்று வெற்றியைக் கொண்டு, அடியேங் கொண்ட துயரனைத்தையுந் தவிர்த்து அருளுவாய்." என்று வேண்டினார்கள்.

"ஆவதோர் காலை யெந்தை யாறிரு தடந்தோள் வாழ்க
மூவிரு வதனம் வாழ்க முழுதருள் விழிகள் வாழ்க
தூவுடை நெடுவேல் வாழ்க தொல்படை பிறவும் வாழ்க
தேவர்க டேவன் சேயோன் றிருவடி வாழ்க வென்றான்."

இவ்விதமாக அறுமுகம் படைத்த அண்ணலை ஏத்தினவனுய், கண்க ளில் அன்புநீர் வார, மெய் மறந்து நின்றான். இவ்வண்ணம் குமரவேளைப் பேரன்புகொண்டு தியானித்துத் தன்னை மறந்து நின்ற வீரபாகுதேவன் நிலையைக்கண்டு, உலகின்கண் உள்ள உயிர்கள் விம்மிதத்தொடு உவகை யடைந்தன. அவ்வாறு நிகழ, அறுமுகன் திருவருளடைந்த வீரபாகு தேவன், "இவ்வுருவத்துடன் யான் ஏகுவனுயின், உலகத்தின் கண் ணுள்ள உயிர்கள் மிகுதியும் இறந்துபடும். ஆகலின், இவ்வுருவினைச் சுருக்கித் தகுதியாகிய சிறு உருவத்தைக்கொண்டு செல்லுவேன்." என்று துணிந்து, அதற்கிணங்கிய வடிவங்கொண்டு, அக்கந்தமாதன கிரியினின்றும். கிளர்ச்சியோடும் வானெழுந்து, சிரசில் பொருந்திய மணிமகுடம அண்டகோளகையில் தாக்கச், சீற்றத்தோடு செல்லும் சரப்பறவையைப்போன்று, வீரமகேந்திரபுரியை நோக்கி, விரைவில் விண்ணூறாகப் போயினுன்.

அவ்வீரன் தன் காலின் வலிக்கு ஆற்றுது பாதலத்திலழுந்திய அம்மலையைக்கண்டு, முன்னையின் மேலெழுமாறு மொழிதலும், அவ் வாறே அம்மலை மேலெழுந்து முன்போல் திகழ்ந்தது. ஆற்றலோடு மேலெழுந்து செல்லும் அவ்வீரன் காற்றின் விசையால் அருகிலுள்ள மலைகளெல்லாம் பின்றொடர்ந்து சென்ற தோற்றம் எவ்வாறிருந்த தெனின், பூதவெள்ளத் தலைவரும், இலக்கத்தெண்மரும் அவனோடு போருக்கெழுந்தது போலிருந்தது. விரைந்து வான்வழியாகச் செல்

லும் வீரனது விசைக்காற்றினால் அண்டங்கள் நிலைகுலைந்தன. உயிர்கள் சுழற்சியடைந்தன, நீர் நிறைந்த கடல்கள் சுழன்று கலங்கின. நீருண்டு செறிந்த மேகங்கள் சுழற்சி யடைந்தன. பொலிவமைந்த சிலம்புகள் சத்திக்கும் தாள்களையுடைய வீரன், புவியை அலைத்து, முனிவர்க்கு அலக்கண் விளைத்து, விண்ணவர் திருவைக் கவர்ந்து, கொடுமை மிகப்புரியும் சூரனைக் கிளைஞரோடும் முடித்தற்கு நினைந்து, முருகன் அங்குப்பத்த ஒரு தனிச் சுடர் வேலையொத்து ஏகினான். அன்றியும், திருப்பாற் கடலிற் றோன்றிய விடத்தைக் கண்டத்தில் அடக்கிய சிவபெருமானை, மீண்டும் அவ்விடமானது வேண்டிக்கொண்டு, அவன் கண்டத்தினின்றும் புறப்பட்டுக் கடல் நோக்கிச் செல்லுதல் போல, வீரன் சென்றான்.

இவ்வாறு வீரபாகுதேவன் வான்வழியே விசையிற் சென்று, சூரபன்மன் வதியும் மகேந்திரபுரத்தின் வடக்கிலுள்ளதும், யாளிமுகன் என்னும் அவுணவீரனால் காக்கப்படுவதுமாகிய இலங்கையென்னும் ஊருக்குச் சமீபமாயினான். அதுபொழுது யாளிமுக அசுரன், சூரபன்மனைக் காணவேண்டிய நிமித்தம் அனேக சேனைகளோடும் அந்நகரை விட்டு மகேந்திர நகரஞ் சென்றிருந்தபடியால், அதிவீரனென்னும் அவன் புதல்வன் ஆயிர வெள்ளஞ் சேனையோடு அவ்விலங்கையைக் காவல் செய்திருந்தான். அப்பொழுது வீரசிங்கனென்னும் அவனது சேனைத் தலைவன் ஐஞ்ஞூறு வெள்ளஞ் சேனைகளோடு அந்நகரின் வடதிசை வாயிலில் இருந்தான்.

அதனருகில் வீரபாகுதேவன் அஞ்சாது செல்லவும், அவ்வீரசிங்கன், அத்தகைய துணிவாற்றிப் போதரும் வீரன் யாவனோ என்றும், தன்னை அவன் மதித்தானில்லை என்றும் சீற்றங்கொண்டு, அவனைத் தான் கொல்லவேண்டுவது அவசியமென்று கருதினான். ஆதலால், அவன் வடவைத் தீப்போற் கனன்று, காற்றினும் மனத்தினுங் கடிய வேகத்தை யுடையனாகி, வான்வழி வரும் வீரவாகு முன்னர் அசுரசேனை சூழ எதிர்த்து நின்றான். வீரசிங்கன், திறல் புயத்து வீரனைப் பார்த்து, "எனது காவலைக் கடந்து இதுவரையில் இப்படி வந்தவர் ஒருவருமில்லை. தனித்து வந்த நீ யாவன்? உன் உயிர்க்குச் சிறிதும் நட்பில்லாய். நீ கொலைபடு முன்னம் வந்த காரியத்தைப் பகருவாய்." என்றான். வீரபாகுதேவன், "யான் சூரன் வைகும்

மாநகர் நண்ணி, பின்னர் திரும்பிவிடுவேன். இதனால் நினக்கென்னை? இஃது உனக்குப் பிரிய மில்லையாயின் உன்னாலாகும் செயல்களைப் புரிவாய். யான் உனது ஆற்றலைக் காண்பேன்." என்றனன். திறலின் மிக்க சிங்கன், வீரபாகு தேவன் கூறிய மொழியைக் கேட்டு, அவன் அவுணர்தம் ஆணையை மதித்தானில்லை என்றும், அவன் வலியன் போலும் என்றும் எண்ணி, அருகில் நின்ற படைஞரை வீரத்தோடு நிற்கும் அவனதுயிரைக் கொள்ளுமாறு கட்டளையிட்டனன். உடனே வலிய சிங்கத்தை வேட்டைக் கானம் புகுந்த வேடர்கள் வளைந்தாற் போல, வீரபாகுதேவனை அவுணர்கள் வளைந்து போர் புரியத் தொடங்கினார்கள்.

அவ்வவுண வீரர்கள் வேல் முதலிய தெய்வப்படைகளால் அமர் புரிகின்ற காலத்து, வீரபாகுவாகிய அண்ணல், அரக்குருவங்கொண்ட மலையகத்து அக்கினிக் கடவுள் நுழைந்து, அதனை உருக்கியுடைக்குமாறுபோல், நெருக்கமாய் நின்ற அந்த அவுணர் நீத்தம் உடைந்து ஒழியக் கூரிய வாள் ஒன்றினை ஏந்தி, துண்டு துண்டாகத் துணித்துருட்டினான். பனிப் படலத்தைச் சூரியன் அழிப்பது போலச் சூழ்ந்து நின்ற அசுரப்படையைத் தனிவாளினால் தடிந்து, நூறுவெள்ளஞ் சேனையை மாளுவித்தனன். மற்றுமுள்ள அவுணர்கள் மனங் கலங்கித் தம் உயிரை ஓம்புதல் எண்ணிப் புவியினும், வானினும் பொள்ளெனப் போய் மறைந்தார்கள். அப்போது வீரசிங்கன், சீற்ற மிக்கவனாய், மாதிரங்களைக்கடந்து வளர்ந்துள்ள வீரந்தங்கிய தோள்களையுடைய அண்ணலின்மேல் சூலமொன்றினைச் செலுத்தினான். அதனை வீரன் தன் வாளால் இருதுணியாக்கி ஆரவாரித்தான்.

ஆர்த்தலும், சிங்கன் வீரபாகுவின் ஆற்றலை மதித்துத், தன் கைக்கண் உள்ளபடைகளில் கூரிய குலிசமொன்றினை வீச, அதனையும் வீரன் தன் வாளினால் மாற்றி, மீண்டும் அவன் படை எடாவண்ணம் அவன் முன்பு சென்று, அவன் கரங்களையும் முடியையுங் கொய்து, கடல்வாய் எறிந்து, நாந்தகத்தை யுறையுட் செறிந்து, வெற்றியொடும் அவ்விடம் விட்டுப் பெயர்ந்தான். அவ்விண்ணினின்றும் அகன்று, வீரபாகுதேவன் கடலின்மீது மேருமலை சென்றதுபோலச் சென்று, அவுணர்களுக்கு இருக்கையாகிய இலங்கைமாநகரின் மூன்று குவடுகளின் இடையதாயுள்ள ஓர் குவட்டில் பாய்ந்தான். மாயைகள் வல்ல நெடுங்கிரியாகியு

கிரவுஞ்சத்தை வேற்படையால் தூளாக்கிய அண்ணலால் விடப்பட்ட தூதனொருவன், அவ்விலங்கையில் பாய்ந்த அவ்வளவில் திறலினை யுடைய அதிவீரனும், ஏனைய அவுணர்களும் கலங்கி ஏங்கி, இடியுற்ற நாகம்போல மெய்பதைத்துப் பதறி வீழ்ந்தார்கள்.

பெருஞ் செல்வத்தினையுடைய மகேந்திரபுரத்தின் வடக்கே உள்ள இலங்கை, வீரன்வலிக்கு ஆற்றாது, கடலிடை அழுந்தி இன்னல் அடைந்தது. அவ்வாறு ஆற்றாது கடலிடை ஆழ்ந்த அவ்விலங்கை எதற்கு உவமையாயிற்றெனின், தந்திமா முகத்துத் தாரகப் பிரமமாம் விநாயகப் பெருமானை வழிபடாது, சுராசுரர் பாற்கடலைக் கடைந்துழி, அரவால் பிணிக்கப்பட்ட அம்மந்தரகிரியானது அக்கடலில் ஆழ்ந்த தொத்தது. அன்றியும் வலியுடை வீரவாகுவின் திருவடியூன்றுதலால், கடற்கீழ் போகிய இலங்கை, அன்று மகவான் குலிசாயுதந் தொடரக் கடலிடை அஞ்சிப்புக்க நாகமலையை ஒத்திருந்தது. இவ்வாறு இலங்கைமாநகர் கடலிடத்து ஆழ, அதனிடத்துள்ள அசுரர்கள், கடலின் மூழ்கிப் பரிதவிக்கலாயினர். அப்பொழுது இலங்கை நகரைக் காத்துவந்த அதிவீரன் உணர்ந்து, "இவ்வரிய செயல் செய்தவர்யாவர்? சூரபன்மனோ? அவன் இளைஞரோ? அன்றி அவன் மைந்தரோ? அவர் களன்றி இச்செயல் புரிவோர் யாவர் உளர்? அப்படியெனின், அவர்கள் நம் ஊர்க்குத் தீங்கு செய்தற்கு யாதொரு ஏதுவுமில்லை. மாயையும் இவ்வழிவு செய்தற்கு நினையாள். முத்தேவரும் இச்செயல் செய்தற்கு நினையார். மற்றைத்தேவர்களில் யாரிது செய்யுந்திறத்தார்? அன்றியும், எல்லாத் தேவர்களும் நமது சிறையகத்து உள்ளார். மாதிரத்தின் உள் ளாரும், வானின்கண் உள்ளாரும், ஏனைய அனைவரும் நமது இறைவன் ஆணையாற்றின் நீங்கார். இதனைச் செய்ய அவர்க்கு எண்ணுதலும் இய லுமோ? யான் இந்நகரினைக் காத்த திறம் நன்று. தந்தை நீங்கிய காலத்து, யான் இவ்விலங்கை நகரொடு கடலில் ஆழ்குவனேல், என்னை அவுணர் கள் யாது கூறார்? யான் தவமியற்றி முன்னாள் நான்முகனிடத்து மாயை வன்மைகளும் படைகளும் பெற்றது எதற்கு? எல்லாம் நகைத்தற்கிட மாயிற்றல்லவா? மன்னர் மன்னன் இஃதறிகுவ னாயின், என்னைத் தண் டிப்பா னல்லவா? என்தந்தையும் அவ்வாறியற்றுவன். ஏனையோர் என்னை எள்ளுவர்." என்று எண்ணி, வருந்திப் பின்னர்த் தன் படைஞரிற் சிலரைத் தன்னொடும் அழைத்துக்கொண்டு, கடலின் மீது

சென்று, அங்கு நின்ற வீரபாகுவின் நிலையைக் கண்டு வெகுண்டு, இதழ் கடித்து, நகைசெய்து, கீழ்வருமாறு கூறினான்.

"ஒடியொளித்த அண்டர் குழுவினைச் சார்ந்ததோர் வீரனாகும் இவன், நம் மூதாரை இக்கடலிடை ஆழும் வகை செய்து, அஞ்சாது மேலும் இவ்விடை நிற்கின்றான். திக்கெங்கும் கீர்த்திபெற்ற அசுரர் ஆணை மிகவும் நன்று." பின்னர் அவன் கடலிடை ஆழும் அசுரர் குழுவின் செயலைக் கண்டு நின்ற வீரபாகுவின் முன் சென்று எதிர்த்து நின்று, போர்த்திறம் முயன்றான். அது கண்ட வீரபாகுதேவன், தன் உறையிலிட்ட வாளை உருவிக் கொண்டு, சூழ்ந்து நெருங்கிய அவுணர் படையை ஊனொடு உயிர் சிந்தும்படி விரைந்து அவர்கள் சிரங்களையும், கரங்களையும், புயங்களையும், பதங்களையுங் கொய்து அழிவு செய்தனன். அவ்வவுணர் பெரும்போர் அக்கணமே முடிந்தது. பிறகு தன் படைஞர் இறந்ததை அறிந்த அதிவீரன், பெருங்கோப முடையனாய், "நொடிப் பொழுதில், உன்னை உண்டு விடுவேன்." என்று போர் முயன்று, குந்தமென்னும் ஓர் ஆயுதத்தை எடுத்து வீரபாகுதேவன் மேல் எறிந்தனன். அதனை வீரன் தன் கைவாளினால் இருதுண்டாக்கி நின்றான். அவுணன் மற்றும் ஒரு தண்டத்தை அவன் மார்பை நோக்கி விட்டனன். வீரன் அதனை வாளால் தடுக்கவில்லை. ஆனால், அது மார்பிலேறிய மாத்திரத்தில் அணுக்களாகி ஒழிந்ததைக் கண்ட அவுணன் மனங்கலங்கி மயங்கி நின்றான்.

அவுணன் அதன் பின் பல படைகளாலும் போர் புரிந்தும், ஒன்றும் பயனில்லை. பின்னர் அவன் அவ்வீரன் உயிரைக் கொள்ளுதல் அரிது என்று கவன்று, கடைசியாக ஓர் வாளை ஏந்தி வந்து, வட்டணை புரிந்து, "இவ்வாளாயுதத்தைப் பிரமனிடத்துத் தவமியற்றிப் பெற்றேன். இதனைப் பேதிக்க வல்லவர் ஒருவருமிலர். இத்தகைய வாளைப் பிடித்தேன். நீ இப்பொழுது இறத்தல் திண்ணம். வருக, வருக." என்று மிகைமொழி கூறி, வீரபாகுதேவன் முன் சென்றனன். வீரபாகு, "நின் ஆற்றல், நன்று நன்று. நம்மை நீ வெல்லுவையேல், நின்னை யாவரும் மதிப்பர். நின்று உரையாடுவது ஏன்? கடிதின் வருவாய்." என்றனன். அவ்வதிவீரன் அதைக்கேட்டுச் சமீபிக்க, இருவரும் நெடுநேரம் வாட்போரில் சிரத்தைக் குறித்தும், கழுத்தினைக்

குறித்தும், செவிகளைக் குறித்தும், இன்னும் பல அங்கங்களை நாடியும், அவ்வவ்விடைகளில் உய்த்தும், கற்றவன்மையால் அவ்வவற்றை மாற்றி வட்டணை வந்தும் போர்புரிகையில், வீரபாகுதேவன் இடைபுகுந்து, அதிவீரனது தாள், சிரம், தோள், ஆகம், ஆகிய உறுப்புக்களைத் துணித்து, விரைவில் அவனது உயிரை நமனுக்கு இரை ஆக்கினான்.

## மகேந்திரஞ் செல் படலம்

வீரபாகுதேவன், அதிவீரனைக் கொன்ற பின்னர்த் தன் வாளை உறையிற் செலுத்திப் போரைத் தணித்து, வீரமகேந்திர புரிக்கு நேரே செல்லக்கருதி, அவ்விலங்கையின் எல்லையினின்றும் எழுந்தான். அவ்வாறு வீரபாகு மேலெழுதலும், கீழமூழ்ந்திய இலங்கை முன்போல மேலெழுந்தது. சென்ற வீரமொய்ம்பன் சக்கரவாளகிரியைப் போலச் சூழ்ந்துள்ள வீரமகேந்திரபுரத்து மதிலையும், அதன் நாற்புறமும் அமைந்துள்ள கோபுரத்தையும், கூர்ந்து நோக்கினான். அம்மகேந்திர புரத்து வடதிசையின் கண்ணுள்ள சமுத்திர வாசலில், கோபுரப் புறத் திண்ணையின் பக்கமாகக் "கோரன், அதிகோரன்" என்னும இரண்டு வீரர்கள் பெருஞ்சேனையோடு நகரைக் காவல் புரிந்திருந்தனர். ஆயிர வெள்ளத்தேரும், கஜமும், இரண்டாயிர வெள்ளம் புரவிகளும் நெருங்க, அத்தொகை வீரர்கள் காவல்புரிந்து இருப்பதை வீரபாகு தேவன் கண்ணுற்று, விம்மிதங்கொண்டு, பகைவராகிய அவுணர் ஊர் புகுதற்கு உன்னிக் கீழ்வருமாறு தனக்குள் கூறினான். "இவ்வழியே செல்லுவேனாயின், சேனைகள் என்னைச்சூழ்ந்து அமர்புரியும். யானும் அவரொடு எதிர்த்துப் போர்புரிய நேரும். அவ்வாறாயினும், இக்குழுவினை முடிக்க ஓர் பகல் கழியும். அவ்வண்ணம் கழியினும், மீண்டும் நகரினுள்ளிருந்து அளவில்லாத இரதகஜாதி படையின் வெள்ளம் வந்தெய்தும். வந்த தானவப் படைகளை எதிர்த்து மலைந்து, எந்தையாகிய முருகவேள் திருவருளால் தமியேன் அழித்து நிற்பினும், இந்நகரின் கண்ணுள்ள அவுணப்படை முடிவெய்த அளப்பிலாக் காலஞ்செல்லும். அவுணரோ எளியரல்லர். அளவிலாக்காலஞ் செல்லினுஞ் செல்லுக. யான் அவுணப் படை அடங்கலும் அழிப்பினும், அதன்பின் சூரன், தன்துணைவரையும், புதல்வரையும் விடுப்பன். அத்துணைவர் புதல்வர் முதலியவர்களை யான் வெல்லுதல் அரிது. அறுமுகப் பெருமான் அருட்டுணை கொண்டு பற்பகல் போர்புரிந்து வெல்லுவேனெனினும், எவராலும்

வெல்லுதற்கரிய சூரன் வந்தெதிர்ப்பன். அவனோடு பன்னாள் போர் புரியினும் அவன் ஆதிமூர்த்தியின்பால் அன்று கொண்ட வரத்தின் மகிமையால் அழிவெய்துபவன் அல்லன். அன்னவன் தன்னை மால், அயன் முதலியோரே வெல்லுதற்கரிதாம்; அவன் ஆணை அஞ்சி, இன்னும் இடர்ப்படுகிறார்கள். ஆகலான், யான் சமராற்றிச் சூரனைக் கொல்லாமல், விரைந்து மீளுவது பழிப்புக்கிடமாம். அன்றியும், அருஞ்சிறைப்பட்ட தேவர் துன்பம் அகலாது. ஆதலால், யான் அமரை ஒழித்துத் தூதனாக வந்த என் கடனை முடிப்பதே தகுதி."

இவ்வாறு கருதிய வீரபாகுதேவன் அவ்வாயிலில் அமைந்த சேனைத் தொகுதியையும், காப்பின் வன்மையையும் கண்டு, உட்புகு தற்கு இயலாமையால், மருங்கிலுள்ள கீழ்த்திசை வாயிலை நண்ணு தற்கு, அவ்வடக்கு வாயிலை நீத்துக் கிழக்கு வாயிலின் முன்னராக ஏகினான். அவ்விடத்தில் மேதிக்கண்ணன், வீரபானு என்னும் இரண்டு வீரர்கள் ஏதி ஏந்திய கையராய்ப் பல்கடைத் தொகுதி சூழக் காவல் புரிந்திருப்பதைக் கண்டு, வீரமொய்ம்பன், விம்மிதங் கொண்டு, அவ்வாயிலும் தான் உட்புகுதற்கு இயலாத அரிய காப் பினை உடையதாய் இருக்கின்ற தென்றெண்ணி, அதன் பாங்கருள்ள தென்திசை வாயிலைக் காண அவ்விடம் விட்டு அப்புறம் ஏகினான். அவ்வாறு ஏகுங்காலத்து, ஆயிரமென்னும் கணக்குடைய ஆனை முகத்தொடும், இரண்டாயிரம் கரத்தொகையொடும், கலத்தின் மீது மீகான் அமரும் தோற்றம் போன்று விண்ணிடத்தில் அக்கீழ்த் திசை வாயிலைப் போற்றி இருக்கும் கயமுகனென்னும் பெயரினை யுடையான் அண்டர்கள் அஞ்சும் ஆர்ப்பொடு ஆகாயத்திற் செல் லும் வீரனாகிய அண்ணலைக் கண்டு, கனன்று, கீழ்வருமாறு கூறுவா னாயினான்.

"என் ஆற்றல் மிக்க காவலைக் கடந்து, இவண் வந்த நீ மாயை யினும் வல்லையோ? நுண்ணிதின் நுழையும் அக்காற்றும் என் ஆணையை இகந்து உட்புகும் ஆற்றலுடையதோ? வறியராய்த் திரியும் வான வர் உறையும் ஊர் எனக்குறித்து வந்தனை போலும்? நமது ஆணை யைச் சிறிதும் அறியாய் போலும்; யாம் ஆள்கின்ற இந்நக ரத்து நீ வந்தனை! சீறுகின்ற சிங்கம் வாழுமிடத்து, நீ மான்பிணை அஞ்சாது புக்கு, ஆராயச் செல்லுங்கொல்? சிறையின் பட்டுழல் தேவர் செய்கையை அறியும் பொருட்டு இந்திரன் ஆளாகி அணுகினை கொல்லோ!" பின்னர் அவன் வீரபாகுவை நோக்கி, "நில்லடா. எங்

குச் செல்கின்றாய்?" என்று, அவன் அருகே சென்றனன். வீரபாகு தேவன், "இவன் நாளுலந்து நம்பால் நண்ணுகின்றனன்." என்று நகைத்து, அவ்வுழியே நிமிர்ந்து நின்றான். அக்கயமுகன், கனன்று, பெரியதோர் மலையை அவ்வீரன் தோளின் மிசை எறிந்தனன். அம் மலை வீரன் தோள் வலிக்காற்றாது துகளாகப் போயிற்று. மற்றும் அநேக மலைகளையும், பலவித படைகளையும் கொண்டு அக்கயமுகா சுரன் அண்ணலொடு போர் புரிந்து வருகையில், வீரபாகுதேவன் தன் வாளினை உருவி, அவன் முகத்திலுள்ள துதிக்கை ஆயிரத்தை யும், மருங்கிலுள்ள கரம் ஈராயிரத்தையும் துணித்து, மார்பைக் காலால் உதைத்து, அவன் உயிரை நீக்கினான். இவ்வண்ணம் இயற்றிய பெரும் பூசலைக் கண்ட அவுணர், பல திசைகளினின்றும், அவ்வலிய போர் இயற்றுவோர் யாவர் என்று விரைவில் அவ்வுழிச் சார்ந்தனர். அவர் வருகையைக் கண்ட வீரபாகுதேவன், இனித் தான் அவ்விடம் இருப்பின் பெரும் போருக்கு இடம் உண்டாகும் என்று, தான் அவர் காணாவண்ணம், வேற்றுருக்கொண்டு, அவ்வாயிற் காவலையும் கடந்து உட்புக வேண்டுமெனத் துணிந்தனன். பின்னர் அவன் அறுமுகத்து அண்ணலின் திருவருளை நினைந்து, ஓர் அணு உரு வினைக் கொண்டனன். நோக்கருந் திறத்தால் நுண்ணிய உருவங் கொண்ட வீரன், அவ்வடுகளம் நீங்கி, விண்ணிடை எழுந்து, கீழ்த்திசை வாயில் கோபுரத்தின் மீது அமர்ந்து, அம்மகேந்திர நக ரத்தின் வளப்பங்களையெல்லாம் கண்ணுற்று வியந்து, தனக்குள் கீழ்வருமாறு சொல்லிக் கொண்டனன்.

"மண்ணினைத் தொடர்ந்துள்ள ஆயிரத்தெட்டு அண்டத்தின் கண்ணுள்ள அரிய பொருள்கள் எண்பதினாயிரம் எண்ணினைக்கொண்ட யோசனைப் பரப்பில் கண்களுக்குப் புலனாம் வகை நெருங்கியிருப் பது மிக்க இரும்பூதல்லவா? சுத்த வீரனாகிய சூரன் அரிதாற்றிய பெருந்தவத்தில் இவையெல்லாம் அடங்கின போலும்! இச்சூரனுக்கு ஈசன் அளித்துள்ள ஆயிரத்தெட்டு அண்டத்தின் அமைந்த எல்லை யற்ற சிறப்பையெல்லாம் ஈண்டே தொகுத்து வைத்துளான். இவ்வனைத் தையும் கண்ணாரக் கண்டேன். ஆனால், அறம், வாய்மை, இரக்கம், ஆகிய வற்றை ஈண்டுக் கண்டேனில்லை. அவற்றையும் சூரன் சிறையகப்படுத்தி னனோ? அளவற்ற தேர்கள் தங்குதற்கு இடங்களும், மற்றைப் படை

களுக்கு உரிய இடங்களும், அளவிறந்த யோசனைப் பரப்புள்ளவாயிருக்கின்றன. மேன்மை தங்கிய இம்மகேந்திர மூதூரைப் படைத்தற்கு ஒரு நான்முகன் ஆற்றலுடையனோ? சூரன் பெற்றுள்ள அண்டங்களிலுள்ள அளவற்ற நான்முகப் பண்ணவர் அனைவருங்கூடி இயற்றினார்களோ? மண்மகளின் தவப்பயனென்று கூறுதற்குரிய இம்மகேந்திரபுரத்தின் மிக்கசீரை இரண்டு கண்பெற்றவர் முழுமையுங் காணுவதெங்ஙனம்? இமையாநாட்டவருக்கும் அரிதே. வாழ்வுமிக்க இம்மகேந்திர நகரத்தின் பெருமை,

> "ஆயி ரம்பதி னாயிரம் கோடிநா வளவி
> லாயிரம் விழியாயிர மாயிரஞ் செவிக
> ளாயி ரம்புந்தி கொண்டுளார்க் கல்லதிவ் வகன்சீ
> ராயி ரம்புயங் கண்டுதேர்ந் துரைப்பினு மடங்கா."

இவ்வாறாகிய இந்நகரத்தினது அழகு முழுமையும் விடாது நோக்குதற்கு, அறுமுகப்பெருமான் அருளின் திறத்தால் அளவிலாப் பேருருக் கொள்ள எண்ணமுடையேன். ஆயினும், பகைவருக்கு என்னைக் காட்டுதல் தகுதியற்றதென்று ஒழிந்தேன்.

பிறகு அவன் கீழ்த்திசை வாயிலின் நின்ற கோபுரத்திலிருந்து நீண்டநகரத்தின் சீரனைத்தையும் நோக்கி, இனித்தான் பாணிப்பது தகுதியல்லவென்று துணிந்து, அவுணர்க் கிறைவாகிய சூரபன்மன் உறையும் நகரினை எய்தும்பொருட்டு, அக்கோபுரத்தி னின்றும் இடைவழியாக விண்மீது நடக்கத் தொடங்கினான். அவ்வாறு நடந்த வீரபாகு தேவன், அறுமுகப் பெருமானை மனத்தில் நினைந்து, சூரபன்மனுக்கு முதற் குமாரனாகிய பானுகோபன் உறையும் இடத்தை அடைந்தனன். பின்னர் அவன் அப்பானுகோபனைப் பார்த்து விம்மிதமடைந்து, பின் அதைவிட்டு, 'அக்கினிமுகன், இரணியன்' ஆகிய புதல்வர்கள் இல்லங்களுங் கடந்து, மற்றுமுள்ள புதல்வர்களாகிய மூவாயிரவர் உறையும் கோயில்களுங் கடந்தான். பின்னர், அமைச்சருள் தலைமை எய்திய தருமகோபன் என்பவனது மாளிகைச் சிகரத்தில் தங்கிச் சுரர்களும், வாசவன் புதல்வனும் அரக்கர்சூழத் துன்பமுற்றிருக்குஞ் சிறைக்களத்தினைக் கண்டான். அச்சிறைக் களத்தின்கண் பெருந்துயர் எய்தியுள்ள ஜயந்தன் முதலிய தேவர்களின் செயல்களைச் சிறிது கவனிப்போம்.

## ஜயந்தன் புலம்புறு படலம்

திருப்பாற்கடலிற் பிறந்த சசியினைபொத்த நுதலினையுடைய அச் சசியின் குமரனாகிய ஜயந்தனது கால்கள், விற்பயிற்சியால் தழும் படைந்திருக்கும் கரங்களைப்போன்று, பற்பல்காலம் வல்லிகள் பூண்ட காரணத்தால், பெருந் தழும்படைந்திருந்தன. மானம், இகல் முதலிய வைத் தன் உயிரை அலைத்திட, அதனால் துயரமாகிய பெருங்கடலுள் அழுந்திச் சோருவானாயினன். அச்சிறைக்களத்துள்ள கொடுமையினால் இறந்திருப்பான். பல உகங்கள் இடர்க் கடலின் மூழ்கலால், அப்பழி யினின்றும் நீங்கத் தானே தன்னுயிரை வலிந்து விட்டிருப்பன். முன் அமிழ்த முண்டமையால், அவ்வண்ணமாகாது, உயிர்கொண்டு எஞ்சா இன்னலிடைப்பட்டு இகழப்பட்டிருந்தனன். நீங்காத மாறுபாட்டினை யுடைய சூரபன்மனது கடுஞ்சிறையிற்பட்டு, அவுணரால் இடும்பை யுற்ற ஜயந்தன், ஒருகணப்போதை உகம் பலவாகக்கழித்து வைகுவான். நூற்றெட்டு உகங்களாக இந்திரன் சிறுவன் தனது உடல் வனப்பு மாழ்கி அவுணரால் அலைக்கப்பட்டு உய்யுமாறின்றிக் கலங்கிக் கிடந்தான். இந் திரன் சசியொடு மறைந்திருந்த சூழலிற் சென்று அவ்விருவரையும் பற்றிக்கொணர்ந்தனர் என்று பொய்யுரை கூற, அம்மொழியினைக்கேட்டு அயர்ந்து அவசமாய்க் கீழே விழுவான். நறுந்தேன் பிலிற்றும் ஐந்தரு நீழலை ஆர்வத்தொடு எண்ணுவான். ஆய்ந்த மலரணையை நினைப்பான். தன்னுடைய நேயமங்கையர் புணர்ச்சியை உன்னுவான். இந்திரத் திரு வினை எண்ணிச் சோருவான். துறக்க நாடிழிந்து பண்டையிற் பாரகஞ் சென்ற சுரவர் யாண்டையுள்ளார் என்பான். சீற்றக் கொடுமையுடைய சூரனது மறச்செயல்களை எடுத்துக்கூறி முறையிடுதற்கு உமாபதி உறையும் திருக்கயிலைக்குச் சென்றனன்கொல் என்பான். பானுகோப னோடு பகைத்தெதிர்த்துப் போரியற்றிய காலத்து, அப்போர்க்களத்து மருப்பனைத்தும் இற்றி வீழ்ந்த தெய்வதக் களிற்றின் செய்கை என்ன ஆயிற்றோ அதனை அறிந்திலேன் என்பான். இவ்வாறு அளவிறந்த எண்ணங்களை எண்ணி எண்ணித் துயருழந்து, வெய்துயிர்த்து விம்மி வைகினன் இவ்வண்ணம் மற்றைத் தேவர்களுஞ் சூழ்ந்து துன்ப முற்றிருந்தார்கள். அச்சிறைக் களத்தைக் கண்டகன் முதலிய கொடிய அவுணர்கள் பலர் குழுமிக் காத்து வந்தனர்.

அக்காப்பாளர், வீரபாகுசென்ற அன்று, தேவரோடு ஜயந்தனைச் சூழ்ந்து, "நம் இறைவனாகிய சூரபன்மனது ஆணையிகந்து சசியொடு

மறைந்தவாசவன் யாண்டையுள்ளான் ? விரைவில் கூறின் பிழைப்பாய். அன்றேல்உன் ஆவிபோகும். முன்னாள் போன்று இன்னாளைக் கருதாதே. உண்மையைச் சொல்லு." என்று உரைத்தனன். அக்காதகர் கடுமொழி கேட்ட ஜயந்தன், "அன்று என் தந்தையுந் தாயும் வானுலகத்தைவிட்டு ஓடியதை அறிவேன், அன்னோர் எங்குச் சென்றனரோ அறியேன். புண்பட்ட நெஞ்சினேன் யாது கூறுவேன்!" என்று விடை இறுத்தான். மற்றுமுள்ள தேவர்களும் அவ்வாறே மொழிந்தனர். அப்பொழுது அசுரவீரர்கள், "இத்தேவர்களெல்லாம் கள்ளத்தனத்தால் ஒன்றுகூடி, ஒருபடித்தாய்ப் பொய்யையே கூறுகின்றனர். இத்தீயரை யாது செய்தால் உண்மை மொழிகுவர்." என்று எண்ணி, மேலும் அத்தேவர்களைக் கீழ்வருமாறு துன்புறுத்துவாராயினர். நஞ்சினும், தீயினும் கொடிய வாய சொற்களால் பழிப்பார்கள்; கன்னங்களூடே தோமரம் உய்த்துக் கடைவார்கள். சின்னப் படுத்துவோர் போன்று உடன் முழுதும் சேதிப்பார்கள்; துண்டப்படுத்திய உறுப்புக்களெல்லாம் விரைவில் ஒன்றிப் பிண்டத்திற் கூடக் கண்டு கடுங்கோபங் கொண்டு, ஏதி ஏந்தி மார்பில் குத்தி பற்களைக் கடித்து வலிந்து குடைவார்கள். தண்டத்தினால் தலை கீறும்படி மோதுவார்கள். இன்ன தன்மைத்தாகிய கடுந்துன்பங்களைக் காவலாளர் செய்கையில், ஜயந்தனும், விண்ணவர்களும் அக்கொடுமையை ஆற்றாராகிச் சூலவைதி நிமலனை நினைந்து, "ஓ! ஓ!" என்று அரற்றினார்கள். சிற்றமும், வலிமையுமுடைய அவுணர் இயற்றும் கொடுமைகளால், ஜயந்தன் இறுதி எய்தவில்லை. அஃது எதுபோலுமெனின், கூற்றவன் ஆணையால் அருநரகில் துன்பமுறும் கொடியர் போலும். இவ்வாறு அவர் தண்டம் இயற்றுந்தொறும் உடல் சின்ன மடையாமலும், உயிர் நீத்து ஏகாமலும், அதுபொழுது நிகழும் துன்பத்தினை மாத்திரம் அத்தேவரோடு தானும் அடைந்து வந்தான். வாள், தோமரம், எஃ.கம், தண்டம் முதலிய பல படைகளும் முறிவெய்தவும், காவலாளர் கரங்களின் திறம் குறையவும், அக்காவலாளர் நொந்தவராகி அமரர்க்குக் 'கேடு செய்தலை விட்டு வலி குறைந்து, "இவர் புண்ணியப் 'பகுதியின் நாளெலாம் இற்ற பின்னர் இறுவரேயன்றி மற்றோர் வினையால் இடையில் விளிபவரல்லர். அமிழ்த முண்டவர், தவத்தின் மிக்கவர், நாமியற்றிய தண்டவன்மையால் நொந்தும் யாதும்

உண்மை கூறினரல்லர்." என்று இன்ன பல கூறி, அற்புதமடைந்தனர்.

விண்ணவரை அலைத்த கொடுஞ் செயலால் அவர்கள் கைந்நோவெய்தி, வன்மை நீங்கிக் கவன்று, அத்தேவருக்கு அணியராய் நெருங்கிக் குழுமி ஒரு சாரிருந்து காவல் போற்ற, எய்ப்படைந்த ஜயந்தன் விண்ணவரோடு இருந்து, கண்ணுதற் பெருமானாகிய கருணையங் கடலை நினைந்து புலம்புதலுற்றான். "வந்திப்பவர் பவமனைத்தும் நீக்குவோய்! எத்தேவராது சிந்தைக்கு மெட்டாத சிவனே! செழுஞ்சுடரே,! இப்பிறவி முழுதுந் துயருழக்கச் செய்தனையோ? அந்தி வண்ணத் தண்ணலே! நின் பெருமை அறிய வல்லார் யாவர்? கங்கை முடித்தாய்! கண்ணுதலாய்! கடை மிடற்றாய்! திங்கள் புனைந்தாய்! சிவனே! சிவனே! அனைத் துயிரையும் அழித்தல் செய்பவன் நீ யென்றே வேதங்கள் கூறுகின்றன. நினது ஆணையால் வந்த இத்தீமை நின்னருளாற் போவதன்றி மற்று யாவரே அதைத் தவிர்க்க வல்லார்? நாரணற்கும், நான்முகற்கும் நாடுதற்கரிய பெம்மானே! அனைத்துயிர்க்குந் துணைவா! அடியேன் உயிரளிக்க வாராயோ? அமரர் இரிந்தோடத் துரத்திய கொக்குருக் கொண்ட தானவனைத் தடிந்து, ஓர் சிறையைச் சின்னமாக அணிந்த அருள் என் பக்கம் பார்த்தனையோ? கயிலை மலையில் புகல் புகுந்த தேவர்தமை அடல் கருதிச்சென்றந்தரனைத் திகிரிப்படையால் ஆவிபோக்கி அமரரை அஞ்சலென்றனை அன்றோ? நந்தூருங் கங்கைநதி செறிந்த காசிநகர் தன்னில், தந்தியாம் அவுணன், தவத்தினரைத் துரத்திவர, அன்னானைச் சினந்து, அவன் தோலுரித்த கருணைக்கு இணையாது?"

"இளமதியும், கிளர்வெம் பொரியரவும், ஆற்றினொடு மிலைந்த ஆதியெம் மண்ணலே! நினதருளால் இவ்விடுக்கண் எனக்கேகின், இழிந்த வளம் யான் வெஃகேன், நோற்றல் புரிவேன். தண்ணிய மலர்த்தேன் துளிக்கும் தருநிழற்கீழ் வாழ்வு வெஃகி நண்ணினேன். விண்பதமும் குற்றமாம்? பிறர் பதமும் நாசமாம். சிவனே! சிவனே!! நின்பொற் பதமே வேண்டுவன் யான்." என்று பற்பல எடுத்து மொழிந்து, இரங்கி, விடமேறிய தொக்க, உணர்வெலாம் அடங்க ஒன்று மோராதவனும் மயங்கி, உயிர் நீங்கினவர் போன்று கிடந்தான் சதமகன் செம்மல், மற்

றைத் தேவர்களும் சயந்தனைப்போலவே அழுது மாழ்கி, அவசமாய்க் கிடந்தனர்.

## சயந்தன் கனவுகாண் படலம்

விண்ணவர்களும், ஜயந்தனும் வீரமகேந்திரபுரியில் சிறையகத்து மாழ்கியதை எண்ணிலா உயிர்தொறும் உற்று, இன்னருள்புரியும் குமரேசனும் அறுமுகத்து அமலன் உணர்ந்தான். ஒரு புகலுமின்றியே தனித்தயருஞ் சிறுவரைத் தழுவி அஞ்சலென்றுரைக்கும் ஈன்ற தாயை யொத்த அவ்வமலன், கொடிய சிறைத்தலைப்பட்டு அவுணரால் மெலிந்து, அறிவு மாழ்கிய அத்தேவரை அருள்வது கருதினன். சிற்றடி யினையுடைய குமரன்போல் செந்திமாநகர் வந்து இமையோர் இடுக்கணை யகற்றுவான் இருந்திடும் அப்பரமன், தனது உணர்ச்சி நீங்கி, அயர்ந்துகிடந்த சயந்தன் கனவில் அருள் புரியக் கருதினன்.

> "வீற்கேதனம் வச்சிர மங்குசம் விசிக
> மூதி லாதவே லபயமே வலமிடம் வாத
> மேறு பங்கய மணிமழுத் தண்டுவில் விசைந்த
> வாறி ரண்டுகை யறுமுகங் கொண்டுவே ளடைந்தான்."

இவ்வாறு தந்தையில்லதோர் பரமனைத் தாதையாக வுடைய கந்தவேள் ஏசி, அனைய தன் உருவினைக்காட்ட, இந்திரன் மகன் நுட்ப யாக்கையுள் இருந்த கண்களாற் கண்டு தொழுது மொழிவான்:—"தொண்டு பூண்டு கிடக்குஞ் சிறியேன் படுந் துன்பத்தைத் தொலைக்க வெண்ணிப் போந்த நின்னைக் குறித்துணரின், திருமாலும் அல்லை, அப்பிரமனுமல்லை, மேல் அண்டர் நாதனும் அல்லை, இவ்வருட்படிவம் கொண்டுவந்த எந்தை நீ யானறிய அருளுதல் வேண்டும்". அறுமுகப்படைத்த அண்ணல், "யாம் அக்கொன்றை சூடிய பரஞ்சுடர் குமரன். உன்றன் அல்லலை யுணர்ந்து ஈண்டு வந்தனம். உன் தந்தையின் குறை நுங்குறை ஆகிய யாவையுங் கூறிவந்து நம்மை வேண்டலும், இந்தப் பூமியின் கண் எய்தி, மாயைகள் வல்ல கிரவுஞ்சமலையையும் சூரனுக்கிளைய தாரகனையும் கொன்றனம். அத் தாரகனை அட்டபின் திருச்செந்தூரில் அமர்ந்தனம். வசைத்தவனும், திருமாலும், நின்தாதையும், அமரரும் நம் வயின் உறைந்தனர். நின் தங்கை மேருகிரியில் இருந்தனள். நீ வருந்தற்க. வீரபாகு வென்னும்

ஓர் வீரனைத் தூதாக விடுத்திருக்கின்றனம். அன்னோன் சூரன் மக்களுள் ஒருவனையும் அளவிறந்த அவுணர்களையுங் கொன்று, இந்நகரையழித்து நீறுபடுத்தி, இன்றுமாலையே எம்மை அடைகுவன். செல்லுகின்ற இப்பகல் நீங்கியபின் நாளையே அச் செந்திநகரை விட்டுப் போந்து, இந்நகர்க் கணித்தாய் வைகி, ஐந்திருதினத்தில் அவுணர்தந் தொகையும் அல்லலாற்றிய சூரனும் முடிய அடுதும். சூரனை முடித்த பின்னர் வானவருடன் உன்னைச் சிறையினின்று நீக்கி நுந்திருவெலாம் ஈதும் ஆகலான், உன்றுயர் விட்டிடுவாய்." என்று குன்றெறிந்த அண்ணல் கூறியருளினன்.

அறுமுகப் பெருமான் உரைத்தருளியவற்றைக் கேட்ட சயந்தன், அகத்திலுள்ள, மையல் மாசிருள் நீங்கப்பெற்றுப் பெருமகிழ்ச்சியுடையனாய், உரோமஞ் சிலிர்க்க, விழிநீரொழுக, சையமேயெனத் தோளிமீர, அரிதிற்பெறும் அமிர்தம் எளிதிற் கிடைத்துண்டவர் போன்று, விப்பிதத்தனாய்த் தான் கற்ற சுருதிகளாற் பாடியும் ஆடியும் வணங்கினன். அவன்பெற்ற உவகையின் பெருமையை யாவரே அளவிட வல்லார்? இந்திரன் மதலை அவ்வாறு எம்பிரான் திருவடிகளைப் பன்முறையும் வணங்கித் துதித்து, "புல்லிய அடியேன் புன்கணை வலிந்து தீர்த்தருளினாய். யான் உரைப்பது முண்டுகொல்! அடியேம் நின்பால் புகல் புகுந்தனம். எம்மைக் காத்தருளுவாய்." என்று வணங்கினன். சயந்தன் கூறிய மொழியைக் கேட்டு முருகப்பெருமான், "கூறியநின்குறையை முடிக்குதும்,இஃது உறுதி. அன்றியும் இந்நகர்க்கு யாம் ஏவிய தூதுவன், "நின்னையுந் தேவரையுங் கண்டு நயமொழி கூறி நடக்கவும் செய்குதும். அதனையும் காண்பாய்." என்றருளிப் போயினன்.

அப்பொழுது இறந்து நீங்கிய புலன்களெல்லாம் அறிவுடன் தோன்றலும், அக்கனவினின்றும் அகன்று விடந் தலைக்கொளச் சாய்ந்தவர், மந்திரத்தால் தெளிந்தெழுமாறுபோல அவன் மெல்ல எழுந்தான். பின்னர் அவன் கனவிடைக் கண்ட யாவையும் நினைந்து, நெஞ்சங் குளிர்ந்து, தமது தீவினை யெல்லாம் ஒழிந்தவோ என்று பன்முறையும் பகர்ந்து, கவலை யெய்திக் கடுந்துயராகிய கடலுள் ஆழ்ந்து, சிவகுமாரன் திருவருளை நினைந்து,உவகையென்னும் ஒப்பற்ற கடலுள் அமிழ்ந்தான். அத்தன்மையாகிய காலத்து, அயர்ந்து அவசமாய்க் கிடந்த வானோர்,

கனவு தோறும் சென்று, இந்திரன் புதல்வனுக்கு முன்னருளியவாறு போற் கூறி யருளி, "வருந்தலீர்" என்று குமரன் மறைந்தருளி ஞன். கொன்றை வேணியன் தந்த குமரகுருபரன் ஏகிய பின்னர், தேவர்கள் கனவின் நீங்கி விம்மிதத்து விழித்தனர். பின்னர் அவர்கள் ஒருங்கு கூடி இப்பெருமகிழ்வு எய்தி, அக்கனத் திறத்தைத் தீயவர் கேட் பரேல் துன்புறுத்துவர். என்று கூற அஞ்சி, இந்திர குமாரன் மருங் கினிற் சென்று, மெல்ல அவன் கேட்கு மாற்றால் விளம்பினூர்கள். அத்தேவர்கள் கூறும் விஷயம், முன் தான் கண்ட கனவின் திறத்தை ஒத்திருக்கக் கண்ட ஜயந்தன், பார்முழுது முண்டவனுமென உடலம் விம்மி, உயிர்கள் தோறும் உலாவி நின்ற அறுமுகப்பெருமான் கரு ணையை நினைந்து, அவன் திருவடியை வழுத்தியிருந்தான்.

## வீரபாகு ஜயந்தனைத் தேற்று படலம்

இவ்வண்ணமாக ஜயந்தன் தேவர்களோடு சிறையில் இருக் குங் காலத்து, முன்னர்த் தூது சென்ற வீரபாகுதேவன், தரும கோபனது மாளிகைச் சிகரத்தின் மீது இருந்து, சிறைப்பட்டுள்ள தேவர்களின் பெருந் துன்பத்தை நோக்கினன். அப்பொழுது அவு ணர்கள் சிறையிலுள்ள தேவர்களைச் சூழ்ந்து காத்திருந்த வன்மையை நோக்கி, "இவ்வவுணர்கள் காணுவண்ணஞ் சென்று சிறையகத்துள்ள ஜயந்தன் முதலிய தேவர்களைக் காணவேண்டும். அதற்கு இதுவே உபாயம்." என்றெண்ணி, முருகப்பெருமானை அவனது மந்திரத்தால் தியானித்தலும், அச்சிறை காப்பாளர் அம்மந்திரத்தின் வன்மைபால் அறிவிழந்து, மயங்கி வீழ்ந்தனர். அவ்வமயத்து வீரபாகுதேவன், சிறைக்களத்துள்ளே புகுந்தான். தனித்துப் புகுந்த நல்லோனு கிய வீரபாகுதேவனைப் பார்த்த வாசவன், "மதலையை முதலிட்ட வானோர், நமது கனவினிடத்து எழுந்தருளி, அருள் பாலித்த வெற்றிவேற் பெருமான் விடுத்த தூதுவன் போலும் இவ்வீரன் காவலாளரும் அயர்ந்திருந்தனர்." என்று தம்முட் கலந்து பேசி, ஆர்வமுற்றிருந்தனர். உட்சென்ற வீரபாகுதேவன், அத்தேவர்க ளுக்கு அருகே நின்று, அறுமுகம் படைத்த அமலனது திருநாமம் புகல, அத்திருநாமத்தைக் கேட்ட இந்திரகுமாரன் முன் அறியாத வன் போன்று தொழுது நின்று, "செங்நிறக் குஞ்சியினையுடைய தருவர் காப்பினிற் றளர்வுறும் எங்கள்பால் நீ வந்த காரியம் யாது? அதனைக்

கூறவேண்டும்." என்றான். அதைக்கேட்ட அறிவனாகிய வீரவாகு தேவன், "பரமன் தந்த அறுமுகத்து ஐயனுக்குப் பின் வந்தவன் யான். அன்னோன் விடுக்க வந்த தூதன். என் பெயர் வீரபாகு. உங்கள் சிறையை விடும் பொருட்டுச் சூரன்முன் சில நல்லுரை கூறி, அறிவிக்கப் போந்தேன்." என்றனன்.

அவ்வாறு வீரன் கூறிய மொழியினைக் கேட்ட வாசவன் மைந்தன், முன்னம் அறுமுகப்பெருமான் அருளியவண்ணமே ஆயிற்று என்று மகிழ்ச்சி மேல் மகிழ்ச்சி பெற்றவனாகி, "இடும்பை நிறைந்த் மனத்தினேம் குறையை வினவுதற்பொருட்டு எய்தினாய். அதனால், இந்த வலிய சிறையினின்றும் நீங்கி யாங்கள் இடர் ஒழிந்து, முத்திப் பேற்றையும் அடைந்தனம்." என்று நயமொழி கூறினான். பின்னர் ஜயந்தனைப் பார்த்து வீரபாகுதேவன், "வெற்றிவேற் பெருமான் விண்ணவராகிய உங்களை வலிந்து ஆள எழுந்தருளியுள்ளான். முன்னிழந்த ஆக்கம் முழுதும் பெறுவீர்கள். பின்னும் வேண்டியவற்றையும் பெரிதும் எய்துவீர்கள். பிரமனைச் சிறைசெய்து, அன்று சிருட்டியை நடாத்திய செவ்வேற் காத்தன் நும் சிறையை நீக்க இவ்விடத்து உற்றான் என்றால், நீங்கள் முன் செய்துள்ள தவத்தின் பெருமை அளவிடற் பாலதோ? கடும்பாவமும், கையிகந்த தண்டமும் இயற்றும் இவ்வசுரர் நெருங்கிய மூதூரில் அறிஞர் செல்லவும் நினைப்பரோ? எம்பெருமான் அருளிய ஆணையால் யான் அங்ஙனம் செல்வோர் போன்று, அகமெலிந்து, ஈண்டு வந்தேன். உங்களைக் கண்டேன். அளவிலா உவகை எய்தினேன்." என்று மொழிந்தான். ஜயந்தன், "யாங்கள் இச்சிறையிற் படுமுன்னரே எனது பெற்றோர் அமராபதியினின்றும் நீங்கினர். அத்தகையோர் யாண்டு சென்றனர் கொல்லோ? அவரது செய்கை என்னோ அறிகிலேன். ஆகலான், வீரனே நீ அறிகுவையாயின் உணர்த்துவாய்." என்றான். அம்மொழி கேட்ட வீரபாகு தேவன், "நின் தந்தையாகிய இந்திரன் நின் தாயாகிய சசியோடு விண்ணுலகு நீத்து, மண்ணுலகினையெய்தி, பன்னிரு திருநாமம் படைத்த காழியை நண்ணி, கறைமிடற்று அண்ணலைக் கருத்திற்கொண்டு, நோற்றது முதல் அறுமுகப் பண்ணவனொடு அலைவாயிற்சென்றது ஈறாக,ஒன்றும் ஒழியாது உரைத்தருளினான். மேலும் உங்கள் குறையை அறுமுகப்பெருமான் நீக்குவன், இன்னும் சிலபகல் மனக்கவற்சி யடையாமலிருங்கள். அன்று தட்சன் சிவாபாரதப்

பட்டு இயற்றிய அவ்வேள்வியிற் சென்று, நீங்கள் அத்தகுதியற்ற அவி யினை நுகர்ந்தபாவம், அஞ்ஞான்றே வீரபத்திரன் உங்களை முறை யாற் செற்றும், முடிவு யெய்திற்றில்லை. அப்பாவத்தின் எச்சம், உங் களை இதுகாறும் வருத்திற்று. சண்முகப்பெருமான் கிரவுஞ்சகிரியொடு தாரகனைத் தடிந்தது, உம்மைத் துன்புறுத்தும் சூரனைக்கொல்ல நாட் கொண்ட தன்மையல்லவா? அம்முருகப்பெருமான், அங்கு அமர்ந்தே தன் சத்திவேலை ஏவுவனாயின், கடல்க ளேழும், வரைகள் அளவில்லன வும், உலகனைத்தும் அடங்கிய பல அண்டங்களும் அழிய அவற்றை ஒருகணைப் பொழுதில் அவ்வேல் சங்கரித்து விடும் என்னில், சூரனைத் தொலைப்பது கருதி இவ்விடத்து வருதல் அப்பெருமானுக்கு ஓர் விளை யாட்டாவதன்றி வேறொன்றாகுமோ? நம்மை ஆளாக உடைய அச்சண் முகப் பெருமான் கூறிவிடுத்த செம்மொழியினை, அவுணர்க்கு இறை முன் யான் சென்று வகுத்துரைப்பினும், அதனைப்போகும் ஊழ் எய் திய அப்புல்லியன் பொருளெனக் கொள்ளான். யான் மீண்டு சென்று ஞான நாயகனுக்கு நடந்தது உரைப்பேன். எங்கோன் படையொடு நாளைப்பகலே இங்கு நண்ணி இக்கொடியனை முடிப்பன். சூரன் தொலைந்த பின்னர் உமது சிறைத்துன்பத்தை நீக்குவன். பிறிது யாதும் எண்ணற்க." என்று பலவாறு தேற்றினன். ஜயந்தன், "வெற்றியை யுடைய வீரனே! அடியேம் படும் துயரெல்லாம் கண்டனையன்றோ? இவற்றை என் தந்தைபால் உரைத்தருளுக. அன்றியும் கருணைகொண்டு எங்கள் நிமித்தம் போந்த நின் காரியத்தை முடிக்கப் போகுதி." என்று கூறி சூழ்ந்த தேவர்களோடு அஞ்சலி கரத்தனாய் நின்றான். வெற்றி யினையுடைய வீரபாகுதேவன் விடைகொண்டு, அங்குள்ள தேவர்களை நீங்கிச் சிறைகாப்பாளர் மயக்கந்தெளிந்து எழ அருளி ஏகுதலும், அக்காவல் அவுணர் தெளிந்தெழுந்து, தேவர்குழாத்தொடும் ஜயந் தனைச் சுற்றிப் பண்டைபோல் தடைமுறை யோம்பி இருந்தனர்.

## அவைபுகு படலம்

சிறைக்களத்தை நீத்துச் சென்ற வீரபாகு தேவன், விண் ணூறாக நடந்து, அவுணர்கோன் நகரைச் சூழ்ந்த கிடங்கரை இகந்து, ஐயுதக் கணக்கினுமிக்குள்ள நாலுறுப்புப் படைகளும் சூழ்ந்து, பெருவன்மையிற் காத்தல் செய்யும் நெடுமதில் முன் னர்ச் சென்று, அங்கு வானோங்கியுள்ள கோபுரத்தைக்கண்டு,

கடலை உழுந்தன வாக்கி அங்கையிற்கொண்டு உண்ட அகத்திய முனிவன் கைத்தண்டிஞல் புழைகள் பட்ட மாயைகள் வல்ல கிரவுஞ்ச கிரியை ஒத்துப் பல நிலைகளை யுடையதாய் நின்றது. அன்றியும் சூரன், தான் அரசு செலுத்தும் அண்டங்களனைத்திஜுக்குஞ் செல்லுதற்கு வைத்த ஏணியையும் ஒத்திருக்கின்றது என்று அக்கோபுரத்தினது எல்லையற்ற அழகையும், தொழிற்றிறத்தையும், உயற்சியையும் பலவாக எடுத்து வீரன் கூறினன். அதனை நோக்கிய காலத்து, கதவு இடப்பட்டுள்ள அக்கோபுர வாயிலுள் மிக்க வலிமையுடைய உக்கிரன், மையூரன், முதலாயினோர், நால்வகைச் சேனைகளையும் பதினுயிரக் கணக்கான வெள்ளஞ் சூழ்ந்து நிற்கக் கதத்துடன் காவல் போற்றி இருத்தலைக் கண்டனன். அக்காவலின் வன்மையை நோக்கிய வீரபாகுதேவன், அந்நெடு மதிலைத் தாவிப் பெருஞ் செல்வத்தோடும் அமர்ந்து, அரசுபுரியும் சூரபதுமனது மணிமண்டபத்தினுள் ஊக்கத்தோடு வான் வழியே சென்று, அதன் முன்னுற்ற மேலுயர்ந்துள்ள ஓர் சூளிகையின் மேலே தங்கினன். பின்னர், அவுணர்க் கிறைவனுகிய சூரபன்மன் கடுந் தவம் புரிந்து, அரனிடத்துப் பெற்ற பல வளப்பங்களோடுங் கூடி, அரியாசனத்து அமர்ந்து, யாவரும் தனக்கு இணையின்றி, ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கும் இறைமை பூண்டு ஆணை புரிந்து வருவதைத் தன் விழிகளுக்கு விருந்தாகுமாறு கண்டு, அவன் பின் வருமாறு கூறவாரும்பினன். "முத்தேவர்க்கும் முதன்மைப்பட்ட முக்கண்ணனை நோக்கி தவமியற்றினவர்களுள் சூரபன்மனைப்போல பெருந் திறமையும், பல்பொருளும் படைத்துளார் யாவர்? மெலிந்து தவம் புரிவார்களுள் இவனைப்போல், வேள்வியில் விழுந்து மாய்ந்தவருமில்லை. ஆய்ந்திடின், கறைமிடற்றண்ணல் இவனுக்கு அளித்த வரங்களைப் போலப் பிறருக்கு இதுகாறும் கொடுக்கவில்லை. பெரு வேள்வியிற் பெற்ற இப்பெருந்திருவை இவன் நீடு போற்றுது, அழிய விடுவது தீய ஊழின் பயனன்றோ?" பிறகு அவன் அச்சூளிகையின் மீதிருந்து, சூரபதுமனது அரசவைக்குச் செல்லக் கருதி, உதயகிரியின் மேலிவர்ந்து செல்லும் இளம்பரிதி போலக் குமாரக் கடவுளின் திருவடிகளை மனத்தில் நினைத்து, மேலெழுந்து, வலிய வாட்படையை யுடைய அவுணர்கோன் அரசு வீற்றிருக்கும் பொன்

ஞலாகிய ஆஸ்தான மணிமண்டபத்திடைப் புகுந்தான். புகுந்த வீர பாகு தேவன், எல்லையற்ற பெருந்திருவோடு அரசு வீற்றிருக்கும் சூரபன்மனும், அவன் அவைக்களத் துள்ளோருங் காணும் பொருட்டுத் தனது பழைய உருவங்கொண்டு திகழ்ந்து, மேருமலையை வில்லாகவுடைய பரம்பொருள் தந்த குமரன் அனுப்பிய தூதன் தான் என்று கூறினன். பின்னர் அவ்வவுணன் அரியாசனத்தின் கீழ் நிற்பின் அவ்வெற்றிவேற் பெருமானது பெருமைக்கு இழிவாம் என்றும், அவன் அமர்ந்துள்ள அரியணையின் ஓர் பக்கம் தான் ஏறி அமர்தல் இழிவெனவும் எண்ணிக் குமரவேளைத் தியானித்தனன். உடனே அச்சண்முகப் பெருமான் திருவருளால், இருள் நிரம்பிய நிசியில் அனேக பரிதிகளின் தொகை போந்தவாறொத்து, அங்குள்ள அளவிடற்கரிய ஒளியனைத்தும் மழுங்கும்படி, விண்ணினின்று மணிகள் பதித்த ஒரு மடங்கலாதனம், சூரனிருந்த சிங்காதனத்திற் கெதிரே இறங்கி இருந்தது. அவ்வாதனத்தைக் கண்ட வீரபாகுதேவன் அது சண்முகப் பெருமான் திருவருளால் வந்தது என்றெண்ணி, அவனடி வழுத்தி அதன் மீதிருந்தான்.

அவ் வீரபாகு தேவன் அரியணையின் மிசை அமர்ந்த தோற்றம், பரிதி மண்டலத்து இடையே விளங்கும் பரமன் தோற்றத்தை யொத்திருந்தது. அவ்வாறு அம்மணியாசனத்தின் மீது வீரபாகு தேவன் மனமகிழ்ச்சியும் வீரமு முடையனுப் இருத்தலைக் கண்ட, அவ்வரசவையின் கண்ணுள்ளார் சிலர் வியந்து, "மன்னர் மன்னனாகிய சூரபன்மன் முன்னர் இத்தவிசின்கண் அமர்ந்துள்ளவன் மிக்க வீரனே கொல்! இவன் கருத்தை அறியோம், இவனை இதுகாறும் கண்டோமில்லை. நமது கூட்டத்தைக் கடந்து, அரசன் மாட்டு இவன் சென்றது எவ்வாறு?" என்று கூறினர்கள். சிலர், "ஜனப்பெருக்கில் நம்மையெல்லாந் தப்பித் தனித்த இவன் உட்புகுந்தானெனினும், இவ்வற்புதமான ஆசனம் இவ்விடம் எவ்வாறு வந்தது." என்றனர். சிலர், "பகைவனாகிய ஒருவனைத் தடைசெய்து கொல்லாமல், உட்புக விட்டோம் என்று, அரசர் பெருமான் நம்மைச் சீறு முன்னரே, நாம் அனைவரும் அவனைச் சூழ்ந்து, பற்றிக் கொல்லுவோம்." என்றனர். இன்னும் சிலர், "அழிவில்லா யாக்கையினையுடைய அவுணர்கோன் முன்னர், களிப்புடைய மனத்துடன் கடிதிற் போந்த

வன். பெரு மாயைகள் கற்றவன். இவன் உங்களுக்கு எளியனோ?" என்பார்கள். இவ்வாறு அச்சபைத்தின் கண்ணுள்ளார் அனைவரும் தங்கள் தங்களுக்குத் தோன்றியவாறு பேசிக் கொண்டிருந்தனர். வீரபாகுதேவன், அரிமாசுமந்த தவிசின்மிசை சூரபன்மன் எவ்வளவு சிறப்புடன் வீற்றிருந்தனனோ, அவ்வளவு சிறப்புடன் வீற்றிருந்தான்.

பேரறிவுடைய வீரபாகுதேவன் ஆசனத்து வீற்றிருந்ததை நோக்கிய அவுணர்கோமான், பற்களைக்கடித்து, உறுமி நகைத்து, மெய்வியர்க்கவும், கண்கள் பொறி செரிந்திடவும், கூறுவான்:—"சுற்றம் நீங்கி, இலையுணவுண்டு, விலங்கெனத்திரிந்து, வற்றல் மாமரக் காட்டிடை இருந்து, உடல் வருந்துகின்ற சிற்றுணர்ச்சியினை உடையார் கற்கும் சித்தியின் இயல்பைச் சிறியோய் நீ என்முன் காட்டினாய். சடை நீட்டியுள்ள யோகிக ளன்றி, நம் வலிக்குத்தொலைந்து, மறைந்துறையும் தேவர்களும் இத்தொழில் வல்லார். ஆயினும் அவர்கள் அத்திறத்தை நம் முன் காட்ட அஞ்சுவார்கள். நீயோ அதனை உன் எல்லையிற் காட்டாது, நம்முன் வந்து அஞ்சாது காட்டினாய். நீ பித்தன்போலும்? இன்னுங் கூறப்புகின், இந்நகரின்கண் உள்ள மகளிரும் உன்னைப்போல் எளிதில் செய்வர். இன்னும் ஊனடையாக் கருவிலுள்ள குழவியும் அதைச் செய்யும். அதனால் நீ நம்முன் புரிந்த இவ்வாடல் அரிதன்று. என்னை மதியாது, எதிரில் இருந்த நின்னை என் வாட்படைக்கு இரையாக்குவேன். ஆனால், நீ வந்த காரியத்தை முற்றுமுணரக் கருதினேன். ஆதலின், நின்னைவிட்டு உன்னுயிரைப் பரிசாக அளித்துள்ளேன். மக பதி என் ஆணையை அஞ்சி, மனைவியோடும் மறைந்தோடினான். மற்றையோர் இதை மதியார். திருமால் இது நினைக்கிலன், மறைகளின் கிழவன் ஆசிகூறியே திரிவான். அவர்கட்கெல்லாம் ஆதியாகிய அவ்வீசன் என்னிடைச் சார்கிலன். மற்று நீயார்?"

தீயனாகிய சூரபன்மன், அவ்வாறு கூறலும், வீரபாகுதேவன் தன் மெய்யின் கண் வியர்வு தோன்றக், கனன்று, "வலியற்ற மாயை புரிவோர் போன்று என்னை மதித்தாய். உன் சிற்றறிவுக்கு நான் மெச்சினேன். இஃதன்றி உனக்கு ஓர் உறுதி கூறும் பொருட்டு எய்தினேன். கேட்கக் கடவாய். அமரர்கோன் குறையையும், அயனை முதலிட்ட

அமரர் தம் புன்மையையும், வருந்தும் வானவர் சிறையையும் நீக்கி, அவர்களுடைய பழைய தலைமையை உதவுதல் எண்ணி, அருள் கூர்ந்து, செந்திமா நகரின்கண் எழுந்தருளி இருக்கும் அறுமுகப் பெருமான் என்னை அனுப்பினன். அப்பெருமானது சேனைத் தலைவராயுள்ளவர்கள் இலக்கத் தொன்பதின்மர். அவருள் யான் ஒருவன். நந்தி கணத்தினேன் பலரும் புகழும் திறலமைந்த வீரபாகு வென்னும் பெயரினேன் நின் இளவலாகிய தாரகனையும், கிரவுஞ்சமென்னுங் கிரியையும் ஒருகணப் பொழுதிற்குள் அழித்த வேற்படையை யுடைய சண்முகப் பெருமான், சூரனெனப்படும் உன்னிடத்து அருட்திறத்தினால், என்னைத் தூதாக விடுத்தனன்." என்று மொழிந்தான். கொடுங்கோன்மையினையுடைய சூரபன்மன்,"நம்மிடத்து அவன் நின்னைவிடுத்த செயலென்னை? அதனை விளம்புவாய்." என்ன, வீரன் எடுத்துரைப்பான்:—

" இந்திரன் சசியொடு சேணினீங்கி, மறைந்துறைபவும், அவன் மைந்தன் அமரரோடு சிறையில் வருந்தவும் செய்து, அவனது நகரைத் தீக்கிரையாக்கியும், இடுக்கண் புரிகின்ற நின்னை அடுதல் வேண்டி, அவ்வமரர் வேண்டுகோளினால் செந்திமாநகரை அடைந்த எம்பிரான், உன்னிடத்துள்ள கருணையினால் சிலமொழிகள் சொல்லி என்னைத் தூண்டினன். அவையாவன, நிறைந்த இந்துவை அரா கவர்தல்போல நிகளச் சிறையிலிட்டு அமரரை வருத்தி, அவர் செய்யும் வேதவொழுக்கத்தையும் நீக்கினாய். உலகினையாளும் மன்னர்தம் அறமும் அன்று, இது வீரர்தம் செய்கையும் அன்று. பிதாவாகவுள்ளவன் காசிபமுனிவன். அவனுக்கு மைந்தனாகிய நீர், அமரரைச் சிறைசெய்வது அழகோ? வேத ஒழுக்கமும் தவறிச் சிறுபொருள் வெஃகினாய். நீதியால் உலகளிப்பதன்றோ அரசர்தம் நெறி? வலிய தோளையுடைய ஜலந்தராசுரன், அந்தகாசுரன், முப்புராதியர் ஆகிய இவர்கள் கடவுளரினத்தை வருத்தியதாலன்றோ மாய்ந்தொழிந்தனர்? அவ்வாறிருக்க, உம்பரை வாட்டுதல் உனக்குத் தகுதியோ? செம்மை நீங்கிக் கொலை களவு முதலிய வற்றாற் செம்மையாளரைச் சீறித் துன்புறுத்துந் தீயோர் தம்மால் ஆற்றற்கரிய பழிசுமந்து, தங்கிளைஞரோடும் இம்மையில் அழிவர். அஃதேயன்றி, எழுமையும் துயர்க்கடலுள் அழுந்துவர். நன்மை தீமைகளைச் செவ்வுன் உணர்ந்தவர், மற்றவர்க்கு அவற்றைச் செய்வராயின், அவை

விரைவில் தம் இடத்திலேயே வந்தெய்தும். பேதையே! அமரரைச் சிறை செய்தவாற்றால், பெருந்துயரன்றி, இறுதியும் எய்தும். அண்டர் தம் ஆற்றலைத் தொலைத்த தாரகனைச் செற்ற செவ்வேல் இருந்தது விடுப்பனேல், உன்னையுங் கண்டதுண்டங்கள் ஆக்கும். அறத்தாறு நினைந்து, விரைவிற் றண்டம் புரியாது, இதுகாறும் நீட்டித்தேன். கெடுதலில்லாத தேவரைச் சிறையிலிட்டாய். இப்பொழுது விடுதல் செய்வையாயின், நீ உய்தல் கூடும். அன்றி, மறுப்பையாயின் விரைவில் அழிவாய். அளவிறந்த ஆண்டுகள் நோற்று, அரும்பெரு வேள்வியை யாற்றி, அத்தீயிடை மூழ்கிய நினக்கு, எந்தை முன்னளித்த அழியாத ஆயுளையும், பெருந்திருவையும், இதுபோழ்து சிறுதொழிலியற்றிப் போக விடுதல் இயல்போ? ஆகலான், அசைவற்ற பெருவளத்தோடு, நீயும் உன்தமரும் உய்ய வேண்டின், அமரர் சிறையினை விடுத்து, அறத்தொடு வாழ்வாயாக. இல்லையேல், அறுமுகப் பெருமான் இங்கு வந்து உன்னை அழித்தல் திண்ணம். இவையாவையும் குன்றெறிந்த குமரவேள் உன்றனக்கு உரையென்றெனை விடுத்தான். ஆதலின், தேவர் சிறையை விட்டு, அறநெறியால் இப் பெருவளத்தை நெடிது காலம் துய்ப்பாயாக.''

வயத்தினையுடைய வீரபாகு உரைத்த சொற்களைக் கேட்டலும், வெகுண்டனனாகிக், கண்களிற் பொறியுமிழப், புகையோடு உயிர்த்து, கையெறிந்து, நெடுஞ்சிரிப்பினோடும், சூரன் கூறுவான்:— "மேலாகிய ஆயிரத்தெட்டு அண்டமும் வென்று, தகுதியோடும் தனித் தரசியற்றும் எனக்கு, அழகிய எயிறு தோன்றாத பாலனோ இத் தன்மையாகிய புத்திகள் பகர்வது? வெற்றி வாய்ந்த அவுணர்கள் வலியற்றவர். மிக்க வறுமையினையுடைய தேவர்கள் மேலானவர்கள். மழலையினையுடைய சிறுவர் பேரரசருக்கு அமைச்சர். ஆயின், இக் கடல் சூழ்ந்த உலகின் இயற்கை நன்றாயிருந்தது. வெற்றிமாலையும், முடியுமுடைய அவுணர்தங் குலத்தினை நலிவு செய்து, வறுமைப் படுத்தினரன்றோ அவ்விண்ணவர்? ஆனது பற்றி, அவர் திருவைப் பறித்துக் குற்றேவல் கொண்டு, ஒழுக்க மழித்துச் சிறையகத்து உய்த்து, எம்முன்னோர் முறைமை இயற்றினேன். நெடியோன் மகனாகிய பிரமன் உறங்குகின்ற காலத்து, கடல்கள் அணை கடந்து, உலகங்களை அழிவு செய்யும் அவ்விறுதிக் காலத்தும்,

இவ்வமரர் சிறையை விடுவேனல்லேன். அழிவெய்தாத விண்மேலுள்ள அண்டத்து உச்சியிற் கொண்டுபோய், இச்சிறையை வைப்பேன் ஒப்பற்ற சூரனென்று கூறும் பெரும் பெயர் படைத்துள்ளேன் தப்பியோடிய இந்திரனையும் பிடித்து வந்து சிறை செய்ய உன்னிய யான் கைப்பட்ட இச்சிறையை விடுவனோ? ஒரு போதும் விடேன். எனக்கு அழிவெய்தாத வச்சிர யாக்கையும், வேறாகிய பல வரங்களும் முன்னொரு காலத்து என் தாதை எனக்களித்திட்ட முறையைப் பின்னர்த் துடைப்பவர் யாவர்? பெரும்போர் செய்து, என்னை வென்றிடும் தன்மையோர் யாவர்? தாரகனைக் கொன்ற வேற்படை யுடையானிடத்துப் பூசல் புரியப் புறப்பட்டேன். அச்சிறுவனிடத்து நான் போருக்கெழுதல் தகாதென்று தடுத்தனர். ஆதலால் ஒழிந்தேன். தாரகனையும், கிரவுஞ்சகிரியையும் அட்ட விஷயத்தை நேற்றையதினமே அறிந்தேன். என்பால் உள்ளோரை அப்பாலன் மேல் விடுத்து, என் பக்கலில் உள்ள பழியையும் போக்குகின்றேன். நாளை அதனைக் காண்பாயாக. எண்ணிலராகிய அரிகள், இந்திரர், சூரர்கள் ஆகிய இவர்கள் அண்டங்கள் தோறும் இருந்தனர். அன்னோர் என் முன் போருக் காற்றலராகிப் பணிந்து போயினர். அவ்வாறிருக்க, சிவன் கண்ணகத்து நெருதல் வந்த சிறுவனோ என்னெதிர் நிற்கற்பாலன்? பற்பலவாற்றால் உரைத்துப் பயனுவதென்? அமரரை விடேன். உணர்ச்சியொன்றும் வாராத பிள்ளையின் புன்மொழி கொண்டு, நீ பேதையாதலின், ஒற்றென இங்கு வந்தாய். பிழைத்துப் போவாய், உன்னுயிர் உனக்குத் தந்தேன்." அவன் மாற்றங்கேட்ட பெரியான், பெருஞ் சினத்தோடு விழியில் தீ சொரிய, "உய்யும்வகை அறியாது உழலும் அறிவிலியே! கேட்பாயாக. கங்காதரனும், பாம்பணியோனுமாகிய பரம்பொருளின் விழியிடைப்போந்த ஐயன் மேன்மையை உணராது, பாலனென்று கூறினை. மனிதரைத் தேவரென்றும், தேவரைத் தொழிலியற்றுவோரென்றும், அம்மூவருள் இருவரையும் பரம்பொருள் இவரென்றும், உலகினர் நவில்வார். அவ்வாறாகிய சொற்கள் உபசாரமேயன்றி, உண்மையுடையனவல்ல. அத்தகைய அற்ப புகழ்ச்சிபோல் கொள்ளற்க. அறிவுடையார் தியானிப்பதும், யாவர்க்கும் எட்டாததும், வீடுபேறு அருளுவதும், உபநிடதங்களின் உண்மைப் பொருளாக உள்ளதும், ஆகிய ஒருவனைக் கேட்பாயாக. மால்,

அயன் அறியா அப்பரஞ்சுடர், விண்ணவர்க் கிறையாய அப்பண்ணவன் விழிபகத்து நின்றருளினன். மதலையுருக்கொண்டு உதித்தனன். முன்னவர்க்கு முன்னுவோன். தன்னேரிலாத் தகைமை சான்றவன். ஈசன் என்னும் பெயர் படைத்தவன். உயிர்தொறு நிறைபவன். அருவம், உருவம், அருவுருவம் ஆகிய மூன்றையும் உடையோன். எவர்க்கும் அன்னைபத்தனுய் இருப்பவன். பரம்பொருள் அவன் காண்.

"ஈசனேயவ னுடலான் மதலையா யினன்கா
ணுசி லாவவ னறுமுகத் துண்மையா லறிநீ
பேசி லாங்கவன் பரனெடு பேதக னல்லன்
றேசு லாவகன் மணியிடைக் கதிர்வரு திறம்போல்."

"பூத மைந்தனுட் கீழ்நிலைத் தாகிய புவியு
ளோது கின்றபல் லண்டத்தி னொராயிரத் தெட்டுங்
கோதி லாக்கமும் படைகளு முனக்குமுன் கொடுத்த
வாதி யீசனே யாவனெனின் மாற்றுவ தரிதோ."

அவ்வாறிருக்க, புவியின் அண்டங்கள் பெற்றனமென்று அறிவிலா வகையால் உன்னை மதித்தனை. அவனிடத்துச் சிறிதருள் பெறுவோர் புவிப் பகுதியே யன்றி, ஐம்பூத சம்பந்தமானவும், ஏனைய திறத்தும் புறத்துமீது மாய அண்டங்களனைத்திற்கும் அரசராகுவர். அன்றியும், மறைகளுக் காதியாகிய பிரணவமும், பொறியைந்தும், வேதமனைத்தும், தந்திரப் பகுதியும், வேறாகிய கலைகளும், அவற்றின் பேதமாகிய யாவும் ஒப்பற்ற குமாரக்கடவுளின் திருவுருவேயாம்.

உண்மை இவ்வாறிருக்க, ஈசன் அன்று தந்த வரமும், உரமும் மாற்றும் ஆற்றலுடையார் யாவர் என்று மயங்கி எண்ணிப் பெருமிதங் கொண்டுளாய். நின்னுல் ஆளப்படும் அண்டங்களும், ஏனைய எண்ணிறந்த அண்டங்களும் அவன் திருமேனியிலுள்ள உரோமத்தில் இருந்து உதித்து இறுதிக் காலத்தில் அதன்கண் ஒடுங்கும். அப்பெருமான் திருவுருவத்தை எவரே காணவல்லார்? அருளினல் தேவர் காண முன்னொரு பகலில் காட்டியருளினன். நீ அளவற்ற பாவத்தினையுடையை. ஆதலினுல் காணவில்லை. அன்று கந்தவேள் அமைந்த பேருருவத்தில் பொருந்திய ஒரு உரோமத்தில் கிடந்ததற்கு நேராகுமோ உன்னுடைய ஆயிரத்தெட்டெனும் அண்டத்தொகை? இன்று நீ யறியாமையால் சிறுவனென் றிகழ்ந்தாய். குற்ற

முடைய மனத்தாய்! கற்றிலாச் சிறியோய்! போ. போ. இவ்வொரு தப்பிதத்தையும் பொறுத்தேன். ஐயனை இகழ்ந்த நின் நாவினைத் துணித்து,. உன்னுயிரினைப் போக்குவேன். என்னை விடுத்த ஐயன் ஆணை அஃதன்றாதலின், உன்னுயிரளித்தேன். பின்னர்ச் சிறிவரும் வெற்றிவேற்கு இரையாகும் தீயோய்! இவையனைத்தும் குன்ற மெறிந்த செவ்வேளின் கொள்கை." என்றுரைத்தான்.

அம்மொழி கேட்ட புன்தொழிலுடைய சூரபன்மன், ஆற்ற வுஞ் சிற்றமடைந்து, உரைப்பான்:—"கூரிய எயிறு தோன்றாத சிறுவன் உய்த்த தூதெனை நினைந்து, உனதுயிர் விடுத்தேன். அவ்வாறாகியும் இவ்விடம் விட்டுப் பெயர்ந்தாயில்லை. அவனது பெருமையை மீண்டும் மீண்டும் மொழிகின்றாய். குதலைச் சொல்லுடைய அச்சிறுவன் எவ்வெவர்க்கும் முதல்வனே எனினு மாகுக. அன்னவனை, அண்ட நிலைதோறும் உள்ள அமரரை வென்ற யான் அஞ்சுவனோ? சேண்புரத்துற்ற தேவர்தஞ் சிறையை வீண்படேழியும் கனவினும் விடுக்க நினையேன். என்னெதிரிருந்து இறுமாந்து, பலவற்றைக் கூறினாய். அவற்றை ஒரு கணப்பொழுதில் யான் அறிவேன்." என்று மொழிந்து, மருங்கிலுள்ள வீரர்களில் ஆயிரவரை நோக்கி, "தூதன் உயிரைப் போக்குதல் பழியாம் ஆகலான், இவனை விரைவில் பற்றிச் சிறையிடுங்கள்." என்றான். உடனே அவ்வாயிர வீரரும் எதிர்த்து வந்து எரிவிழித்து, அனலைப் புகை சூழ்வது போன்று, தருக்குடையராய் அணையினை மீதமர்ந்த வீரபாகுதேவனை பற்ற வளைந்தார் வலியினையுடைய அவ்வீரர் ஆயிரவருஞ் சூழ்ந்து நெருங்கலும், வீரன் அவ்வாசனம் விட்டெழுந்து அன்னோர் முடிச்சிகையைக் கூட்டி ஒருகரத்தாற் பற்றி, அச்சூரன் அரசவையின் தரையில் மோதி, அவர் ஆவி முழுதும் உண்டு, அப்பிணக் குவியலைச் சூரன் முன்குவித்து, அவனை நோக்கி, "எந்தையாகிய குமரவேளின் வேற்படை இனி உன்னை முடிப்பது திண்ணம். நீ முடிவதற்கு முன்னர் ஐம்புலன்களும், விரும்பவந்த பல பொருளையும் விரைவில் நுகர்ந்து, மனந்தெளிந்து அமருவாய். யான் போய்வருவேன்." என்று மொழிந்து, அவ்விடம் விட்டு அகன்றான். உடனே அவன் வீற்றிருந்த அரியணையும் மேலே எழுந்து, ஆகாய மார்க்கமாய் ஏகி, மாயை என மறைந்தது

இவ்வாறு சூரபன்மன் ஏவிய ஆயிரவர் உயிரையும் அவனெதிரே போக்கிப் புறம்போந்த வீரபாகுதேவன்மேல் சதமுகன் என்னும் வீரனை ஏவ, அவ்வீரன் இலக்கம் வீரர்களுடன் வீரபாகுவைப் பின் றொடர்ந்து சென்று, "அடா வீரனே! எங்ஙனே செல்லுகின்றாய்? எம் மிறைவன் அவைக்களத்து அச்சமின்றி நுழைந்து, சிலரைக்கொன்ற நீ தூதனுகையால், உன்னைக் கொல்லாவிடினும், பிடித்து மீளாச்சிறைப் படுத்தவன், நில்லடா!" என்று கூறி நெருங்கினன். வீரபாகுதேவன், அவனை நடுவன் பதிக்குச் செலுத்திய செல்லல் வேண்டுமென்று கருதி, எதிர்த்து நிற்றலும், படைவீரராகிய இலக்கத்தவரும் வில்லால் வெஞ்சரந் தொடுத்தும், வேற்படை விடுத்தும், நேமிகள் உருட்டியும், கப்பணஞ் சிதறியும், முத்தலைப்படை ஓச்சியும், மழுக்கொடு எறிந்தும், பலவாறாக வீரனை வளைந்து கடும்போர் தொடங்கலும், அவ்வாயுதங்க ளெல்லாம் வீரன் மேனியிற்பட்டுத் துகளாயின

வீரபாகுதேவன் அவ்வசுரரைப் பார்த்துச் சினந்து, இருபதினுயிர மென்னும் கணக்குள்ள சிகரங்களைக் கொண்ட ஓர் சூளிகையைப் பறித்து, அவர்மீது எறிந்து, அவ்வசுரத் தொகுதியடங்கலும் கொன்று நின் றான். தனித்து நின்று கலங்கிப் பின் தெளிவடைந்த சதமுகன், இருப் புலக்கை, சூலம், வேல் முதலியனகொண்டு போர்புரிய, அவனைவீரபாகு தேவன் தன் தோளாற்றலான் கீழேதள்ளி, மார்பிடைத் தன் காலால் ஊன்றி, மார்பம் விடேரென்று பிளவுபடச்செய்து, அவனுயிருண் டான். அதன் பின் அவன் கடுஞ்சினம் கொண்டு, அறுமுகப் பெருமான் கூறிவிடுத்த மாற்றத்தைஇகழ்ந்த அச்சூரனது அத்தாணி மண்டபத்தை முதலில் அழித்து, அதன்பின்னர் அந்நகரையும் அழிக்கவேண்டும் என்று சிந்தை செய்தான். சிந்தித்த வீரபாகுதேவன், படியளந்த திருமா லைப்போல நெடிய உருவங்கொண்டு, விண்ணினைத் தொட்ட சென்னிய னகி, எண்டிசையுங் காண நின்ற ஓர் தோற்றம், முருகப்பெருமான் ஆணைகாட்டி நிறுத்திய வெற்றித் தம்பம் போலிருந்தது. அப்பேரு ருவத்தைக் கண்ட மகேந்திர புரியில் உள்ளவர் அதிசயங் கொண்டனர். அவ்வத்தாணி மண்டபத்திலுள்ள காவலாளர் வீரனைக் கண்டஞ்சினராய் "இவன் யாவன் கொல்! இவனேடு போர் புரியாது வாளா இருப்போமாயின், நம்மை அரசன் முனிந்து தண்டிப்பான். ஆதலின், இவனை எதிர்த்துப் போர் புரிதல் வேண்டும்," என்று வீர

பாகுவை வளைந்து, கதை, தோமரம் முதலிய ஆயுதங்களால் வீரன் மேனியைப் புண்படுத்தலும், அவ்வீரவாகு பெருஞ்சினமடைந்து, "இவர்களைச் சம்மாக எதிர்த்து நின்று போர் புரிதல் தக்கதன்று. இவர்களோ அற்பர்கள்." என்றெண்ணித் தன் கால்களால் மிதித்தும், படுத்தும், புதைத்தும், உரித்தும், சிரத்தினை நெரித்தும், திறற்புயங்களை இறுத்தும், கரத்தை முரித்தும், களத்தைத் திரித்தும், சிலரை எடுத்துச் சுழற்றி எறிந்தும், சிலரைப் புயத்திறுற் புடைத்திடித்தும், சிலரைப் பிடித்துப் பிசைந்து பிழிந்தும், சிலரை அடிகளால் அத்தரையில் தேய்த்தும், மற்றும் பல உருவெடுத்துத் தனித்தனித் தொடர்ந்து, காற்றெனச் சுழன்று, வளைந்து, கிளர்ந்து, வீரபாகு ஒருவனே அவ் வைம்பது வெள்ளஞ் சேனைகளையும் பிணக்குவியலாக்கினன்.

ஐம்பது வெள்ளம் அவுணரைக் கொன்ற வீரபாகு தேவன், ஐஞ்ஞூறு யோசனை அளவு பரந்து ஓராயிர யோசனை அளவு உயர்ந்து, இலக்கஞ் சிகரங்களோடுந் திகழும் மேருகிரியினை யொத்தச் சூளிகையொன்றனைக்கண்டு, அதனருகே சென்று, அதனைப் பறித்துச் சூரபன்மன் அரசு வீற்றிருக்கும் அவைக்களத்தின் மேல் வீசி ஆர்த்தான். அவ் வைரமானது அவனது ஆர்ப்பொலிக்கு முன்னரே ஏகி, அத்தாணி மண்டபத்திற் சூரனும் அவன் மைந்தரும் மற்றைச் சிலரும் வைகுமிடந் தவிர, மற்றைய இடத்தை யெல்லாம் அழிவு செய்தது. புட்கள் செறிந்த சோலையில் இடிவிழுந்தாற்போல அவ்வைரம் விழுதலும், அவ்வவைக் களத்துள்ளவரில் இறந்தவரொழிய எஞ்சியவர் இரிந்தோடி விட்டனர். சூரன் மனந்திகைத்து மருங்கினின்ற ஆயிரம் புயங்களும் ஐஞ்ஞூறு சிரங்களுமுடைய வீரர் ஆயிரவரை நோக்கி, இடியைப்போலார்த்து, "கட்புலனுக்கெட்டாது உயர்ந்துள்ள சூளிகையைப் பறித்தெறிந்து, நமது பசும் பொன்னாலாகிய அரசிருக்கை மணி மண்டபத்தை அழித்து, நகரினையும் அழிக்கத் தொடங்கிய அத்தூதுவனை உயிரோடு பற்றிக்கொண்டு வாருங்கள்." என்றான். அவர்கள் அவ்வாணை தாங்கி வீரபாகுதேவனை அடைதற்கு முன்னர் வீரபாகுதேவன், அந்நகரின்கண் உள்ள கோபுரம், மண்டபம், சோலை முதலிய யாவையும் அழித்துத் தரையாக்கி விட்டனன். வீரமகேந்திர புரத்துள்ளார் அழும்பேரொலி, எழுகடலோதையை ஒத்திருந்தது. சூரபன்மனால் ஏவப்பட்ட சகத்திரவாகுகள வீரபாகுதேவனை அணு

இப் பலவித ஆயுதங்களைக்கொண்டு போர்புரிதலும், வீரன் சினந்து, ஓர் மராமரத்தினால் அவர்களைப் புடைத்து, அவராவியை நமனுலகில் செலுத்தித் தனிமையாய் நின்றான்.

சகத்திரவாகுகள் இறந்ததும், தூதுவர் சூரபன்மனிடத்தில் விரைந்து சென்று, "நின்படைத் தொகையினர் ஆயிரவரும் சில போரி யற்றிப் பின்னர் அத்தூதுவன் கைக்கொண்ட ஓர் பர்தவத்தினால் மாண்டொழிந்தனர்." என்று கூறினார்கள். அம்மொழி கேட்ட சூரன், வடவை அனலெனப் பொங்கித் தருக்கழிந்து, திறலுங் குறைந்து, "உமைமகன் சிறுவன் அனுப்பிய ஓர் தூதுவன் நம்முன் வந்து அவமதித்து, அமரில் யாவரையும் அட்டு நின்று, இன்னமும் அகலாது, அழிவு படுத்தலாயினன். நமது அரசாட்சி நன்று, நன்று!" என்று நகைத்தனன். அவனது கோபத்தை அறிந்த அவன் புதல்வனாகிய பத்துச்சிரமும் இருபது புயமும் உடைய வச்சிரவாகு என்பவன் அவனடி வணங்கி, "எளிய தூதுவன் நிமித்தமாய்த் தேவரீர் வருந்துவது தகுதியோ? தாங்கள் இனிதிருப்பின் யான் போய் அவனைப் பிடித்துக்கொண்டு வருவேன்." என்று கூறினான். அவன் மொழியைக்கேட்ட சூரபன்மன் அவனை அவ்வாறே செய்யும்படி கூறினான். உடனே வச்சிரவாகு போர்க்கோலங்கொண்டு, போர்த்தொழில் வல்ல படைகளோடும் புறப்பட்டு, வீரபாகு நின்ற களத்தினை யடைந்தான். அவனைக் கண்ட வீரபாகுதேவன், "இவன் சூரன் மைந்தருள் ஒருவன் போலும்! ஆயினும் இவனைக் கொல்லுதல் பெரிதோ?" என்று ஆர்த்து நின்றனன். உடனே வச்சிரவாகுவின் படைகள் அவனைச் சூழ்ந்து போர்புரிகையில், அவர்களை வீரன் ஓர் நொடிப்பொழுதில் பாழ்ப் படுத்தினான்.

அதுபொழுது வச்சிரவாகு வீரம் பேசி வில்லை வளைத்து, ஆயிரம் ஆயிரமாகக் கணைகளைச் செலுத்தினான். வீரபாகுதேவன் அவற்றை யெல்லாம் நொடியில் பொடியாக்கினான். அதன் பின்னர் வச்சிரவாகு அவன் மேனியில் மற்றும் ஆயிரக் கணக்கான அம்புகள் எய்து, அவனைப் புண்படுத்தி வருந்தினான். வருந்திநின்ற வீரபாகுதேவன், முன்னின்ற வச்சிரவாகுவின் தேரைத் தன் காலால் உதைத்துப், பரியையும் பாகனையும் கொன்றனன். பிறகு வச்சிரவாகு வேறோர் தேரிலேறிவந்து, போர்புரிந்தான். வீரபாகுதேவன் அத்தேரோடு அவனை விண்மீதில

எடுத்தெறிந்து, அவன் வீழ்வதன்முன் அவனுக்குத் துணையாயுள்ள மற்றைய தேர் முதலியவைகளை அழித்தனன். விண்ணின்று வீழ்ந்த வச்சிரவாகு ஓர் வாளினை ஏந்தி வருதலும், வீரன் தன்னுடைய கூரிய வாளை யுருவி அவன் சென்னி ஈரைந்தையும் அறுத்துத் தள்ளினன். அப்பொழுதே அவனைச் சூழ்ந்த அவுணர்கள் திசையெங்கும் வெருவி ஓடினர்கள். பரிதியும் மேற்குக் கடலில் அஸ்தமித்தான்.

திறலுடைய சூரன் மகன் வச்சிரவாகு மாண்டதும், போர் இயற்ற வீரரின்மையும், பரிதி மறைந்ததும் ஆகியவற்றைக் கண்ட வீரவாகுதேவன், "யாவரும் ஏத்தத்தகுந்த கந்தவேளது திருவடியின் பிரிவும், இங்குச் சிறையகத்தமைந்த தேவரின் துயரமும் நீங்க, விரைவிற் போவதே தகுதி." என்று தனக்குள் எண்ணிப் பின்னர் அப்பகைவர் பட்ட நிலத்தினின்றும் நீங்கிக் காற்றும், கனலும், காலனும் கூற்றும் என்னும்படி அத்தெருவிடைப்போயினன். அவ்வீரனைக்கண்ட அவுணர், அச்சமுடையவர்களாய், "இவன் மறலி. இவனைக் குறுகாதீர்." என்று கூறி, ஓடினர்கள். இவ்வாறாக, அம் மகேந்திரபுரியை நீங்கி, விண்மேலெழுந்து, அறுமுகனைத் துதித்து, வடக்கிலுள்ள இலங்கையை எய்திய காலத்து, அத்திசையின்கண் காவல் புரிந்திருந்த யாளிமுக னென்னும் அவுணன், தன் சேனைத் தொகுதியோடும் வீரவாகுவை எதிர்த்துப் போர் புரிந்தான். வீரவாகுதேவன் அவ் வசுரப்படை யனைத்தையும் வாளாற்றடிந்து, எஞ்சிநின்ற யாளிமுகன் வீரத்தைக் கண்டு, அவன் கரத்தின் தொகையைத் துணித்து, ஆயிரக் கணக்கான அவன் சிரங்களையும் அறுத்து வீழ்த்தினன்

## வீரபாகு மீட்சிப் படலம்

இன்ன பான்மையினால் யாளிமாமுகனைச் சங்கரித்த வீரபாகு தேவன், தனது வாளை யுறையிற் புகுத்தி, இந்திர வளப்பம் நிறைந்த இலங்கையை நீங்கிக் கடலைத் தாவி, அழகிய கந்தமாதன கிரியை அணித்தாகவுடைய திருச்செந்தூரை யடைந்தான். அவன் அங்குப் புகுந்த காலையில், பூதகணங்கள், மதியைக் கண்ட கடல்போல் ஆரவாரித்துச் சூழ்ந்தன. அப்பூத கணங்களின் தலைவன் வந்து, கரங் குவித்து வீரபாகுதேவனைத் தழுவிக்கொண்டு அன்பு பாராட்டினன். தழுவிய தலைவனை வீரபாகும் தழுவி, "இழிஞர் வாழும் ஊரினை யான் எய்திய பாவம் உன்னைக் கண்ட சிறப்பினால் நீங்கிற்று." என்று,

பேரன்புடன் முகமன் கூறினன். பெருந் திறலுடைய வீரபாகுவை இலக்கத் தெண்மரும் வந்து, கைகுவித்து நிற்க, வீரன் அவர்களைத் தழுவி அவரது துன்பத்தை நீக்கிப், பின்னர் அக்குழுவினேடும், திருமால், அயன், அரி முதலிய தேவர்கள் சூழ வீற்றிருக்கும் அமல நாயகன் சந்நிதியை யடைந்தனன். அப்போது வீரனுக்கு உள்ளமும், என்புமுருகிற்று. தூய நீர் வெள்ளம் கண்களினின்றும் பெருகிற்று. பின்னர் அவன் அறுமுகன் திருவடியைப் பேரன்புடன் வணங்கி நின்றன். அன்பின் நிறைவால் வணங்கி நின்ற வீரபாகுவைக் கண்ணுற்ற குமாரக் கடவுள், "சூரனிடத்துத் தூதாகச் சென்று, எமது மொழியினை நீ விளம்பியபோது அதற்கு அவன் கூறியவற்றையும், மற்ற விஷயங்களையும் நன்கு விளம்புவாய்," என்றனர். வீரபாகுதேவன் அவரை வணங்கி, "விமல மூர்த்தியே! நின் மொழியைச் சூரன் முன்பு நான் சென்றுரைத்ததும், அவன் விண்ணவரைச் சிறையினின்றும் விட முடியாதென வெகுண்டு கூறினன். அடியேன் விரைந்து போனேன், இதுவே முடிவு." என்றன். முற்றுணர்வுடைய முருகவேள் வீரபாகுவை நோக்கி, "உனது செய்கையுள் ஒன்றையும் நீ கூறினையில்லை. அவற்றை நவிலுவாய்." எனக் கேட்டனர். வீரன், "பாசபந்தத்துட்பட்டு வாழும் சூரனது நகரின்கண் அடியேன் புகும் பொழுதும், அதிலிருந்து அகலும் பொழுதும், தடுத்த அவுணர்களையெல்லாம் நான் கொன்றேன். இதுவே எனது நிகழ்ச்சி." என்றன். வீரமொய்ம்பன் தொகுத்துக் கூறியவற்றைக் கேட்ட செவ்வேற் பெருமான், "பகைவரால் வருந்தினை போலும்!" என்று கூறிப் பின்னர், ஆயிரந் திருநாமங்களையுடைய திருமால், அயன் முதலிய தேவர்களைப் பார்த்து, குமார மூர்த்தி, "தேவர் சிறையை விட்டு நன்மையை அடைவாயென்று யாம் அருளால் கூறிவிட்ட மாற்றத்தின் உண்மையை அப்பாவி யுணர்ந்தானில்லன். ஆகலான், சாதல் விதியுடைய அச்சூரனது உயர்வு நீக்க நாளையே இங்கிருந்து ஏகுவம்." என்று மொழிந்தனன்.

அவ்வாறு மொழிந்த அருள் மொழியைக் கேட்ட அத்தேவர்கள் பெருமகிழ்ச்சி எய்தினர்கள். அப்பொழுது வீரபாகுதேவன், ஜயந்தனும் அவனெடு சார்ந்த மற்றைத் தேவர்களும் உற்றவற்றையெடுத்துக் கூறி, இந்திரன் கொண்ட மனக்கவற்சியை மாற்றி, அவன்

உளத்தைத் தேற்றினன். . இனி பெருந்துயர்க் கடலுள் அகப்பட்டு அலைவுறும் சூரனைக் குறித்துச் சிறிது எடுத்துரைப்பாம்.

## சூரன் நகர்புரி படலம்

ஊகநகடிய பெரிய படைகளழிந்ததும், இளைய குமாரனுகிய வச்சிரவாகு இறந்து பட்டதும், வீரனுகிய தூதுவன் ஊறின்றி ஏகுதலுங் கண்ட தூதுவர் சோகமோடு ஏகி, சூரபன்மனிடத்துப் பணிந்து கூறுதலும், அச்சூரன் கேட்டுத் துளக்க மெய்தி துன்ப மென்னுங் கடலினுள் மயங்கி விழுந்தான். விழுந்த சூரபன்மன் துயர்க்கெல்லை காணுது இரங்கிப் புலம்ப, அவன் அருகமர்ந்த சுற்றத் தினரும், மற்றுமுள்ளோரும் மறுகி, கண்களில் நீர் சோர நீக்கமின்றி யழுதனர். பழுதிலாத் கற்பினையுடைய பதுமைகோமளை யென்னும் சூரபதுமன் மனைவி தன் இளையமகன் இறந்ததைக் கேட்டுப் பெரிதும் வருந்தி, மலர்க்குழல் அவிழ்ந்து அலமர, மார்பின்மேல் கைகளைமோதிக் கொண்டு, தரையில் விழுந்து புரண்டு அழுதாள். அந்நகரிலுள்ள மிடற்றொலி, யாழ் ஒலி, துளைக்கருவிகளின் ஒலி, பல இயங்களின் ஒலி, கலந்த பலமொழியினெலி, ஆகிய ஒலியடங்கலு மடங்கிச் சலங்கிப் புலப்பு மொலியே நிரம்பிக் கிடந்தது. அவ்வாருகியபொழுது தரும கோபனென்னும் அமைச்சனுனவன் சூரபன்மன் முன்னர்ச்சென்று,கை தொழுதுநின்று, "புவியண்டங்களின் ஆணையைப் பரித்த மேன்மையும், ஒப்பற்ற திருவும் அழியாது பெற்றுள்ளோய்! பிறர்க்கரிய திறலினை யுடைய செம்மலே! இப்பரிசால் வருந்துதல் இயற்கையாமோ? கடல் பிளந்து வான் முட்டவரினும், அண்டங்களழியினும், அனைத்தும் மாயினும், அழியாது வாழும் வீரனே! உன் மனங்கொண்ட திண்மை குறைதற் பாலதோ? அன்றியும் இவ்வாறு வருந்தி அழுதனை யென் னில், மூத்தேவரும் நகைப்பர். முன்னர் ஏவல் செய்த அத்தேவரும் நகைப்பர்; புகழும் தேயும்; பெருந்திறல் வாய்ந்த வீரரைத் தீய ஊழ் வரின் மாதரும் வெல்வர். ஆகலான், நின்மகனுக்கு ஆயுள் குறைந்த தால் அவன் இறந்து பட்டான். பகைவர் வினையையும், வன்மையை யும் நாடி அதற்கு இயையும்படி செய்யத் தெளியாது, நைந்திருப்பது ஆண்மையோ? வரமும், வெற்றியும் வரம்பின்றிப் பெற்று மேன்மை யால் சூரனென்றொரு பெயரையும் பெற்ற நீ, வருந்துதல் உன் தலை மைக் கேற்பதோ? வருந்தாதே, வருந்தாதே." என்று தேற்றினன்

தருமகோபன், இவ்வாறு தேற்றத் தெளிவடைந்த சூரபன்மன் அடக் கருந் துன்பத்தை ஒருவாறு அடக்கித் தன் பாங்கரில் உள்ள வினை ஞரை நோக்கி, "புதல்வன் உயிரை மாய்த்து, இந்நகரை அழித்திட்ட வலிய தூதுவன் போனதைப் பார்த்தீர் கொல்? அன்றிப் பிறர் புகலக் கேட்டீர் கொல்? யாதுண்மை யுரையுங்கள்." என்றனன். அவர்கள், "அவன் இந்நகரை நீங்கி இலங்கையை நோக்கிச் சென்றனன். அத னைக் கண்டனம். இஃதுண்மை." என்றனர். அவர் மொழி கேட்ட சூரன், மருங்கில் நின்ற ஏவலரை விளித்து, "நீவிர் விரைவிற் சென்று, மலர்த்தவிசோனாகிய பிரமனைக் கொண்டு வாருங்கள்." என்றனன். அவர்கள், "எம் இறைவனே! கேட்பாயாக. இம்மூதண்டத்தினை நல் கும் பிரமன், இந்திரன் முதலிய தேவர் பகுப்பினோடும் படைத் தொகு தியோடும் புவியின்கண் எய்தியுள்ள சிவன் மகனிடத்துச் சேர்ந்திருந் தனன் என்று கண்டோர் பலர் கூறுகின்றனர்." என்றார்கள். ஏவலர் இத்திறம் மொழிதல் கேட்ட சூரன், "மேன்மை, மேன்மை." என்று வெய்துயிர்த்துச் சீறிக் கனலெழ நகைத்து, "மற்றை யண்டத்தி லிருந்து சிருட்டித்தொழில் நடாத்தும் பிரமனை விரைவிற் பற்றி வாருங்கள்." என்றான். உழையர் அவ்வாறே சென்று, மற்றைய அண்டத்தினுள்ள திசைமுகனை அரசன் ஆணை கூறி அழைத்து வந்து சூரன்முன் விடுப்ப, அவ்வயனைப் பார்த்த சூரன், "அழி வெய்திய இந்நகரத்தை முன்போலவே செய்யக் கடவை." என்று ஆணையிட்டனன். பிரமன், "ஓர் இறைப் பொழுதில் இந்நகரைப் பண்டையினும் அழகுடைத்தாக இயற்றுகின்றேன்." என்றுமொழிந்து சென்று, பொன்மதில், மாடம், வீதி, பொன்மணிச் சிகரம், சூளிகை, மதனனும் விரும்பும் செழுமலர்ச்சோலை, மண்டபம், வாவி, பொய்கை, அரங்கம், மன்றம், தெற்றியாகிய இவை முதலாயவற்றை யெல்லாம் முன்போலத் தன் வன்மையில் அந்நகரைப் படைத்தனன். பின்னர், அவன் சூரபன்மன் அரசிருக்கை மணிமண்டபத்தைச் செவ்வனே முன்னினும் பொலிவெய்தத் திருத்தினன். அவ்வீர மகேந்திரபுரமும், அழகிய கோவிலும் முன்னினும் அழகு பெற்றன. அதனை நோக்கிய சூரன் மகிழ்ந்து, அரியாசனத்து அமர்ந்து, அவன் தொழில் திறத்தை மெச்சி, அன்பினால் அப்பிரமனைப் புகழ்ந்து, அவனை நோக்கி, "இனி நீ உன் அண்டத்திற் கேகி, உன் சிருட்டித் தொழிலைப் புரியலாம்."

எனக் கூறினன். பிரமன் நன்றென விடைபெற்றுச் சென்று, தன் அண்டத்திலுள்ள உலகம் புகுந்தான்.

## சூரன் மைச்சியாழ் படலம்

அவ்வாறாகிய காலத்துச் சூரபன்மனது ஏவலினால் முன்சென்ற ஒற்றுவர் கடலைத்தாவிச் செந்திமா நகரடைந்து, முருகப் பெருமான் சேனையும் பிறவும் தெரிந்துவந்து, விரைவில் தம் மன்னனை வணங்கி, "தகுதியாகிய பூதவெள்ளம் இரண்டாயிரம் அப்படை வேந்தர் நூற்றெண்மர். மற்றும் பெருஞ் சிறப்பினையுடைய வீரர் இலக்கத் தொன்பதின்மர். இவர்களோடும் பிறப்பிலியாகிய சிவன் பெற்ற சிறுவன் பூமியின்கண் வந்துள்ளது உண்மையான விஷயமே. தாரகவீரனையும், கிரவுஞ்சகிரியையும், பிறவாக்கி, ஈறுசெய்து, கடலைச்சார்ந்த திருச்செந்தூரில் அவன் தங்கி இருக்கின்றனன். அவன் இங்கு வந்து போர்புரிய தூதுவன் ஒருவனைத் தூண்டினன். அத்தூதுவன் இந் நகரில் வந்து, பின்னர் இலங்கையில் யாளிமாமுகனைக் கொன்று, கடலைத்தாண்டி ஏகினன். செங்கதிர் போன்ற வேலினையுடைய இளையன் படையோடும் ஈங்கு வந்து போர்புரியக் கருதியுள்ளான். இஃது உண்மை." என்று கூறினர்கள். அவர்கள் கூறிய மாற்றங்கேட்டு, ஒப்பற்ற இளவலாகிய சிங்கமுகாசூரனையும், கேள்விசான்ற அமைச்சரையும், மைந்தரையும், சுற்றமமைந்த சேனைத் தலைவரையும், ஓர் கணப்பொழுதில் வருவித்தான். வந்தெய்திய அவர் தொழுது பக்கத்தில் அமர்தலும், சூரபன்மன், கடுங்கனல் சுடுவதோர் சீற்றம் உள்ளே எழ, பெருயிர்ப்பினனாய்க் கீழ்வருமாறு விளம்புவானாயினன்:—

"பகைவராகிய விண்ணவரை யான் சிறையிட அஃதறிந்த இந்திரன் கங்காதரனாகிய சிவபெருமானிடஞ் சென்று வேண்டினன். அப் பெரியோன் விரைவில் நெற்றிக் கண்ணிடமாக ஓர் இளைஞனைத் தந்து, "குமரனே! நீ விண்ணவரது சிறையை வீட்டிவருவாய்" என, அவன் நந்திகணத்தரோடும் பூதவெள்ளஞ் சூழ, மாலயன் ஏத்தப் புவியின் எய்திக் கூரியவேலால் குன்றொடு தாரகனைத் தடிந்து, அலைவாய்ச் செந்திலை அடைந்துளான். அவ்வறுமுகன் ஒருதூதனை அனுப்ப, அவன் வாரிதி கடந்து இலங்கையை வீட்டி, அக்காவல் கடந்து, நகரிடைப்புகுந்து, அச்சமின்றி என் அவைக்களந்தன்னில் வீரனைப் போலிருந்து, விண்ணவர் சார்பாய் சில விளம்பி, என் கண்முன் சில

ரைத் தரைப்படுத்தி, என்னை மதியாது ஏகினன். ஏகி இந்நகர் அழித்த தால் யான் விட்ட படைஞர் யாரையும் கொன்று, என் இளஞ்சேய் உயிரையுமுண்டு செருக்கொடு சென்றான். அளவிலாச் சேனையோடு அழிந்தது இத்திருநகர். இங்குக் குவிந்தன பிணத்தின் தொகுதிகள். இரத்தவெள்ளம் பரந்தது. ஆணையொழிந்தது, உயர்வுந் தீர்ந்தது, ஒற் றென வந்த அவனைப்பற்றிச் சிறைசெய்தேனு மல்லேன். அல்லது அவ னுக்கோர் கெடுதியும் புரிந்தேனல்லேன். பெரும் பழியைப் பெற்றேன். விஷகண்டனாகிய சிவன் தந்த இளையோன் இவ்விடம் வந்து, அமர் புரிகுவன் போலும்! இதனைச் சாரணர் அறிந்துவந்து கூறினர். ஆத லின், யான் பூதவெள்ளத்தை அழித்து, வீரரைக்கொன்று, இளை யோனை வெற்றிகொண்டு, ஏனையோரை வீட்டி, ஒரிறை கழிவதற்கு முன்னரே வருவேன். ஆனால், சூரனென்ற ஒப்பற்ற பெயர் படைத் துப் பூதர்களோடும் பாலகனோடும் போர்புரிதல் இழுக்காம் என்றும், வெல்லினும் வீரமன்றென்றும் வாளாவிருந்தேன். திருவினாலும், வலி யினாலும், சூழ்ச்சியினாலும் எத்துணைப் பெரியதாயினும் முன்னுள் ளோர் ஓர் வினைசெய்யக் கருதுவாராயின், தம்முடைய உண்மைத் துணைவரை முன்கலந்து பேசி, அதனைச்செய்குவர். ஆதலின், யான் உம்மை வினவினேன். ஆற்றந்திறன் ஈதெனெ ஓர்ந்து உரையுங்கள்."

அதனைக்கேட்ட மகிஷன் என்னும் அமைச்சன் எழுந்து, கைதொ ழுது, "மாயைகள் பலவும் வல்ல கிரவுஞ்சகிரியையும், திருமாலை வென்ற நின் இளவலையும் கணப்பொழுதில் எறிந்த வீரனைப் பால னென்றுரைப்பது உணர்வின் பகுதியோ? தாரகனது தானையைச் செற்ற பூதரை இகழ்வதும் பெருமையாமோ? திரைகடல் தாவி, நகரினை யழித்து, நின்மகனைச் செற்ற, கள்வனைத் தூதனென்று கூறுவது அறிஞர் ஆராய்ச்சியோ? அவன், மால், அயன் இந்திர னாகிய மூவரும் வேற்றுருக்கொண்டு ஒருவனாகி வந்தனன் என்றுரைக்கலாம். உன் இளவலாகிய தாரகன் உயிரையுண்ட ஞான்றே போருக்கெழுந்தாயில்லை. சேனைகளை அனுப்பி வென் றாயுமில்லை. பெரு வளத்தை நுகர்ந்து, செய்வகை மறந்தனமாகி, வலியரைக் கொன்றவர் தம்மை இகழ்ந்து, இவ்விடை வாழ்குவோ மாயின், நம்மினுஞ் சிறந்தார் எவருளர்? முன்னரே அக்குமரன்மேற் சினந்து, போர்க்குச் சென்றாயாயின், உன் நகர்க்குத் தூதுவன் செல்

வனே? அதை நீ செய்தாயில்லை. நின் மகன் முடிந்ததும், வளநகர் அழிந்ததும, செய்யவேண்டியவற்றைத் தெரிந்து செய்யாத நமது மயக்கக் கீழ்மையால் வந்தனவேயாகும். சென்ற பிழைகளைக் கருதி நைதல் அறிவுடையார் இயல்பன்று. ஆதலான், ஒழிந்தனபோக, இனி ஒன்றுரைப்பேன் கேட்பாயாக. அதாவது இழிவென்று கருதாது, இமைப்பொழுதில் அவுணர்தம் படையொடு விரைந்து சென்று, கண்ணுதற்றந்த சேயினை வளைந்து, போர்புரிவதேயாகும். நேற்றைய தினம்போலத் தாமதஞ் செய்யற்க." என்று கூறினன். அதைக் கேட்ட துர்க்குணன், மிக நன்று என்று கையெறிந்து, நகை செய்து, "மால், அயன் முதலிய தேவரை நீ நேர் நின்று போர் செய்யாது, இளைஞரைக்கொண்டு வெற்றியடைந்துளாய். அத்தகைய நீ இன்று பாலகன் மீது போர்க்கெழுதியோ? இறுதியில்லா ஆயுளும், ஆழியும், செல்வமும், வலியும், வீரமும் ஆகியவற்றை அரன்பால் பெற்றது சிறுவனோடு போர்புரிதற்கோ? பசிப்பிணி அலைப்பப் பலிக்குழலும் பூதகணங்களையும், தூதனையுந் தொடர்ந்து, போர் செய்ய, அமரரைப் புறங்கண்ட நீ போகுதியோ? இன்று நின் படைத்தலைவர் அனைவரையும் விடுப்பாய்? அன்னவர் கொடிப்பொழுதில் குன்றெறிந்தவனைக் கூளிகள் தம்மொடு வென்றிவண் மீள்குவர். இதுவே துணிபு." என்று மொழிந்தான். அதைக்கேட்டு தருமகோபனென்னும் அமைச்சன், "நவமணி இழைத்த பொற்கலப்பையைக்கொண்டு, புன்செய்நிலத்தை இழிந்த பயற்றின் ஆக்கங்கருதி, உழுதலையொக்கும் வீரனாகிய நீ, சிறுவனோடு எதிர்த்துப் போர் புரிகுதல் அழகல்ல அக்கினிமுகன், இரணியன் என்னும் நின் சிறுவர்களுள் ஒருவனுக்கு இலக்கத் தெண்மராகிய வீரரும், மற்றைய வீரரும், பூதவெள்ளத்தினரும், அரன் அருளிய அறுமுகத்தனும் எதிர் நிற்க மாட்டார்கள். ஆறு தாங்கிய அண்ணல் தந்த வேலினை அவ்விளையோன் உய்த்தலும், மாறுள படையினுல் மாற்றுமையால், இளவலாகிய தாரகன் இறுதி எய்தினன். தொல்லை நாள் குறுமுனி ஈந்த கொடிய சாபத்தால், இறந்தது அம்மால் வரை. இவற்றையோராது, சிறுவன் செய்கையைச் சிந்தை செய்கின்றனை. யாகஞ் செய்து அழியாத இரதம், கவசம், வில் முதலியவை பெறுமையால், நின்மகன் வச்சிரவாகுவெனும் ஓர் தூதனுல் மண்டொழிந்தான். பலவாறாக இனி மொழிவதால் ஆவதென்? நமது அவுணப்

படைத் தலைவருள் ஒருவனை அச்சண்முகன் மீது ஏவுவாயாயின், வெற்றிகொண்டு மீளுவான்." என்று இயம்பினன். அதைக்கேட்ட காலசித்தென்னும் மற்றொரு மந்திரியானவன் நகைத்துக் கீழ்வருமாறு கூறுவானாயினன்:—

"செந்தியில் இருந்திடும் சிறுவன் பூதரோடு ஈண்டு போருக்கெழுந்தால், எம்மிறை சிலரை ஏவுதலல்லது, இதற்கோர் மந்திர சூழ்ச்சியும் வேண்டுமோ? திருமாலை, பிரமனை, வாசவனை, மற்றையோரைச் சமரிடை வென்ற நாளில் எம்மை வினவினையில்லை. இன்றோர் பாலனை வெல்ல பெரிய யோசனை வேண்டுமோ? அண்டர்கள் ஒடுங்கினர், அரக்கர் அஞ்சினர். எண்டிசைக் கிழவரும் ஏவல் செய்குவார். மண்டிய அவுணரினும் வலியர் பூதராம். இன்று யாம் கண்டது கலியின் வண்ணமோ? தனித்த என்னை விடுப்பாயாயின், சிவன் குமாரனையும், கணத்தொகை வீரரையும், காலபாசத்தால் கட்டிக் கொணருவேன்."

அதைக்கேட்ட சண்டனென்னும் அமைச்சனானவன், "பசியால் உழலும் பூதரையும், மழலைப் பிள்ளையையும் வெல்ல ஓர் சூழ்ச்சியோ? அவுணர்க்கிது மிகவும் அழகு. அப்பூதப் படையையும், சண்முகனையும் யானிதுவரையும் வைத்திரேன். மன்ன! உன் சொல் இலாமையால் தாமதித்தேன். ஆனதால், தமியனுக்கு ஆணை தந்தால் இப்பொழுதே செய்து முடிக்கிறேன்." என்றான். பின்னர், அனலி, சிங்கன் முதலிய அமைச்சர்கள் அனைவரும் தத்தமக்குத் தோன்றியவாறே உரை செய்தனர். பின்னர்ப் பானுகோபன் அணுகி, அடிவணங்கி, "ஐயனே! நின் இளவலாகிய தாரகனையும், கிரவுஞ்சத்தையுந் தொலைத்த ஞான்றே, என்னை விடுத்தாயில்லை. ஆயினும், இப்பொழுதேனும் எனக்கு விடையளித்து அனுப்புவையாயின், அவர்களைப் போரில் வென்று, பிணித்து வந்து நின் முன்னர் விடுவேன்." என்று கூறி முடித்தான். பிறகு இரணியன், அக்கினிமுகன் ஆகிய இரண்டு புதல்வர்களும் தனித்தனித் தங்கள் ஆண்மையை எடுத்து மொழிந்து, "என்னை அனுப்புக, என்னை அனுப்புக," என்று வேண்டினார்கள். அதன் பின்னர் ஆயிரஞ் சிரங்களையுடைய சிங்கமுகாசுரன் எழுந்து, மன்னர் மன்னனை நோக்கிக், கீழ்வருமாறு மொழிந்தனன்:—

"அமைச்சர் அனைவரும், படைத்தலைவரும், புத்திரர்களும், தத்தமக்கியன்ற வன்மைகளையே பேசினார்கள் அல்லது, இந்திரப் பெருந்திருவினையுற்ற உன்றனக்கியன்ற புத்திகளை மொழிந்தாரல்லர். நின்பொருட்டு யான் கூறும் மொழிகளைக் கேட்பாயாக. பொருள் பெற்ற காலத்து உண்டாகும் கோபம், கற்றவர் உணர்வையுந் தாண்டிச் செல்லும். அவ்வெகுளி முதிர்வதன்முன், அன்பினால் உற்றவர் உண்மைகளை எடுத்து இசைத்துத் தெளிவு படுத்தல் வேண்டும். அரசர் காதில் தீக்கோல் செருகுதற் போன்று, நல்வழியையும், நடுவு நிலைமையையும் எடுத்து இடித்து மொழிபவர் அமைச்சராவர். அவ்வாறன்றி நின் அமைச்சரும், மற்று முள்ளோரும், பகைவர் வேண்டுந் திறத்தையே கூறுநின்றனர் மயக்க உணர்வினால் மீனானது தூண்டில் முட்பொதிவை உணவெனக் கருதி, அதனை விழுங்கித் துன்புறுதல் போல, நீ மேல்வருங் காரியத்தைக் கருதாது மயங்கி நின்றாய். இந்திராதி தேவர்களை அலைத்த முன்னையோர் முந்துறு திருவினோடு முடிந்தாரல்லது தப்பினார் எவர் உளர்? தேவர் யாவரையும் திரைகடல் மீன்களைப் பிடித்து வரும்படி ஏவினை. அச்செய்கை இனிது கொல்? தமதுயிரிற் பற்றற்றவரல்லது யாவர் இச்செயல் நடத்துவார்? இந்திரன் அரசினையழித்து, அவனது நகரத்தினைத் தீக்குணவிட்டனை. தேவர் அனைவரையும் சிறைப்படுத்தினை. அத்தேவர்களால் நமக்கு இவ்வளவு தீமைகளும் வந்தனவென்று உள்ளத்திற் கருதாது, பித்தேறினவன்போன்று பேதையாயினாய். பொன்னகரழிந்த நாட்புகுந்த தேவரைச் சிறையினின்று இன்னமும் விட்டிலை. இக்காரணங்களால் அன்றோ அறுமுகப் பெருமான் போர்செய்ய உன்னிடமுற்றது? அக்காலத்து வேள்வியில் அருளிய பரமன் பெருந்திருவோடு நூற்றெட்டு உகம் இருங்களென்று நுவன்றான். கூறிய அக்காலமும் குறுகியது. அதனை நீ உணர்ந்தாயில்லை. விதிவலி தீர்ப்பவர் யாவர்? "எத்திறத்தரும் வெல்கிலர் ஆயினும், நமது சத்திவென்றிடும்." என்று கண்ணுதற் பெருமான் அருளினன். அத்திறத்தினால் அல்லவோ அறுமுகன் உய்த்த வேல் அத்தாரகன் உயிரை உண்டது? பேதையராகிய வானவரைச் சிறையிண்டப் பிணித்தாய். அதனால் உனக்கானதென்ன? இத்துன்பமொன்றல்லது, எப்பயனு மில்லாத சிறு காரியத்தைச் செய்து, இன்னல் படுவது மேலவர் இயல்போ? குருக்கள், சிறு பாலகர், மாதர்,

விரதியர், மேலவர், மறையோர் ஆகிய இவர்களை வருத்தியவரல்லவா நரகத்திற் புகுந்து, புகுந்து வருந்தும் நெறியினையுடையார்? அமரர் களைச் சிறையினின்றும் விடுவாயாயின், குமாரவேள் ஈண்டுப் போர் குறித்து, அணுகான். நமது குற்றமுஞ் சிந்தையிற் கொள்ளான். நாளை இமைப்பொழுதிற்குள் கயிலைக்கு மீண்டேகுவான். சுத்தராகிய அமரர் தஞ்சிறையை நீ விட்டிடா திருப்பையேல, திரிபுரங்கள் சுட்ட அக்கண்ணுதற்குமரன், நமது குலமெலாந் தொலைத்து, நின்னையும் ஒழிப்பன். இதுவே சத்தியம், சத்தியம்.''

தடுத்து இவ்வாறு சிங்கமுகாசுரன் மொழிதலும், கொடிய சூரன், தடக்கை புடைத்து, பெருமூச் செறிந்து, பற்களை நற, நற வென்று கடித்து, பல்லால் இதழதுக்கி, மெய்யிற் பொறிகள் சிந்திடக் கனன்று, முடியணிந்த சிரத்தைத் துளக்கி, புகலுவான்:—"மூவராலும் வெல்லுதற்கரிய வலிமையை உடையாய்! நம் ஏவற்றொழில் புரிந்து, இன்னமும் வெளிப்படாது மறைந்த இந்திரனுக்கும், ஏனைத் தேவர்க் கும் சிறுபாலனுக்கும் கயிலைகாக்கும் பூதருக்கும் அஞ்சிக் கலங்கினை யோ? அன்று அச்சிவபெருமான் வரமளித்தஞான்று, வாழ்நாட்கெல்லை கூறியதும், 'எம்பெருஞ்சத்தியும்மை வெல்லும்' என்றதும், யான் கேட் டிலேன். வஞ்சமும் சூழ்ச்சியும் உடையாய் போலும்! எம்பியே! நீ புதி தாக, ஒன்று வகுத்துரைத்தாய். 'நூற்றெட்டு உகங்கள் உங்கள் திரு வொடு அரசியற்று.' என்று அப்பெருமான் கொடுத்த அழியாப்பேற்றை விலக்குவார் யாவர்? அது தவறுதல் ஆகுமோ? அன்றியும், ஆதிமூர்த்தி, 'எம்பெருஞ்சத்தியே அல்லால், அயலோர் வெல்லார்' என்று கூறி யது பொய்க்குமோ? வரங் கொடுத்தவன் அழிப்பனென்பது தவறே. பழுதிலாது நம்மைப்போல் வேள்வியைச் செய்யாமையால், அழியாவரம் பெற்றானில்லை அத்தாரகன். அதனால் அவன் இறந்தான். வச்சிரவாகுவும் உணர்விலாக் குழந்தையாகலின் மாண்டனன். இது ஒரு குறையோ? ஆயிரத்தெட்டு அண்டத்தையும் தனியரசாட்சி கொண்டுளேன். அமரர்தங் குழுவைத் தொண்டு கொண்டுளேன், யாவர் வந்தெதிர்ப்பினும் அழியேன். எனக்கு நேராக வேறொருவர் உண்டுகொல்? வேறுபடுதலில்லாத வச்சிரயாக்கையும், பலமும், வரம் மிகுந்த ஆயுளும் பெற்ற என்னைக் கெடுத்தல் ஒருவருக்குங் கூடாதென்றால், என்னை எதிர்த்து நின்று ஒரு சிறுவனோ வெற்றி

கொள்ள வல்லான்? கருத்தற்ற ஓர் பாலகன் என்னை வெல்லுவானென்பது, ஆகாயத்திலுள்ள சூரியனைக் கனியென்று விரும்பிக் கண்ணில்லாதவன் காட்டக், கையில்லாதவன் போய்ப், பேராசையால் பற்றுதலையொக்கும்."

அவ்வாறு சூரபன்மன் கூறலும், நெருங்கிய ஆயிரம் சிரங்களையுடைய சிங்கமுகாசுரன் ஆகிய இளையவன், "இன்னமும் யான் உரைப்ப தொன்றுளது. அதனை முனியாது கேட்பாயாக தனக்கு நிகரற்ற பரம்பொருள், மதிமுடித்த சடையும், பவளம்போல் மேனியும், கண் மூன்றும் தோள் நான்கும், கறைமிடறும் ஆகிய இவைகளைக்கொண்டு நின்றது சிருட்டியாதி ஐந்தொழில் இயற்றிப் பழைமையாகிய ஆருயிர்ப் பாசமனைத்தையும் அகற்றிப் பின்னை வீடு பேற்றை அருள நினைந்து, அப்பரம் பொருளை உன்னியே, எல்லையற்ற காலம் பெருந்தவம் இயற்றினுய். அதுகண்டு வெளிவந்து, நினக்கு ஒப்பற்ற வரங்களை அருளி, அதற்கு ஒழிவுஞ் செப்பி வைத்தது அத்திறம் நீ தெரிந்திலை. பெருந்திரு படைத்த நீ, அறத்தால் அரசுபுரியாது, ஆற்றலினுல் அமரரை அலைத்தாய். அதனுல் ஈசன் நின்வலி தொலைத்து, இறுதி செய்திட நினைத்தனன். வரமளித்த யாமே அழிப்பது முறைமை அன்றென்று கருதியே தான் தனதுருவமாகும் ஒரு மகனைக் கொண்டு முடிப்ப மென்று மனத்துட் கொண்ட பராபர முதல்வன், செம்மேனியும், திருமுகமாறும், பன்னிருதோளும் ஆகிய இவற்றினையுடைய ஒரு தனிக் குமாரனைத் தனது நெற்றிக் கண்ணினுல் தந்தருளினுன். அவனை மானுடம், விலங்கு, புள், மற்றுமுள்ள உழலும் யாக்கையவாகிய இவற்றுட் பிறந்தாரை யொப்ப நீ நினையற்க பரஞ்சுடரது நெற்றியில் உதித்தவன். வேதங்களுக் கெட்டாத முதற்பொருள். சீலமில்லாதார் உணர வொண்ணுத சிற்பரனைப் பாலனென்றனை. அவனிடத்தினின்றே மேலை நாள் பொருள் யாவுந் தோன்றின சிறிய ஆலம் விதையில் ஒரு பெரிய மரம் அடங்கியிருந்து, மீண்டும் முளைத்து விருத்தியாவதுபோல்,

"வேதக் காடசுகது முபனிடத் துச்சியில் விரித்த
போதக காட்சிக்குங் காணலன் புதியரிற் புதியன்
மூதக் கார்க்குமூ தக்கவன் முடிவிற்கு முடிவா
யாதிக் காதியா யுயிர்க்குயி ராய்நின்ற வமலன்."

இன்னதன்மை வாய்ந்த முதல்வனைச் சிறுவனென் றிகழ்ந்துளாய். அவுணர் கிளை முழுமையும் அழித்து, நின்னையும் ஓரிறைப் பொழுதில் படுத்துவன். ஆனல், சமர் மேற்கொண்டெழுந்தது எற்றுக்கெனின், தனது பெரிய அருள்திறத்தைக் காட்டுதற் பொருட்டே. கேடில்லாத ஆயிரத் தெட்டண்டத்தைப்பெற்றேே மென்று வியப்படைந்தாய். தத்துவபேத முற்ற முணர்ந்தாயில்லை. பிருதிவி தத்துவத்தில் அடங்கிய அண்டங்கள் அளவில்லன. அவற்றைக் கேட்டிடுமேல் மருளடைகுவாய். ஜலதத்துவ முதல் சுத்தமாயா தத்துவ மிறுதியாக உள்ள தத்துவங்களில் அடங்கிய அண்டங்கள் கணக்கிறந்தன என்பர். அவ்வொரு அண்டத்தில் அடங்கிய புவனத்தின் பெருமையை அறிந்தார் யாவர்? முடிவற்ற பொருளை முடிவு கூறமுடியுமோ? அன்னவாகிய அண்டங்கள் அனைத்தையும், தன் ஆணையால் ஓர் இமைப்பொழுதில் தரவும், அழிக்கவும் வல்ல பிரான், உன்னோடு போர் புரியும் விளையாட்டினால் செந்திமா நகருற்றனன். வச்சிர சரீரத்தைப் பெற்றேமென்று நினைத்தாய். இந்த எண்ணத்தை அறவே விடு, வினைக்கீடாக யாக்கை பெற்றுழலும் உயிர்கள் மாண்டு போமென்று அறிஞர் நிச்சயித்துள்ளார். நீ ஒருவனோ மாயாதிருப்பவன்? வானிலும், புவியிலும் பிறந்தோரது இரண்டு சரீரமும் அழிதல் திண்ணம். பெருமைபெற்ற நின் வச்சிரதேகமும், பிருதுவி சம்பந்த மாதலால், அழிவெய்தாது நிலைக்குமோ? அழிவிலா மெய்வரம் பெற்றுளம் என்றனை. அச்சொற்குரிய பொருளினைக் கேட்பாயாக. மூவுலகத்துள்ள மன்னுயிர் போலச் சிலபகலில், அழிவெய்தாது மிகப்பெரும்பகல் அழியாதிருக்கும் பான்மையே அறிவாய். வானின்கண் உள்ள தேவரை, நீ அலைக்குந் தீமையைக் கருதிப் பல்லுயிர்க்கும் உயிராகிய ஒருவன் தான் தந்ததோர் வரத்தினைத் தவிர்க்குமேல், 'ஏன் செய்தாய்' என அவனை வினவி உன்னை நிறுத்துவார் யாவர்? கெடாத செல்வத்தோடு நீயும், உன் இளைஞரும் படுதலில்லாது, வாழக்கருதி இன்னபுகர்ந்தேன். ஆதலின், இட்டசிறையினின்றும் தேவரை இப்பொழுதே விடுதல் செய்வாய்."

இவ்வாறு மொழிந்ததைக்கேட்ட சூரபன்மன், மணிமுடி துளக்கி, காதாடு செங்கனல் செறித்தாலென்னக் கனன்று, முன்னவனாகிய அவன், பின்னவனை நோக்கி, இன்னும் மொழிகின்றான்:—

"காற்றிற் றள்ளுண்டு நெருப்பினிற் சூடுண்டு கங்கை
யாற்றிற் றூக்குண்டு சரவணம் புக்கலை யுண்டு
வேற்றுப் பேர்முலை யுண்டழு தேவிளை யாடு
நேற்றைப் பாலனை யோபரம் பொருளென நினைந்தாய்."

அன்றியும் வெற்றியும் வன்மையும் இல்லாதவர் தாழ்வடைவர். அவற்றால் மேன்மையுள்ளவர் ஓங்குவர். இஃதுலக இயற்கை. இறுதி யில்லாததோர் பெரியன் யான். அறுமுகன் என்போன் சிறியன் ஆதலின், அவனை யான் வெல்லுதல்உறுதி. தொகுதி சான்ற பண்டுள்ள நம் முதுகுரவர் பல்லோர் உயிரை வாட்டிய தேவரைச் சிறையிலிட்டேன் அதனால் தவறென்னை ? தவறு செய்தார்களைத் தண்டம் புரிதல் அரசர் கடன். ஆகலின், மாகர்தஞ் சிறையை விடேன், மற்றைப் பாகசாதனனையுஞ் சிறையிடுவேன். அந்த ஏகநாயகன் வந்தெதிர்ப்பினும் எதிர்த்து அமர்புரிவேன். அறிவிழந்த நீ இனிச் சிறுமொழி பகராதே. வறிதே உரைப்பதென் ? என்னுடன் ஒருவயிற்றிற் பிறந்து, மேன்மையுற்றாய். நமது குலப்பகைஞரை வாட்டாது, அவரது பாங்கனாயினை. நீயே இருக்க எனக்கு மற்றோர் பகையும் வேண்டுமோ ? பத்து நூறாகிய சீயச்சிரங்களும், அத்துணைக் கிரட்டிய தோளின் குழுவினை எற்றிற் காற்றினை ? வன்மையும் வீரமும் இழந்தோய்! பித்துடையாரினும் பேதமை பிடித்தோய்! அவுணர் குலமுறைமை அற்றாய், வானவர்போலும் வன்மை இழந்தாய். மோனங்கொண்டு முயலுதி தவத்தை. வீரமிழந்து மானம் நீங்கினாய். சிறந்த அவுணர் கீர்த்தியை மாற்றப் பிறந்தனை. ஈண்டொரு பயனும் பெறாத நீ இருந்தும் இறந்தவனன்றோ? மந்திராலோசனையாகிய இதற்கு நீ அஞ்சுவையாயின், கையிலுள்ள படைகளை எறிந்துவிட்டு, ஐந்தங்கமேந்திப் பிரமனைப் போலத் திரிந்துழலுவாய். கிளைத்த கள்ளிச் செடிகளின் கிளைகளைப் போன்று பலதலையும் வளர்த்து, நெருங்கிய கரக்குழுவையுஞ் சுமந்து, நெடிது காலம் இளைத்தனைபோலும் ! நீ என்ன செய்குவாய் ? முன்னை நாளில், நீ இளம்பருவத்தில் அறிவு நிரம்பாதிருந்தமையால், நமனையும், வருணனையும் சிறைப்படுத்தினாய். தேவரை வருத்தினாய். இஞ்ஞான்று அறிவு நிரம்பியதால் அச்செயல்களுக்குப் பெண்டிர்போல் நடுங்கினை. பூதர்களையும், அவர் தலைவரையும், புராரிமைந்தனையும், ஏனையோரையும், யான் வென்று மீளுவேன். நீ தளர்ச்சி எய்தாது, நினது மாநகர் ஏகுவாய்."

இன்னவாய மொழிகளைக் கேட்ட சிங்கமுகாசுரன், நகைத்துத் தன்னுள்ளே கீழ்வருமாறு எண்ணினன்:— "உறுதியை உரைத்தேன். உணர்ச்சி இல்லாமையால் என்னை வீணேஇகழ்ந்தான். மேல்வருவதைத் தெரிந்திலன். தான் முடியும் வழியே நாட்டம் வைத்துள்ளான். எத்தகைய புத்தியையேனும் அறிவிலார்க்குரைப்பவர் அவரினும் அறிவிலாதவராவர். தேன்பெய்து போற்றினும் காஞ்சிரங்கனி கைத்தல் தவிருமோ? அத்தன்மையன்றோ அறிவிலானது சித்தம் உணரும்படி தெருட்டுதல்? அழிவற்ற செல்வத்தினையுடைய சூரனது புத்தியைக் கலக்கினும் பிழைக்கும் வகையைக் கருதுவானல்லன். யாம் வருந்தி இரங்குவதால் ஆகும் பயனென்னை? தள்ளரும் விதியை வெல்லவல்லவர் யாவர்? ஆகும் ஊழ் எனில் யாவும் ஆகும். போகும் ஊழ் எனில் யாவும் போகும். கண்ணுதல் தந்த நாள் கழிந்தது. மாண்டிடும் எல்லை குறுகியதால், ஈண்டுள்ள யாவரும், இறைவனும் துஞ்சுதல் திண்ணம். அமரர் கோன் தவம் பொய்க்குமோ? இறப்பது உண்மையாதலின், இறைவன் என்னுரை மறுத்தான். என்னை இகழவுஞ் செய்தான். ஆதலின் யான் இனி மறுத்தது மொழியேன். இவனுக்கு 'என் புன் மொழி பொறுத்தி' என்று இன்னுரைபுகலுவேன். மன்னர் மன்னன் இளையோன் வேலினால் இறப்பான். ஆதலின், அதனை நோக்காது யான், இவனை அகன்று போய் முன்னர் முடிதலே நலம்."

பின்னர் சிங்காமுகாசுரன் தந்தை யொத்த தம் முன்னவன் தாளைத் தொழுது, வந்தனை செய்து, "சிறியனேன் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டினேன். என் அறியாமையால் சொல்லியவற்றிற்கு வெகுண்டு என்னை இகழாதே. யான் இப்பொழுதே அப்பகைவர் மேல் சென்று, அவரை அழித்து விடுகிறேன். அண்ணலே! பகைமேற் செல்ல அடியனுக்கு அருள் விடை தருவாய்." என்று தம்பி கேட்டலும், சூரன் பெருமகிழ்ச்சியடைந்து, காதலால் அவனைத் தழுவி "ஐயனே! செம்மையாகிய அண்டங்களில் அடையும் வெற்றிகளுள் அருமையானது உனக்குயாதுளது? போர் வினையுடையாய்! நீ முன் சொல்லியவற்றை ஆராயின், அவை என் மனத்துணிவும், திட்பமும், ஊக்கமும் ஆகியவற்றை அளவிடற் கமைந்தனவே. பகைவரென்னும் மாக்களைப் பகுக்கும் சிங்கமன்றோ நீ? பகைவர் வந்தனர் என்றறிதியேல், அவர்களைக் கொன்றபின்

அல்லது உன் கோபத்தைத் தணிப்பாயோ? உனது ஆற்றலை யான் உணர்ந்திலனோ? இப்பொழுது நீ உன் நகருக்கேகி, உன் படையொடு ஆண்டு இனிதுறைகுவாய் அறுமுகன் ஈண்டு வரின், உன்னை யான் அழைப்பேன். அஃதுபொழுது வருவாய்." என்றனன்.

அதைக்கேட்ட இளவல், "விரைவில் முருகவேள் இந்நகரெய்தினும், நீ போருக்கெழாது, தூதுவனை என்பால் விடு. யான் அமர் புரிய ஒல்லையில் வருகின்றேன்" என்று மொழிந்தான். அவுணர் மன்னன் நன்றெனக் கூறி, அவ்விளவலுக்கு விடையளிக்க, அவன் பணிந்து சென்று, தன்னகரிடை வைகினன்.

அவ்வாறாகிய காலத்துச் சூரபன்மன், ஆண்டுற்ற படைத்தலைவர், புத்திரர், மற்றையோர் ஆகிய அனைவரையும் ஏகுமாறு விடையளித்துத், தன் மாநகர் இந்திரவளத்தின் இனிது வைகியிருந்தான்.

அளவற்ற வளப்பத்தினை யுடைய அவுணர்கட் கிறைவன் அமைச்சியலை வகுத்துரைத்த யாம், இந்திரன் முதலிய தேவர் ஏத்திடச் செந்தியில் அமர்ந்த அறுமுகத் தேவன் செய்கையை இனிக் கூறுவாம்.



# நான்காவது

## உயுத்த காண்டம்

### ஏமகூடப் படலம்

பரிதிவானவன் உதயவெற்பினை அடைந்ததும், அரியணை அமர்ந்த அறுமுகப்பெருமான், திருமால் முதலிய தேவர்களும் மற்றைபோரும் கேட்க, வீரபாகுவைப் பார்த்து "அளவற்ற பழவத்தைப் புரியும் சூரனும், அவன் குழுவினரும் ஒழிந்து, இமையவர் துன்பம் நீங்க, அவ்வீரமகேந்திர புரத்திற்கு இப்பொழுதே செல்லக் கருதினம். ஆதலால், நமது இரதத்தைக் கொணருவாய்" என்றனன். அவ்வுறுதியைக் கேட்ட தேவர்கள் பெருமகிழ் வெய்தினர். வீரபாகுதேவன் மனோவேகமாகச் செல்லத்தகுந்த இரதத்தை, வாயு தேவனாகிய பாகனோடு கொணர்ந்து, அறுமுகப் பெருமான் முன்னர் உய்த்தனன். வாயுவினால் தூண்டப்படும் அவ்விரதத்தினை நோக்கிய முருகப்பெருமான், மடங்கலாதனத்தின் இழிந்து போந்து, பொன்னொளி வீசும் மேருவரையில் தினகரர் அறுவர் ஒருசேர ஏறுதல் போன்று, செவ்வொளி திகழும் மூவிரு முகமுடைய முருகன், அவ்விரதத்தில் ஏறியருளிப் பாங்கரில்நின்ற தேவர் முதலியோரைப்பார்த்து, "நீவிர் உங்கள் வாகனங்களில் வாருங்கள்." எனவும், திருமால் முதலிய தேவர்களும், இலக்கத்தெண்மரும் தத்தம் ஊர்களுடன் வந்து தேவ தேவனாகிய முருகப்பெருமானைச் சூழ்ந்தனர். பிறகு சுப்பிரன், மேகமாலி முதல் சுவாலகேசன் இறுதியாயுள்ள நூற்றெட்டுப் பூதசேனைத் தலைவரும் சண்முகப் பெருமானை ஒரு நொடிப்பொழுதில் சூழ்ந்து நின்றனர். அவர் இரண்டாயிரவெள்ளம் பூதசேனையும், மலைகளும், புவியும் நடுங்க ஆர்த்துப் புறப்பட்டன. கலீரென முழங்கும் பேரிகை முதலாகிய கணக்கிறந்த வாத்தியங்களைப் பூதங்கள் இயம்பிச்சென்றன. பலத்தால் சிங்கத்தினை யொத்த பூதவெள்ளம், கால்களில் கழல்கள் ஆர்ப்பத் திரைக்கடலை அலைத்துக்கொண்டு, அக்கடலே வழியாக ஆதிசேடனும் பொறையாற்றாது வருந்தச் சென்றன. வெந்திறற்றுணைவர்

களும், திருமால் முதலிய தேவர்களும் சூழ, அறுமுகப்பெருமான் ஆகாய மார்க்கமாய் எழுந்தருளினன்.

இவ்வாறாகச சண்முகப்பெருமான, இரண்டாயிரம் பூதவெள்ளத் துடன், வீரபாகுதேவனால் அறிவடைந்த இலங்கையைக் கடந்து, அவுணர்கோன் அரசுவீற்றிருக்கும் மகேந்திரபுரத்தின் முன்னர்ச் சென் றான். அப்பொழுது திருமால், பிரமன், இந்திரன் ஆகிய மூவரும் அன் பால்வணங்கி அவரை நோக்கி, "மறைமொழுக்கம் தவறிய நீசர் வாழும் இந்நகரத்தினுள்ளே பெருமான் செல்லுதல் முறைமையன்று. ஆன தால், இந்நகரின் ஓர்புடை படைவீடமைத்து, அதிலிருந்து பின்னர் வேண்டியவாறே வினையம் நாடிச் செய்யவேண்டினம்.' என்றனர். அம் மொழியை நன்றென அங்கீகரித்துத் தேவர் கம்மியனை விளித்து, "ஈண்டு விரைவில் ஓர் பாசறையை அமைப்பாய்." என, அவன், மாடம், கூடம், மண்டபம், சோலை, வாவி, கோபுரம், வீதியாகிய இவற்றையும், மற்றொரு சிறந்தநகரத்தையும் இயற்றி, அதற்கு ஏமகூட மெனப் பெயருமிட்டனன் மனத்தாலெண்ணிச் செய்த அப்பா சறையை வள்ளல் கண்ணுற்று உவந்து, கணக்கிறந்த பூதவெள்ளங் களை அவ்வீதிகள்தோறும் இருக்கச்செய்து, நவவீரர்களும், தேவர் களுஞ் சூழ, அக்கோயிலுட்புகுந்து, அரியணையமர்ந்து, இலக்கத் தென்பது வீரர்களும், திருப்பரங் குன்றத்திருந்து உடன்போந்த பராசரன் புதல்வர் அறுவரும் அன்பால் போற்றவும், விண்ணவர் பணி புரிந்திருக்கவும், அங்கண் எழுந்தருளியிருந்தான்.

அவ்வாறாகிய காலத்து அதனை யறிந்த நாரதமுனிவன், மதிற் காவலோடுங் கூடிய மகேந்திர நகரத்துட்புக்கு, அவுணர்கள் உய்ப்ப உள்ளே சென்று, சூரன் அரசு வீற்றிருக்கும் சபாமண்டபத்தில் புகுந்து, சூரனைக் கண்டு, இக்கொடியன் சுற்றத்தோடும் அழியக் கடவன் என்று மனத்தாலுன்னி, வாயினால் ஆக்கங் கூறி நின்ற அம் முனிவனைப் பார்த்த சூரபன்மன், "நினக்கிடம் யாது? இங் குப் போந்ததென் கருதி? யார்?" என்றனன். நாரதன், "சிவ பெருமான் எழுந்தருளியிருக்கும் வடபெருங் கயிலையில் வாழ்வேன். உன் குலம் தலைமை எய்த, வைகலும் தவம் புரிகுவேன் வஞ்சனை புகலேன் காம முதலிய நீத்துப் பல தவமுள்ளேன் தேவருக்கிடுக் கண் இயற்றுவேன். உன் குரவனாகிய சுக்கிரனோடு நல்ல நண்பினை

யுடையேன். நாரதன் என்னும் பெயரினை யுடையேன். நின்னிடை ஒன்று உரைக்க வந்தேன். அஃதாவது, சிவபெருமான், தன்னை வேண்டிய தேவரின் இடுக்கணை ஒழிக்க, ஒரு குமரனை நெற்றிக் கண்ணினில் தந்தான். அக்குமரன், பூதவெள்ளத்தோடு அமரர் சூழச் சென்று, நினது மாநகரெய்தி ஓர்புடை பாடி வீடமைத்துத் தங்கி யுள்ளான். இந்நிகழ்ச்சி யாவும் யானறிந்தேன்." என்று கூறினான். அம்முனி மொழிகேட்ட சூரன், "இந்திரன், பிரமன், திருமால், ஆகிய இவரது ஊரென்று நினைத்து, அவமதித்து வந்தனனோ? ஆயிரத்தெட்டு அண்டங்களையும் ஆளும் என்னகரின் மீது ஓர் பாலகனா பொருதற் பொருட்டு வருபவன்? அரியினம் வாழுங் காட்டில் யானைக் கன்று உழை கலைமான்கள் ஆகியவற்றைக் கூட்டிக் கொண்டு போருக்கெழுந்ததை யொக்கும் முருகன் என்னுடன் போருக்கெழுந்தது நன்று. கடலைத்தாண்டி, என்னாணையைக் கடந்து வந்த அவனை இப்பொழுதே வெல்வேன். பாலகனென்றும், பழி யென்றும் பாரேன். செங்கதிரைச் சிறை செய்த என் புதல்வனைக் கொண்டு பூதரை யழித்து, முருகனை வெற்றி கொள்வேன். இதனை நோக்குவாய்.'' என்று அசுரரிறை மொழிந்தனன். நாரத முனிவன், "நன்று இது, நன்று இது. இனித் தாமதிக்காதே. இப் பொழுதே அவனோடு போர் புரிய நின்படையை ஏவுவாய். வெற்றி நினக்குண்டாக யான் சென்று நோற்பேன்." என்றுரைத்து, நகை செய்து, விண்வழிச் சென்றான். நாரதன் இவை கூறியகன்ற பின்னர், சூரன், அருகில் நின்ற கோரன், உற்கோரன் என்னும் ஒற்றர் இருவரை நோக்கி, "கடற்கிறைவனைப் பற்றி வாருங்கள்.'' என்றான். அவர்கள் விரைந்து சென்று, அக்கடற் கிறையைப்பற்றிச் சென்று, முன்னர் விடுப்ப, அவன் கன்றிய மனத்தோடு, தொழுத கையனாய் அவலமிக்க நின்றனன். அவனை நோக்கிய சூரன் நெருப்பெழ விழித்து, "அடா வருணனே! திருமாலும், பிரமனும் செவ்வனே அறியாவண்ணம் ஒளித்தவன் புதல்வனைப் பூதவெள்ளத்தோடு இங்கு எமக்கு மாறாக வர வழிவிட்டனை அஃதென்னை?" என்று கேட்டனன். அதைக் கேட்ட புனற்கிறை, "மண்பட்ட அண்டங்களைக்காக்கும் மன்னவ! ஏனைய தேவரோடும், துணைவரோடும், அறுமுகன் விண்ணாறாகச் சென்றனன். முரண்பட்ட பூதவெள்ளம் எல்லாம் என் வழியாகச்

கடந்தாகலா. யான் அவ்வீரரது காலடியின் பரட்டளவாகவும் நின்றே னில்லை. அத்தகையரை யான் எப்படி மறுக்க முடியும்? ஊழியினும் அழியாத பூதர்கள் விரைவிற்.செல்லுதலால், அவர்கள் காலினால் கலக் குண்டு, சேருகிய அதனால் வருந்தினேன். ஆழியன் என்னும் பெயரும் இழந்தனன். வசைமொழியையும் அடைந்தேன். குறுமுனி கையிற் கொண்டு உண்டாற்போல உண்குவர். அவர்களுள் ஒருவர் கரத்திற் கேனும் அள்ளுதற்கு ஆற்றகில்லேன் ஆகலான் பிழைத்தேன்." என்று இவற்றையெல்லாம் வருணன் கூறி, மெய்ந்நடுங்கி நின்றனன். பின்னர் ஒற்றர் சிலர் வந்து, "சண்முகன் தானேயொடும் வந்து பாடி வீட்டிலுள் ளான்." என்று கூறினார்கள்.

## முதனாட் பானுகோபன் யுத்தப் படலம்

ஒற்றர் கூறியதைக்கேட்டு, அண்டமும், புவனம் யாவும் கழற் சியடைய அழல்போற் சீறிப் புண்ணினையொத்த கண்களையுடைய சூரபன்மன், "வேற்படையைத் தாங்கிய குமரனது ஆற்றலும், திண்ணிய பூதர்தம் • ஆற்றலும், மற்றையோர் ஆற்றலும் இல்லையாம் வகையிற் றொலைப்பேன். நீவிர் சென்று, நம்புதல்வனாகிய பானுகோபனை விரைவில் கொண்டுவாருங்கள்." என்றான். தூதர் சென்று, பிதா உரைத்ததைப் பானுகோபனுக்குப் பகர, அவன் பொருக்கென இருக்கைவிட்டெழுந்து, அமைச்சர், சுற்றத்தினர், தானைத்தலைவர் ஆகிய அனைவரும் புடை சூழ, மிகவுயர்ந்ததோர் இரதமேறிப் பலவீதிகள் கடந்து, ஆங்காங்கு வீரர்கள் கைதொழச்சென்று, தாதையின் திருநகரடைந்தான். அடைந்த பானுகோபன் சூரன் முன்சென்று வணங்கி, "அண்ணலே! என்னை அழைத்த காரணம் யாது?" என்று வினவினான். சூரன், "முந்து தாரகனை வரையோடு முடித்த அறுமுகன், செந்தி நீங்கித் திரைகடல் கடந்து, நந்திகணத்தோடு பூதரும் நணுக, இந்தமாநகர் வடதிசை வாயில் இருந்தனன். சிந்து போன்று, நீண்டு உலகளந்த கள்வனும், நம் திசைமுகத்தனும், என்பணி இகந்த இந்திராதியர் யாவரும் பிறரு மாய்க் குழுமி வந்துளார்களாம். அம்மதலையின் பாங்கர் எளிய அமரரும், அரன்தருமதலையும், நந்திகணத்தரும், நெடும் பசிப் பூதரும் கடிது வந்தெய்தற்கு எளிதுபட்டதோ நம் மாநகர்? நன்று, நன்று. என் பின்னவனை அட்டவனையும், மற்றையோரையும் மாய்ப்பதற்குப் போவதென் கடன். அவர் சிறியர் • யான் மன்னர் மன்னன்.

ஆதலின், வறிதிருந்தேன். இந்திரன் வேண்ட சிவபிரான், தான் பெற்ற புதல்வனைப் பூதப்படையொடும் நம்மேற் போருக் கேவி னன். ஆதலான், மைந்தனே! நின்னைக்கொண்டு யானும் வெற்றி யடைதல் முறைமையாகும். நீ படையோடும் போர்க்களத்தை யடைந்து, நிமலன் மைந்தனையும், மற்றுமுள்ளோரையும் பொருது, அழித்து, வெற்றியுடன் விரைவில் என்னிடம் மீளுவாயாக." என்று கூறினன். சூரன் சொல்லைக் கேட்ட பானுகோபன், தோள்கள் பூரிக்கப் பெற்றவ னாய், "இருண்ட மிடற்றினையுடையான் புதல்வனைப் பூதரொடும் வெல் வது ஓர் பொருளென நினைந்தோ இவற்றையெல்லாங் கூறினை? நேற்றே யான் போருக் கெழவேண்டியும் ஆணை தந்திலை. கழிந்தது பகருதல் காரியமன்று. யான் படையின் குழுவொடுஞ் சென்று, அம் முருகனை வென்று, பூதரை வென்று அவன் பாங்கருள்ள மால், அயன், இந்திரன் ஆகியோரை வல்லையிற் பற்றிவந்து, உன்முன் விடுப் பன். அதன்பின் ஓல்லுவதியற்றுவாய்." என்று கூறித் தாதையின் விடைபெற்றுத் தனது தேரிலேறிச் சென்றான். பழைய பரிசனங்கள் தன்னைச் சூழவும், பல பதினாயிரம் துணைவர் பாங்கரிற் செல்லவும், பானுகோபன் தனதிருக்கைக்கேகித் தூதரைப்பார்த்து, "நமது படை யனைத்தையும் விரைவில் இவ்விடம் கொண்டுவாருங்கள்." என்று கூறிப் பின் பரிஜனங்களை நிறுத்தத் தான், வீரலக்ஷ்மி வாழும் ஆயுதச்சாலையிற் புகுந்து, அங்குள்ள துர்க்கா தேவிக்குப் பூசையாற்றி னன். அதன் பின்னர் உயுத்த கோலம் பூண்டு, முடியினில் தும்பை மாலையினைச் சூடி, வெற்றியுண்டாகவென்று பெரிய வில்லையுமெடுத்து, மோகனப் படையையுமேந்தி, வாய்தலில் வரவும், தூதரால் அழைக்கப் பட்ட பதினாயிரம் வெள்ளம் அசுரப்படைஞர், கடலும் உட்க ஆர்த்துத் தத்தந் தலைவரைச் சார்ந்து, பெரியவில், நெடிய கதை, நீண்ட சூலம் என இவை முதலிய ஆயுதங்களைக் கைக்கொண்டு சென்றனர். தேர், கரி, பரி ஆகிய இம்மூவகைப்பட்ட பதினாயிர வெள்ளப் படையும் தத்தம் தலைவர் பக்கஞ் சூழ்ந்து வந்தன.

இவ்வண்ணமாகிய இருபதினாயிர வெள்ளக் கணக்கினையுடைய நால்வகைச் சேனையும் நெருங்கிச் செல்ல, வலிமை மிக்க சேனைத் தலைவர்கள், தங்கள் மனத்தினையொத்து, விரைந்து சென்று, பானு கோபன் நின்ற இடத்திற் கெய்தி, கைதொழுது, ஓல்லென்றார்த்து,

நெருங்கி . அவனைச் சூழ்ந்து கொண்டனர். பானுகோபன், தன் சேனைகளைக் கண்டு ஓர் ஏவலனை நோக்கி, "எனக்குரிய ஓர் பண்ணிய தேரைக் கொண்டுவருவாய்.". என்ன, அவன் சென்று முப்பதினுயிரம் புரவிகள் பூண்டதோர் . பெரிய தேரினைக் கொண்டுவர, அத்தேரின் மீது, உதயகிரியில் வரவுகின்ற பரிதிபோன்று பாய்ந்தான். அதுபொழுது சேனைகளெல்லாம் ஆர்ப்பரித்தன. பெரிய பாக்கு மரங்கள் விரிந்த பாளைகளை நீட்டினாற்போன்று, அசுரர் பல்லோர் கவரி வீசவும், அவனது புகழ் பரந்தாற் போன்று, வெண்கொற்றக் குடைகள் மேலே நெருங்கவும், அடப்பை, கோடிகம், ஆகிய இவை முதலியவற்றை ஏந்தி, முறையே படைப்பெருந் தலைவர் போற்றவும், அழகிய தேரில் வைகும் பானுகோபன், உழையரை நோக்கி, "ஆயுதங்கள் அளப்பில கொண்டுள்ள ஒரு கோடி சேமத் தேர்களைக் கொண்டு வாருங்கள்." என்றனன். அவர்கள் சென்று, கூறிய வண்ணமே ஒரு கோடி சேமத்தேர்களைக் கொண்டு வந்து, பானுகோபன் மருங்கு சூழ நிறுத்தினார்கள். ஆண்மையிற் சிறந்த அம்மைந்தன், அப்பொழுது பாகனைப் பார்த்து, "நமது தேரினைக் கந்தன் வைகும் களத்தினிற் றாண்டுவாய்." என்றான். அப்பாகன் நன்றென்று, முட்கோல் மத்திகையின் . தொழில் வன்மை காட்டி, நெருங்கிய புரவிகளைத் தூண்டிப் பொற்றேரைப் போர்க்களம் நோக்கி நடத்தினான். நால் வகைப் படையும் நெருங்கி நடந்தன. பேரிகை, தடாரி, தண்ணுமை, தக்கையாகிய இவைகள் அடிக்கப்பட்டன. சங்கு காகளம், கொம்பு, சல்லிகை ஆகிய இவைகள் ஊதப்பட்டன. பூமி அதிர்ந்தது, மலைகள் அசைந்தன, தாரகை யுதிர்ந்தன, தேவர்கள் வருந்தினர். மேரு மலை விண்டது, சொல்லுதற்கரிய வளப்ப மிக்க அம்மாநகர் தன்னில் வன்மை மிக்கெழுந்த அப்பெரிய படையின் வெள்ளம், புவியின்கண் வழி பெறாது வானத்தூடும் அளவிலவாகப் பரந்து சென்றது.

இவ்வண்ணம் பானுகோபன் படையொடு செல்லுதலைத் தெரிந்த நாரதமுனிவன் பூதவெள்ளத்துள்ளே புகுந்து, ஞான நாயகனாகிய குமரவேளை . யடைந்து, வணங்கி நின்று, "எம்மை ஆளாகவுடைய பெருமானே! தேவரீர் பூதவெள்ளத்தோடு இங்கு வந்திருந்ததைத் தூதரால் அறிந்த சூரன், மிக்க வீரந்தங்கிய அவன் குமாரனாகிய

பானுகோபனை அழைத்து, இருபதினாயிர வெள்ளப் படையொடும் போருக் கேவியுள்ளான். அந்தப் பானுகோபன் மிக்க வீரன். பல பெரிய போரைக் கடந்தவன். அவனோடு போர் செய்தல், நின்னை யொழிந்த ஏனையோர்க் கியலாது." என்று கூறினான்.

அம்மொழி கேட்ட குமார நாயகன், வீரபாகுதேவனை அழைத்து, "இலக்கத்தெண்மரொடு ஓராயிர பூதவெள்ளத்தைக்கொண்டு சென்று, விரைவில் அவனது நகர மதிலை முற்றுகையிட்டு, அம்மகேந்திரத் தின் முதல் வாயிலை அழித்து, உன்மேல் உறத்துவரும் பானு கோபனுடைய படைகளை நாசஞ் செய்து, அப் பானுகோபனுடன் போர் புரிந்து, வெற்றியோடு மீளுவாய்.'' என்று ஆக்ஞாபித்தருளினான். அவ்வருள் பெற்று வணங்கிச் சென்ற வீரபாகுதேவன், சிகரம் பொருந் திய மேருமலையை யொத்த திண்ணிய சிலையொன்றினைப் பிடித்துக் கவசமணிந்து, தூணியைக் கட்டி, வெவ்விய படைக்கல நிரம்பிய சேமத்தேர்கள் அளவில மருங்கிற் போதப் பொன்னாலாகியதோர் தேரின் மீதேறினான். இலக்கத்தெண்மராகிய வீரர்களும், மற்றுமுள்ள பூத சேனாதிபதிகளும், போர்க்கோலங் கொண்டு, வானை முட்டிய தேர்த்தொகைகளில் வன்மையோடும் ஏறினார்கள். அதன்பின் சூரன் மாநகரத்தில் போர்புரியும் வண்ணம், ஆயிரவெள்ளம் படைஞர் கடிது செல்லுங்களென்று பூதராயினார் பறையறையவும், அதுபொழுது ஆயிரவெள்ளஞ் சேனை முருகப்பெருமானைச் சூழ்ந்து, போற்றி யிருக்க, மற்றை ஆயிரவெள்ளஞ் சேனையும், கடலுடைந்தாற் போன்ற, திரண்டு தீப்போலச் சீறி ஆர்த்து, ஊழிக்காலத்து பெருங்காற்றினை யொத்து வருவதாயின. சேடனாற்றாங்கும் புவியை ஓர் தோளில் எடுத்து வைக்கும் வலியகையினர், மறலியை மாய்க்கும் வன்மையை யுடையார், வீரர்க்குவீரர்; இன்ன பலவாய வீரத்தன்மையினை யுடைய பூதர் அனைவருஞ் செல்ல, அவர் தலைவரும், தன்னிளைஞரும் சூழ வீர பாகுதேவன் போரினைக் குறித்துச் செல்லலாயினான்.

பலவாத்தியத்தின் முழக்கத்தோடுஞ் செல்லும் அச்சேனையின் அடித்துகள், விண்ணினை மறைத்த, இவ்வாறாகிய சேனவெள்ளத்தோடு அறநெறிகடந்த சூரனது மாநகர் இஞ்சிக்கருகே வீரபாகுதேவன் செல்லுதலை நோக்கிய சில தானவர், விரைந்தோடிச் சேனைக்கடலைக் கடந்து பானுகோபனை அணுகி, "எம்மிறைவனே! தானைசூழ

நீ போருக்கெழுந்த செய்தியைத் தெரிந்து, முன்னம் இங்குத் தூதாக வந்தவனைப் படையொடும் போருக்கேவினன் அவ்வறுமுகன். இது நிகழ்ச்சி." என்றனர். அதனைக்கேட்டுச் சீற்றமடைந்த பானுகோபன், "புல்லிய பூதர் சேனையையும், வன்மையற்ற தூதனையும், மழலைப் பிள்ளையையும் வலிதொலைத்து யான் மீளினும் என்மனத்தெழும் வெகுளி ஏகற்பாலதோ? கடல் ஏழையும், திசையனைத்தையும் அவர்கள் கடந்து செல்லினும் யான் விடுவனோ? அவர்களைப் பிடித்துப் பிணித்து வருகின்றேன்." என்று இன்னபலகூறிக் கன்றியமனத்தொடு கடுமையிற் செல்லுதலும், நெருங்கிவந்த அவுணப்படை வடக்குவாயில் கதவு நீங்கி, முன்சென்றன. அப்பொழுது பூதரைப்பார்த்த அவுணர்கள், "இவர் கள் இதற்கு முன் அமருக்காற்றாது, அஞ்சியோடிய தேவர்களல்லர். இவர்கள் மிக்க வலியுடையர் போலும்! ஆயினும் நமக்கு இவர் எத் துணையர்"? என்று கூறிச்சென்ற குறையற்ற தானவரும், காயுங் கனலை யொத்த சூர்விழிப் பூதவீரரும், ஒருவரோடொருவர் எதிர்த்துப் போருக்கு நெருங்கலால், இருதிறப்படையும் இகல்கொண்டு முட்டின. யானைகளின் துதிக்கைகளில் இருப்புலக்கைகளைக் கொடுத்துப் பூதரைக் கொல்லென்னுங் குறிப்புரையைக் கூறி, அனேக அவுணர்கள் யானை களைச் செலுத்தினர்கள். சில அவுணர்கள் கொலைத் தொழிலு டைய யானைகளையும், வெற்றியினையுடைய புரவிகளையும், பெரிய தேர் களையும் நீங்காவகை புறமே நிறுத்தி, நிலத்திற் புகுந்து, பூதர்மேல் முத்தலைவேற் படைகளையும், முசுண்டி, தோமரம், மழு, தண்டு. ஆகிய இவை முதலிய படைகளையும் வீசினர். கைகளால் பெரிய படைகளை எறிந்த அவுணர்களைப் பூதர்கள், பெரிய மரத்தைக் கொண்டும், எழு வைக் கொண்டும், மலையைக் கொண்டும் அஞ்சும் வண்ணம் சிதற அடித் தனர். இவ்வாறு இருபடைகளிலும் மாண்டுக் கிடந்த படைகள் அள விலவாகவும், அதனால் சோரியாறு பெருகா நின்றது. பூதர்கள் இர தங்களை இரதங்களாலும், கரிகளைக் கரிகளாலும், பரிகளைப் பரிகளா லும் தமது கால்களாலும் மோதி, அவுணப்படையைப் பெரிதும் அழி த்து வருகையில், அவர் ஆற்றாது உடைந்து போயினர். அப்பொ ழுது ஊற்றொடு அனல் கலந்த தன்மையனாகிய அனலியென்னும் அவுணவீரன் கண்டு, விண்ணினூற்றி அனேகமான அம்புகளை மாரி போல் பொழிந்து, பூதரை வருத்தவும், சிங்கனென்னும் பூதசேனைத்

தலைவன், நெருங்கி அவன் இரதத்தின் கட்டிய குதிரைகளைக் கைத் தண்டினாற் சாடுதலும் அவை மாண்டுபோயின. அதன் பின்னர், அவ் வனலன் கார்முகம் வளைத்து, அம்புமாரி தூவிச் சிங்கனை வருத்த, அச் சிங்கனாகிய பூத சேனைத்தலைவன், அவன் மீது பாய்ந்து வில்லைக் கரத்தி னின்றும் ஈர்த்தெறிந்து, அவன் கொண்ட தண்டுடன் அவனை எடுத்துச் சுழற்றிப் பூமியில் மோதி, அவ்வனலன் உயிரைப் போக்கினான். அது பொழுது அவுண வீரனாகிய சண்டன் என்பவன், எதிர்த்துத் தண் டேந்திப் பெரும்போர் புரிதலும், சிங்கன், அவனையும் நெடுநேரம் போரியற்றிப் பின்னர் மாய்த்தான்.

பிறகு அவுண வீரருள் அஜமுகன் முதலியோர் முடிய, மற்றைய அவுண வீரர்கள், நாற்படையுங்கொண்டு கடும்போர் புரிதலும், பூதர் சேனை போருக் காற்றாது வலியிழந்து, இரிந்து போயின. அத்தோல் வியைக் கண்ட தண்டகனென்னும் இலக்கருள் ஒருவனாகிய வில்வீரன், தன் வில்லை வளைத்து அம்புகளைச் செலுத்தி அவுணப்படை முற்றுங் கலங்கும்படி அழிக்க, அப்படை எதிர்த்து நிற்கமாட்டாது, திக்குகள் தோறுஞ் சிதறியோடின. அவுணவீரர் இறந்தமையும், படை இரிந்த மையுங் கண்ட பானுகோபன், வெகுண்டு நகைத்து, "இந்திரன் முத லிய தேவர்கள் இரிந்தோடச் சமர் புரிந்த நமது படைஞர் இன்று சிவன் மகன்விட்ட படைஞரால் இறந்து பட்டனரோ? இரவியைச் சிறைசெய்த யானிருந்தும் ஈங்கிவ்வாறு நேர்ந்தது நன்று, நன்று. யான் தனித்து நின்று போர் புரியாது, படையின் கடையி லிருந்து, இவர்களை மாளச்செய்தேன். அந்தோ!" என்று அவர் கழிவுக் கிரங்கினான். பின்னர் அவன் ஒப்பற்ற தன் வில்லை வளைத்துப் பூத சேனையின்மேல், சுக்கிரன் அத்தமனமின்றிச் சூரியன் முன்னே உதித்து, ஆட்சியா யிருக்குங் காலத்து, கருக்கொண்ட மேகங்கள், மிகு மழை உலகிற் பொழியுமாறு போன்று, கணைமழை சொரிந்தான்.

இவ்விதமாகப் பானுகோபன், தன் வில்லாற்றலால் பூதப்படையைக் கொல்லுதலும், அளவில்லவர் மாய்ந்திட, நின்ற பூதர், வன்மை யற்று, "முருகப்பெருமான் அங்ஙனே உள்ளான். வீரபாகுதேவன் பின்னணி யில் நின்றனன். இதனையறிந்தானில்லை. மற்றையவீரரும் அவ்வாறேயுள் ளார்; முன்வந்து இவனிடத்து அகப்பட்ட நம்மை இவன் இப்பொ ழுதே கொன்றுவிடுவான். ஆதலின், யாம் இங்கு நிற்பதென்?" என்று

நினைந்து, பயந்து ஓடிவிட்டார்கள். பூதர் இருந்ததைக் கண்ட உக்கிரன் ஓர் பூதவீரன், கனன்று, ஓர் தண்டினை எடுத்துத் தனித்துவருதலும், பானுகோபன் அனேக கணைகளை அவன்மீது தூவினான். அக்கணைகள் அவன் மேனியின் புதையாமல் வறிதே மழுங்கி விழுந்தன. அதன்பின்பு ஓர் முசலத்தைவிட அதையும்பொடியாகப் பானுகோபன் ஏறிய தேரிடைப் பாய்ந்து, அப்பரிகளைப் புடைத்து மாய்த்துப் பானுகோபனை ஆகாயத்தில் அருக்கனருகிற் செல்லும்படி வீசினான். போய் மீண்ட பானுகோபன் கீழே குதித்து, உக்கிரனைத் தன் கைவன்மையால் எடுத்து மேலே வீசி அவன் மீண்டு வருங்கால், அவனது மார்பிலக்காக பிரமனளித்த வேலினை விடுத்தான். அவ்வேல் அவன் மார்பைத் துளைத்துச் செல்ல, உக்கிரன் பூமியை அடைந்து சிறிது அயர்வு அடைந்தான். பிறகு தண்டி, பினாகி என்னும் பூதவீரரும் எதிர்த்து, வலி குறைந்து நின்றனர். அக்காலையில் மற்றைப் பூதவீரரும் திரள் திரளாக நின்று போர்புரிந்து, ஆற்றாது உடைந்தோடினர். அதைக் கண்ட இலக்கம் வீரரும், வில்லை வளைத்துப் பாணவரிசைகளைப் பானுகோபன்மீது விடுத்தனர். அவுணர்கள் அஞ்சவரும் அக்கணை மழையைப் பானுகோபன், தன் வில்லை வளைத்து, ஆயிரங்கோடி கணைகளைத் தொடுத்து, விரைவின் மாற்றி, மற்றோர் ஆயிரம் கோடியாகிய கணை மழை சொரிந்தனன். அவற்றை வீரர் கழிக்க, அவ்விலக்கம் வீரர் பிடித்த வில்களையும், வச்சிரக் கணைகளையும் மேலும் மேலும் செலுத்திச் சூரன் மகன் அறுத்தான்.

அவ்வீரர்கள் சேமத்தேர்களில் ஏறி நின்று பானுகோபனுடைய அஸ்திரங்களை யெல்லாம் தம் கணைகளா லறுத்து, அவனது தேர், புரவி, கொடி ஆகியவற்றை யறுத்துப் பாகனையுந் தள்ளினார்கள். அதன்பின் பானுகோபன் வேறோர் தேரில் ஏறி, அவ்விலக்கம் வீரர்களின் தேர்களையும், அவர் வில்லையும் அறுத்து, அவரது உடம்பு முழுமையும் அளவிறந்த அம்புகளை அழுத்தினான். பகழிகள் பட்டுக் குருதிசோரும் யாக்கையினையுடைய அவ்வீரர் வலிகுறைந்து, எதிர்த்து நிற்கமாட்டாதவராய் உடைந்துபோயினர். இலக்கம் வீரரையும் தொலைத்துத் தனித்து நின்ற பானுகோபன்மேல் வீரகோளரி என்னும் பெரிய வீரன் சென்று, வில்லைவளைத்துக் கணைகளைச் சொரிய, அவற்றையெல்லாம் வச்சிரக்கணைகளால் அறுத்து, அவன் தேரின்மேல்

ஆயிரங் கணைகளை அழுத்தினன். வீரன் மற்றவன் தூர்ந்த கணைகளை விலக்கி, அவனது மார்பகம் பல புழையாகும்படி அம்புகளை எய்தினன். பானுகோபன் வருந்தி, இவனை இவற்றால் வெல்லுதல் அரிதென் றெண்ணி, நாராயணாஸ்திரத்தை எடுத்து அவன்மீது விடுத்தனன். அவ்வஸ்திரம் அந்நாராயண உருவினைக்கொண்டு நடந்து, அவன் விட்ட கணைகளை விழுங்கி, அவ்வீரகோளரி அப்படை எடுப்பதற்கு முன் அவனது மார்பில் புகுந்து, அவனை அவசமாக்கிச் சென்றது.

பின்னர் வீரமார்த்தாண்டன் எதிர்த்துப் போர் புரிந்து, பானு கோபனது சுரிகையினால் குற்றுப்பட்டு மயங்கி வீழவும், வீரராக்கதன் அவனொடு எதிர்த்துப் போர்புரிந்து, பானுகோபன் மணிமகுடத்தைத் துணித்துப் போர் புரிந்து வருகையில், அவ்வவுணன் புதல்வனை விண் ணிடையே அவன் இரதத்தொடும் எடுத்தெறிந்தான். அவ்வாறு விண் ணிற்சென்ற பானுகோபன், பிரமன் கொடுத்த வேலாயுதத்தை அவன் மீது விடுத்தனன். வீரராக்கதன் அப்படையினால் தரையிடைப் பட்டான். பிறகு வீரவந்தகன், வீரமகேச்சுரன், வீரதீரன், வீரமகேந் திரன், வீரபுரந்தரன், ஆகிய இவ்வைந்து வீரர்களும், பானுகோபன் மேல் வில்லை வளைத்துக் கணைமழை சொரிந்தவர்களாகி, மட்டற்ற பெரும்போர் புரிந்து, கடைசியாக பானுகோபன் கணைகள் மெய்யிற் றைத்து வருத்த, இருவர் களைத்து நின்றார்கள். ஒருவன் மயங்கி வீழ்ந் தான். மற்றிருவர் வருந்தி ஓடினார்கள். சொல்லிய இத்திறம் சூரன்மகன் தனித்து நின்று, எல்லா வீரர்களையும் வெற்றிகொண்ட சமயத்தில், முன்னர்ச் சிதைந்தோடிய அவுணப்படைகளெல்லாம் நாற்றிசையி னின்றும் போந்து, ஒருங்கே பானுகோபனைச் சூழ்ந்தன.

இவ்வாறு இரிந்தோடிய படைகள் மீண்டதும், பானுகோபன் வெற்றியோ டிருப்பதும் ஆகியவற்றைக் கண்ட நந்திகணத் தலைவனாகிய வீரபாகுதேவன், அறுமுகப் பண்ணவன் திருவடியை மனத்தமைத்துத் தனது நெடிய சிலையினை, மறையொழுக்கம் அறாதவர்கள் வாழும் வண் ணம் வளைத்தான். வளைத்த பின் சண்டமாருதமும், வடவக்கனலும் அஞ்சி இழுக்கண்டயவும், கடலுந் தன்னொலி அடங்கவும், அண்டங் களும் புவனங்களும் அழிந்து பிரதித்தொனி கொடுக்கவும், வீரபாகு தேவன் நாணொலியை உண்டாக்கினன். இவ்வாறு நாணொசை செய்து, எதிர்த்து வருகின்ற வீரபாகுதேவனைப் பார்த்து, பானுகோபன், தன்

வில்லை வளைத்து அதற்கு நேராகக் குணத்தொனி செய்தலும், தேவர் நடுக்கமடைந்தனர். அச்சமயம் வீரபாகுவை எதிர்த்து நின்ற அவு ணன் மகன் வீரனை நோக்கி, "நீ தாரகனைக் கிரவுஞ்சத்தொடு படுத்திய குகனல்லை, அரியல்லை, பிரமனல்லை, மற்றைத் தேவர்தம் இறையல்லை. மாயை இழைத்து நேற்று எம்மண்ணல் முன்வந்து, சின்மொழி கழறி என்னிளவலைப் படச் செய்தனை. யான் அஃதுணர்கிலன். அதனுல் உயிர்கொடு போந்தாய். உன்னை வென்றாலும் எனக்கு இழிவேயன்றி மேன்மை இல்லை. நீ தூதனுகையால் எதிர்த்த நின் துணைவரை வென் றேன். முரண்பட்ட பூதரை அடர்த்தேன். படையைச் சிதற அடித் தேன். தனித்தெதிர்த்த நின்னை முடிக்குவன். உன்னை விடுத்தோனை யும் வருத்தி, என் சினத்தையும் முடிப்பன். மகபதியையுஞ் சிறை செய்குவன்." என்று கூறினன். அதைக்கேட்ட வீரபாகுதேவன், "யாவராயிருப்பினும் எதிர்த்துப் போர்புரிவோரை வெல்லுபவரே திற மையுடையார். வாயாற் பேசுவதா லெய்திய பயனென்னை? உனது போர்த்திறத்தைக் காட்டுவாய்." என்று கூறினன். பானுகோபன், பத்து அம்புகளை வில்லிற் பூட்டி, மின்னலைப்போல விடுத்தலும், அவ்வம்பு களை வீரன் தனது சரத்தினுல் அறுத்து, நூறு அம்புகளை அவுணன் மீது விடுத்தனன். அவன் அவ்வாறே அறுத்து ஆயிரம் அம்புகளை வீரபாகுவின்மேல் எய்தான். அவன் அவற்றை அறுத்துத் தள்ளிப் பதினுயிரம் அம்புகளை ஏவினன்

இவ்வாருகச் செவ்விய கணைகளை நூருயிரங்கோடி யென்னுங் கணக்கையுங் கடக்க இருவரும் ஏற்றுச் சரமாரிபொழிந்து, மலையுங்கால த்து பூமிமுழுமையும் மறைந்தது திசையெலாம் மறைந்தன. பரப்புள்ள கடல் மறைந்தது. ககனமும் மறைந்தன, கதிரவன் கிரணமறைந்தன இவ்வாறு அமராற்றுகின்ற அவருடைய தேர்கள், சாரிகைவட்ட மாய்த் திரிந்தன. கண் சிவந்து வெகுண்டு போர்புரிகின்ற இரண்டு வீரர்களும் இன்ன திசையிலிருந்து போர் செய்கிருர்களென்று அறி தற் கியலாமையினுலும், அவர்கள்விடும்பகழிக்கூட்டம் ஆகாய முழுவ தும் நிரம்புவதாலும், வானின் கண்ணுள்ள தேவர்கள் அஞ்சியோடி னர்கள் அவ்விருவர் அம்புகள் பூமியைக் கிழிப்பன. அண்டங்களைத் துளைப்பன. புறவாழியைக் குடிப்பன. புவனங்களைக் கடந்து செல் வன. வலிமை மிக்கன, யாவராலும் தடுத்தற் கரியன. வடவைக் கன

வின் எழுநாவையுந் துளைப்பன. மிக்க வலிமையுடைய வீரபாகுவும், பானுகோபனும் செய்த போரின் திறத்தைப் பகரும் வன்மையுடையார் யாவர்? அவர் கையிற் பிடித்த சிலைகள் ஓயாத கணைமழை சொரிதலால், நேமிப் படையை யொத்திருந்தன. அச்சமயத்து வீரபாகு தேவன் விட்ட கணைகளை அறுத்து அவன் பிடித்த வில்லையும் பானுகோபன் அறுத்தான். பின்னர் வேறோர் சிலையை வளைத்துப் பெருஞ் சிரம்பிடித்து, ஆயிரம் பயங்கரமான அம்புகளைவிட்டுப் பானுகோபன் வில்லைத் துணித்தான். விற்றுணி வெய்தியதும், அவுணன் ஆற்றவுஞ் சீறி, மற்றோர் சிலையினை வளைத்து, அவன் மார்பிற் றைக்கும்படி எய்தினன். வீரபாகுதேவன், அவன் முடியையும், கவசத்தையும் உடைத்தான். பானுகோபன், வீரனது நெற்றியில் பதியும் வண்ணம் ஆயிரங் கோல்களைத் தூப்ப, அவற்றைப் பறித்து எறிந்து தகுவன் நெற்றியில் ஆயிரம், தோளில் ஆயிரம், மார்பில் ஆயிரம், கரங்களில் ஆயிரம் ஆகத் தொகுதிகொண்ட அம்புகளைச் செலுத்தி அவன் யாக்கையைத் தொளைத்தனன். பானுகோபன் மயங்கி, வலியற்று வெறுங் கையோடு நின்றான். அவன் உடல் முழுவதும் இரத்த ஊற்றுப் பெருகத் தொடங்கிற்று இரத்தஞ்சோர நின்ற அப்பானுகோபன் மனத்தில் சீற்றமிக்கவனுப்ச் செந்தழற்கானும் மலையெனும்படி விளங்கினன். அவ்வண்ணம் நிகழ்ந்த காலத்து, அவுணவீரர்கள் திரண்டுவந்து வீரபாகுவைச் சூழ்ந்து, சூல முதலிய அனேக ஆயுதங்களைக்கொண்டு போர்செய்யத் தொடங்கலும், தனது வில்லை வளைத்து அதில் ஆயிரம் கோடி கோடியாகிய எண்ணினையுடைய வெவ்விய பாணங்களைத் தூண்டி, அவ்வவுணர் விட்ட படைக ளனைத்தையும் சிந்தும்படி செய்து, திரண்ட இருளைத் தனது கரங்களாற் சீறி யொழிக்கும் பரிதியைப் போன்று விளங்கினன். அதன்பின் அனேக கடுங்கணைகளைச் சொரிந்து, இரதங்கள், கரிகள், புரவிகள், வீரர்களாகிய நால்வகைப் படையும் உறுப்புக்கள் அறுபட்டு நாசமாகவும், அக்கள முழுவதும் குருதியாறு பெருக்கெடுக்கவும், பிணக்குவியல் விண்முட்டவும் ஆகிய காலத்து வீரபாகுதேவன் ஒருவனே அசுகளத்தினில் எஞ்சி நின்றான். அவுணர் பட்டதையும், பானுகோபன் நொந்ததையும் முன் அவுணனால் ஈடழிந்து திசைகள்தோறும் சிதறியோடிய பூதசேனை கண்டு வீரபாகுவை மீண்டு வந்து சூழ்ந்தன.

இரிந்தோடிய பூதவீரர் யாவரும் மீண்டனர். நின்று வருத்த மெய்திய தலைவர் பண்டைய வலி பெற்றனர். துயர்கொண்டு மயங்கி வீழ்ந்தவர் ஆவி தெளிந்தெழுந்தார். இக்குழுவினர் யாவரும் வீர பாகுவின் பாங்கர் நெருங்கினர்.

அதுபொழுது பானுகோபன், களைப்பு நீங்கி, உணர்வு தோன்றக் கண் விழித்துச் சற்று நோக்கிய காலத்து, அளவு கடந்த தன் பெருஞ் சேனையைக் காணாது, ககனமோங்கிய களேபரக் குவியலையும், அக்களத் தில் தனிவில்லாளியாகி நின்ற வீரபாகுதேவனையுங் கண்டு, இவ்வொரு வனே நம்சேனை முற்றையும் முடித்தனன்போலும்! இவன் தக்க வீரனு கத் தோன்றுகின்றான். எனது கொற்றம் நன்று, நன்று. இனியொருநாழி கைப்பொழுதில் இவனது யாக்கையைச் சின்ன பின்னங்களாக்குவேன். அவ்வாறு செய்யேனென்னில் பின்னர் உயிர்வாழ விரும்பேன். யான் பிறந்தேனுமல்லேன், என் சிலையொடு யான் தீப்புகுவேன்." என்று வஞ் சினங் கூறி, வீரபாகுவின் முன்னர்த் தேரொடு சென்று கார்முகம் வளைத்து, கணை பல சிந்தி வீரன் மெய்புதைப்ப, ஆங்கவன் கணைகள் அளவில் தொடுத்து, அவுணனை யழிக்கவும், இவ்வாறாகிய கொடுஞ் சமர் பலவிதங்களாக ஆற்றி வருங்கால், பானுகோபனுடைய தூணியை அறுத்துத் தள்ள, அதனைக் கண்ட அவுணன், இவனை வில்வித்தையி னால் வெற்றி கொள்ளுதல் முடியாதென்று கருதி, ஓர் விளையத்தை உன் னித் தேவதேவனால் கொடுக்கப்பட்ட மோகனப்படையைக் கையிலெடு த்து, வழிபாடாற்றி, "வெவ்விய படைஞரோடு பகைவனது புந்தியைக் கலக்கி வீழ்த்தி வருவாய்." என்று கூறி விடுத்தனன்.

அப்படை பவகுளி மேலீட்டொடு தீயைக் கக்கிக்கொண்டு, பல்லு யிரும் அஞ்சி மனமயங்கப் பொள்ளெனப் பெயர்ந்து, பகைவர் களம் புகுந்து, பூதர் துணுக்கென்றயாவும், அப்பூதத் தலைவர் ஜயமிழந்து, சாம்பித் தேம்பி நிற்கவுஞ் செல்லுதலைக் கண்ட வீரபாகுவின் இளை ஞர் அதனை மாற்றும் படையினை யுய்க்காமல் வேறு பல படைகளைச் செலுத்தினர்கள். வீரபாகுதேவன் இப்படையை எப்படையால் அழிக்கலாமென்று சிந்தனை செய்துகொண்டு செயலற்றிருந்தான். அச் சமயத்தில் அம்மோகப்படை ஆலகாலம்போல நுழைந்து, இலக்கத் தெண்மராகிய வீரர்களையும் மற்றையோரையும் அலக்கண் செய்து வீழ்த்தி, வீரபாகுதேவனையும நிலத்திடைநட்ட தூணைப்போல் நிற்கச்

செய்து அறிவு கவர்ந்தது. அதுபொழுது பானுகோபன், "எனக்கு நிகரொருவ ரினியுண்டோ?" என்று நகைத்துப் பின்னர், "இவரை வில்லின் வலிமையால் உயிரிழக்கச் செய்வேன்." என்று, வில்லை வளைத்து, வீரபாகுவின்மீதும், மற்றை வீரர்களின் மீதும், பூதப்படைகளின் மீதும் சரமழை பொழிந்து, உடம்புகளைத் தொளைப்படுத்தினன். அவ்வாறாகிய சமயத்தில், அறிவினுள் அறிவாய் விளங்கும் அறுமுகப் பெருமான், தன் துணைவரும், பூதரும் பட்டபான்மையை உணர்ந்து, அமோகப்படை யொன்றனை யுண்டுபண்ணி, "எம்மவர்கள் நன்றாகத் தெளிவெய்தி எழுமாறு செய்து, ஏதிலன்விட்ட நெடும்படையின் ஆற்றலை யழித்து, வென்று இவண் வரக்கடவை." என்று கூறி விடுத்தருளினன். அவ்வமோகப்படை சென்றவுடனே, மயங்கி வீழ்ந்தவர் மனத்திருள் உடையும்படி அம்மோகப்படை யோடியது. வீரர் அனைவரும் தெளிவடைந்து, எழுந்து சென்று வீரபாகுவைச் சூழ்ந்து நமது இடுக்கணை அறுமுகப்படைத்த அமலன் நீக்கியருளினன் என்று வியந்து நின்றனர். அப்பொழுது அவ்வமோகப்படை மீண்டது. குழுமி நின்ற வீரர்களோடு நின்ற வீரபாகுதேவன், பானுகோபனை எதிர்த்துப் போர்புரிவதற்குச் செல்லுதலும், அவனுடன் சென்ற வீரர்கள் பெரும்போர் இயற்றி நின்றார்கள். அப்பொழுது வீரபாகு தேவன், கோபமும் மானமுமுடையவனாய், "இவனை இப்பொழுதே கொல்லுவேன்." என்று நினைத்து, வலிமை மிக்க சிவன் படையைக் கையிலெடுத்தான். அப்பொழுது பானுகோபன், தன் மோகப்படை வலியிழந்ததும், அமோகப்படை வந்து மீண்டதும், வீரபாகு அரன் படையை எடுத்ததும், ஆகிய அனைத்தையும் உணர்ந்து, "இனி இவ்விடத்தில் இருப்பனேல் அரன்படை என் உயிரையுண்ணும். யானோ அதனை மாற்றுதற்குரிய அரன்படை எடுத்து வந்திலேன். ஆகலான், இப்பொழுது இவனை வெல்லுதல் அரிது. யான்நகரிடைச்சென்று அப்படையை எடுத்து வந்து இவன் வன்மையை அழிப்பேன். இனி இவ்விடை நிற்றல் பழுது." என்று எண்ணி, உடனே அருவமாய் இரதத்தை விட்டு, ஆகாய மார்க்கமாய்ச் சென்று தனதில்லமடைந்தான். பாரிடவீரர்கள் பகைவனைத் தொடர்ந்து, பற்றுவாமென்றலும் வீரபாகுதேவன், ஓடியவரைப் பின்றொடர்தல் வீரர் இயல்பன்று என்றலும், வெற்றி நம்மதென்று அப்பூதவீரர் ஆரவாரித்தனர். சூரியன் மேற்கடலிற் சென்

றான். வீரபாகுதேவன் வீரர் தம்மொடும், பூதர் தம்மொடும் மீண்டு, மாலயன் போற்றும் வள்ளலாகிய அறுமுகப்பெருமான் சன்னதி யடைந்து, அவனருள்பெற்று, பாசறையை யடைந்தான். இது காறும் முருகப்பெருமான் விடுத்த படையின் திறத்தைக் கூறிய யாம், இனி மகேந்திர நகரத்து நிகழ்ந்தவற்றைக் கூறுவாம்

செய்துவந்த போரின் இடையே இரிந்தோடிய பானுகோபன், பெருமித நீங்கித் தன் மனத்துப் பெருந்துயரமும், பழியும், மானமும் ஆகியவற்றை மிகுதியாகக்கொண்டு, ஏவிய பிதாவினிடஞ் செல்லாது, தன்னகர் சென்று, ஊனமுற்றவர் போன்று வருந்தி, மந்திரக் குழுவினை விரும்பாது, தந்திரத் தலைவரொடு சார்ந்து உசாவாது, அரி கள் சுமந்த ஆசனத்து அமராது, மங்கையர் குழுவினை வெஃகல் செய் யாது, நிசியுறு கன்னல் முழுவதும், விசாகனையும் அவன் படைஞரை யும் வெற்றிகோடலையே பொருளாகத் தன்னுள்ளமோடு உசாவியிருந் தான். ஆதவன் பகைஞன் இவ்வண்ணம் அனுருற்றிருக்க, அரிய போரி னைப் பார்த்துச்சென்ற தூதுவர், சூரபன்மன் கோயிலை அடைந்து, அவன் முன்னர்ச் சென்று நின்று, கைகுவித்து "அண்ணலே! கேட்பாயாக. நின் மகன் திண்ணிய தோளாற்றலையுடைய வீரபாகுவை எதிர்த் துப் போர் புரிந்து, பல பூதர்களை மாய்த்து இவ்விடத்துத் திரும்ப வந்துளான். அதற்கு ஏதேனும் இறைவணங்கிய நினது கட்டளை யுண்டோ? அதனை யாமறிந்திலம். அதனை நீயே உணர்குவாய். அன்றி யும், வீரபாகு தன்படையொடும் பாசறைபுக்கான். இதுவே. நிகழ்ந் தது." என்றுகூறினர்கள்.

பகைவரை அடுதற் காற்றலில்லாதவனுய் மீண்ட தன் சுதன் செய்தியைக்கேட்ட சூரன், ஆற்றவுஞ் சீற்றமடைந்து, எரிவிழி சிதறப் பெருமூச்செறிந்து, முறுவலித்து, "மைந்தர்களும், தம்பியரும், நெரு ங்கியுள்ள சுற்றத்தினரும், தானைத்தலைவரும் ஆகிய இன்னோர் இனிப் போருக்குச் செல்லவேண்டுவதில்லை. கெடாத ஆயுதங்களோடும் நாளை யான் சென்று அக்கந்தனை வென்று மீளுவன். நீவிர் செல்லுங்கள்." என்றனன். தூதுவர் பணிந்து ஏகினர். சூரபன்மன் பகைவரை வெற்றி கொள்ளும் விஷயமாய் ஆலோசித்து, மற்றொன்றையுங் கருதா தவனு யிருந்தான். கங்குலாகிய நங்கை போர்முகத்துப் பகைவரை

வெற்றிகொள்ள நினைந்த வீரற்கெல்லாம் நெடியவளாயும் திறமையற்ற அச்சத்தினையுடைய நெஞ்சினற் கெல்லாம் குறியளாயு மிருந்தாள்.

## இரண்டாநாட் சூரபன்மன் யுத்தப் படலம்

அற்றையிரவின் கடையாமத்தில் இரவி யுதிக்கு முன்னரே சூரபன்மன் எழுந்து, மரபினல் நாட்கடன்களை முடித்து, அரசவை ஏகி, அரியணை யிருந்து, தன் சிறுவன் அடைந்த இழிவை மனத்துட்கொண்டு, பெருஞ்சின மடைந்து, இனி யாரையும் விடுக்காது அமருக்குத்தானே சென்று வெற்றிகொள்ள நினைத்து, அளப்பிலா ஒற்றரை அழைத்துப் புவிசூழ் கடல்கள்தோறும் வைகிப தன் பெரும் அவுணச் சேனையை விரைவில் அழைக்கச் சொன்னன். அவர்கள் விரைந்து சென்று ஆங்காங்குள்ள சேனைகளைக் கூட்டி வந்து மகேந்திரபுரியின் மண்ணும் விண்ணும் நிரப்பினர்கள். அப்படையின் பெருக்கத்தைச் சூரன், பன்மணியிழைத்த பொன்னலாகிய உயர்ந்த சிகரியின் மேலேறி நின்று கண்ணுற்று வியந்து, பகைவரை வென்முற் போன்று மகிழ்வடைந்து, கீழே இறங்கிப் போருக்கேக நினைந்து, தனது வில்லை எடுத்து ஏனைய படைகளும், ஆதியில் தேவர்களால் கொடுக்கப் பெற்ற படைகள் யாவும் ஆயினவற்றைக் கொண்டு, சிற்பத் தொழிலமைந்ததோர் தேரிலேறி எண்ணிலா நால்வகைப் படையும் ஏமமாய்ச் சூழ்ந்து வர, அவுண வீராகிய அமைச்சர்கள் அருகிற் செல்ல, விண்ணை முட்டும் மதில்களையுடைய அரசமாளிகையின் வீதிகள் கடந்து சென்று, சகரிகளோடு விளங்குகின்ற கொற்றந் தங்கிய வாயிலின் முன்னரேக இலக்கவெள்ளத்து அவுணரும் புடையிற் சூழ்ந்து ஆரவாரித்தனர்.

அப்பொழுது சிங்கமுகாசுரன் மைந்தனகிய அதிசூரனென்பவனும், தாரகன் மைந்தனகிய அசுரேந்திர னென்பவனும் சூரனருகிற் செல்ல அவர்களைச் சூரன்பார்த்து,"நீவிர் இருவரும் படைப்பெருந் தலைவர்களாயிருந்து படைகளைநடாத்துங்கள்." என்ன, அவர்கள் நன்றென வணங்கித் தமது தேரிலேறி நால்வகைச் சேனைகளையும் உடனே அணிவகுத்துச் சிறப்புடன் தலைமைபெற்றுச் சென்றனர். அப்பொழுது சூரபன்மன் பருமணியிழைத்த வயிரத் தேர்மேல் விண்ணவர் நடுங்கச் சென்றனன். தொண்டகம், துடி, பம்பை முதலிய வாத்தியம் இயம்பின. தேர் ஒலி, கரியொலி, விண் செலுங்கொடி யொலி, மாவொலி, வீரர்

கழலொலி, பல்லிய ஒலி ஆகிய இவ்வொலி திரண்டு எட்டுத்திசையை யும், எல்லா உலகையும் உண்டெழுந்தன.

இவ்வண்ணம் அவுண சேத்தஞ் செல்ல வெழுந்த பூமியின் ஈட்டத் தால் இரவி யொளி மழுங்கி, முன்னர் மதிபோலாகிப் பின்னர் மீனெ னுப்படி மறைந்தது. ஆகிய இவ்வியல்பினால் அவுணப் படைகள் செல்ல, அசுரமன்னனாகிய சூரபன்மன், வான் நெறியாக வையமீது செல்ல, அதனைக் கண்ட இந்திரன் விரைந்து சென்று, கரனுடைய கடப்பமாலையை அணிந்த கந்தனை வணங்கி இதனைக் கூறுவன்:— அன்று புரிந்த வேள்வியில் ஆதிமூர்த்தியருளிய நெருங்கிய படை யீட்டமொடு சூரனென்னுங் கொடியோன் போர்புரிய ஏகினன். அவனை எதிர்த்து வென்று அடியரேம் சிறினை அருளவேண்டும்." நன்றென முருகப்பெருமான் எழுந்து வாயுதேவனால் செலுத்தப்பட்ட தேரேறி வீரபாகுவும் எட்டு வீரர்களும், இலக்கம்பேர்களும், பூதவீரர் களும், தலைவருமாகிய இன்னோர் தத்தம் படையொடும் முன்னர் ஏக, சிவ குமாரனாகிய அறுமுகப்பெருமான், செம்மணியின் ஒளி வீசுகின்ற தேரிடை அமர்ந்து சென்று, அவுணப்படை நெருங்கியுள்ள போர்க் களத்தினை யெய்தினன் அக்காலத்தில் பூதப்படையும் அவுணப்படை யும் கலந்து பலவித ஆயுதங்களால் பெருஞ்சமர் இயற்றின. பூதச் சேனைத் தலைவர்கள் எதிர்த்துத் தாக்கியதால் வெவ்விய அசுரப்படை கள் மிகுதியும் இறந்தன. தனது நால்வகைச் சேனையையுங் கொன்று, குவித்த பூதப்படையின் வெற்றியைக்கண்டு, தலைவனாகிய அதிசூரன் வெகுண்டு, இரண்டாயிரம் புரவிபூண்ட இரதத்தினிலேறி, ஆயிரக் கணக்கான சேமத்தேர்களோடு சமர்புரியப் புகுந்து, வில்லை வளைத்துப் பூதசேனையை யழித்தலும், பூதசேனாதிபதியாகிய உக்கிர னென்பவன் எதிர்த்துக் கடும்போர் புரிந்து வருகையில், அதிசூரன்விட்ட அக்கினி யாஸ்திரமுதல் நாராயணாஸ்திரம் இறுதியாகிய தெய்வப்படைகளை. அறுமுகன் அருட்டுணைகொண்டு பற்றி விழுங்குதலும், அதிசூரன் கவன்று, இவன் அவ்வீசன்றானோ!. அன்றித் திருமாலோ? பிரமனோ என்று மயங்கி நிற்க, அவுணர்கள் கலக்க முற்றார்கள்

அவனது ஆற்றலைக் கண்ட வானின் உள்ள இந்திரன் பிரமனி டஞ் சென்று, "இத்தெய்வப்படைகளை உண்டு திகழ்கின்ற இவன் வண் மையை யானறியக் கூறுதி." என்று கேட்கப் பிரமன் கூறுவான்;—

"என்னையாளுடைய ஈசன் திருவடியை மும்மையுந் தொழும் முத்தி பெற்றவன் என்னினும் பெரியோன், என்றும் ஈறிலான், உக்கிரனென்னும் பெயரினை யுடையான். அறுமுகப் பண்ணவன் அடியிணையை மனத்தமைத்து வந்துளன். அண்டக் குழுவினை யழித்துப் பின்னுக்குவான். இவன் பெருமை கூறுந் தகைமைத்தோ?" அதைக் கேட்ட தேவர்கள், "இன்னும் இவனுக்கு வெற்றி யுண்டாகுக" என்று வாழ்த்திப் போயினர். விண்ணின்கண் இப்பான்மை நிகழச் சமர்பூமியில் உறைத்து, எதிர்த்து நின்ற அதிசூரனென்னும் அவுணப்படைத் தலைவன் உக்கிரனைப் பார்த்து, "உன்னை இப்பொழுதே கொல்லுகின்றேன். இவ்வாயுதத்தை யழித்தல் உன்னாலியலாது. இஃது அரன் படை." என்று கூறி மந்திரத்தால் பூசனை யியற்றி விடுத்தனன். அப்படை அரனுருவத்தை யெடுத்து ஆற்றலோடும் வருதலை யுணர்ந்த உக்கிரன், நிராயுதனாய்க் கைகுவித்து நின்று, பஞ்சாட்சரத்தை விதிமுறை உன்னி நிற்றலும், அவ்வஸ்திரம், படையிலா திருந்து பரமனை வழுத்துகின்ற அத்தூயனைக் கொல்லேனென்று சிவபெருமானிடத்துச் சென்றது. அதற்குக் காரண மென்னையெனில், சிவபெருமான் அதிசூரனுக்குத் தனது படையை யளித்த ஞான்று, "இதனை ஆயுதமில்லாதார் மீது ஏவுவையாயின், அவர்களை அணுகாது நம்பால் வந்தெய்தும்." என்று அருளியதாகும்.

அச்சமரிடத்து, அதிசூரன் தண்டொன்றேந்தி உக்கிரனை மோதிய காலத்து உக்கிரன், அத்தண்டினைப் பறித்து, அதிசூரனது மார்பிடை வலிந்து புடைத்தலும், அவ்வவுணன் கீழே விழுந்து உயிர் நீங்கினான். அவ்வமயத்து அசுரேந்திர னென்னும் படைத் தலைவன் எதிர்த்துப் பூதசேனையைப் பெரிதும் அழிக்க, கனகனென்னும் வீரனெதிர்த்து நெடுநேரம் போரியற்றி அவ்வசுரேந்திரனால் புண்படுத்தப்பட்டு நின்றான். அதன்பின் உன்மத்தன், மந்தன், சிங்கன் முதலாகிய பூதவீரர் எதிர்த்துப் போர்புரிந்து ஈடழிந்தார்கள். அதன்பின்னர் இலக்கம் வீரரில் தண்டகன், சோமுகன், விஜயன் ஆகிய மூவரும் எதிர்த்து அசுரேந்திரனால் அழிவினை யெய்த, இலக்கம் வீரரில் ஏனையோர் எதிர்த்து அவுணனுக் காற்றாது இரிந்தோடினார்கள். அதுகாலையில் வீரபாகுதேவன் அவ்வசுரேந்திரனோடு பலவகை யுத்தஞ் செய்து இறுதியாக அவன்

கரங்களி லொன்றை யறுத்து, மீண்டு எதிர்த்த போரில் அவன் சிர த்தை யறுத்துத் தள்ளினன். சூழ்ந்த தானவப் படையாகிய கடலெல்லாம் பரந்தோடி ஒழிந்தன. அதிசூரன், அசுரேந்திர னென்னும் மக்களிருவரும் மாண்டொழிந்ததையும், படைகளுடைந்து ஓடியதையுங் கண்ட சூரபன்மன், உலகத்தையழிக்கும் ஊழித் தீப்போல வெகுண்டு, மாற்றலரை அழிக்க மதித்துக் காற்றினுங் கடிதாகிய தேரிற்சென்று, கூற்றுவன் பசியினைத் தீர்ப்பதோர் சிலையினை வளைத்துப் பின்னர் வீரமகன் தன்னில்லிற்கேக வைத்த ஏணியை ஒத்த பொன்னொடு பொலிந்த நாணினை விரல் நகத்தாற்றட்டி ஓசையெழுப்பி னன். அவ்வில்லின் நாணோசையைக் கேட்ட பூதகணங்கள் தமது கை யில் போர்நிமித்த மேந்தியுள்ள மரங்களையும், சிகரிகளையும், மலைகளை யும், தமது வீரத்தையும் ஒருங்கே சிந்தினவர்களாய், உடலுஞ் சிரங் களும் நடுக்கமடையச் சிதறியோடினார்கள். பலவிடங்களாக இரிந்து ஓடினவரன்றி நிலத்திடை வீழ்ந்தவர் சிலர்; பதைத்து நின்றவர் சிலர்; விழுந்திறந்தவர் சிலர்; மயங்கினர் சிலராக எழுந்த அவ்வோசை பன்னி ரண்டு ஆண்டுவரை மண்ணுலகில் பிரதித்தொனியோடு மிருந்தது.

பிரமன் அஞ்சினன்; அழியாத தருமம் அஞ்சியது; ஐம்பூதம் அஞ்சின; உயிர்த்தொகை பொருமி நடுக்கங்கொண்டன. இவ்வண்ண மாகிய சூரன் தன் வில்லின் பெரு முழக்கத்தைக்கேட்ட பூதப்படை ஓடியதைப் பார்த்த படைத்தலைவர் நூற்றெண்மரும் பொருது வலி யிழந்து நெஞ்சழிந்து, பெருங்காற்றிற்பட்ட பூளைப்பூவாயினர்கள். இவ்வாறு தலைவரழிந்ததைக்கண்ட இலக்கம் வீரர்களெதிர்ந்து வலி யிழந்து போயினர். அதனைக்கண்ட வீரமார்த்தாண்டன் எதிர்த்துப் போரியற்றித் தோல்வியடைய, வீரராக்கதன், வீரமகேந்திரன் முதலிய வீரர்களெதிர்த்துக் கடும்போர் புரிந்து சூரனுக்காற்றாது வீழ்தலும், கடைசியாக வீரபாகுதேவன், அவனை எதனால் வெல்லலாம் என்று யோசித்துக் கடைசியாக சிவாஸ்திரத்தை எடுத்து அருச்சித்து விட்டனன். சூரன் தானும் அரன்படையைவிட அவையிரண்டும் தம் முள்ளே எதிர்த்து உலகம் நடுங்கும்படி சமராற்றி, உலகங்கள் அழியு மென்று விண்ணவர் வெருவிவேண்ட, அப்படைகள் விட்டவர்க ளிடத்து மீண்டன.

பின்னர் வீரபாகுதேவன்மீது வலிய கதை யொன்றை ஏறிதலும், அத்தண்டாயுதம் வீரன் மார்பைப் பிளக்க, அதனால் தளர்ச்சியடைந்து இரதத்தில் வீழ்ந்தான். வீரன் ஆற்றலழிந்து வீழ்ந்ததை அறிந்த விசாலி என்னும் பாகன், தேற்றுதற் பொருட்டு இரதத்தைக் காற்றினுங் கடிதாகச் செலுத்திப் போயினன். தாக்கும் வன்மையினையுடைய வீரரும், வீரபாகுதேவனும், ஈண்டியுள்ள இரண்டாயிர வெள்ளஞ் சேனையும் வலியிழந்து, அழிந்த தன்மையைப் பன்னிரு நாட்டத்தினையுடைய பரம்பொருள்கண்டு, வாயுவாகிய தன் சாரதியைப் பார்த்து, "சூரன்மேல் நமது தேரை விரைவிற் றூண்டுவாய்." என்றருளலும், வாயுதேவன் மணிகளிழைத்த அத்தேரினைச் சூரன் முன்னர்த் துண்ணெனத் தூண்டி நிறுத்தினன்.

அப்பொழுது அவுணர்கோனாகிய சூரபன்மன், ஆயிரங்கோடி சூரியர்கள் திரண்டு ஒன்றாகி இருளைக் கிழித்துக்கொண்டு விண்ணினின்றும் போந்ததை யொத்துப் போந்த முருகவேளின் தோற்றத்தினைக் கண்டான். மலர்ந்த தாமரையை யொத்த ஆறுமுகங்களும், ஈராறு கரங்களும், குண்டலங்களின் வரிசையும், செவ்விய பொன்மௌலியும், அழகிய மார்பும், பன்னிரு அருணாட்டங்களும், அழகிய படைகளும், தண்டையுஞ் சிலம்பும் முழங்குகின்ற சரணங்களும், ஆகிய இவைகளை முன்னரியற்றிய நற்றவத்தினால் தெரியக்கண்டனன். மனத்திற்கு எட்டாத திருவுருவத்தினைக் கண்ணினாற் கண்டு முன்னே நின்ற சூரன், அகில உலகங்களையும் ஊழியின் இறுதியில் அடும் பொருட்டு நின்ற சிவபெருமான் குமரனே இவனென்று நினைத்து, மனத்துச் சினமுண்டாக கீழ் வருமாறு கூறினன்.

"படைஞராக நின்னைச் சூழ்ந்து வந்தவர் போர்வலி இழந்து, திக்குகள்தோறுஞ் சிதறினார்கள். பூதவீரரும் அழிந்தனர், ஏனையோர்களும் என்னுடன் போர்புரிந்து இறந்தார்கள். அழிவெய்திய நின்படைகளுக் குத்தலைவனும் என்பால் தூதுவந்தவனுமாகியவீரபாகுவும் என்னொடு பொருது உயிரிழந்தான். இவ்வாறிருக்க நீ ஒரு சிறுவனோ என்னொடு பொருது கொற்றங்கொள்ளுவாய் ? நன்று, நன்று நின்னுள்க்குறிப்பு. மேலுள்ள நின் பிதாவும், மாலும், அயனும் என்னொடு எதிர்க்க நினையார். முற்பொழுதில் வலிமையில்லாத கிரவுஞ்சகிரியையும், என்னால் கொடுக்கப்பட்ட செல்வத்தில் மயங்கிய தாரகனையும் கொன்ற எளிமை

யின்பாற் படுத்தி என்னையும் நினைந்தனை கொல்? சிறந்த என் வரத்தை யுன்னினையில்லை. எனது வெற்றியை நினைந்தாயில்லை. என் படைத் திறத்தை எண்ணிணையில்லை. என்னோடு பெரும்போரியற்றப் புகுந்தனை. தேவர்களும் நின் அன்னையாகிய பார்வதியும் இரங்கும் வண்ணம் ஓர் இமைப்பொழுதில் நினது வன்மையை அழிப்பேன்."

அறுமுகனாகிய வள்ளல் அம்மாற்றத்தினைக் கேட்டு, "வெற்றி, ஆற்றல், மேன்மை, அளவற்ற ஆயுதங்கள், வச்சிரயாக்கை ஆகிய இவை முதலியவற்றை உடையேமென்று பெருமிதங் கொள்ளற்க. நின் பெருமிதம் முற்றையும் இப்பொழுதே அழிக்கின்றேன். நம்மைச் சிறுவனென்று உன்னினாய். சிவபெருமானது நெற்றிக் கண்ணினின்று வெளிவரும் ஒரு பொறியன்றோ உலகங்களை அடுவது? நின் வலியை வாளா கூறி நிற்றலிற் பயனில்லை. நின் போர்த்திறத்தினைக் காட்டுவாய்." என்றனன். அவுணர்கோன் வெகுண்டு, வானளவுயர்ந்த தன் வில்லினை வளைத்தான். முருகப்பெருமான், வலிய காளியின் செருக்கை யடக்கி உலகினை அருளுதற் பொருட்டு ஆடும் பரமன், தன் சேவடியைப் பகிரண்டங்களை யழிக்காவண்ணம் தடைசெய்த செவ்விய கரத்தைப்போலத் தனது தனுவைக் குனித்தான். வளைத்த கார்முகத்தினிற் குமரவேள் நாணொசையைக் கூட்டி நின்றான். சூரனும் அதற்கு மாறாகத் தன் வில்லின் நாணொசையை அகில உலகங்களும் நடுங்கக் காட்டிக் கூரிய அம்புகளை மழைபோலத் தூவி, முருகப்பெருமானையும், அவன் ஏறிய தேரையும், உலகையும் மறைக்கவும், இளையோன் அவன் வித்தை மிக நன்றாயிருக்கிறதென்று சிந்தித்துக் கொள்ளை பட்ட அம்புகளைச் செலுத்தி அவைகளைக் குறைத்தான். மேலும் சூரன் வெகுண்டு விட்ட அம்புகளை அறுத்துச் சூரனை மறைத்துப் பெரிய விண்ணின் பரப்பையும் மறைத்தான். அவ்வம்புக் கூட்டங்களை அறுத்து வெளியாக்கி ஞானநாயகனாகிய அறுமுகப் பண்ணவனை அசுரன் கண்டு நின்றான். அவன் விட்ட கணைகளைத் தடுத்துப் பதினான்கு அம்புகளை அவன் தோள் மீதெய்தலும், அவ்வம்புகள் அவனது தோளை யெய்தி அவனைச் சிறிதும் புண்படுத்தாமையைக் கண்டு, அவனது வச்சிரயாக்கையின் வன்மையை வியந்து பின்னர் ஆயிரங் கணைகளை ஏவி அவன் சிலையைஅறுத்தான். பின்னரும அவன் வேறோர் சிலையைக் குனித்துக் கணைமழை பொழியி, அவனது வில்லை யறுத்து,

அவன் ஏறி நின்ற தேரையுந் தொலைத்துச் சேமத் தேர்களாகச் சூழ்ந்துள்ள பதினைலிலக்கத்தையும் ஊழிமுதல்வன் தனது சரமழையால் அழித்துப் பின்னரும் அவனது குடையைத் துணித்து, அவன் மகுடம் முதலிய அணிகளை யெல்லாம் பாழ்படுத்த, இறைவன் கலங்கினனென்று அவுணனுடைய நாற்படையுந் திரண்டு சூரனுக்குத் துணையாய் முருகப்பெருமானைச் சூழவும், செவ்வேள், தன் கரத்திருந்த தெய்வத் தன்மை வாய்ந்த ஓர் நேமிப்படையை விடுத்து நின்றான். அவ்வாழிப்படை திருமால் கரத்தமைந்த சக்கரப்படையும் வியக்கும் வண்ணஞ் சென்று, அசுரப்படைகளைக் கால்வேறு தலை வேறு உடல் வேறாக்கி, அக்கள முழுவதும் களேபரக் குவியலாக்கியதைச் சூரன் தெரிந்திலாதவனாப் பின்னர்த் தன்னெதிரில் நின்ற படை முழுவதும் பட்டொழியப் பார்த்து, மனமருட்சி யுடையனாய்த் தனித்து நின்று கீழ்வருமாறு சிந்திப்பானாயினன்.

"தன் கரத்திற்கொண்ட வேற்படையைச் செலுத்தி இச்சேனைகளை அழித்தனனோ? பசுபதியின் படையினால் அழியச் செய்தனனோ? இப்படை மாயக் கடவதென்று ஓர் மொழி பகர்ந்து கொன்றனனோ? இவ்விடை நெருங்கியுள்ள படையை இவன் கொன்று குவித்தது எவ்வாறு? பின்னர் அவன் தேரிழந்து, வில்லிழந்து, திறலுடைய பெயரிழந்து, தானையை இழந்து, பேரணி யழகிழந்து, மகுடமும் குடையும் இழந்தவனாகிப் பாரினை இழந்த மன்னரைப்போன்று தனித்துப் படிமிசை நின்றான். நின்ற அவுணர்கோன் நெடுஞ்சினங்கொண்டு, மார்பகம் வியர்த்திடச் சென்னியைத் துளக்கி, நன்று, நன்று ஒரு பாலகன் வலியென்று நகைத்து, வென்றிடுதற்குரிய பிரமன் மாப்படை எடுத்து விடுத்தான்.

அப்பிரமன் படைசென்று அறுமுகனைக் கிட்டியகாலத்து, அவன் திருக்கரத்திலுள்ள வேற்படையானது நாடிவந்த அவ் அயன்படையை விழுங்கியது. அச்செயலைக்கண்ட சூரன், நாராயணாஸ்திரத்தைவிட, அது சமீபத்தலும் அதனையும் அழித்து விழுங்கியது அச்சத்திவேல். அதன்பின் சூரனானவன், பசுபதியின் படையினை விடுவேனேல் அதனைத் தடைசெய்வாரு முளரோ என்றெண்ணி, அப்படையைக் கையிலேந்தி அருச்சனை யாற்றி விரைவாக விடுத்தான். அத்தகுதி வாய்ந்த வெவ்விய படையானது திருநடம் புரிகின்ற சூலபாணிகள் பல்லோரெனப் பல

உருக்கொண்டு எவ்வுழியும் ஈண்டி, ஆர்த்துத் திரண்ட தழலைக் கக்கிக் கொண்டு விரைந்து சென்றது. திக்குயானைகள் நடுங்கவும், படித்தலம் கீண்டு விண்ணவும் இடித் தொகைகளைச் சிந்திக்கொண்டு மேருவும் வெடிபட வருவதாகிய அதன் கடுமையைக்கண்ட இலக்கர் நடுங்கினர். ஏனைய வீரர் கலக்கமுடைந்தனர்; பூதர்கள் மயங்கினார்கள்; விண்ணவர் ஓடினார்கள். புவிசம்பந்தமாகிய அகிலபுவனங்களையும் நொடிப்பொழு தில் அழிக்கும் ஆற்றலுடைய அப்படையின் வருகையை அறுமுகப் பெருமான் நோக்கி, அஃது தனது பிதாவின் படையாகுமென்று சிந் தித்துத் தன்னொரு செங்கையை நீட்டிக் கொடுத்தவன் வாங்குஞ் செய் கையைப்போன்று, அப்படையைப் பற்றிக்கொண்டனன். முருகப்பெரு மானது அருஞ் செய்கையைக் கண்ட சூரபன்மன், "இவன் யான் விட்ட படைகளனைத்தையும் இலேசாகக் கவர்ந்துநின்று, சிவபெரு மானுக்குப் புதல்வனென்னும் முறையினைக் காட்டினன். என்னுடன் போர்புரிதற்கு இவனலாது வேறொருவரில்லை. இவனொடு மலைவதற்கு யானலாது பிறரில்லை. இன்ன பான்மையில் எனக்கு நேராகிய இவனது வேற்படை வன்மையும், விற்றொழில் வன்மையும் கண்டனன். இனி மேல் இப்பாலன் செய்வனவாய அனைத்தையும் காண்பன்." என்றுன்னி மவுனியாகி நின்றனன்.

அவ்வாறு நின்ற சூரனைப்பார்த்துக் கருணாநிதியாகிய முருகப் பெருமான் கூறுகின்றான்:—"இந்திரகுமாரனைத் தேவர்களுடன் அள விறந்த காலம் சிறையிடை இட்டாய். மறைபொழுக்கத்தை யழித்தாய். யாம் தூதுவன் ஒருவனை விடுத்தனம்; ஆங்கவன் கூறிய மாற்றமுங் கொண்டிலை. ஆதலின், இங்குனை அடுதற்குப் படையுடன் வந்தனம். நின்னுடன் நெருங்கியிருந்த இலக்கவெள்ளஞ் சேனையுமாண்டன. இனி நீ செய்யக் கிடந்ததென்? தாரகனைச் செற்ற நெடுவேல் உன்னுயிர் உண்பது திண்ணம். தேவர் சிறையை இப்பொழுதேனும் விடுவையாயின் உன்னையடுகிலம். மறுப்பையாயின், விரைவில் அழிப் போம்." சூரபன்மன் அதைக்கேட்டு, "படையிழந்து தனித்து நின்ற காரணத்தால் என்னைச் சிறியனாக எண்ணி இத்துணை மாற்றங்கள் இயம் பினன். இவன் நெடுநாள் நின்று என்னுடன் போர்புரியினும், என்னை அடல்வல்லனோ? ஆயினும் இப்பகல் யான் நகர்க்கேகிப் பின்னர்ப் படையொடும்போந்து, இவனை எதிர்த்து வெற்றியடைகுவன். இதுவே

சூழ்ச்சி." என்று துணிந்து ஓர் மாயை மந்திரத்தினால் மறைந்து, அவ்விடம் விட்டகன்று, மகேந்திர புரத்திலுள்ள தன் கோயிலுட் சென்றான்.

முருகப் பெருமான் பேரருளால் அவன் மீது தன் வேற்படையை விடாது இருந்தான். அச்சூரனால் தொலைந்த பூதப்படையும், மயங்கிய வீரர்களும் எழுந்து ஒன்று சேர்ந்து முருகப் பெருமானிடத்துக் குழுமி ஆரவாரித்து, "நம்மை வென்ற இச்சூரனது நகரத்தை இப்பொழுதே யழித்து மீளுவம். வம்மின், வம்மின்." என்று விளித்துப் பூதராயினோர் தமது வீரர்களோடு விரைவிற் சென்று, ஆரவாரித்து அம்மகேந்திரபுரத்து மதிற்புரத்தை அடைந்தார்கள். அவ்வாறு அளாவிய மதிலைக் காவல் புரிந்து நின்ற அதிகோரன் என்னும் அவுண வீரன் தன் படைகளோடும் வந்து எதிர்த்துத் தாக்கிப் பெரும்போரியற்ற, அவ்வவுணப்படைகளை யழித்து, அவ்வதிகோரனையும் முடித்து அணுகிய காலத்து, ஆயிர யோசனைமேல் ஓங்கிச் செம்மணிகளால் இழைக்கப்பட்டிருந்த கோபுரத்தை அடியோடு பறித்துக் கடலிடை எறிந்து, பூதர் ஒன்று சேர்ந்து, அம்மதிலின் புறத்தே நின்று தமது வலிய கால்களால் உதைப்ப, அம்மதில் இடிவீழப் பெற்ற சிகரமெனச் சாய்ந்தழிந்தது.

அப்பொழுது தாமரைத் தடாகத்துப் பல இபங்கள் இறங்கிக்கலக்கினாற்போல, மகேந்திரநகரத்துப் பூதசேனை புகுந்து,பல மாளிகைகளையும், மற்றுமுள்ளவற்றையும் பறித்தெறிந்து செல்லுதலும், பூதவீரர் இனித் தாம் முருகப்பெருமானைப் பிரிந்து, அவ்வசுரனூரில் உட்செல்லுதல் தகுதியல்லவென்று திரும்பினவர்களாய்ப் பூதர்களோடு சென்று, அறுமுகப் பெருமானை எய்தி வணங்கி நின்றார்கள். முருகப்பெருமான் அவர்களுக்கு அருள்புரிந்து, படையோடும் பாசறைபுக்குச் சேனைகளைத் தத்தமிடத்திற்கு அனுப்பித்தான். பின்னர் அவன் தேவர் போற்றத் தனது கோயிலிற் புகுந்து, அரியணையில் வீற்றிருந்தருளினன். அன்று சூரியன் அத்தமித்ததும், அறுமுகப் பெருமான் பாசறையில் அமர்ந்தருளினன். இது இவ்வாறிருக்கப் பகைவரிடத்து நடந்த செய்தியை இனிக் கூறத் தொடங்குவாம். ஒருவரும் அறியாவண்ணம் சமர்க்களத்தினின்று மறைந்து சென்ற சூரபன்மன், தன் மாளிகையை அடைந்து, பதுமகோமளை அமர்ந்துள்ள இல்லிடஞ் சென்று, அஞ்சடுத்த அம

ளியின்மீது. கண்துஞ்சாதவனாய்க் கிடந்து, யாரொடும் உரையாடாது, போரின் வினையத்தையே எண்ணியிருந்தான். அதுபொழுது தூதுவர் பானுகோபனிடஞ் சென்று, மன்னர் மன்னவன் முருகனோடு போர்புரிந்து இலக்கம் வெள்ளஞ் சேனையும் ஒழியத் தமியனாய் நகரிடை மீண்டனனென்று கூறினார்கள். அதனைக்கேட்ட பானுகோபன் பெருந்துயர் அடைநது, தாதையிருந்துழிச்சென்று, அவனடியை வணங்கி நின்று, "நேற்று என்னை யுத்தத்திற்கு விடுத்தனை. யான் பெரும் போரியற்றிப் பின்னர் மீண்டனன். ஞாயிறெழுந்த பின்னர்ப் பகைவர் மேற்சென்று வெற்றிகொள்ள நினைந்திருந்தேன். ஐயன் நீ யாரையும் வினவாமல், நாற்பெருஞ் சேனையைக்கொண்டு போருக் கெழுந்தது தகுமோ? போருக்கிது பெருமையாகுமோ? அமரருக்கு ஆக்கமும், அவுணர்கட்கு ஏக்கமும், இமையோர் செம்மலுக்கு இன்பும் நல்கினாய். சிறியர் தம்மை நீ வெற்றிகொண்டனையேனும் உனக்குப் புகழாகுமோ? சென்றது கிடக்க யான் சிறியனாயினும், ஒன்றுரைப்பேன். அதனைக் கேட்பாயாக. அஃதென்னையெனின், இன்றிரவு கழிந்ததும், யான் போருக்கேகி யாவரையும் வென்று, இவண் மீளுவன். அடியேனுக்கு விடைதரல்வேண்டும்." என்று வேண்டினான்.

அப்பானுவின் பகைஞன் கூறிய மொழியினைக்கேட்ட சூரபன்மன், "மைந்தனே! வேற்படை தாங்கியுள்ள அறுமுகனை வெற்றி கொள்ள என்னையன்றி வேறொருவராலுங் கூடாது. யானே சென்று அவனை வெற்றிகொள்ளுகின்றேன். நீ நாளைக்குப் போர் முகத்துச் சென்று, தனிவீரனாகிய வீரபாகுவைத் தனித்து விளித்து அவனொடு போர்புரிந்து, அவனை வென்று மீளுவாய்." என்று கூறிச்சேனையோடும் போருக்கேக உத்தரவளித்துத் தான் சூழ்ச்சிகளின்றிப் பழைமைபோல் இன்புற்றிருந்தான்.

தாதையின் ஆணைபெற்றுச் சென்ற பானுகோபன் தன்னில்லம் அடைதலும், ஆண்டுச் சில தூதர்கள் சென்று, பூதப்படை திரண்டு வந்து, தமது வடக்குக்கோபுரத்தைப் பறித்தெறிந்ததுமன்றி மதிலையும் அழித்துவிட்டதென்று கூறினார்கள். பானுகோபன் அயலில் நின்ற தூதரை அழைத்து, அவுணத் தச்சனை அழையுங்களென, அவர் அவ்வாறே அழைத்துவந்து விடுத்தனர். பரிதியின் பகைவன், அக்கம்மியனை நோக்கி, "நமது நகரின் வடக்குமதிலும், சிகரியும் முன்னைபோல் ஆகு

மாறு அமைப்பாய்." என்று கூறி அதனைக் காத்து நிற்றற்கு மாகாயன் என்னும் அசுரனைப் பதினுயிரம் வெள்ளஞ் சேனையோடும் அனுப்பித் தன் கோயிலை யடைந்தான். அக்கம்மியன் சிகரியையும், மதிலையும் தொன்மைபோலாக்க, அதனை அச்சேனையோடு மாகாயன் காவல் புரிந்து நின்றான். இவ்வண்ணம் நிகழ்ந்த பின்னர்ச் சூரியன் உதயவெற்பிற் றோன்றினன்.

## மூன்றுநாட் பானுகோபன் யுத்தப் படலம்

பரிதிவானவன் உதித்தலுஞ் சூரமகனுகிய பானுகோபன், துயி லெழுந்து, கடன்களை முடித்து முன்னைய போரில் தோல்வியுற்ற சிறு மையை நினைந்து வருந்தித் தன் தாதையின் அன்னையாகிய மாயை என்பவளை மனத்தினுல் போற்றினன். அவனது எண்ணத்தை மாயை யறிந்து அவன் முன்னரெய்தி நின்று, அவனுக்கு வேண்டுவது என்னை என்று வினவினுள். பானுகோபன், "மூதாட்டியே! சண்முகன் தூத னுகிய வீரனெடு யான் போரேற்று வலியிழந்து மீண்டு மனமழிந்தேன். பழியும் எய்தினேன்." என்றனன். மாயையானவள், "தேவரும் மற்றைய மூவரும் பகையெனில் நீ எங்ஙனம் வாழ்குவாய்? ஆயினும் நினக்கு இப் பொழுது வேண்டியவற்றைத் தருவேன். அவற்றைக் கேட்பாயாக." என்று கூறினுள் அவள் மொழிகேட்ட பானுகோபன் மனமகிழ்ந்து, "முன்னை நாள் போரில் என்னை வெற்றிகொண்ட வீரவாகுவைப் படையொடுங் கொல்ல ஓர் ஆயுதத்தைக் கொடுத்தருளுவாய்." என்று இயம்பினன். அம்மாயை ஓர் மாயைப்படையைச் சிருட்டித்துப் பானுகோபன் கையிலீந்து, "இப்படையை விடுவையாயின், வீரபாகு வைப் படைஞரோடும் அறிவழித்து, இற்றைய போரில் நினக்கு வெற்றி யைப் பயக்கும். ஆதலின், போருக்கேகுவாய்." என்று கூறி விண்ணிடை மறைந்தாள். பின்னர் பானுகோபன், அப்படையைத் தாங்கிப் போர்க் கோலங்கொண்டு வாயுவின் படை, அனலோன் படை முதலிய தெய்வப் படைகளை யெடுத்துத் தேரேறித் தானை வெள்ளஞ் சூழ்ந்து செல்ல, மாநகர் நீங்கி மதிலுக்குப் புறம்பே போந்து, அணித்தாயுள்ள ஓற்றரில் ஆயிரங்குதிரை முகங்கொண்ட ஒருவனைக் கூவி, "நம்பகைவர் தங்கி யுள்ள பாசறையிற் சென்று, வீரபாகுவை விளித்துப் பானுகோபன் இற்றைய போரில் உனதுயிர் உண்ணுவதாகச் சூளுரைத்துவந்துளான். ஆதலின், விரைந்து போருக் கெழுவாய் என்றுரைத்து மீளுதி." என்

றான். அவுன் அவ்வாறே சென்று வீரபாகுவை அழைத்துக்கூறியதைக் கூற, வீரபாகுதேவன், "இப்பகலில் பாநுகோபன் உயிரை யான் விரைந் துண்ணுவன். அதன்பொருட்டு இதோ வருகின்றேன்." என்று கூறி, வந்த பரிம்முகவனை அனுப்பிவிட்டுச்சுற்றமுந் தலைவரும் சூழச் சென்று முருகப்பெருமான் திருவடிகளிற் றாழ்ந்து நின்றான். நிகழ்ந்தவற்றை யறிந்த சண்முகப் பெருமான் வீரபாகுவை நோக்கி, "நீ இன்று பாநு கோபனோடு போரேற்று நின்று அவன் விடும் படைகளுக்கு மாறாக விட்டுப் போர் புரிகுவாய். வஞ்சன் மாயமியற்றுவானாயின், நமது தூய வேற்படை வந்து அதனை நீக்கும்."என்று கூறி விடையளித் தருளினான். வீரபாகுதேவன், முருகப்பெருமான் ஆணையின்படி அனிகங்கொண்டு, இணையிலாத தனது தேரிலேறிச் செல்ல முன்சென்ற சேனை பானு கோபன் யுத்தத்திற்கு வரும் போர்க்களத்தினையடைந்து நின்றது. அக் காலத்தில் அவுண வெள்ளமும், பூதவெள்ளமும் எதிர்த்துப் பலவகை யாகிய ஆயுதங்களூற கைகளைத் துணித்தும், தோட்களைத் துணித்தும், சென்னிகள் துணித்தும், மார்பம் துணித்தும், கழலடி துணித்தும் அமர் புரிந்தார்கள். அவர்களுள் பூதர் சிலரும், அவுணர் பலருமாக மாண்டொழிந்தனர்.

அப்பொழுது பூதர் தலைவரும், அவுணத் தலைவரும் இகலிப் போர் புரிகையில், அவுணர்களைப் பூதர்கள் கலங்கும்படி அடிக்கவே அவர்கள் இரிந்தோடினார்கள். அவரது கொற்றத்தைக் கண்ட பானுகோபன் வெகுண்டு நகைத்துத் தன் பாகனைப் பார்த்துப் பூதவெள்ளத்து இடை யில் தமது தேரைப் புகவிடுமாறு கூற, அவன் அச்சேனையைப் பிளந்து தேரைச் செலுத்தினன். அப்பூதர் சேனையில் முடுகி வந்த பானுகோபன் செயலினைக் கண்ட வீரபாகுதேவன், தன்னிளைஞரும், படைஞரும் சூழ வந்தெதிர்த்துப் பலவிதங்களாகப் போர்புரிந்து வருகையில் வீரபாகுவின் மார்பிற் புகும்படி ஆயிரங் கணைகளை அவு ணன் தூவ, வீரன் வெகுண்டு பதினாயிரங் கணைகளால் பாநுகோபன் ஏறியிருந்த தேரையும், அதிற் பூட்டியுள்ள புரவிகளையும் அழித்தான். செஞ்சுடர்ப் பகைஞன் வேறோர் தேரிலேறி நின்று, அவனைத் தெய்வப் படைகளைக்கொண்டு உயிரையழிக்கவேண்டுமெனத் தீர்மானித்து, வரு ணன் படை, கலுழன் படை, முதலிய வலிய படைகளை விட, வீரபாகு தேவன், சிறப்பினையுடைய நந்தியம் பண்ணவன் நலத்தகுபடையை

எடுத்து விட்டனன். அப்படையானது அநேக ஆனேற்றுருக்கொடு, அண்டங்களனைத்தையும் அழிக்கும் ஆற்றலுடையதாய்க் கருடப்படையை யழித்துச்செல்ல, அதனை யுணர்ந்த பானுகோபன் நடுவன் படையினைவிட, அதனையுமழித்து நெருங்கும் அதனது ஆற்றலைக் கண்டு, திசைமுகன் படையினை விடுத்தான். அவ்வஸ்திரம், நந்திதேவன் படையை யணுகி வணங்கிச் சென்றது. பின்னர் நாரணன் படையினை அப்பாகன் விடுப்ப, அப்படை, நந்தியின் படையொடு மலைகின்ற காலத்து வீரபாகுதேவன் வீரபத்திரக் கணையினை ஏவ, அக்கணையினைக் கண்ட நாராயணாஸ்திரம் நடுங்கித் தொலைந்தோடியது. அதன்பின்னர் அவுணன், செய்வதொன்றில்லாமையால் சிவபெருமான் செம்படையினை யெடுத்து அருச்சித்து விடுத்து நின்றான். அவன் செயலைக் கண்ட வீரபாகுதேவன், அதற்கு நிகராகிய அரன்படையையே விடுத்தலும், அப்படையிரண்டும் எழுந்து இகலி ஊழிக்காற்றினை யொருபக்கமுமிழ்ந்தன; ஊழித்தீயை யொருபுறமுமிழ்ந்தன; ஆழிவிடத்தை யொருபுடை யுமிழ்ந்தன. அன்றியும் அப்படைகள் அநேக உருத்திரகணங்களையும் எண்ணிறந்த காளித் தொகைகளையும், அளவிறந்த வைரவர்களையும், பேயின் குழுக்களையும், கொடிய மறலித் தொகைகளையும், ஆங்காங்கு உமிழ்ந்து எண்ணிறந்த கடல்களையும், முகிற் கூட்டங்களையுங் கான்று, அளவிலவாகிய தெய்வப்படைகளைத் தந்து, கற்களையும், தீயையும், இடித் தொகையையும் பொழிந்து, ஊழி முதல்வன் படையாகிய அவை இரண்டும், கடலையும், வானையும், திசையனைத்தையும், பாரையும் கொம்மென விழுங்கி, அண்ட முகட்டினைப் பிளந்து, மேலிடத்துச் சென்று தம்முண் முரண்பட்டுக் கடுஞ்சமரிழைத்தன. அதனால் பாரினுள்ளவர், விண்ணினுள்ளவர், புவனத்துள்ளவர், ஏனைய அண்டங்களினுள்ளவர் ஆகிய யாவரும் நடுங்கி அயர்ந்தனர் இவ்வாறு அண்டங்களிடத்து அமர்புரிந்த அவ்விருபடையும் சமமான வலிமையுடையவாகையால், ஒன்றனை ஒன்று வெல்லுதற்கரிதாய்த் தம்மை விட்டவர் பக்கல் மீண்டன. அப்பொழுது சூரபன்மன் தூதர்களால் சமர பூமியில் நிகழ்ந்ததை அறிந்து, இன்னல் கடலிலாழ்ந்திருந்தான். பானுகோபன், சிவாஸ்திரம் தன் கையகத் தெய்தியதும், "இனி யான் செய்வதென்னை?" என்று திகைத்து, மருங்கில் நோக்கிய காலத்து, மள்ளருந் தலைவரும் ஆகிய தன் துணைவருள் ஒருவரையுங் காணப்பெறாது,

பெருந்துயரடைந்து, "இனி என் மாயையின் வன்மையால் மறைவதே தகுதி." என்று எண்ணி, அம்மந்திரத்தால் மறைந்து விண்ணகத்து நின்றான். அக்காலை அருக்கன் அத்தவெற்பினை யடைந்தான். பானுகோபன் மறைந்ததும் வீரபாகுதேவன் துணைவரைநோக்கி, "இன்னும் பாதகன் இறந்தானில்லை; தப்பியோடினன். இனி யாம் செய்வதென்னை?" என்று வினவலும், துணைவர், "பரிதியும் பட்டது. தனித்து நின்ற அவுணனும் மறைந்தான். இனி எதிர்த்துப் போர்புரி வாருமில்லை. ஆனவாற்றால் யாம் மீண்டு சென்று அறுமுகன் திருவடியை அடைவதே தகுதி," என்றனர். அவர் உரைத்தவற்றை விண்ணி னின்றே கேட்டுக்கொண்டிருந்த பானுகோபன் பலவாறாக ஆராய்ச்சி செய்து, அதுவே செய்யத்தக்கதென்று துணிந்து, அப்பகலில் மாயை யால் கொடுக்கப்பட்ட அம்மாயப் படையை எடுத்து, அருச்சித்து அதனைப் பார்த்து, "மாயப்படையே! நீ என் பகைவர் பால் யாருமறியா வண்ணஞ் சென்று, அவரது அறிவை மயக்கி இறக்கும்படி செய்து, சுத்த நீர்க்கடலில் இடக்கடவாய்." என்று கூறி விடுத்தான்.

அம்மாயப்படை விரைந்து பகைவர் நின்ற களத்தினைக் குறுகி, பூதகணத்தர், இலக்கர், நவவீரர்கள் ஆகிய அனைவரையும் அறிவிழக் கச் செய்து, கீழே தள்ளி அவர்கள் உயிரை வவ்வுதற் கியலாமையால் வருந்தி, ஊழியின் இறுதிக்காலத்து வரைகளையும் அலைக்கும் கடுங்காற் றின் தன்மையைக்கொண்டு ஆயிரவெள்ளம் பூதசேனையையும், இலக் கம் வீரரையும், வீரபாகு முதலிய ஒன்பது வீரரையும் ஆகாய வழி யாக எடுத்துச் சென்று, ஆறு சமுத்திரங்களையுங் கடந்து அப்பால் ஏழாவதாகவுள்ள தூயநீர்க் கடலுள்ளிட்டு அகலாவண்ணம் அங் ஙனே அவர்களைக் காத்திருந்தது. இவ்வண்ணஞ் செய்த மாயைப்படை யின் வன்மையைக் கண்ட பானுகோபன், "வீரபாகு முதலிய வீரர் இறந்தனர். யாம்செய்த சூட்சியே தகுதியுடையது." என்று வியந்து, நகரினுள் புகுந்து, தாதைபால் அணுகி, "இன்றைய போரில் எதிர்த்தவர் ஆவியைப்போக்கி வெறுங்களமாக்கி மீண்டனன். நாளைபதினம் அறு முகன் வைகிய சூழலைச்சார்ந்து அத் தானைத் தொகுதியையும் முடித்து, அவனையும் வென்று மீளுவன். யாதுங் கவலாதிருத்தி." என்றான். அம் மொழி கேட்ட சூரபன்மன் பெரிதும் மகிழ்ந்து, அவனை மார்புறத்தழு வித் தன்னயல் இருத்தி, "அன்று யான் புரிந்த தவத்திற்குவந்து கொன்

றைவேணியன் அரசுந்திருவும் அளித்தனன் என்பதிருக்க, இன்று இவ் வரசுந்திருவும் நீ தந்தனை. மைந்த! இன்று போரிடை நொந்தனை. ஆதலின் உன் மனையிடை யெய்தி இனிதமர்ந் திருப்பாய்" என்று விடையளித்து அனுப்பினன். பானுகோபன் சேனைசூழச்சென்று, தன்னில்லிடை வைகினன். இனி மாயைப்படையால் கடலகத்திருந்த வீரர் தெளிந்தெழுந்தமையை உரைப்பாம்.

அவுணன், மாயைப்படையால் பூதர்களையும், வீரர்களையும் கட்டிக் கொண்டுபோய்க் கடலகத்திட்ட கொடுமையைக் கண்ட தேவர்கள், மனங்கலங்கி, அறுமுகப்பெருமானிடம் உரைப்பதற்காகக் கடுக ஓடினார்கள். அவர்களுக்கு முன்னரே நாரதமுனிவன் அறுமுகப் பண்ணவனிடஞ் சென்று நடந்ததை விண்ணப்பிக்க, அதனைக் கேட்டருளிய இளையோன் தனது செங்கரத்திலிருந்த வெற்றிவேற் படையை நோக்கி, "வேற்படையே! நீ சென்று, நமது பூதப்படையும், இலக்கரோடு கூடிய ஒன்பது வீரரும் ஆகிய அனைவரும் மாயையின் நீங்கித் தெளியுமாறு, அப்படையின் ஆற்றலை யழித்து, அவர்களை இங்கழைத்து வருதி." என்று கூறி விடுத்தருளினன். அவ்வீர வேற்படையானது விரைந்து சென்று, சுத்தநீர்க் கடலையடைந்து, அம்மாயைப் படையை யழித்து, வீரரைத் தெளிவுறுத்தியதும், வீரர் விடம் நீங்கி எழுந்தாரைப்போன்று தெளிந்தெழுந்து, வேற்படையைக் கண்டு அதனைத் துதித்து நின்றார்கள். அவ்வெற்றிவேல் வீரரைப் பார்த்து, "இனி யாம் பெருமானிடத்துச் செல்லலாம் வாருங்கள்," என்றது. அவ்வாறே அவர்கள் பின்தொடர்ந்து வர, அச்சத்திவேல் முன் சென்று அறுமுகன் திருக்கரத்து அமர்ந்தது. பின்சென்ற வீரர்களுள் மூத்தவனாகிய வீரபாகுதேவன், மற்றையோரைப்பார்த்து, "இவ்வீர மகேந்திரபுரத்தை யழித்து வெற்றிகொண்டாலன்றி யான் அண்ணலிடத்து வாரேன்." என்றுரைத்தான். நின்றவீரரும் அதற்கு ஒருப்பட்டு, அந்நகரினை யழிப்பதே முறையென்று கூற, வீரபாகுதேவன் துணைவரும் பூதர்களுஞ் சூழ அம்மகேந்திரபுரத்து மேலைவாயிலை யடைந்தான். அப்பொழுது அவ்வாயிலைக் காத்திருந்த மிக்க வீரனாகிய புலிமுகமுடைய அசுரன் நால்வகைப் படையோடும் எதிர்க்க, அமர்புரிவழி அவ்வவுணப் படைகளை யழித்து, அவனையும் வீட்டி, அந்நகரின் மதிலைத் தள்ளி அவ்விடத்து முன்னின்ற கோபுரத்தை யெடுத்தெறிந்து, உள்ளே நுழைந்து, அசுரர் வைகும் மாளிகை

களைப் பெயர்த்தெறிந்து, நாசமாக்கினார்கள். அச்சமயத்தில் வீரபாகு தேவன், அனற்படையோடு வாயுவின் படையைக் கூட்டி, அம்மகேந் திர நகரை யழிக்குமாறு விடுத்தான். அவ்வண்ணமே அப்படை இரண்டும் சென்று நகரத்தைத் தீய்த்து வெற்றிடமாக்கின. அதைத் தெரிந்த தூதுவர் சிலர் சென்று, சூரபன்மனிடத்து நிகழ்ந்ததை யுணர்த்த, இறந்தொழிந்தார்களென்று கருதியிருந்த சூரன், பெருந் திகைப்படைந்து, ஒற்றரை நோக்கி, "ஊழிக்காலத்து மேகங்களைக் கொண்டு வாருங்கள்." என்றான். அவர்கள் விண்ணிற் சென்று, உறங் கிய மேகங்களை விளித்து வந்து விட்டார்கள். சூரன் அவற்றை நோக்கி, "நமது நகரத்தை யழித்துவரும் தீயை அழிப்பீர்கள்." என்றான். அவ்வாறே செய்வோமென்று சென்ற மேகங்கள், அந்நகரின் மீது ஒவ்வோர் திவலையும் யானையின் பருமனாகக்கொண்டு ஒரு கணப் பொழுது பெய்தலும், அனல் அவிந்தது. அஃதுணர்ந்த வீரபாகு தேவன், நாரதமுனிவனால் தெரிந்து ஊழிக் கனற்படையைவிட்டு, அவற்றின் ஆற்றலை யழித்து நின்றான். பின்னரும் பூதவீரர் அந் நகரிடத்து எதிர்த்துப் போர்புரிந்து வந்தனர். சூரபன்மன் ஒற்றரால் அஃதுணர்ந்து, மெய் வியர்த்துக் கடுஞ்சினங் கொண்டு, தானே சென்று பூதரை யொழித்துத் தூதனைக் கொன்று வருவதாக எழுதலும், அவன் புதல்வருள் ஒருவனாகிய மூன்று சிரங்களையுடைய இரணியனென் பவன், சூரன் அடிகளைப் பணிந்து, "அடியேன் உரைக்கற்பாலது ஒன்றுளது. அதனைக் கேட்டருளுக." என்று வணங்கிச் சில அறத்தாறுகளைக் கூறச் சூரன் கடுஞ்சின முடையவனாய், "இனி இவ்வாறாகிய மொழிகளை என் முன் பகருவையேல், நின்னைக் கூற்றிற் கிடுவேன்." என்று மொழிந்தான்.

புதல்வனாகிய இரணியன், தன் தந்தை இறப்பது உண்மை யெனத், தான் முன்னரே உயிர்விடுதல் தகுதி யென்றெண்ணி, தான் போருக்கேகி, ஒன்னலரை வென்று வருமாறு தன் தந்தையினிடம் விடை கேட்டனன். அக்குமரன் போர்க்கோலங் கொண்டு படை யொடுஞ் சென்று, அன்றிரவில் நகரை யழித்து நின்ற வீரபாகு முதலியோரிடத்து எதிர்த்துப் போர் புரிந்து, வலி குறைந்தவனாய்ச் செய்வது ஒன்றறியாது, மாயையால் மறைந்து கடலிடை மீனுரு வெடுத்து மறைந்திருந்தான். அதுகாலை இரவு நீங்கிப் பரிதியும்

கீழ்த்திசை தோன்றினன். அன்றிரவில் நிகழ்ந்த அச்செயல்களைத் தூதுவர் சென்று, சூரபன்மனுக் குரைத்தனர். அவன் அதனைக்கேட்டு, மனம் புழுங்கி, மெய்வியர்த்து, இரங்கிக்கொண்டிருந்த காலை, அருகிருந்து கண்ட புதல்வனாகிய அக்கினிமுகன் பிதாவைத்தேற்றி, "அடியேனுக்கு விடை தந்தால், அவர்களை இத்தினமே வென்று வருவேன்." என்றனன். அவுணருக் கிறைவன் நன்றென விடைகொடுத்து அனுப்பினன். புதல்வன் இருபத்து நாலாயிரராகிய படைத் தலைவர் தானையோடு சூழ்ந்து வரத், தேரேறி மாயையால் கொடுக்கப்பட்ட வில்லை ஏந்திப், பலபடையும் பரித்து, வீரர் நின்ற சமர்க்களம் குறுகி, அவர்களை எதிர்த்து மலைந்து, தன்னை எதிர்த்துப் போர்புரிந்த ஏழு வீரரைப் பசுபதியின் கணையால் போக்கினன். பிறகு வீரபாகுதேவன் எதிர்த்து, அம்புமழை சொரிந்து, அவன் மார்பினைப் பிளக்க, அவன் அவசரமாய்க் கீழே விழுந்து, பின்னர்த் தெளிந்து, முன்னாளில் தன்பூசை ஏற்றிருந்த காளியை நினைத்தான். அக்காளியானவள் அஃதறிந்து, தன்படைகளோடு வந்து, வீரபாகு தேவனுடைய பூதப்படைகளை அழித்துப் போர்புரிகையில், வீரபாகு தேவன், அக்காளியைக் கலங்க அடித்தான். அவள் அச்சமடைந்து, வணங்கித் துதித்துச் சென்றனள். தெளிவு பெற்றெழுந்த அக்கினிமுகன், வீரபாகுவோடு எதிர்த்து, வீரனால் விடப்பட்ட வீரபத்திராஸ்திரத்தால் மாண்டொழிந்தான்.

அக்கினிமுகன் மாண்டதும், இலக்கம் வீரரும், மற்றையோரும் வீரபாகுவைச் சூழ்ந்தனர். அப்பொழுது தன்னிளைய வீரருள் ஏழுவரைக் காணுமையால், வீரன் வினவி, அக்கினிமுகனால் மாண்டு போயினர் என்பதை யறிந்து, அவரது களேபரங் கிடந்த சூழலுக்குச் சென்று வருந்தித், தன் தூணியில் இருந்த அம்புகளில் ஒன்றை எடுத்து, அவ்வம்பில் "அறுமுகப் பண்ணவனுக்கு இளையன் யான் நமனுக்கு எழுதி விடுத்தது. பகைவர்கள் எதிர்த்த யுத்த பூமியில் என் இளைஞர் எழுவருயிரை நீ கவருதல் தகுதியோ? கடிதில் அன்னோரை விடக் கடவை." என்று நகத்தால் எழுதிக் கூற்றுவன் ஊர். புகும்படி விடுத்தான். அக்கணை கூற்றுவன் முன் சென்று வீழ்தலும், அதனை எடுத்து உணர்ந்த நடுவன், அன்னோர் ஆவி அவனுலகில் இல்லாமையால், திருக்கயிலை மலையிற் சென்று, அங்கோர் சார்பில் போரில் இறந்த

சில பூதர்கள் சூழ, இனிது வீற்றிருந்து, அரம்பையர் பாடலைக் கேட்டிருந்த அவ்வேழு வீரரோடு அனைவரையும் அழைத்து வந்து, வீரபாகுதேவனிடம் விட்டு, "என்னால் நடந்ததன்று இது. ஆதலின், அடியேன்மீது கோபம் கொள்ளவேண்டாம்." என்று தாழ்ந்து கூறி, விடைபெற்றுக் கூற்றுவனிடம் புக்கான்.

வீரர் எழுவரும், மற்றையோரும் களிப்புடன் எழுந்து, வீரனைத் தொழுது இன்புற்றிருந்தனர். இச்செயல்களைக் கண்ட தூதுவர், சூரனிடத்துச் சென்று, "அக்கினிமுகனாகிய நின்புதல்வன் வீரபாகுவினால் இறந்து பட்டான்." என்று கூறினார்கள். அச்சொல் அவனது செவியிற் புகுந்த அளவே கீழே விழுந்து, புலம்பிக் கொண்டிருந்தான். மன்னர் மன்னன் ஆற்றுப் பெருந்துயரால், அழுது கலங்குவதைக் கேட்ட மூவாயிரராகிய புதல்வர்கள் அருகிற்சென்று, வணங்கி நின்று, "வீரபாகு முதலியோரது வன்மை யுணர்ந்திருந்தும், இரணியனாகிய சிறுவனை விடுத்தாய். ஆயினும், நீ கவலையடைதல் தகுதியோ? பானுகோபன், ஊளன், மூவாயிரம் புதல்வராய யாங்கள் உள்ளோம். அளவற்ற பெரும்படைகள் இருக்கின்றன. எற்றிற் கிரங்கினை? இன்னே எமக்கு விடையளித்தால், யாங்கள் பகைவர் நின்ற போர்க்களங் குறுகி, அவர்களை வென்று மீளுவோம்." என்றனர். சூரன் மனந் தெளிந்து, அவ்வாறே விடை கொடுக்க, அம்மூவாயிர மைந்தரும் சேனையோடு சென்று, பூதர்களை அலைத்துப் போர் புரிகையில், பூதர் ஓடவும், இலக்கர் எதிர்த்து, அவருள்ளும் விஜயனென்னும் வீரன் எஞ்ச, மற்றையோர் அழிவெய்தினார்கள். பின் விஜயன் பெரும்போர் புரிந்து வருகையில், அம்மூவாயிரர் தலை, கரம், தோள் முதலிய உறுப்புக்களைத் தடிந்து வீழ்த்தவும், அன்னோர் இறவாது அத்துண்டங்கள் ஒன்றுசேரப்பெற்று, மீண்டும் எழுந்து போர் செய்தனர். விஜயன் மதி கலங்கிச் செய்வதறியாது, கண்ணீர் பெருக நின்று, முருகப் பெருமானைத் துதித்தான். அஃதறிந்த எம்பெருமான், அவன் முன்தோன்றி, "அவர்களைத் தனித்தனிப் போரியற்றி வெல்லுதல் யாவராலுங் கூடாது. வலிமையுடைய ஓரே படையினால் அழித்தல் வேண்டும். அவர்கள் இத்தகைய வரத்தினை முன்னரே திசைமுகத்தனிடத்துப் பெற்றனர்." என்று கூறி வயிரவக் கணையை அண்ணல் அவ்விடத்திலேயே உண்டாக்கி, ஈந்தருளி, "இப்பொழுதே பகைவர்மேல் இப்படையை விடக்

கடவை." என்று கூறி மறைந்தருளினான். அவ்வாறே அவன் வயிரவப் படையைவிட்டு, அம்மூவாயிரர் ஆவியும் ஒருங்கே நமனுலகை எய்தும் படி செய்தான். அஃதறிந்த தூதுவர், சூரன் இருப்பிடஞ் சென்று, வணங்கி நின்று, புதல்வர் மூவாயிரவரும் சண்டன்பதி யெய்தி யுள்ளார் என, அவன் அரியணையினின்றும் அவசமாகிக் கீழேவிழுந்தான். அவ்வாறே ஒளி இழந்த அருக்கனும் மேற்பாற் கடலில் விழுந்து ஆழ்ந்தான்.

## தருமகோபன் வதைப்படலம்

முடிவுற்ற மைந்தரை முன்னி முன்னி இடருழக்கும் மன்னனை எய்தி, அடிவணங்கி நின்று, தருமகோபனென்னும் அமைச்சன் கீழ் வருமாறு கூறினான். "மன்னர்கட்கு மன்ன! நீ இவ்வாறு அழுவது தக்கதோ? பகைவர் மகிழ்ச்சியடைவர், தேவர் நகைசெய்வர், நம்மவர் வெள்குவர். வீரராயினோர் போரிடைத் தந்தை முதலிய யாவரே யாயினும் இறப்பரேல், அதற்கு மனங்கவல்வரோ? குறைவற்ற செல்வமும், வன்மையும், ஆணையுமுடைய நீ வருந்துவது எற்றுக்கு?" அதைக்கேட்டு மன்னன் சிறிதே தேறி, "யானே சென்று போரினை முடித்துப் பகைவர்களை வென்று மீள்வேன்." என்று எழுந்தனன். அவனைத் தடுத்து, அடி வணங்கித் தருமகோபன், "யான் என் படையோடும் போந்து, வென்று, இன்று மீள்வேன். விடைகொடுத்தருளுதி." என்று வேண்டினான். அவ்வாறே சூரன் விடைகொடுக்கத், தன்படைஞர் சூழத், திக்கு யானைகளுள் புண்டரீகமென்னும் அரசுவாயின் மீது ஏறிப் பகைவர் நின்ற போர்க்களங் குறுகிப் பகைவரைப் பார்த்து, அச்சுற்று அதன்பின் போர் புரிதலும், தனது தானை முற்று மழியத் தான் வெகுண்டு, எதிர்த்த இலக்கம் வீரரையுந் தொலைத்துப் பின் வீரபாகுவால் நொந்தனன். அப்புண்டரீகமென்னுங் களிறும் தனித்துப் போர்புரிந்து வலியிழந்து வீழ்ந்தது. பின்னர்த் தெளிந்தெழுந்த அறப்பகைஞன், வீரபாகுவை எதிர்க்க, வீரபாகுதேவன் அவனை நமனுலகிற்கு அனுப்பினான். வேழந்தொழுது, "பண்டைநாள்தொட்டு இவனுக்கடிமை பூண்டு இவன் இட்டசிறையகத்துத் தளைப்பட்டு மாழ்கினேன். இனி உன்னால் அச்சிறை நீக்கமடைந்தேன். என்மேல் முனியாது எனக்கு விடைதரல் வேண்டும்." என்றலும், வீரபாகு அக்களிற்றின்ற அருளால் நோக்கி விடையளித்தனன்.

அத்திக்கயம் அவுணரைச் சிறிது மஞ்சாது, விண்வழி கொண்டு நடந்து, தன் உறைவிடம் புகுந்து, வைகிற்று. போர்க்களத்தில் நிகழ்ந்தவற்றைத் தூதர் சென்று, சூரபன்மனுக்கு உரைக்க, பழுதுபட்ட திறலினையுடைய அமைச்சனது சாக்காட்டைக் கேட்ட சூரபன்மன் துன்பமாகிய கடலுள் மூழ்கி, அழுதுயிர்த்து, மெய்வியர்த்து எழுதிய சித்திரப் பாவைபோல் அவசமாய்க் கிடந்தான்.

## பானுகோபன் வதைப் படலம்

அன்றிரவு கழிந்ததும், தன்னைப்பற்றி இருஞ்சிறையிட்ட பாதகன் அன்றழிதல் திண்ணமென் றுணர்ந்து, அதனைப் பார்க்க விரைவிற் செல்ல சூரியன் உதயகிரியில் எழுந்தான். மறை யொழுக்கத்தைக் குறைத்த சூரன் அவ்வாறு கவலையுற் றிருப்பதை யுணர்ந்த தூதுவர் சிலர், பானுகோபனை யடைந்து, "நெருநல் நீ வென்று சுத்தநீர்க் கடலிலிட்ட பூதர்களும், வீரர்களும் அறுமுகன் வேற்படையால் உய்ந்து, நமது நகரத்திடை எய்தி, செருக்கெய்தலும் மன்னர் மன்னன் வினவி, இரணியன், அக்கினிமுகன், மூவாயிரவர், தருமகோபன் என்னும் நாற்பகுதியினரை விடுத்தனன். அவருள் இரணியன் போரில் தோற்றோடி மீனுருக்கொண்டு கடலில் மறைந்தான். ஏனைய மூத்திறத்தினரும் மாண்டனர். அதுகேட்ட அசுராதிபன், மனம் தயங்கினன். படைகள் சுருங்கின. ஊரை அலைத்த பகைஞர் அகலாது, மேலும் நின்றனர்." என்று கூறி நின்றார்கள்.

அவர்மொழி கேட்ட பானுகோபன், ஆற்றவுந் துன்பமடைந்து, தன் தாதையின் கோயில் எய்தித் தனித்திருந்த பிதாவைப் பார்த்து, வணங்கி நின்று, "மாயை என்னும் பாட்டியானவள், எனக்களித்த மாயைப் படையினால் பகைவரை மயங்கச் செய்து, சுத்தநீர்க் கடலில் அழுத்தினேன். அதனைத் தேவர்கள் அறிந்து சென்று, முருகற்குச் சொல்ல, அவன் வேற்படையை விடுத்து, அவர்களைத் தெளிவுறுத்தி, மீளச் செய்தனன். அவ்வறுமுகனை வெல்லுதல் கனவினுங் கூடாத காரியம். யாவையும் அறிந்த நின்க்கு யான் புகலுமாறென்னை? முற்போரில் அச்சண்முகனை எதிர்த்து, வருந்திப் படையாற்றலு மிழந்து, இரிந்து மீண்டதால் நீ பிழைத்தனை. சிலையினை இழந்து, மானமுமிழந்து தோற்று வந்தனை. தொன்மையாகிய வரத்தின் இயற்கையையும் தொலைத்தாய். அன்றியும், அறுமுகன் வெ

குண்டானில்லை. அவன் வெகுளுமேல், அண்டங்கள் அனைத்தையும் அப்பொழுதே முடித்திருப்பன். பிரமனை அளித்த நாரணன் ஆழிப் படையைக் களத்தில் ஆரமாக அணிந்த தாரகனைக் கிரவுஞ்சவரை அடித்த வீரனை யாவரே வெல்லுநர்? விரித்துரைப்பதில் பய னென்னை? அவனால் ஏவப்பட்ட வீரவாகுவை வெல்லுவதே அருமை யான காரியம். ஆற்றல் மிக்கபுதல்வரை இழந்தாய். நால்வகைச் சேனைப் பெருக்கையும் அற்றாய். என்னோடு நீ ஒரு ஆள் இருக்கின்றனை. மேன்மை தங்கிய நின்குலத்தை வேரோடு முடிக்கக் கூற்றவன் வந்துள் ளதை நீ யறியாது, இகலை மேற்கொண்டாய். பெரிய வீரர்கள் போர் செயக் கிடைப்பரேல் உவப்போடு ஏற்று, அமராற்றுவன். பகையை அஞ்சி யுரைத்தேனில்லை. எந்தை நீ இன்னும் நெடுங்காலம் உய்ந்து இன்புறுவாய் என்ற ஆசையால் உரைத்தேன். இனி யான் உரைக்கும் உறுதி யொன்றுளது. அஃதாவது, விண்ணவரைச் சிறையினின்றும் இன்னே விடுவாய். அவ்வாறு செய்யின் அறுமுகன் உன்மேல் கருணை பூண்டு, வந்த இடத்திற்கு மீளுவான். நீ நெடுங்காலம் சிறப்போடு வாழ் வாய்.'' என்று பானுவின் பகைஞன் அன்பினால் உரைத்தான.

மகனுரைத்த மாற்றங் கேட்ட மன்னன், தும்பை சூடிய மணிமுடி துளக்கி, "நம்பி! நீ யுரைத்த மந்திரம் நன்று.'' என்று தன் மெய்யும் ஆசமும் குலுங்க நகைத்து, "என் மைந்தனே! இத்தன்மை யாகிய மொழிகளை இன்றுரைத்ததென்னை? இன்று யான் எளியனாகி விண்ணவர் சிறையை நீக்கின், மன்னர் மன்னவனென் றென்னை மதிப்ப வர் யாவர்? அஃதே அன்றி நீங்காவசையும் நேருமல்லவா? பேரழகு, இளமை, ஆற்றல், செல்வம், வீரம், சுற்றம், யாக்கை ஆகிய இவை முதலிய யாவும் நிலையற்றனவன்றே. புகழ் ஒன்றன்றே பொன்றாது நிற்பது. ஆகலான், போரில் என் ஆருயிர் போகினும் யானிட்ட அமரர்களைச் சிறையினின்றும் விடேன். இன்னுமோர் ஊழிக்காலம் இருப்பினும் இறப்பதல்லால், இப்புவியில் இருப்பதுண்டோ? பிறந்த வர் இறத்தல் திண்ணம். மின்னலொத்த வாழ்க்கையை வேண்டி, விண்ணவரையஞ்சி, இம்மன்னுயிர் சுமக்கிலேன் யான். மைந்தனே! நீ அஞ்சினைபோலும்! தண்ணிய நின் மாளிகைக்கேகித் தூங்குவாய். தொலையாவரம் பெற்றுள்ள யான் அழிவதில்லை. நெஞ்சினில் இரக்கம் கொண்டு வருந்தவேண்டாம். பகைவர்மேல் சமர்புரியச் செல்லுவேன்

யான்." என்று வெகுண்டு கூறினன். இவ்வண்ணம் தாதை கூறியதைக் கேட்ட பானுகோபன், "உய்யும் வகை இல்லை போலும்! உரைத்த தொன்றனையும் உணர்ந்திலன். விதியை வெல்லுநர் யாவர்? இனி யான் ஏற்ற வண்ணஞ் செய்குவன்." என்றெண்ணினன். பின்னர் அவன் தாதையைப் பணிந்து, "அடியேன் மீது கோபிக்க வேண்டாம். சிறியேன் பிழையைப் பொறுத் தருளுவாய். அன்றியும் அடியேன் போருக்கெழ ஆணைதந்தருளுவாய்." என்றான். அவுணன் மனமகிழ்ச்சியோடும் புதல்வனைப் பார்த்து, "நீ உன் தானையோடும் ஏகிப் பகைவரைப் பொருதழித்து, மீளுவாய்." என்றான். அம்மொழி கேட்ட பானுகோபன், தன்னில்லமடைந்து, போர்க்கோலம் பூண்டு, படைஞர் சூழச்சென்று, பூதசேனை நின்ற பறந்தலை எய்தினன். முன்னர்ச் சென்ற அவுணப்படையும், நின்ற பூதப் படையும் இகல்கொண்டு கலந்து, அவன் அமர் புரிந்தனன். அவுணப் படைகளைப் பெரிதும் அழித்து, வெற்றி யடைந்து வரும் பூதரைப் பார்த்துச் சினந்து, பானுகோபன் எதிர்த்து வருதலும், வீரபாகுதேவன், எதிர்த்துப் போர் புரிந்தனன். பானுகோபன் அளவிறந்த படைகளை ஏவி, வீரபாகுவின் வில்லையும் அறுத்துக் கடுங் கோபங்கொண்டு, வன்மையையுடைய தெய்வப் படைகளையெல்லாம் ஒன்றன் மேலொன்றாக விட்டனன். வீரபாகுதேவன், அவ்வப் படையினால் அவற்றைத் தொலைத்து நின்றனன். பானுகோபன், "இனி நான் செய்வதென்? அரன் படையை விடுவேனேல், அப் படை வீரவாகுவும் விட்டுத் தடை செய்குவன். அஃது அவனிடம் உண்டு. ஆகலான் இனி மாயத்தால் வெல்வதே தகுதி." என்று தீர்மானித்து, ஓர் மாய மந்திரத்தை விதிப்படி நினைத்துத் தேருந் தானுமாக விண்ணிடை மறைந்து, வீரபாகுவின் முன்னும் பின்னும் பக்கங்களிலுந் திரிந்து, கணை மழை சொரிந்தனன். வீரபாகு படைகள் அனைத்தும் உடைந்து போயின. அவன் செஞ்சோரி யிழியத் தள்ர்ந்து நின்று, இனி அவனைக் கொல்லுதலே தகுதியுடைய் தென்று கருதி, ஞானமாப் படையை எடுத்து, அவன் மீது விடுத்தனன். மாய முற்றுந் தொலைய, பானுகோபன், தேருடன் தனித்து நின்றான்.

அவனை நோக்கிய வீரபாகுதேவன், "கள்வனே ! இனி நீ செல்லுவது எங்ஙனம்?" என்று வெகுண்டு கையில் வில்லை வாங்கித் தேரோடும் விண்ணிடைச் சென்றான். சென்ற வீரபாகுதேவன், பானுகோபனை எதிர்த்துப் போர் புரிகையில், அவ்விருவருடைய தேர்களும் ஆகாயத்தில் இன்ன திசையில் இருக்கின்றன என்பதைத் தெரியாது தேவர்கள் திகைத்தனர். அவர்கள் விட்ட சரங்கள், எல்லாப் புவனங்களிலும், எல்லாக் கடல்களிலும் சென்று நிறைந்தன. இவ்வாறு நெடுஞ்சமர் இயற்றி வருங்கால், விண்ணிடைச் சாரி திரிந்த இருவரும் வாளினை ஏந்திப் போர் புரிந்து திரிகையில், கற்ற வித்தையின் திண்மையால் வீரபாகுவின் தோளில் தன் வாள் உறும்படி வீச, அதனால் குருதியாறு இழிதர, அமரர் கண்டஞ்சினர்கள். அப்பொழுது இளையவன் அறுமுகப் பெருமானை நினைத்துத் தன் வாளை விரைந்து வீசிப் பானுகோபன் வலக்கையை அறுத்தான். அப்பானுகோபன், இடக்கையால் வாளை ஏந்திப் பொருதலும், அவனது இடக்கையையும் சிரத்தையும் அறுத்துத் தள்ளினான். அத்தருணம் கூற்றுவன் அவனதுயிரைக் கொண்டு சென்றனன்.

வீரபாகுதேவன், விண்ணினின்றும் இழிந்து, பூதரும் துணைவரும் சூழ இருந்த காலையில் துணைவரை நோக்கி, "பானுகோபன் மாண்டொழிந்தனன். ஆனவாற்றால் நமது சூளுரை முடிந்தது. இனி நாம் அறுமுகப் பெருமானைச் சென்று வணங்கி, அவன் அருள் பெறலாம்." என்று கூறுதலும், அவர் அவ்வாறே செய்வாமென்று வீரபாகுவைச் சூழ்ந்துவர, அவர்களோடு அடுகளம் நீங்கிப்பாசறைப் புகுந்து, அறுமுகப் பெருமானிருக்குங் கோயிலை எய்தி, அவன் முன்னர்ச் சென்று, அவனடி தாழ்ந்து எழுந்து நிற்றலும், சண்முகப் பெருமான், வீரபாகுவைப் பார்த்து, "நீ பானுகோபனை வென்றனையன்றோ? அதனால் பெருமகிழ்வு எய்தினம். நினக்கு வேண்டுவது யாது? அதனைக் கேட்பாயாக," என்று அருள் புரிதலும், "எல்லாம் தேவரீர் திருவருளால் முடிந்தனவேயாயினும் அடியனுக்கு ஒன்று அருளவேண்டுவன் அஃதாவது:—

"கோல நீடிய நிதிபதி வாழ்க்கையுங் குறியேன்
மேலையிந்திர னரசினைக் கனவினு மெஃகேன்
மாலயன்பெறு பதத்தையும் பொருளென மதியேன்
சால நின்பதத் தன்பையே வேண்டுவன் தமியேன்."

முத்தியினுஞ் சிறந்த இவ்வரத்தினைத் தந்தருளல்வேண்டும்." என்றனன். அவ்வாறே தந்த சண்முகன், "பகைவர் போரில் வருந்திய நீவிர் நம்மிடஞ் சென்றிருக்கலாம்." என்று அனைவரையும் அருளினுற் கூறி விடுத்தனன். அவ்வாறே துணைவரும் ஏனையோரும், நின்ற வீரபாகுவும் தத்தமிடஞ் சார்ந்தனர். இஃதிவ்வாறிருக்க, அவுணர்க் கிறைவனுகிய சூரனுக்கு அக்குற்றதை இனி அறையத் தொடங்கு வாம்.

"இவர்கள் செயல் இத்திறமாயின் இனி நம் இறைவனையும் கொல் லுவர்." என்று வருந்திக் கண்ணீர் பெருக்கத்துடன் சென்ற தூதுவர், சூரனை அணுகிப் பணிந்து நின்று "மன்ன! நின் மகன், முன்னூறு தூத ஞல் முடிந்தனன்." என்றுர். அவன் ஒற்றருரைத்த உரையினைக் கேட் டுத் துயர்க்கடலாழ்ந்து ஓவென்றலறி, கீழே விழுந்து புரண்டு பெரு மூச்சு விட்டவனுயினுன். உடல் தளர்ந்து வெதும்பவும், கண்கள் சோர வும், மனந்திரியவும், உயிர் ஊசலாடவும் பெற்றவனுய், இறந்தாரின் வீழ்ந்த சூரபன்மன், மயக்க நீங்கி எழுந்து, அப்பானுகோபனுடைய இளமைச் செயல்களையும் வெற்றியையும், தனக்கவன் உரைத்த உறுதி யையும் பலவாறு சொல்லி அழுது கொண்டிருக்கையில், அசுரர் சிலர் இறந்துபட்ட பானுகோபன் உடலுறுப்புக்களைக் கொண்டு வந்து சூரன் முன் இட்டனர். அவனது உறுப்புக்களைச் சூரன் பார்த்துக் கழறிக் கொண்டிருக்கையில், காப்பமைந்த மாளிகை யின் உள்ளிருக்கும் பானுகோபன் தாயாகிய பதுமகோமளை கேட்டு ஆகுலமெய்தி, நிலத்தினில் வீழ்ந்து, நீண்ட கூந்தலைக் குலைத்தகைய ளாய்க் கண்கள் குருதி சொரியப்பெற்று, வயிறலைத்து, ஆற்ருத் துயரம்கொண்டு, வலைத்தலைப்பட்ட மயிலென இரங்கி அல்லல் கூர்ந்து, தொல்லை தான் வைகிய சூழலை நீங்கி, "எப்படியும் என் மகனைக் காண்பேன்," என்று ஆவலித்து ஒல்லையோடினுள்.

அரண்மனைத் தோழியர் அரசிக்குற்ற ஆகுலத்தால் தாமும் ஆவ லித்தழுதனர். திருமகளுக் கிணையாகிய பதுமகோமளை, அளவற்ற மாதரோடு முன்னரே சென்று, வாளாற்றுணிந்து கிடந்த மைந்தனுகிய பானுகோபன் மீது விழுந்து, பலவாறு கூறிப் புலம்புகின்றுள்:—

அருமை மகனே! நைந்துகிடக்கின்ற தேவர்களுக்குத் துன்பமியற்றுதல் நன்றலவென்று யான் நின் தந்தைக்குப் பலமுறை கூறினேன். அதனைத்

தோராது நின்னைத் தோற்றனன். இனி மன்னனும் உய்வனோ? தன்னுயிரும் அழியுமன்றோ?'' என்று இவ்வாறு எடுத்து மொழிந்து புலம்பித் துன்பநோயில் ஆழவும், அவளது தோழியரும் கிளைஞரும், கன்று நீங்கிய பசுவைப்போன்று கதறினார்கள். அப்பொழுது அங்நகரம் வெற்றி நீங்கி விழுமம் மிக்கதாகியது. சூரபன்மன் பதுமையைத் தன்னில்லிற்கு ஏகுமாறு விடுத்து, வெகுளி மிக்கவனாய், ஏவரைநோக்கி, பகையை முடித்துப் பின்னர் வேள்வியாற்றி இம்மகனை எழுப்புவன். "இவ்வுடலைச் சேமித்து வையுங்கள்.'' என்று கூறலும், அவர் அவ்வாறே சேமித்து வைத்தனர். பிறகு சூரபன்மன் வெகுண்டு தன் தூதரை யழைத்து, "நீவிர் விரைந்து சென்று அளக்கரில் ஆசுரபுரத்தில் அரசுசெய்து வைகும் என்னிளைஞனாகிய சிங்கமுகாசூரனை இப்பொழுதே அழைத்து வாருங்கள்.'' என்றான்.

## சிங்கமுகாசுரன் வதைப்படலம்

சூரன் உத்திரவைப்பெற்றுச் சென்ற தூதுவர், ஆசுரபுரஞ் சென்று, சிங்கமுகனைக் கண்டு உற்றதுரைக்க, அவன் கவலையுற்றுத் தன் தானை சூழ இரதத்திலேறி விண்வழியாகச் சென்று, மகேந்திர நகரையடைந்து, சூரன் இருப்பிடஞ் சேர்ந்து, அவன் அடியினிற் பணிந்து நின்று, "நீ இவ்வாறு கவலுதற்கு உற்றதென்னை?'' என்றான். அவனைச் சூரன் மார்புறத் தழுவி, அறுமுகன் மகேந்திர நகருக்கெய்தியது முதல் பானுகோபன் பட்டதிறுதியாக மொழிய, அத்தீமையைக் கேட்ட சிங்கமுகன், "நீ உன் மைந்தர்கள், அமைச்சர்கள், சுற்றத்தினர் ஆகிய அனைவரையும் இழந்து தயங்கினாய். உன் புத்திவியக்கத்தக்கதே. மூலமும் முடிவுமில்லா மூர்த்தியை, ஆடற்சிறுவனென்றே அயர்த்தனை. விளைவதோர்ந்திலை. என் மொழியை ஆலமா யெண்ணினை. விதியினை யாவரே தடுப்பவர்? அணைகடந்த பெருக்கினை அடைக்க எண்ணினை. கழிந்தன கிடக்க யான் சென்று அப்படையை எடுத்தயின்று முடித்து நிற்பன். அதனைக் காண். அதன் பின்னர் அறுமுகனை வெல்வனேல் இவ்வுழி வந்து நின்னைக் காண்பன். மற்றஃதில்லையேல், அனைவரும் அந்தம் அடைகுவர் என்பது திண்ணம். மேல் உன் சிந்தைக்கு வந்தன செய்தி.'' என்று தொழுது கூறிக் கணமும் அவ்விடை நில்லாது, தன் தானைகளோடு அங்கரினுள்ள தன் மாளிகை யெய்தி, உண்பன, உடுப்பன, பூசுவன,

அணிவன,: ஆகியவற்றை முறைப்படி முடித்துச் சேனை சூழ்ந்து செல்ல, அங்கரை நீங்கிப் பறந்தலை எய்தினன். அஃதுணர்ந்த தேவர்கள், அறுமுகப் பண்ணவனை விரைந்து சென்று அடைந்து, பணிந்து நின்று, சிங்கமுகன் ஆற்றலையும், அவன் படையொடும் போர்க்கு வந்திருப்பதையும் உரைத்தனர். சண்முகப்பெருமான் கேட்டு, வாயு தேவனை நோக்கி "நம்து தேரினைக் கொடுவருவாய்." என்று ஆணைதந்தருளினன். அப்பொழுது அருகிலிருந்து கேட்ட வீரபாகுதேவன், முருகன் திருவடிகளிற் பணிந்து நின்று "ஐயனே அடியேனுக்கு விடையருளல் வேண்டும்." என்று வேண்ட, அமலன் அவனை நோக்கி "அப்படியே நீ யுன் படையொடு மேகி அவனை வென்று மீளுவாய்.'' என்று திருவருள் புரிந்தான். வீரபாகுதேவன் ஆயிரவெள்ளம் சேனை சூழப் பாசறை நீங்கிப் பறந்தலை யெய்தி, அவுணனை எதிர் நோக்கி நிற்க, முன் சென்ற பூதர்கள், அவுணர்களோடு ஏற்றுப் பெருஞ் சமர்புரிந்தனர்.

இவ்வாறு போர்புரிகையில், சிங்கமுகன் படைஞர் முன்னேறி மலைந்தமையால், பூதசேனையின் முன்னுள்ள தூசிப் பகுதியுடைந்து, பூதர்கள் ஓடத் தொடங்கினர்கள். அதுகண்ட பூதவீரனாகிய சிங்கன் எதிர்த்துச் செல்லலும், அவுணவீரனாகிய தசமுகன், எதிர்த்துப் பெரும்போர் இயற்றிச் சிங்கனால் மாண்டொழிந்தனன். அதனால் அவுணசேனை யனைத்தும் ஒரு முகமாகத் திரண்டு பெயர்தலும், இலக்கம் வீரரில் அநகனென்பவன் ஏற்று வந்த வீரர்களைச் சாடிப் படையையும் கலக்கினன். அவுணப்படை இரிதலும், துன்முகனென்னுந் தலைவன் எதிர்த்து மாயப் போர் மிகுதியுஞ் செய்து வீரபாகுதேவனால் துரத்தப்பட்டு ஓடினன். அதுகண்ட சிங்கமுகன், "நமது படைகள் இரிந்தோடுகின்றன. பின்னிற்றலாற் பயனென்னை?" என்றெண்ணி முன்னே சென்று பூதரை முடிக்கக் கருதினன்.

அச்சிங்கமுகனைக் கண்ட பூதர் அளவிறந்த மலைகளையும் மரங்களையும் எறிந்து பல் படைகொண்டும் போர்புரிந்தனர். பூதர்கள் அவ்வாறு பொருது நிற்றலைக் கண்ட சிங்கமுகன், தனது தேரினின்றும் குதித்துப் பூமியிற் றிரிந்து பூதரைக்கொல்ல ஆலகாலம் அடைந்ததைப் போல; அவர்களோடு போர்புரியத் தொடங்கி, சில பூதரை வாரிப் பூமியில் அடித்தும், சிலரை விண்ணி லெறிந்தும், சில பூதரை அருக்கன் தேரில் மோதியும், சிலபூதரைத் திரைக் கடலில் வீசியும், சிலரை நெடுந்

தூரம் வீசியும், சில பூதரைப் பிடித்துப் பெரிய வாயில் பற்களுடையக் குத்தியும், சில பூதரை அண்டசுவற்றில் எற்றியும், சிலரைப் பிரமன் உலகிற் செலுத்தியும், சிலரை யெண்திக்குகளில் வீசியும் இவ்வாறாக பூத வெள்ளத்தை நாசமுறுத்துங்கால், "இவன் தேரின்கண் உள்ளானோ? அன்றி விண்ணின் கண் உள்ளானோ? திசைகளில் உள்ளானோ?" என்று அறிதற்கியலாது விண்ணவர் மயங்கினர்கள். அத்தன்மையாக பூதரை அடுங்காலத்து, அவருடலிற் பட்ட குருதியாறு பாய்ந்து, திரைக்கடலின் உவரையும் மாற்றியது.

அப்பொழுது சிங்கமுகன் பூதர்களை அலைத்து நிற்றலைக் கண்ட அனற்கண்ண னென்னும் பூதவீரன், எதிர்த்துப் போர்புரிந்து, அவனது தண்டத்தினால் மோதப்பட்டு, கீழேவிழுந்து அயர்ந்தான். அதன்பின்னர் ஊக்கமாகச் சென்ற சிங்கமுகன்மீது பூத அரசனாகிய சுமாலி, தண்டி முதலியோர் ஏற்று வன்மை குறைதலும் பூதசேனை முற்றுஞ் சிதைந்தோடியது. அத்தோல்வியைக் கண்ட இலக்கத்தெண்மராய வீரர் யாவரும் தங்கள் தேரைச் செலுத்தி, வில்லை வளைத்துச் சரமாரி பொழிந்தனர். சிங்கமுகன் அவர்களைத் தேர்களோடும் எடுத்து வீசி யுதைத்தும், புரட்டியும் அவ்விலக்கத் தெண்மரையும் அட்டனன். அன்னோர் உயிர் ஒன்றும் தாங்கி ஆங்காங்குச் சிந்திக்கிடந்தனர். அப்போரினைக்கண்ட வீரபாகுதேவன், "இப்பொழுது சிங்கமுகன் கொன்ற பூதசேனை பாதியிருக்கலாம். எஞ்சிநின்ற மற்றைப் பகுதியும் இன்றே இவனால் முடிவெய்தும் போலும்" ! என்றுன்னித் தன் கரத்திலிருந்த பெரியவில்லை வளைத்து, அவுணசேனையை அழித்து வருங்கால், சிங்கமுகன் மைந்தராகிய நூற்றுவர் அறிந்து, தனித்தனியே தேரில் ஏறி வந்து வில்லை வளைத்து, வீரபாகுவின் மேல் கணைமழை சொரிந்தனர். வீரனும் அவர்களைக் கணைகள்தூவி அலக்கண் செய்தலும், அவர்கள் இனி அவனை வில்லால் வெல்லுதல் கூடாதென்று வாளேந்தி, வீரன் முன் வருதலும், வீரபாகுதேவன் அந்நூற்றுவரையும் வாளினால் உருவழித்துக் கொன்று தன் தேரிடை ஏறி நின்றான்.

சிங்கமுகன் தன்புதல்வர் இறந்ததைக் கண்டு வருத்தமுற்று இரங்கினன். இரக்கமுற்ற சிங்கமுகன் தானே தெளிந்து, பாகனை வீரபாகுநின்ற இடத்திற்குத் தேரைச் செலுத்தும்படி கூறினன். அவன் அவ்வாறே செலுத்தி வீரன் முன் உய்த்திட, அவ்வீரபாகுவைச்

சிங்கமுகன் எதிர்த்து வில்லினால் ஆகிய கடும்போர் இயற்றுங்கால், அப் போரைத் தாங்கிநின்ற வீரபாகுதேவன், "இவ்வசுரனை இப்பசுபதியின் கணையாற் கொல்லுவேன்." என்று கருதி அப்படையை எடுத்து அருச் சித்து விடுதலும், சிங்கமுகன் தன் கையிலிருந்த அரன்படையை விதி முறை அருச்சித்துவிட, அவ்விருபடையும் எதிர்த்துப் போர்புரிந்து, வெற்றி தோல்வியின்றித். தம்மை விட்டவர் பக்கல் மீண்டன. அது கண்ட வீரபாகுதேவன், "இனி நான் இவனைக் கொல்லுமாற்றல் உடை யேனல்லேன். சேயின் வேற்படை யொன்றமே சங்கரிக்கும். ஆயினும் அவுணப்படையை முடித்து இவனது ஆற்றலை யழிப்பேன்." என்று கூறி, பதினான்கு கணைகளைத் தூண்டி, சிங்கமுகன் தேர்ப்பாகன் சிரத்தை அறுத்துத் தள்ளினான்.

பின்னர் அவன் ஏறியிருந்த தேரையும் அழிக்க, அவன் பூமியில் நின்றனன். பூதர்கள் நெருங்கிப் போர்புரியத் தொடங்கினார்கள். அவர் களை நோக்கிய சிங்கமுகன், மற்றோர் சேமத்தேரிலேறி ஆயிரம் விற் களைத் தன் ஆயிரங் கைகளில் எடுத்து, விரைந்து வளைத்து, நாணொலி காட்டி, கணக்கிறந்த கடல்கள் விண்மீது எழுந்து விடாது புனலி னைச் சொரிந்தாற் போன்று, அம்பு மாரியைச் சொரிதலும், அவனைச் சூழ்ந்து அமர்புரிந்த பூதர்கள் அனைவரும் உயிர் நீங்கினர். அக்க ளப் பரப்பு களேபரக் குவியலாயிற்று. அதுபொழுது வீரபாகுதேவன் தன் வில்லில் அளவிறந்த கணைகளைப் பூட்டி விட்டு அப்பாதகன் விட்ட கணைகளனைத்தையும், கணக்கிறந்த பிரமர்களால் சிருட்டிக்கப் பட்ட உயிர்களை இறுதிக் காலத்துச் சிவபெருமான் ஒருவனே துடை க்குமாறுபோல், அவ்வம்புக் கூட்டங்களை அறுத்து நின்றான்.

சிங்கமுகன வெகுண்டு, "யான் வில்லெடுத்து நின்தோளை யும், சொல்லெடுத்த நின் நாவையும், சிரத்தையும் இன்னே அறுத்துத் திரண்ட கைகளை யுடைய நின்னை முடித்துக் கரண்ட முண்ணுமாறு ஆக்குவன்." என்று கனன்று, அளவு கடந்த அம்புகளைத் தூண்டி வீரபாகுவை வருத்த, வீரன் ஓரே காலத்தில் அவன் கரங்களில் பிடித்த ஆயிரம் விற்களையும் துணி படுத்தினான். சிங்கமுகன் வெள்கி, இனி அவனை மாயத்தால் வெல் வதே கருமமென்று துணிந்து, தன்னைப் பெற்ற சுரசை யென் னும் இயற்பெயரினையுடைய மாயை ஈந்த மாயா பாசமென்னும் படை

யினை எடுத்து, "உயிரினைப் பொருட்படுத்தாது என்னுடன். போர்புரியும் பகைவரை ஒருசேரக்கட்டி அவருயிரை யுண்டு, அருக்கன் உதித்தெழுகின்ற கூலகத்துள்ள உதயவெற்பில் இட்டு அகலாது அங்குறைவாய்." என்று கூறி அதனை யெறிந்தான். கடலேழும் புரண்டுவரும் ஊழியை யொத்துத் திசையனைத்தையும் இருளில் படுத்தி, எதிர்த்து வரும் அப்பாசத்தினைக் கண்டு வீரபாகுதேவன், "ஈதென்ன கடற் பெருக்கோ? அன்றிப் பரவிய இருளோ? இங்குளார்களை இறுகக் கட்டி ஈர்க்கும் நாகமோ? யாவதாயினும் ஆகுக. இதனை விரைவில் அழிப்பேன்." என்று அதற்கு மாறாகிய படையினை எடுப்பதன் முன், விரைந்து சென்று, பூதப்படைஞரையும், வில் வீராகிய எண்மரையும், ஏனையோரையும், வீரபாகுவையும் அகப்படுத்திக்கட்டி அவரது அறிவை யழித்து விண்ணூறாக எடுத்துச் சென்று, அளக்கரை கடந்து அரிதுயிலமரும் அளக்கரிற் கிடந்த உதயமால் வரையில் வைத்து, அகலாது அங்ஙனே இருந்தது. பெரிய பூதர்களும், வீரர்களும், வீரபாகுவும் தமது பாசத்தால் கட்டுண்டு விளிந்தனர் என்று அவன் மகிழ்ச்சியோடு ஆரவாரித்து, "இன்னும் அச்சிறுவனாகிய ஆறுமுகன் எவ்வுழியுள்ளான்? அவனையும் வென்றுபோரினை முடிப்பேன்." என்றனன். தூதுவன் ஒருவன் நெருங்கிச் சிங்கமுகனைப் பார்த்து,"அவ்வறுமுகன் ஆயிரவெள்ளம் பூதசேனையுடன் பாசறையிலிருக்கின்றான்." எனவும், சிங்கமுகாசுரன், பாகனை நோக்கி, "தேரினை அவ்வுழித்தூண்டுவாய்." என்ன அவ்வாறே அவன் நடத்தினன்.

அதனைக்கண்ட வாயுதேவன் அறுமுகப்பெருமானிடஞ் சென்று. பணிந்து நின்று, "அண்ணலே! நமது பூதசேனையையும், வீரர்களோடு சேர்ந்த வீரபாகுவையும் ஒருங்கே பாசத்தாற் பிணித்து மயக்கிச் சிங்கமுகன் உதயவெற்பில் இட்டிருக்கிறான். மேலும் படையோடு போர்புரிதற்கு ஈண்டுமெய்துகின்றான்." என்றனன். அதனைக் கேட்ட முருகப் பெருமான், நகைசெய்து, அரியணையிழிந்து மணிகுயிற்றிய பாதுகையில் திருவடி யமைத்துக் கழல்களார்ப்பப் புறங்கடைப்போந்து, காலினை நோக்கி, "தருதி நந்தேரினை" என்றான். வாயுதேவன், இறைவன் அன்றருளிய தேரினையழைத்துத் தாறுசேர்ந்த உளவுகோலுங் கயிறுந் தாங்கி நடாத்தி யுய்ப்ப அதனிடை இமையவர் ஆர்ப்ப முருகப்பெருமான் ஏறியருளினன். இந்திரன் கவரி இரட்டவும், இமையவர் ஆல

வட்டம் வீசவும், தபசைந்திரர் தண்ணிழற் குடைகள் தாங்கவும், அந்தகன் உடைவாள் பற்றவும், குபேரன் அடப்பை கொள்ளவும், கடலரசன் படியகம் ஏந்தவும், இரதத்தில் எழுந்தருளிய முருகப் பெருமானைக்கண்ட பூதர்கள் ஆயிரவெள்ளத்தினரும் ஆர்கலி நாண ஆர்த்து, காயெரியினைக்காலுஞ் சூலங்கணிச்சி முதலிய படையின் குழுவைத்தாங்கி விரைந்து சூழ்ந்தனர்.

பறைகளடித்துச் சங்கம் ஆர்த்து ஐயன் சீர்த்தியைப் படித்துக் கவிகைப்பிடித்து வீரம்பேசி, "மூவர்க்கு முதலோன் வந்தான், முக்கணன் குமரன் வந்தான், பகைவர்க்குச் சிங்கம் வந்தான், வேற்படை வீரன் வந்தான், ஏவர்க்கு மெட்டாதான் வந்தான், தேவர்கள் தேவன் வந்தான்," என்று சின்னங்களை ஊதிப் பூதர் செறியத் தேவர் வாழ்த்தெடுப்பப் பாசறை நீங்கிக் கேசரி முகத்தன் தன் நேரும் சமர்க்களம் எய்தினன். அப்பொழுது சிங்கமுகனது படைஞரும், பூதப் படைஞரும், நெருங்கிச் சமர்புரிய இருதிறப் படைகளிலும் எண்ணிறந்தவர் மாண்டனர். அதுபொழுது சிங்கமுகன் வெகுண்டு, வானை முட்டிய பேருருவெடுத்துப் பூதரை வாரி வாரி வாய் மடுத்து, அகட்டைத் தூர்த்துப் பூதரை யொழித்தான். அச்செய்தியைக் கண்ட தூதுவர், விரைந்து சென்று சூரனுக் குரைப்பச் சூரன், ஆற்றுப் பெருமகிழ்வடைந்து தூதருக் குவப்பன செய்து, உழையனொருவனை நோக்கித் தன்தானையை இளவலுக்குத் துணையாகச் செல்லப் பறையறைவித்தான். பின்னர் அவன் தன் மாளிகையின் நடுவுண் அமைந்த சிகரியின் மீது ஏறி, இளையவன் கொண்ட பேருருவத்தையும், பூதர் ஒழிந்தமையையும், அறுமுகன் தனித்து நிற்றலையுங் கண்டு, பெருமிதமும், விம்மிதமும் அடைந்து நின்றான்.

அவன் இவ்வாறிருக்க, இதற்கு முன்னரே பாரிடைத்தொகையை அசுரன் வாரிநுங்கிய பரிசனைத்தையும் கண்ணுதல் தந்த கந்தவேள் நோக்கி, 'அமர்புரி ஆடலைத் திருவுளத் தமைத்துத் தன் வில்லை வளைத்து நாணொசையை எழுப்பவும், அண்டங்கள், கடல்கள் ஆகிய அனைத்தும் நிலை கலங்கின. சூழ்ந்து நின்ற அவுணப்படை அவ்வோசையால் நடுங்கிப் படைகளைச் சிந்திக் கீழே விழுந்து கவிழ்ந்து கிடந்தன. அப் பேரொலியால் நிகழ்ந்தவற்றைக் கண்ட சிங்கமுகன், விம்மிதங்கொண்டு, அறுமுகன் எதிரே சென்று நின்று,

"சிவன் தந்த திருக்குமர! யாங்கள் எமது பகைவராகிய தேவரை வலியடக்கிச் சிறைப்படுத்தினேம். அரசர் முறைமை அஃதாம். அக்குழுவினருள் நீ யொருவனல்லை. வேறோர் பகையு மெமக்கில்லை. அவ்வாறிருக்க எம்மோடு போருக்கேகியதென்னை?" என்றனன்.

அவன் மொழிகேட்ட வள்ளல், "சிங்கமுகனே! எளியனை வலி யன் நலித்தால், அவ்வலியனை முறைப்படி தண்ட மியற்றுதல் எமது கடன். நீவிர் தேவரைச் சிறை செய்த கொடுமையால், இவ் வுழிப் போர் புரிய வந்தனம்." என்று கூறியருளலும், சிங்கமுகன் கேட்டு கையொடு கையைப் புடைத்துப் பெரு நகை செய்து, வெகுளி மேற்கொண்டு, "இன்றே எமையும் வென்றாய், இமையவர் சிறையினின் றும் நீங்கினர். நீயும் நீக்குவாய், நீக்குவாய். யாங்களும் எளியரே. நின் ஆற்றலும் பெரிதே. உண்மை, உண்மை! இந்திரன் குமரன் இமையவரோடு பட்ட சிறையை நீக்கற்குச் சந்திரமௌலி ஐயனுலு மாகாதெனின், மைந்த நீ ஒருவனோ அவ்வாற்றலுடையாய்? தாரகனைப் போல் என்னையும் நினையாதி. நினது வேற்படை யாற்றலையும் அறிந் துள்ளேன். விரைவில் போர்தருவாய்." என்று புகன்றான். முருகப் பெருமான் புன்னகை செய்து, ஓர் வயிர வாளியை அவன் மார்பகத்து விடுப்ப, அக்கணை ஊடுருவிச் சென்று, மார்பினும் முதுகினும் புழை யாக்க, அப்புழையால் உள்ளிருந்த பூதர் வெளிவரலாயினர். பின்னும் அவுணன் தன் கரத்தால் அப்புழையை மூடிக்கொண்டு, ஓர் தண்டினை ஐயன்மேல் விடுப்ப, அத்தண்டினைக் கணைகளால் அறுத்து அவுணன் நெற்றியைப் பிளத்தலும், அவன் அவசமாய் நிற்கக் கைநெகிழ்ந்து புழை யால் நின்ற பூதர் வெளிவந்து, அறுமுகப் பெருமானைச் சூழ்ந்தனர்.

சண்முகப் பெருமான் ஓர் அம்பினைச் செலுத்தி, உதயகிரியி லிருந்த வீரபாகு முதலிய வீரரை மீட்க, அவ்வீரர் அனைவரும் ஒருங்கு வந்து, அறுமுகத்தமலன் அடியிணை வணங்கி நின்றனர். அப்பொழுது நாணொலியால் மயங்கி விழுந்த சிங்கமுகனுடைய படை ஞர், அறுமுகன் அருளினால் எழுந்து அப்பெருமானைச் சூழ்ந்து அமர் புரிதலும், சிவகுமாரன், அவர்களைப்படுத்தி வெறுங்களமாக்கி னன். அப்பொழுது சிங்கமுகன், தனது பெரிய மாய உடல் முருகன் கணைகளால் நீங்கி நிற்றலைக்கண்டு, படைஞரைக் காணாது கவன்று, ஆயிரம் வில்லை வளைத்துப் பெரும்போர் இயற்ற, அதனைப் பெருமான்

ஏற்று, அவ்வே வருத்தி வருங்கால், ஓர் தண்டினைத் தாங்கி நெருங்கி வந்தனன். அத்தண்டோடு சேர்ந்த கரத்தினைப் பெருமான் துணிக்க, மறுபடியும் அக்கரம் உண்டாகித் தண்டினை எறிய, அதனைக்கணைகளால் அறுத்துத் தள்ளவும் சிங்கமுகன், நமனது பாசத்தை வீச, அதனைத் தீக்கணைகளால் பெருமான் சாம்பராக்கினன்.

இறுதியாகச் சிங்கமுகன, "இச்சிறுவனை என் இரண்டாயிரம் கைகளாலும் பிடித்தலைப்பேன்." என்று பற்றச் செல்லுதலும், சண்முகன் கணைகளைச் செலுத்தி அவன் கைத்தல மனைத்தையும் துணித்தான். பின்னரும், அவன் கரதலங்கள் பண்டையிற் றோன்ற, மீண்டும் அவனது சிரங்களையும், மெய்ம்பனைத்தையும் அறுத்தான். மீண்டும் அவ்வண்ணமே முளைக்க, அச்சிங்க முகன் சமித்து "என் வரத்தின் சீரும் அழியாத் தன்மையு மாயவற்றைச் சிறிது முணராது, இங்கு வந்து போரியற்றி இளைத்தனை. இக்கணம் நினதுயிரைத் தந்தேன். மீண்டேகு வாய்." என்றான். அவ்வுரைகேட்ட அமலன், "நினது வாழ்நாள் இறுதியுற்றது. கூற்றுவன் நின்புறம் நின்றான். இனிச் சிறிது போழ்தில் நின்னை முடிக்கின்றேன்." என்று கூறலும், சிங்கமுகன் வெகுண்டு பல மலைகளைப் பறித்து வீசினன். சண்முகப் பெருமான், அருள்விளையாட்லைக் கருதி அவன் சிரங்களையும், கரங்களையும், நூற்றெட்டுத் தடவை அறுத்தும், மீண்டும் முளைக்கத் தொடங்கின. அதனைக்கண்ட அறுமுகப் பெருமான் பிரமாதி தேவர் யாவரும் நடுங்கும் வண்ணம் உரப்பி உங்காரத் தொனி செய்தலும், அச்சிரங்களும் கரங்களும் அஞ்சி, ஒரு தலை இருகரம் நிற்க, ஏனைய சிரங்களும் கரங்களும் ஆமை ஐந்துறுப்பும் உள்புகுமாறு போல உள்ளடங்கின.

ஒரு சிரமும் இருகரமும் கொண்டு நின்ற சிங்கமுகன், மீண்டும், "என்னாற்றலைத் தேவர் உணர்குவர், யான் சிறிது மிளையேன்." என்று ஆர்த்து, ஒருமலையைப் பறித்து அண்ணல் மேல்விட, அதனையும் முருகன் துணித்து நின்றான். பிறகு சிங்கமுகன், ஓர் தண்டினை ஏந்திச் சென்று முருகன் மேலெறிதலும், தமிழிற்குத் தனித்தலைவனாகிய முருகப் பெருமான், தனது திருக்கரத்திலிருந்த குலிசத்தினைப் பார்த்து, "வஞ்சன் உயிரை யுண்டு வல்லையில் மீளுவாய்." என்றுவிட, அக்குலிசம், சிங்கமுகன் அகன்ற மார்பைக் கிழித்து உயிரினை யுண்டு, புறப்போந்து, வான்புனல் படிந்து சென்று, அமலன் மைந்தன் திருக்

காத் தமர்ந்தது. சூரனுக்கிளைஞன் துடித்து வீழ்ந்திறந்ததை விண்ணவர் கண்டு, அண்ணலை நண்ணி, அவனடி பணிந்து, அருள்கொடு நிற்ப, அறுமுகத்தையன், அக்களத்தினை நீங்கிப் பாசறைபுக்கு, அமரர் போற்ற அரியணை யமர்ந்தான். இஃதிவ்வாறிருக்க, முருகனோடு எதிர்த்து மாண்டு கிடக்கும் சிங்கமுகனைக் கண்ட ஒற்றர் மகேந்திர நகருக்குள் விரைந்தோடி, சிகரியிலிருந்து இளையவன் போரினைப் பார்த்துக் கொண்டிருக்கையில், அவன் கீழே விழுந்ததைக் கண்டு மயங்கினோ இறந்தானோ வென்று ஐயுற்றிருந்த சூரன் அடிகளில் புலம்பி விழுந்து இயம்பினார்கள்.

தம்பியின் இறப்பைக் கேட்ட சூரன், அச்சிகரியினின்றுங் கீழேவிழுந்து சிங்கமுகனைக் குறித்துப் பலவாறாகப் புலம்பிக்கொண்டிருந்தான். அவ்வோசையினைக் கேட்ட அமரர் உவப்படைந்தனர்.

## சூரபன்மன் வதைப் படலம்

புலம்பலுற்ற சூரன் ஒருவாறு தெளிந்து எழுந்து, அரியணையமர்ந்து, வெகுளியை யுடையனாய்த் தன்னுழையரை விளித்து, "அண்டங்கள் தோறும் அமைந்துள்ள நமது அவுணப்படைகளைத் தருதிர்." என்று மொழிந்து, இல்லினுளேகி நீராடி, ஆடையணிந்து, நீரணிந்து, அறுசுவை உண்டி அயின்று, கலவையணிந்து, கலன்களைப்பூண்டு, போர்க்கோலங் கொண்டு, அரன்படை, ஏனையோர் படையாகிய யாவையும், ஆயிரங்கோடிச் சேமத்தேர்களிலிட்டு அத்தேர்களையும், சிங்கவாகனத்தையும், இந்திரஞாலத் தேரினையும் பரிஜனங்களுடன் கொண்டுவருமாறு பணித்து, அருகில் நின்ற பாகரை நோக்கி "சிறப்போங்கப் பண்ணிய தேர் ஒன்றனைக் கொண்டு வருதிர்." என்ன அவர், அவ்வண்ணமே சென்று, சூரன் யாகத்தினின்று உண்டாகிய காலத்து உண்டாயதும், ஆற்றலால் இந்திரஞாலத்தேரினை யொத்ததும், அளவற்ற ஆயுதங்களைப் பரித்ததுமாகியுள்ள அவ்விரதத்தினைக் கணக்கிறந்த வலவர்கள் செலுத்திக்கொணர்ந்தனர். அதன்மீது விரைவில் சூரபன்மன், அவுணர்கள் வெற்றியுண்டாகவென்று கூறி மலர்மழை பொழிய ஏறினன். வலவர்கள் அச்சூரனாணையால் அத்தேரினை நடாத்திச் சென்று, பல்லாயிர வீதிகளின்கண் அமைந்த சிகரியின் வாயிலைக் கடந்து, ஞெள்ளல் பல இகந்து, வண்ண மாமணிச் சிகரியமைந்த முதற்கடையிற் போந்தான். அவ்வமை

யத்து அண்டவாயில்கள் தோறும் நெருங்கிப் புகுந்து வந்த அவுணப் படைஞர் கடல்போலச் சூழ்ந்து, ஈண்டிச் செல்லவும், தெவ்வையழிக்கும் சூரன் செம்பொற்றேரின் மேற்சென்று, முழக்கங்கொண்ட களரியை யடைந்தான். அவனது தூசிப்படை அறுமுகப்பெருமான் அமர்ந்துள்ள பாசறையை முற்றியது. அம்முற்றுகையைக் கண்ட தேவர்கள் அறுமாமுகன் சந்நதி அடைந்து, பணிந்து, நின்று ஆகிய வற்றைக்கூற, அவ்வமலன், முறுவல் செய்து, காலினை நோக்க, அவன் குறிப்பறிந்து, முளவுகோல் கயிறுபற்றிப் பொன்னினுய புரவிபூண்ட மனவேகத் தேரினைக்கொண்டுய்ப்ப, அமலன் அரியணை யிழந்து வச்சிர முதல் வேல் இறுதியாகவுள்ள பதினொரு படையுந் தாங்கிப் புரவி பூண்ட அத்தேரிற் பொள்ளென ஏறினன். அதுபொழுது வீரபாகுவை முதலிட்ட வீரர்கள், பரவிப் பாங்கரிற் போந்தனர். இராயிர வெள்ளத்தர், மராமரம், பிறங்கல், பல படைகள் ஆகியவற்றைக்கொண்டு பராவிப் புடைசூழ்ந்தனர். விரிஞ்சனை முதலிட்டோர் விராவிநின்று பனிமலர் மாரியைத் தூர்த்தனர். அப்பொழுது புவிமுழுவதும் நெருங்கிநின்ற அவுணப்படையின்மீது விண்ணூறாகக்கொண்டு, வேல்முருகன் சென்றருளினன்.

அவ்வண்ணம் நிகழுங்காலை பூதரனைவரும் அவ்வவுணப்படையினைக் கண்டு கலக்கமுற்று, "இப்படையை நம்மாலும், நந்தலைவராலும், இலக்கத்தெண்மராய வீரர்களும், வீரமொய்ம்பனும் வெல்லுதல் இயலுமோ? நமது இறைவனுகிய அருமுகனொருவனே அழிக்கவல்லான்." என்று கவன்று "இனி நாம் தப்புவதற்கில்லை ஆயினவாற்றால், அமர் புரிந்து மாளுவோம்." என்றுதுணிந்து அப்படையொடு எதிர்த்து அவர் வலிக் காற்றாது அழிவெய்தினர். அவர்தந் தலைவரும், இலக்கரோடு சேர்ந்த எண்மரும் அவ்வாறே எதிர்த்துப் பொருது ஈடழிந்தனர். வீரவாகுதேவன், பலகடல்களை ஒரு தனிக் களிறு காக்குமாறுபோல, அவ்வவுணப் படைகளை உட்புகுந்து கலக்கியும் அப்படை முடிவெய்தாமையால், அழுங்கி ஏகநாயகனுகிய •ஏந்தலிடத்துச் சென்றனன். அவ்வண்ணம் நிகழ்ந்த காலத்து அவுணப் படைஞர், "பூதரும், அவர் தலைவரும், வீரருமாகிய அனைவரும் அழிந்து சிதறினர். இனிப் பொருபவர் ஒருவருமில்லை. பாலனொருவனே ஈங்கு எய்துவன்." என்று ஆர்த்துத் தண்டு, நேமி, குலிச முதலிய படைகளைச் சொரிந்து நெருங்கி அண்

மினர். அப்படையின் வெற்றியும், பூதர் அழிந்தமையும், வீரர் இரிந் தமையும், மொய்ம்பன் மீண்டமையுமாகிய அனைத்தையுங் கண்டருளிய கண்ணுதற் புதல்வன், சற்றே நகைத்து, வில்லினை வளைத்து நாணினை ஒலித்து, அவ்வொலியால் அண்டங்களையும் அவுணப்படைகளையும் நடுங் கச்செய்து, கணைமழைசொரிந்து, அசுரக் குழுவினை அங்கஞ்சிதற அறுத் துப் பிணக்குவியலாக்கிப் பறந்தலையைக் குருதிக் கடலாக்கி நின்றான். அங்கண் அலக்கணுற்றிருந்த பூதரும், வீரரும், அறுமுகனை அணுகி ஆர்த்துப் போற்றியிருந்தனர். வள்ளல் சரத்தால் வான்முகட்டின் காறு நிமிர்ந்த அவுணப்படை தொலைவெய்தலும், புவியிடம் வெற்றிடை யாயது. அப்பொழுது அண்டப் பித்திகைக் கப்புறத்து வெற்றிடை யின்றி நெருக்கத்தால் நின்ற அவுணப்படை செல்லுதற்கு இடமுண் டென்று முவப்பினால், அண்டகடாகத்தின், வாயில்வழியால், தேர், கரி, பரியொடமைந்த எண்ணிறந்த சேனை சென்று சூரனாகிய மன்ன னைச் சூழ்ந்து, ஆர்ப்பெடுத்தது. வீரமிக்க அப்படையில் தூன்றிய வீரர்கள் தம்படை யழிந்து கிடைப்பதைப் பார்த்து, "இச்சிறுவனோ கொன்றனன்? இவனது ஆற்றலை இப்பொழுதே யழிப்பேம். மன்ன னுக்குப் போர் தருகின்றிலம்." என்று சீறி நெருங்கிப் போரினைத் தொடங்கினார்கள். அப்பகைஞர் போரினைக்கண்டு அமரர் உளைந்தனர், கூளிகள் உட்கிக் குலைந்தன, வீரர் சலித்தனர். எண்டோளன் திருக் குமரன், சாரதியாகிய காலினை நோக்கி "கை, அணி, நெற்றி, கூழை யாகிக் கொடியவர் படைகள் நிற்புழியெல்லாம் நமது தேரை விரைந்து விடக்கடவை." என்றருளியவுடன் அவ்வாயுதேவன், பகைவர் கூடி யுள்ள இடங்கள் தோறும் பார்த்துப் பரிகளைத் தூண்டிவிட்டனன். மண்ணினும், மாதிரத்தினும், விண்ணிடையும், வேலையின்மீதும் விரைந்து திரிந்து வருதலால், திருமால் முதலிய தேவர்கள் மனத்திற்கு மெட்டாத எம்பிரானது தேர், அவ்வறுமுகன் பகைவர்மீது மின்னெ னும்படி வீசிய சரமாரியும் பிற்படச் செல்லுவதாயிற்று. அஃது அன்னதாயின், அதனது கடுப்பினைக் கூறவல்லார் யாவர்? வீட்டினுஞ் சிறந்த குமாரப்பெருமானது விற்பிடித்த கரத்தினையும், விரைவிற் றூண்டுஞ் சரத்தினையும், தடந்தேரினையும், அதனை நடாத்தும் வாயுவின் வன்மையையும் பார்த்துப் புடையி னுள்ளார் புகழ்ந்தனர்,

அப்பொழுது முருகப்பெருமான், அவுணப் படைகளின் மீது, "இது சிவபெருமான் திருக்கரத் தமைந்த சூலமோ, அல்லது மழுவோ, திருமால் அவுணர்மீ தெறிந்த ஆழிப்படையோ, இந்திரன் வச்சிரமோ, சண்டவாயுவோடு ஊழியினிறுதியிலெழும் ஊழித் தீயோ ஆகிய இவற்றுள் யாது கொல்?" என்று உரைக்கும்படி கணைகளைத் தொடுத்து விட்டான். அண்டங்கடோறும் நின்று அவற்றின் வாயிலால் வந்தீண்டிய நால்வகைப் படையின் திரட்சியும் அழிந்து, குருதிக்கடலும், பிணப்பிறங்கலுமாகிப் புவி யிடமின்றி இருக்கவும், மேலும் மேலும் அண்ட வாயில்கடோறும் அளவில்லாத அவுணப் படைகள் சென்று செறிவதை அறுத்துப் பின்னரும் படைகளெய்து மென்பதைச் செம்மல் தெரிந்து, அவ்வண்ட வாயில்களை அம்பின் மாரியாலடைத்து நின்றான். விண்ணை முட்டிக் குவிந்து கிடக்குங் களேபரத் தொகுதியைக் கண்ட குகன் தனது பன்னிரு கண்களையும் ஒளி மிகுந்த வடவைக்கனல் போலாக்கி, அக்கணத்தினில் உற்று நோக்கினன். அப்பிண மலைகள் எரிந்து துண்டுகளாயின. இரத்தக் கடல் வறந்தது. மூவுலகும் முன்னை போலமைந்தன. திருமால், பிரமன் முதலிய தேவர்கள் சீரினை யெடுத்துக் கூறி ஏத்தி நின்றார்கள்.

இத்திறமனைத்தையுங் கண்டு நின்ற சூரபன்மன், விண்ணளவு நெருங்கி வந்த தமது சேனையை அழித்த பகைவனைத் தேவரோடு படுப்பன் என்று மொழிந்து, காற்றினுங் கடுமையாய் நெருங்கி வருதலும், முருகப் பெருமான் அவனது தேரின் எதிரில் தனது தேரை நிறுத்தும்படி ஆணையிட்டருளினன். நெருங்கிய காலை அறுமுகன் தோற்றத்தையும் பக்கமமைந்த பன்னிரு கரங்களையும், பெரிய ஆயுதப் பொலிவையும், வீரத்தையும், வன்மையையும் நோக்கி, அவன் கீழ்வருமாறு உரைப்பானாயினன். "மதியணிந்தவள்ளல் ஈந்த வரத்தினால் இறந்திடேன். யான் என்றும் இத்திறமே இருப்பன். மறந்தும் என்னொடு பொருகிலர் தேவர். மலைந்து இறந்துளார் பலர். அதனை நீ யுணர்ந்திலை. என் பணி புரிந்து இரிந்து சென்ற, தேவர் மொழியினைக் கேட்டு என்னைப் பொர நினைந்துற்றாய். என் படை முழுதும் அழித்தாய். ஆகலான், நின்னை யான் பாலனென்று விடுவதில்லை. முதுகு காட்டினும் விரைவிற் படுப்பன்." என்றனன். அறுமுகன் "கயவனே நீ வம்புரைத்தலாற் பயனென்னை? என் கணைகள் உனக்கு மாற்றங் கூறும்." என்றலும்

சூரன் தன்னுடைய பெரியவில்லினை வளைத்துச் சரங்கள் தொடுத்தலும், பூதர்கள் சூழ்ந்து படைகளைத் தூவி அச்சூரன் விட்ட அம்புகளால் அழிந்துங் கலங்கியும் வேறருக்கொண்டுந் தொலை வெய்தினன்.

இலக்கத்தெண்மர்களை மழை சொரிந்து நின்று சூரனால் புண் பட்டு உடைந்தனர். வீரபாகுதேவன் அவன் வில்லினை வாளால் நெருங்கித் துணித்தலும் சூரன், வீரமொய்ம்பனின் மார்பில் புடைத்துச் சோரியாறொழுக எடுத் தெறிந்தனன் அவ்விளையோன் அறுமுகப் பண்ணவன்மாடணுகி நின்றான். சூரபன்மன் வலியுதோர் வில்லினைப் பின்னர் எடுத்து வளைத்துச் சரங்களைத் திசையனைத்தையும் விழுங்குமாறு தூண்ட, அக்கணைகளைப் பெருமான் தனது அஸ்திரங்களால் அறுத்தான். பின்னர் அறுமுகன் விடுங் கணைகளை மாறாகிய கணைகளால் அறுத்து மேலுங் கணைத் தூண்டினான். இவ்வாறு மண்ணும் விண்ணும், மாதிரமும் நெருங்க அவ்விருவரும் விட்ட கணைகள் தம்முள் மாறாகி அழிவெய்தின. வெற்றியும் தோல்வியுமின்றிச் சமமாக நெடிது நேரம் அமர் நிகழ்வுழித் திரிபுரத்தை யெரித்தான் குமரன், தேரின் மீதுள்ள கொடியைச் சூரபன்மன் கணைகளால் அறுத்து ஆரவாரித்துச் சங்கத் தொனி செய்தவனாகி ஒரு கணப் பொழுதுந் தாழ்த்தாமல் கணைமழை விடாது சொரிந்தான்.

அறுமுகப் பெருமான் அக்கணைமழை யறுத்து அவன் தேரிலிருந்த கொடியை ஏழு கணைகளால் அறுத்துக் கடலிடைத் தள்ளினான். அசுராதிபன் வெற்றிக்கொடியைக் கடலி லிட்டதைக் கண்ட பூத சேனைத் தலைவனாகிய பானுகம்பனென்பவன், குதித்து ஆடித் தனது ஆயிர வாய்களிலும் ஆயிரஞ் சங்கங்களை வைத்துத் தேவரும் ஏனைய யாவரும் மகிழுமாறு ஊதினான். அவ்வெற்றியின் விசேடத்தால் திருமாலுந் தனது சங்கத்தை யெடுத்து ஊதினான். நின்ற தேவர்கள், "சண்முகப் பெருமான் தேரின்மீது கேதனமின்றுயது நீ சென்று கொடியா யிருப்பாய்." என்றனர். அக்கினி தேவன் அவ் வண்ணமே சென்று அறுமுகப் பெருமான் தேர்மீதிருந்து அண்டம் வெடிபடுமாறு கூவினான். சங்கத்தோடு பானுகம்பன் ஆர்த்தலும் திருமால் ஆர்த்தனன். பிரமனும், திங்களும், செங்கதிரும், மறலியும், மாருதத்திறைவனும், கடற்கிறைவனும், செல்வக் குபேரனும் ஆகிய இன்னோரோடு மற்றைத் தேவர்களும் ஆரவாரித்தனர்.

இவர்கள் ஆர்த்த ஒலி அண்டத்தை முட்டி, சிறிய நோக்கத் தினையுடைய சூரனது செவிகளில் நுழைதலும், விடத்தினை நுகர்வா னைப் போன்று வெகுண்டு அமரரை நோக்கி, "என்னெதிரில் நிற்பதற் காற்றாது, அஞ்சியோடிக் கழுகுகளைப் போன்று காட்டில் சுரந்து திரிந்த தேவர்கள் . இவ்வாறுமுகன் ஆற்றலைக் கருதிபோலும், என் முன் நின்று ஆர்வரித்தனர். இது நன்று,நன்று. இத்தேவர்களின் நிலையழித்து,அதன்பின்னர் இவ்விளையோனை எதிர்ப்பன்." என்று கூறிப் பாகனைத் தேவர்களிடத்துத் தன்தேரினை விரைவில் செலுத்தச் சொன் ஞன். அங்ஙனமே தேவர் குழுமிய இடத்து உய்த்துழிச் சூரன், ஆயிரங்கோடி அம்புகளை ஒவ்வோர் தொடையிற் செலுத்த, அத்தேவர் கலங்கி இரிந்து நிலை குலைந்து திக்குகள் தோறும் ஓட்டமெடுத்தனர். அன்னோர் துன்பினைக்கண்ட அறுமுகன் அங்கு நின்றே தன் கணை களைச் செலுத்தி அப்பதகன் கணைகளை அறுத்துப் பின் நெருங்கி நின்று தேவர்களை அஞ்சன்மின் என்று கரமமைத்தலும், அவர் திகந்தங்களில் மகிழ்ந்து நின்றனர். சூரன், பிரமன் முதலியோர் பயந்தோட, "இச்சிறு வனோ என்முன் நிற்பவன்?" என்று கனன்று தன்வில்லினூற் கணைமழை சொரிந்தான். முருகப்பெருமான் அவ்வாறே அம்புமாரி தூவி அவை களை அறுத்தான். இவ்வண்ணம் இருவரும் ஏறிய தேர்கள் சுழன்று வருதலால், பாருலகதிர்ந்தது. கடல்கள் கலங்கின. மால்வரைகள் பிதிர்ந் தன. வான் முகடு பிளந்தது. தாரகை யுதிர்ந்தன. புயல்கள் சிதறின.

அத்தேரிரண்டும் மூதண்டப் பரப்பெங்கும் சாரிகை வருங்கால் சூரன், கடையுகத்தெழும் எழிலிகள் மழைகான்றென்னக் கணை களைச் சொரிந்து, மழுப்படை அநந்தகோடி, கழுப்படை அநந்தகோடி, கப்பண மநந்தகோடி, எழுப்படை யநந்தகோடி யாகியவற்றை இடை யிடையே உருமேறுபோல் உய்த்தான். ஆற்றலால் அவுணர்கோன் விட்ட அப்படைகளனைத்தையும், காற்றெனப் படைகள் தூண்டி முறை முறை அவற்றைச் சிந்தி ஆறுமாமுகன் மீது விடுத் தான். இவ்வாறு நிகழ்வுழி ஆறுமாமுகன், சூரனது ஆற்றலை நோக்கிப் பதினறு அம்புகளைத் தூண்டி அவனது சித்திரத்தேரையும் பரித்தேர்குதிரையுஞ் சிந்தி நீக்க அவ்வசுரன், வில்லை ஏந்திய கையனும் விண்ணைவிட்டு மண்ணிற் கதுமென நின்று ஒத்த போர்புரியுங்கால், முருகப்பெருமான் சூரன் தோளின்மீது ஓராயிரங்கணைகளைத் தூண்ட

அக்கணைகள், காழ் கொண்ட வயிரக்கிரியின்மீது பொழியுங் கன்மழை போன்று இற்றுச்சிதறின. அப்பொழுது சூரன், பொங்கி யெழுந்து இராயிரங் கணைகளை முருகப்பெருமான் திருமேனியில் படுமாறு செலுத்தி யார்த்தனன். அக்கணைகள் அறுமுகன் திருமேனியிற்பட்டு வெந்து நுண்பொடியாகி விழுந்தன; சூரன் வெகுண்டு பல கணைமாரி தூவ, அவற்றை அமலன் அறுத்து அவனது சிலையைக் கணைகளால் கண்டித்தலும், அவுணன் வேறோர் சிலையை ஏந்திக் கோடையில் எழும் மேகம்போ லார்த்துப் புவியின் இருந்தவன், இம்மெனவெருக்கொண்டு சென்று விண்ணின் மீது தோன்ற, அவன் செய்கையைக் கண்ட குமரன், விண்ணிடை ஏகி அவனைத் தாக்க, ஒரு கணப்பொழுது எதிர்த்து நின்று பின்னர் முருகனோடு பொருமாறு உன்னிக் கூறுதற்கரிய பல வகை மாயமியற்றவாறுயினன்.

விண்ணிடை நின்ற சூரன், மீண்டும் மண்ணிடையே செல்ல, அவ்விடம் எய்தி முருகன் எதிர்த்தலும், தனதுருவ மாற்றித் தூய நீர்க்கடலிற் சென்று நின்றான். அவ்வுழி முருகன் சென்று, 'அமரியற்றிய காலத்து, மாயையான் மறைந்து, மாதிரத்தின் முடிவினில் நிற்க, விரைவில் அவ்விடத்துச் சென்று அறுமுகன் போர்புரிய, பாதலத்தின் உற்றான். பன்னிரு புயத்தோன் பாதலத்தினுஞ் சென்று மலைய, வஞ்சன் தன்னுருமாற்றிப் பொன்மலைச் சிகரமெய்தினன். முக்கணன் குமரன் முனிந்தவன் ஏகலும் அக்கணம் நீங்கி நாரணன் உலகினை நண்ணினன். ஆறுமா முகன் தொடர்ந்தவ்வுழி ஏகி, அமரியற்றுழி, அவுணன் அண்டகோள மேல்திகழ் வாயில் செல்ல, அமலன் அங்கண் ஏகி அன்னோன் ஏறி நின்ற தேரினை யழித்தான். கந்துகம் பூண்ட அவனது கடுந்தேர் அழிதலும், இந்திர ஞாலத்தேரினை நினைந்தான். அந்தப்பொழுதே அத்தேருறுதலும், அவுணன் ஏறிப் பெரும் போர்தந்து நின்று, அண்டவாயில்கள் அனைத்தும் அறுமுகன் கணைகளால் அடைக்கப்பட் டிருப்பதையும், தனது படைகள் அப்புறத்தில் துன்றி நிற்பதையும் நோக்கி, நன்று நன்றென்று நகைத்து, வில்லிற் பூட்டிய கணைகளைச் செலுத்தி, அக்கபாட மனைத்தையுந் துகள் படுத்திப் படைகளைக் கூவி ஆர்த்தான்.

அந் நால்வகைப்பட்ட படையும் சென்று, செவ்வேளிருந்துழிக் குழுமிச் செறிந்து போரியற்றலும், சண்முகப்பெருமான், தனது

கண்களிற் தீப்பொறி பறக்கப் பார்த்தலும், அப்படை முழுவதும் பட்டுச் சாம்பராயிற்று. அதன் மேலும் அப்புறத்து அண்டங்களி னின்று வந்து நெருங்குவதைப் பார்த்துத் தனது மூச்சுக் காற்றினால் சுட்டொழித்தான். அவ்வாறு பொடிபடுதலும், பின்னும் மற்றைய அண்டங்களினின்று வருவதை அமலன் கண்டு, தனது கரத்திற் கொண்ட கணிச்சி, சூலம், தண்டு, எழு ஆகிய ஐந்து படைகளை நோக்கி, "வெற்றியுடைய படைகளே! நீவிர் விரைந்து சென்று நம்மை, சூழ்ந்திவ்வுலகிலுள்ள பகைவர் சேனையையும், இங்கு எய்துதற்கு வழியின்மையால் அண்டங்கள்தோறு நின்ற அவுணப் படைகளையும் கொன்று வாருங்கள்." என்று அவற்றைத் தொட்டருளினான்.

அவ்வாதிநாயகன் விட்ட ஐம்படையும், அநந்தகோடி ஜோதி தங்கிய அருக்கர்களும், தீக்கடவுளரும், அரவங்களும் போலத் தோன்றி, இவ்வுலகத்திற் சூழ்ந்து கிடந்த படையை ஓர் இமைப் பொழுதின் முன்னரே கொன்று, இவ்விடமாகிய ஒன்று கழிந்த ஏனைய அண்டக் குழுகளினுஞ் சென்று ஆங்காங்கு எழுந்த சேனையைக் கொன்று உலவின. சூரபன்மன் அச்செயலனைத்தையு மறிந்து, "இவ் விளையோனை இப்பொழுது முடிக்கின்றேன்." என்று கூறி, முன் னாளில் சிவபெருமானிடத்துப் பெற்ற ஆழிப் படையை எடுத்து வணங்கித் துதித்து பகைவனாகிய சண்முகன் மீது விடுத்தான். அவ்வாழிப்படை யாவரு நடுங்க விரைந்து சென்று அண்ணலைக் கிட்டிய காலை, தனதருமைக் கரத்தினை நீட்டி வருவா யென்று பற்றுதலும், வீரனாகிய சூரபன்மன் பார்த்து மனந்தளர்ந்து, பெரி துயிர்த்து நின்று அளவற்ற மாயா ரூபத்தோடு எதிர்த்துப் போர் புரிந்தான். பெருமான் நோக்கி, நன்று, நன்றென்று உரைத்து நகை செய்து ஞானப் படையினைச் செலுத்தலும், அம்மாயை நீங் கித் தேருந் தானுமாக நின்றவன் போருக்கென வெழுந்து அண்ட வாயிலிற் சென்று அறை கூவுதலும், அறுமுகன் அங்கனுந் தொடர்ந்து செல்ல, அவுணன் அப்புறத் தண்டம் புக்கான். இவ் வண்ணமே ஆயிரத்தெட்டு அண்ட முற்றவும் செல்ல அவனைத் தொடர்ந்து கார்த்திகேயன் கடும்போர் புரிகையில், மீண்டும் இம்பரி லுள்ள மகேந்திர நகரை யெய்தி நின்றான். முந்திய் நிழலை விடாது தொடர்வோர் போன்று கந்தனும் உடன் வந்தெய்தினான்.

அப்பொழுது தானை முற்றும் சண்முகன் முறுவலால் சாம்ப ராயினமையும், தனது தனிமையும், முருகன் வெற்றியும் ஆகியவற் றைக் கண்ட சூரன் இனித் தான் செய்வதென்னை யென்று பயந்து, "என்னுடன் பிறந்தவர், மைந்தர், அமைச்சர், ஆகிய இன்னோரொடு அளவிகந்த ஏனையோரும் மாண்டனர். யான் தமியனாயினேன்." என் றிரக்கங் கொண்டவனாய்த் தனது தாயாகிய மாயையை மனத்தில் நினைத் தான். தோன்றல் எண்ணியதையறிந்த மாயை அக்கணமே அவன்முன் தோன்றி நின்று, "பெருந்திறலுடைய பிள்ளாய்! என்னை ஈண்டழைத்த தென்னை?" என்று இரங்கி வினவ, மகன், "அறுமுகன் போரில் துணைவர், மைந்தர் முதலாயினோர் இறந்து இல்லையாயினர். தமியனாய் நின்றேன். ஆகலான், இறந்த நம் குழுவனைத்தும் உயிர் பெற்றெழும் வகை செய்தருளல் வேண்டும்." என்று வணங்கினான்.

மாயை நகைசெய்து, "நீ தனித்த நிலைமை யெய்தியும், அமரரைச் சிறைவிட நினையாது, அறுமுகனோடு எதிர்த்துப் போர் புரிய எண்ணி னாய். உனக்குள்ள செல்வம் வாழ்க்கை ஆகிய அனைத்தையும் நீங்கினை போலும்? பன்னிரு தடந்தோள் கொண்ட வள்ளலைப் பாலனென்று உன்னினை. அன்னவன் கைவேலினால் ஒல்லையிறப்படுவாய். உன்னுயிர் துறக்க நின்றனை. என் மொழியினைக் கேட்பாய். அன்றியும், விதியைக் கடப்பவர் யாவர்? அவைகள் அனைத்துங் கிடக்க, நின் மனம் உவக்கு மாறு இறந்தவர் ஆவிபெற்றெழ விரும்பின், பெரும்புறக் கடலின் ஒருபுறமாக அமுத மந்தரகூடமென்னும் ஒருமலையுள்ளது. அம்மலையை இவ்விடத்திற்குக் கொண்டு வருகுவையாயின், உன் எண்ணம் கூடும்." என்று கூறி ஏகினாள். அவள்மொழி கேட்டு மனமகிழ்ந்த சூரன், அம் மலையைக் கொண்டு வருபவர் தன்னிடத்து யாவருள்ளார் என்று ஆராய்ந்து, மாயையும் வன்மையுமுடைய இந்திரஞாலத் தேரினின் றிழிந்து, முன்னர்த்தான் பெற்ற சிங்கவாகனத்தேறி, அவ்விந்திர ஞாலத்தேரினை நோக்கி, "என்மனத்தினும் விரைந்து சென்று பெரும் புறக் கடலின் ஓர்சார் மேவியுள்ள அமுதமந்தர மலையைக் கீண்டு எடுத்து இவ்வுழிக் கொணருவாய்." என்றான். வரத்தினாற் கிடைத்த வன்மையினையுடைய அத்தேர், ஒரு கணப்பொழுதிற் சென்று, அம் மலையை எடுத்துத் திரும்பி மகேந்திர நகரமடைதலும், அம்மலையின் காற்று வீசிற்று. அதனால் அமரின் முன்னமுடிந்த அனைவரும் ஆலகால மெழுவதைப் போல எழுந்து, ஆர்த்தனர்.

இலக்கணம் வீரரும், எண்மரும், வீரபாகுவும் அதனைநோக்கி, அலக்கணும், அச்சமும், அற்புதமும், கலக்கமும், கடுஞ்சினமுங்கொண்டு, உலக்கனலென்ன உயிர்த்து நின்றார்கள். வெற்றி கொண்ட வேற்குமரன், விளைவினைத்தையும் நோக்கி, நன்று, நன்றென்றுகையெறிந்து அழலெழ நகைத்தான் அப்பொழுது சிங்கமுகன்,பானுகோபன் முதலியோர் சூரனை நெருங்கி வணங்கி நின்று "அசுராதிபனே! நீ இவ்வுழியே கவலையின்றி நிற்பாய். யாமெலாஞ்சென்று பூதரையும் வீரரையும் முடித்து, அறுமுகனை வென்று வந்து நின் அடியிணை வணங்குவோம்." என்றனர். சூரன் அவ்வாறேசெய்யுங்களென்றுவிடையளித்தலும், அன்னோர் ஆரவாரித்து ஏகி அறுமுகனைச் சூழ்ந்து அமர்புரிந்தனர். சண்முகப் பெருமான், அவர் பெருக்கினை நோக்கி, ஆருயிர் அனைத்தையும் இறுதியில் அழிக்கும் சர்வசங்கார மூர்த்தியின் படையைக் கரத்திற் பிடித்து, மனத்தால் வழிபட்டுச் சிங்கமுகன் முதலாகவுள்ள அவுணர்களைப் படையொடும் கொன்று வருதி யென்று விட்டருளினன். விடுத்தகாலையில் பாம்புக்கூட்டங்களும்,விடமும்,இடிக்கூட்டங்களும், உருத்திர உருகளும், எரியையொத்த கணத் தொகுதியும், அளவற்ற தெய்வப்படைகளுமாகிப் பரந்து, அச்சிவபெருமான் படை மூதண்ட மெங்குந்துன்னி சூழ்ந்து ஆர்த்தெழுந்து, முன்னர் உய்ந்தெழுந்த அவுணர் தம் படைத் தொகுதியை முற்றும் முருக்கிப் பகைவன் தமர் யாவரையும் ஒருங்கே கொன்று, இந்திரஞாலத் தேரின் மிசையுள்ள அமிழ்த மந்தர மலையைத் துகளாக்கிச் சண்முகன் திருக்கரத்து மீண்டு வந்திருந்தது.

கிளைஞரும், படைஞரும் அழிந்தமையால் முன்போலத் தனித்து நின்ற சூரன், பெரிதுங் கவன்று, இந்திரஞாலத் தேரினை நோக்கி, "அறுமுகனைச் சூழ்ந்துள்ள பூதர், அவர் தலைவர், வீரர் ஆகிய அனைவரையும் உனது வன்மையால் அறிவை மயக்கி எடுத்துச் சென்று மூதண்ட முகட்டில் வைத்து அங்ஙனே இருப்பாய்." என்றலும், அஃது ஆமெனச்சென்று, வீரபாகு முதலிய அனைவரையும், அறிவு மயக்கியெடுத்துச் சென்று, ஏழுலகங்களையும் மற்றுமுள்ள பதங்களையுங் கடந்து சென்று, அண்ட முகட்டையடைந்து, அவர்களை அங்கு வைத்துக் காத்திருந்தது. சூரனது சூழ்ச்சியும், தேரினது வன்மையும் அறிந்த முருகப் பெருமான், சீறி ஓர் அம்பினை வில்லிற் பூட்டி, "நீ நமது வீரபாகுவைச் சேர்ந்த குழுவினரை அண்டகோணகையில் வைத்

திருக்கும் இந்திர ஞாலத் தேரை விரைந்திவண் கொண்டு வருதி." என்று கூறி அருளினன். அந்திர புரமெரித்த புங்கவன் பொத்திரஞ் சென்று அண்டகோணகையில் தங்கியிருந்த வலிய தேரினை வீரனை முதலிட்ட கூட்டத்தோடு கொண்டு சென்று சமர்பூமியில் எய்தியதும், வீரபாகு தேவன் முதலியோர் அதனின்றுங் குதித்து அமலனை அடி வணங்கினார்கள். முருகப் பெருமான், மாயமும் வன்மையு முடைய அத்தேரினை நோக்கி "முன்னை வரம் பெற்ற சூர னிடத்துச் செல்லாது இவ்வழியே நிற்றி. ஈண்டவன் இறத்தல் திண் ணம்." என்று கூறலும், அவ்விந்திர ஞாலத் தேர் சூரன்புடை செல் லாது அஞ்சி அவ்வழியே நின்றது சூரபன்மன், வீரர் மீண்டு வந்த தன்மையும், இந்திர ஞாலத் தேர் ஆற்றலிழந்து, அடங்கிப் பகைவர் பால் நின்றமையுந் தெரிந்து மனங்கவன்று, வில்லை வளைத்துக் கணை மீண்டுஞ் சொரிந்தான். அவற்றை முருகப் பெருமான் தன் கணை களால் மாற்றலும், சூரன் கணக்கிறந்த அம்புகளைச் செலுத்தி, அரு முகப் பெருமான் தேரை நடாத்தும் வாயுதேவன் உடலினைத் தொளைத் துக் கீழே விழுமாறு செய்தலும், இளையோன், அவுணன் பிடித் திருந்த வில்லைக் கணைகளாற் றுணித்துத் தள்ளினன்.

சூரபன்மன், சீற்றங் கொண்டு, முப்புராரி முன்னமீந்த முத்தலைச் சூலத்தை ஏந்திச் சிங்கவாகனத்தை அறுமுகன் அருகிற்செலுத்திநின்று, அச்சூலத்தினைத் திரிந்து விட்டான் அஃது ஆற்றலோடுந் தீப் பொறி கான்று திசையனைத்தும் நடுங்கவருவதைப் பார்த்த முருகப்பெரு மான், அதனை அளிக்குமாறு கணைகளைச் செலுத்தலும், அச்சூலம் அவற்றைப் பொடியாக்கி மேல் வருவதைப்பார்த்த அமலன், தன் திருக் கரத்திருந்த வச்சிரப் படையைநோக்கி, "அண்ணல் ஈந்த அச்சூலத்தின் வன்மையைப் போக்கிப் பிடித்திவண் வருதி." என்று விடுத்தலும், அஃ தவ்வாறே சென்று அச்சூலத்தின் முச்சிரத்தையும் வாயினுற்பற்றி ஈர்த்துவந்து அமலன் திருக்கரத்துய்த்துத் தானும் அமர்ந்தது. பின் னர் முருகப்பெருமான், இராயிரங்கணைகளைச் செலுத்தி அவன் ஏறி யுள்ள வன்மையுடைய சிங்கவாகனத்தை வீட்டினன்.

தேரையும் சிங்கத்தையு மிழந்து நின்ற சூரன், "இனி யானே ஒரு பேருருக்கொண்டு பகைவரை மாய்ப்பன்." என்று, ஒரு சரபப்புள்ளின் வடிவங்கொண்டு, பூதப்படையையும், வீரரையும், மூக்காற்கீறி, சிறகால்

அடித்து, விண்ணினும், வானினும், வாரிதியின் புறத்தினும் விரைந்து திரிந்து வருங்கால், "புள்ளாகிய இவனைத் தேரிடை நின்று யாம் பொருதல் பழியாம்" என்று இளையோன் மனத்திலுன்னி, அருகிலிருந்த இந்திரன்மேல் திருநோக்கம் வைத்தருளினன். அக்குறிப்பை யறிந்த இந்திரன், மயிலுருவத்துடன் முன்வந்து துதித்து நிற்றலும், பெருமான், அம்மயிலினை ஊர்ந்து விண்ணிற்சென்று ஊழிக்கனலை அவிக்க எழும் சூறைக்காற்றினை யொத்து, அசுரனைத் தொடர்ந்து செல்லுகையில், அவ்வெஞ்காற்புள், மயிலனைத் துண்டத்தாலும், கால்களாலும் ஊறுபடுத்திப் புண்பட்டொழியப் பொருது நின்றது. அதனை அறுமுகன் கணைகளைத் தூவி வருத்த, வருந்திய அது ஆங்கவன் வில்லினைத் துண்டத்தால் துணிக்க எண்ணி நெருங்குதலும், செவ்வேள் கரத்திருந்த வாளினால் இருதுணியாக்கி வீட்டினன். அதன் பின்னர் மேலோங்கிய தோற்றத்தால், அருக்கர்வழியை அடைத்தலும், மாருதத்தை மறுத்தலும், கடல்களைத் தூர்த்தலுமாகிய பெரியதோர் பார் உருக்கொண்டு நின்றான்

அதனை நோக்கிய அமலன், ஏழுகணைகளை எடுத்து, "நீவிர் ஏழு கடல்கள் போல ஆர்த்து, இப்பாராகிய பேருருவத்தை அழிக்குதிர்." என்று விடுத்தலும், அக்கணைகள், உகக்கடையில் எழும் பரவை போன்று இரைந்தெழுந்து, அவ்வுருவை யழித்து மீளலும், அவுணன், இறுதிக் காலத்தெழும் நீத்தமாகி விண்ணையும் மண்ணையும் விழுங்கி நின்றான். அறுமுகப்பெருமான் நூறு அம்புகளை எடுத்து, "நீவிர் ஊழிக்கனல்களாய் இந்நீர்ப்பெருக்கினை அழியுங்கள்." என்று கூறிவிடுத்தலும், அவை அவ்வாறே சென்று நீத்தத்தைப் பருகி மீளலும், சூரன், அவ்வுருவழிதலால் ஊழிக்கனலுருவெடுத்து, முகடுமுட்ட ஓங்கி நின்றான். குகப்பெருமான், ஆயிரம் அம்புகளெடுத்து, வில்லிற்பூட்டி, "நீங்கள் கடையுகத் தலைக்குங் காற்றுருக்கொண்டு ஏகி இக்கனலுருவாகிய மாய மணத்தையும் மாய்க்குதிர்." என்று விட்டருளலும், அக்கணைகள் அவ்வாறே பிரசண்ட மாருதமாகிச் சுழன்று அக் கனற் பிழம்பை யழித்து மீண்டன. பின்னருஞ் சூர்ன் பெருங்காற்றாகி நிற்றலும், பெருமான் நூறாயிரம் அம்புகளை எடுத்துப் பாம்புருக்கொண்டு அப்பகையைச் செற்று வாருங்களென்று விடுத்தலும், அவைகள் அவ்வண்ணமே பெரும் பன்னகங்களாகி அவுணன் வலியை மாற்றி வந்தன.

இன்ன தன்மையால் நான்கு நாள் வரையும் சூரன் விடாது போரினையாற்றிப் பின்னரும் மனத்தில் மாயத்திறத்தை நினைத்துப் பல உருக்கொண்டு தோன்றினன். முத்தொழில் புரியும் மூவர் உருவங்கள் ஒருபுடை வரவும், மற்றைத் தேவர்போல ஓர் புறம் வரவும், அசுரர் போன்று ஓர் புடை வரவும், இந்திரனைப் போன்று ஒரு புடை வரவும், குறள் போலுங் கூற்றுப் போலவும் ஓர் புடை வரவும், இன்ன மாயம் அளவில புரிந்து, பேய், புகை, தீ, சுழற் காற்று, ஊழிவெள்ளம், ஆலகால விடம், முகில், அரவு, மலை, தன் உண்மையுரு, கதிர், தனதிறந்த படைகள், திக்கயங்கள், சிங்கவேறு, சிம்புட் பறவை ஆகிய இன்னபல உருவங்களையுங் கொண்டு வந்து, முருகப் பெருமானை வளைத்தும், மீண்டும் இறந்தொழிந்த சிங்கமுகன், தாரகன், பானுகோபன், தருமகோபன், ஏனைய அவுணர் ஆகிய இன் னோரைப் போல மாயையால் நெருங்கியும் வர, பரம கருணை நிதியா கிய முருகப் பெருமான், அவனது மாய விசேடங்களைப் பார்த்து, ஆயிரங் கோடி அம்புகளைத் தனது செவ்விய கரத்திலெடுத்து, வளைத் துள்ள வில்லிற் பூட்டி, "பகைவரை அடுந்தொழில் வல்ல அம்பெ னுந் தெய்வங்காள்! நீவிர் விரைந்தேகி அப்பகைவன் கொண்டுள்ள மாயா உருவங்களை யொத்த உருவங்களெய்தி, அம்மாயம் முழுமையும் அழித்து மீளுதிர்." என்று விட்டருளலும், அவ்வம்புகள், அவ்வுரு வங்கள் ஒவ்வொன்றுக்கும் எழுமை யுருக்கொண்டு, திசையனைத் தும், வானும், மண்ணும் நெருங்கி அம்மாயையை அழித்துத் திரும்பி வந்தன. அக்காலை தனித்துச் சினங்கொண்டு செய லற்று நின்ற சூரனைப் பார்த்த தயாநிதியாகிய பெருமான், "புயலிடைத் தோன்றிய மின்னலைப் போல நினது மாயா உருவங்களனைத்தும் நம் முன் அறவே மாண்டொழிந்தன ; இனி நமது அழியாத பெருவடி வத்தினைக் காட்டுவாம். நீ காணுதி." என்று கூறி முழங்குங் கடல் களும், திக்குகளும், புவனங்களும், அண்டங்களும், தேவர்களும், மற் றையுயிர்களும், மற்றயாவும் அறுமாமுகன் திருவுருவத்தில் பொருந் தியவே யன்றி வேறல்ல வென்னுமாறு, ஒப்பற்ற பேருருக்கொண்டு நின்றான்.

மலைகள் அடிகளிலும், நீர் நிலைகள் புறவடிகளிலும், நாளகளும் கோள்களும் விரலிலும், பரட்டில் வருணன் நிருதி முதலியோரும்

பொருந்தி நிற்கவும், கணைக்கால்களில் முனிவர்களும், முழந்தாளில் வித்தியாதரரை முதலிட்டோரும், தொடையில் இந்திரனும், தொடையின் அடியில் நமனும், கடிதடத்தில் அசுரர்களும், பக்கங்களில் மற்றைத் தேவர்களனைவரும் மேவி நிற்கவும், இருப்பில் நாகங்களும், கோசத்தில் அமிர்தமும், உந்தியில் உயிர்களும், மார்பில் கலைகளும், முந்நூலில் ஞானமும், உரோமங்களில் அண்டங்களும், அகங்கையில் சருவலோகங்களும், புயங்களில் திருமால் பிரமர்களும், விரல் நுனியில் தேவமாதரும், கண்டத்தில் அக்கினியும், அழகிய வாயில் வேதமும், பற்களில் எழுத்துக்களும், நாவினில் ஆகம பேதங்களும், இதழில் மனு வித்தைகளும், மூக்கினில் வாயுதேவனும், கண்களில் சோமசூரியர்களும், காதுகளில் திக்குகளும், நெற்றியில் குடிலையும், சிரசில் பரமான்மாவுமாக மரபினால் மேவித் தோன்றவும், மாறுபடாத தனது பழைய திருவுருவத்தைக் காட்டி நின்றான்.

செஞ்சுடர் பரிதிகள், அநந்தகோடி உதயமாயினாற் போன்று, பேரொளியோடு கூடிய திருவுருவத்தை நோக்கித் தேவர்கள் மனந் துளங்க, அவர்களை அமலமூர்த்தி 'அஞ்சன்மின்' என்று அருள் புரிந்து, கரமமைத்தலும், அவர்கள் அன்பின் பெருக்கால் தொழுது நின்றார்கள். முடிவும் முதலும் இல்லாத முதல்வன் திருவுருவத்தைக் கண்ட சூரன் விம்மிதங்கொண்டு நிற்ப, அறுமுகப்பெருமான், அவன் சிறிதே நல்லுணர்ச்சி எய்துமாறு அருளலும், அவன், "அளவற்ற அவுணர்களை இமைப்பிற் கொன்று, அண்டங்கள் தோறும் பெருஞ் சமர்புரிந்து, என் சார்பினரை அறவே துடைத்து, இந்திரஞாலத்தேரை என் பால் வராமற்றடுத்து, யான் செலுத்தும் திறற்படைகளை நீக்கி, என் மாயமனைத்தையும் அம்பால் மாய்த்து, அண்டங்களும், புவனங்களும், அமரரும், பிறவுமாயவற்றைத் தன்பாற் கண்டிடும் பெரு வடிவமொன்றினைக் காட்டி, எனது கண்முன் நின்றான். அழகிய மயிலின் மீதுள்ளவனை அந்நாள் பாலனென்றிருந்தேன். இப்பரிசினை யுணர்ந்திலேன். மாலயன் முதலிய தேவர்க்கு மூலகாரணமாய் நின்றவன் இம்மூர்த்தியன்றோ ? ஒற்றுவன் உணர்த்திய உரையினைத் தெளிந்தேனில்லை. இப்பொழுது இவனே ஈசனென்பதைத் தெரிந்தேன். அடியேன் பெற்ற அண்டக் குழுவனைத்தும் இவன் உரோமங்களிற் றோன்றியே நிற்கின்றன. யான் பலகால்

பார்ப்பினும், இவன் அழகு முழுமையும் காணமுடியுமோ? இப்பே ருருவத்தைத் தவத்தின் வன்மைபெற்ற யானன்றி ஏனையோரால் அஞ் சாது நின்று காணவியலுமோ? எனதிளவலாகிய சிங்கமுகனும், எனது சேயும், செவ்வேற்கரத்தனைச் சிறியனென்றெண்ணலை என்றனர். அவர் மொழி சரதமாயிற்று; மாறுபட்ட வெகுளி நீங்கி நின்றேன். போரில் ஊக்கங் குறைந்தது. உரோமஞ் சிலிர்த்தன. விழிகளில் அன்பு நீர் பெருகியது. இவன்பால் அன்பு பிறந்தது. தனித்த எனக்கு உள்ளம் உருகியதோடு என்பும் உலைமெழுகாயிற்று. அகந்தை கெட்டு ஞான முதித்தது. வலக்கணுந் தோளுந் துடித்தன; உலகப்பொருள் உள்ள வாறு காணப்படுகின்றன. விண்ணவர் நாயகன் வடிவம் கண்டேன். இது நற்றவப் பயனல்லவா? இவனை வலம் வரவேண்டும் எனது தாள்கள். கைகள் தொழுதல் வேண்டும். சென்னி தாழல் வேண்டும். நா துதித் தல் வேண்டும். தீமை நீங்கி யான் வாழவேண்டின், இவனுக்கு யான் ஆட்படல் வேண்டும். இவ்வாறு செய்தற்கெழுந்த என் மனத்தினைத் தடுத்து நின்றது மானமாகிய ஒன்றேயாம். பகைவர் நிமித்தம் இங்கு வந்து சமர்புரிந்த இச்செம்மல் தன்னுருவத்தினைக் கண்ட பின் யான் முனிவதே தகுதியாயிருக்க, அவ்வாறின்றித் தீயிடைப்பட்ட மெழுகு போல உருகுமாயின், இவ்வுடலும் இதன் கண்ணுள்ள அறிவும், என் வசப்பட்டவன்று போலும்? கடப்ப மாலையைத் தரித்த கண்ணுதற் கும ரன், இந்நாள்காறும் நீங்காது நின்று என்னொடு மலைந்ததொன்று அவ னுக்கு ஆடல்போலும்? அதனைவிட்டு என்னைக் கொல்ல நினைக்கின் அத னைத் தடுப்பவர் யாவர்? தேவரை யான் சிறைசெய்ததெல்லாந் தீதென் றுரைத்தனர் பல்லோர். அதனால் வேதமும் தேவருங் காணு ஒரு பெரு முதல்வனை ஈண்டுக் காணப்பெற்றேன். ஆகலான், அச்செயல் நன்றா யிற்றன்றே. ஒப்பற்ற முதல்வனாகிய மூர்த்தி முன்னர் நின்று அமர் செய்தேன். இந்நாள் நன்றாய இப்பெருமை பெற்றேன். வீரனும் யானே ஆயினேன். என்றும் இப்புகழே நிற்கும். இவ்வுடல் நிற்ப துண்டோ? வானவர் சிறையை விட்டு வள்ளலை வணங்கி இவ்வு ளுடலைத் தாங்கி, அளியர் போன்று யானிருப்பின், ஆயிரங்கோடி அண் டத்தின் கண்ணும் பொருந்திய என் புகழும் வீரமும் பொன்றி டாவோ?" என்றிவ்வாறு மொழிந்து நிற்றலும், குகப்பெருமான் தன் பெரு வடிவத்தை விட்டு மயிலினை யூர்ந்த முன்னுருவத்தினைக் கொண்டு புகைவன் அறிவினை மாற்றி பண்டை போலாகச் செய்தான்

அவ்வண்ணம் நிகழ்வுழி அவுணர்கோன், உணர்ச்சி நீங்கிச் சித்தத்தில் தொல்லைச் சீற்றமும், இகலும் மூண்டன. முளைத்த இளமதியைக் கண்ட இருள், அம்மதி நீங்கத் திசையனைத்துஞ் செறியுமாறுபோல, தீக்கடவுளைக் கோழிக் கொடியாகவுடைய முருகப்பெருமானைப் பார்த்து, நன்றிவண் வந்த செய்கையென நகைத்து, கரத்தொடு கரத்தைத் தாக்கி, மணிமுடி துளக்கி மற்றிவை யுரைப்பான்:—"பிள்ளையுருவத்தைக் கொண்டு நின்ற கள்வன், போர்புரிகிலாது, மாயத்தால் ஓருருக் கொண்டு என்னை மயக்கினன். அழிவற்ற யாக்கையினையுடைய என் மனமோ மாயையிற்பட்டு மயங்கும்? குன்றினை எறிந்த குமரனை வெல்லுவன் பின்னர். நிற்க, இவ்வலிய பகையை மூட்டிய தேவரை முன்னர்த் தின்றுயிர் குடித்து என்சினஞ் சிறிதாற்றுவன்" பின்னர் அவுணர்கோன் ஞாயிறும் மயங்கி நிற்ப, ஞாலமும் விண்ணுமெல்லாம் பாயிருள் பொதியப் படிவங்கொண்டு நின்று ஆரவாரித்தான்.

திரைகடல் எழுந்த தீவிடத்தனை யொத்த அவ்விருட் செறிவைக் கண்டு வானவர், அவுணன் மாய மிஃதெனக் கலங்கி நின்றனர். அப்பொழுது சூரன், மலைச் சிகரங்களை யொத்த பல தலைகளையும், எண்ணிறந்த கைகளையு முடையதோர் பெருவடிவ மெடுத்துப் பத்தியாயுள்ள தேவரை எடுத்துண்ணக் கருதி, விண்ணிற் கிளர்ந்து சென்றான். அவன் கொடுமையை விண்ணோர் தமது ஞானத்தாலும், குறிப்பாலு முணர்ந்து, இரிந்து திசையனைத்துஞ் சிதறியோடி கூற்றைக் கண்ட உயிர்போலக் குலை வெய்தி இரங்கினார்கள். அங்ஙனஞ் சிதறிய தேவர்கள், "அடைந்தார்க் கினியனே ஓலம், ஞான நாயகனே ஓலம், விண்ணவர்க் கிறைவ ஓலம், செழுபரஞ்சுடரே ஓலம், எண்ணுதற் கரியாய் ஓலம், யாரையும் படைத்தாய் ஓலம், கண்ணுதற் பெருமான் நல்கும் கனற்பெரு வடிவே ஓலம், தேவர்கள் தேவா ஓலம், சிற்பர முதல்வா ஓலம், வேற்படை விமலா ஓலம், பாவலர்க் கெளியாய் ஓலம், பன்னிரு புயத்தாய் ஓலம், மூவருமாகி நின்ற மூர்த்தியே ஓலமய்யா!"

"ஈங்கிவன் இரைவின் எழுந்த எழிலியைப்போல மறைவால் ஏகி எம்மை விழுங்க வந்தனன். ஓடவும் வலிமை யில்லேம். எங்கினி உய்குவம். இறைப் பொழுதுந் தாழ்க்கலை. அவுணன் உயிரை யுண்டு அடியருக் கருளுக." என்று அஞ்சி யுரைத்தார்கள். மஞ்ஞையா

யிருந்த இந்திரனும், "வள்ளலே அஞ்சினேன், யான் எங்ஙனேகுவது ? இதுவும் நினக்கு ஆடலோ ? அரைக்கணத்தில் அனைத்தையும் வாரி நுங்குவான் அஞ்சினேன், அஞ்சினேன்." என்றான். தேவர் இடுக்கணையும், அவுணன் ஆற்றலையுந் தெரிந்த அறுமுகப் பெருமான், தனது செங்கரமொன்றிற் றிகழும் செவ்விய வேலை நோக்கி, "இவ்வவுணன் யாக்கையைப் போழ்ந்து இமைப்பின் மீளுதி." என்று ஆணை தந்து, அசுரன் மேற் செல்லுமாறு தொட்டருளினான். விரைவில் அம்முருகப் பெருமான் தொட்ட வேலானது, ஆயிரங் கோடி யென்னும் அருக்கர் போன்று விளங்கித் தோன்றி, தீச்சிகழி கான்று, அவுணன் கொண்ட மாய முழுமையு மழித்து, அசுரனை நோக்கிச் செல்லுதலும், அதனது வருகையைக் கண்ட சூரன், "அழிவற்ற வரத்தினையுடைய என்னை இவ்வேற்படை என் செய்யும்" ? என்று நகைத்து, வெகுண்டு, அந்நிலத்தையும் கீழு மேலுமாக வுள்ள சுவர்க்க பாதலங்களையும், திசைமுகன் முதலாய அமரர் பதிகளையும் அழிப்பனென் றெழுந்து, கடலின் நடுவண் சென்று, தீப் போலுந் தளிரைக் கான்று, புகைபோன்ற இலைகளைக் கொண்டு, பொன் போன்ற பூங்கொத்து ஈன்ற மரகதத்தினை யொத்துக் காய்த்து, செம்மணி போன்று தீம்பழங் கொண்டு, மேகம்போலும், நெருங்கிய பல கவடுகளைப் போக்கி, ஒரு நூறுயிரமென்னும் யோசனை அளவினதாகப் பருத்த அரையினையுடையதாய், நெருங்கி ஆர்ந்த கிளைகளின் செறிவால், கடல், வான், நிலவரைப்பாகிய இவ்விடங்களிலெல்லாங் குளிர்ந்த நிழலைப் பரப்பிக்கொண்டு ஓர் சூதவடிவமாய் நின்றான்.

திரைகடலின் நடுவணின்ற தீயவன் செய்கையும், அன்னோன் கொண்டுள்ள உருவமும், வலிமையின் சிறப்பும் ஆகிய அனைத்தையும் அறுமுகன் தொட்ட தனிவேல்கண்டு, வெஞ்சினங்கொண்டு, தேயு பூதத்தில் எடுத்த அண்டத்திறங்களும், பிருதிவி பூதத்தில் எடுத்த ஆயிரங்கோடி அண்டங்களில் தங்கிய தீயும் ஒன்றாயினாற்போல ஓங்கி, அண்டமுற்றவும் அஞ்சத்தக்க உருவத்தினை யடைந்து, அச்சூரனுயிரை வௌவப் பிரளயகால உருத்திரனைப்போலச் சென்று, அறியாமையாலெழுந்த மனத்தை உறுதியாக்கொண்ட அச்சூரன் எடுத்த மாமர உருவத்தினை அடியில் அறுத்துத் தள்ளிற்று. வெற்றியினையுடைய அவ்வேல், மாவடிவாகிய அவனை அறுத்துத் தள்ளியும் அவன் இறந்

தானில்லை.: அவன் பெற்ற வரத்திற் கேதுவாய தவம் வியக்கற்பாலதே. ஆபதன் பின்னர்ச் சூரன் வெருண்டு, தன் உண்மை யுருவினைக் கொண்டு, கூரிய உடைவாளை யுருவிப் போர்புரிய எண்ணி, இடிபோல ஆர்த்து வருங்கால், அவ்வேல் அவ்னது மார்பைப் பிளந்து, உடலை இருகூறாக்கிக் கடல் வரைப்பில் வீட்டி, எங்கும் மறை முழங்க, வான்மீதெழுந்து, வானவர் சொரியும் பூ மழையிற் புகுந்து, தழலுரு நீத்து, அருளுருவெடுத்து, வானுறுபடிந்து, வள்ளலின் செவ்விய திருக்கரத்துச் சென்று. வீற்றிருந்தது. செவ்வேல் மீண்டதும், இறைவன் வரத்தால் இறத்தலில்லாத சூரன் எழுந்து, மீட்டும் உடற்பிளவு இரண்டும் கோழியும் மயிலுமாகிக் கோபமூண்டு, தேவசேனாபதியாகிய முருகப் பெருமானை நாடி, அமர்குறித்து வந்தான்.

இறைவனுக்கு ஆட்படுத்தும் முன்னையூழ் உய்த்தலும், சேவலும் மயிலுமாகி, தேவர்கள் இரியுமாற்றால் மனஞ்செருக்கி, ஞானநாயகன் முன் வருதலும், அமலமூர்த்தி, அவனை அருட்பார்வையால் நோக்கலும், அவன் இகலைவிட்டுத் தெருண்ட மனமுடையனாகி நின்றான். எவ்வகைத்தெனின், கரும் பொன்னை உயர்ந்தவர்கள் பார்வையால் கருமைமாற்றிச் செம்பொன்னாக்குந் தன்மைபோலும். தீமை இழைத்தாரேனும் குமரநாயகன் திருமுன் உற்றால், தூயவராகி மேலைத் தொல் கதி யடைகுவ ரென்பதனை ஆயவும் வேண்டுமோ? அடுபோர் இன்னாட் காறுஞ் செய்த மாயையின் மகனுமன்றோ அமலன்பால் அளவிலா அருள்பெற்று உய்ந்தான்? அப்பொழுது எம்பெருமான் அருளால் உணர்வு நிரம்பிய சேவலை நோக்கி, "நீ நமது தேரின்மீது கொடியாய் நின்று ஆரவாரம் செய்." என்றலும், அது நன்றென விண்ணின் எழுந்து, செந்நிறங் கெழுமிய சூட்டினையுடைய சேவற் கொடியாகி மனோவேகத் தேரின்மீது போய் இந்நிலவண்டம் வெடிபடவும், உரு மேறு உட்கவும், ஆரவாரித்துக்கொண்டு அவ்வுழியிருந்தது.

சிறப்பினையுடைய குமாரக் கடவுள் நெருங்கிய கண்களையுடைய இந்திரனாகிய பழைய மயிலினின்றும் இறங்கி, உணர்வு கொண்டுள்ள சூரனாகிய மயிலின்மீது எழுந்தருளி, "எம்மைச் சுமக்குதி." என்று கூறிப் பார், திசை, வானம் ஆகியுள்ள பரப்பு முற்றும் வாகன் உரிமையின் நடத்தினான். கடல்கள் உடையவும், மேரு வரை இடியவும், நில வரைப்பு வெடிபடவும், செந்நிறத்தீ துடி

துடித்து ஒடுங்கவும், சூறைக் காற்று துடிக்கவும், அண்டகூடம் நடுங்கவும், கலாபத்தை வீசி இடித் *தோகை புரள ஆரவாரித்து உலாவியது அம்மயில். எழுகடலு மொன்ருகி நிமிர்ந்தெழுகின்ற வடவைக் கனல் முழுமையும் தாமோர். உருக்கொண்டு எய்திய தொத்த மயிலினை ஊர்ந்த எம்பெருமான் மீண்டு, தீமை தங்கிய அம்மகேந்திர நகரத்துச் செருக்களத்தினை யடைந்தருளினன். எய்திய குமாரப் பெருமான், சேவலு மயிலுமாய் நின்ற தேவரை நோக்கி, "நீவிர் உமதியற்கைபாகிய வடிவத்தினை எய்துவீராக." என்ன, அவர்கள் அவ்வாறே அக்கினி தேவனும், இந்திரனுமாகிப் பணிந்து நின்று அருள் பெற்றனர். சுடர் மலிந்த வேற்படையினையுடைய கார்த்திகேயன், சூரனை யழித்து, மயிலினை யூர்ந்து வந்ததைத் தெரிந்த வீரபாகு தேவனும், இளைய வீரரும், பூதருந் தலைவரும் நெருங்கித் தொழுது ஆரவாரித்து நின்றனர்.

## தேவர்கள் போற்றுப் படலம்

ஒபபுயர்வற்ற வள்ளலாகிய குமாரக் கடவுள், தனதுவேலினல் சூரபன்மன் உரத்தினைப் பிளந்து, அழகிய மயிலின் மீது எழுந்தருளியதைக் கண்ட திருமாலும், பிரமனும், மற்றைத் தேவர்களும் மகிழ்ந்து, அமிழ்தம் கிடைக்கப் பெற்றவர் போன்று ஆர்த்து, எழுந்து துள்ளி, ஆடிப்பாடி நின்று, புளகம் போர்த்து, பொன்னிற மலர்களைத் தூர்த்து, அருளை நினைந்து, அண்ணலாகிய குமார மூர்த்தியைத் தொழுது வாழ்த்தத் தொடங்கினர்கள்:—"கடல்களின் நீரை வற்றுவிக்குஞ் செலவினையுடைய வேலைச் செலுத்திச் சூர் முதலைத் தடிந்த நீ, எமது வலிய வினையின் வேரினைத் தடிந்தாய். இனி எமக்கோர் குறையுண்டோ? மாறு முகங்கொண்டு எம்மை வருத்திய அவுணர் வலிக்கு ஆற்ருது, ஒதுங்கிக் கானுங் கடலும் கடந்து அலைந்து திரிந்த எம்பெருந்துயர் நீக்க ஆறுமுகங்கொண்டு உதித்த எம்மண்ணலே! நீதியின் ஒழுகாத அசுரர் புரிந்த பல துன்பங்களினின்றுந் தீர்ந்தேம். பிழியின் அகன்ருேம். வேத வொழுக்கத்தோடு பண்டைய பெருநிதியும் பெற்ருேம். எமக்கேதுங் குறையில்லை. செய்பவனும், அறிவும், ஏவுவோனும், எய்தப்படு பொருளும் ஆகிய அனைத்தும் நீயே என்பதனை யறிந்தோம். ஆயினவாற்ருல் கொடிய பிறவியினின்றும் நீங்கி அழிவெய்யாத் தவ வீட்டினையும்

அடைகுவம். அடியேங்கள் துன்பினை யகற்றி, இன்பினை ஈந்த நின் கழலடிக்கே மீளா அடிமை பூண்டனம். பிறர் தம்மைப் புகழேம்." என்று தேவர் அனைவரும் இம்முறை அன்பினால் பணிந்து ஏத்து தலும், அயில் வேற்கரத்து அண்ணல், நாரணன், நான்முகன் ஆதி யாம் விண்ணவர்க்குத் தன் ஆரருள் திறத்தினைப் பாலித்திருந்தான்.

அவ்வண்ணம் நிகழும் காலத்துச் சூரபன்மன் இறந்த விஷயத் தைச் சில அவுணர் மகேந்திரபுரியிற் சென்று, அரண்மனையில் பல மாதருக்கிடையே இருந்த பதுமகோமளை என்னும் சூரபன்மன் பட்டமகிஷிக்குத் தெரிவித்தனர். தேவ தச்சன் மகளாகிய அப் பதுமை, இடியேறுபட்ட அரவெனத் துடித்து வீழ்ந்திறந்து, தன் தலையன்பின் திறத்தை வெளிப்படுத்தினாள். அவ்வுழிச் சூழ்ந் திருந்த ஏனைய மனைவிகளும் வயிறலைத்து அழுது இறக்கத் துணிந்து, வெவ்விய அழற் குண்டமொன்றை அமைக்கச் செய்து அதனிடை இறந்துபட்ட பதுமகோமளையின் உடலையிட்டுப் பின் னர், அப்பெருங் கனலிடை, மலர்ந்த தாமரைத் தடத்திற்புகும் வண்டினங்களை யொத்துப் புகுந்தனர். அப்பொழுது அந்நகரத்தி லிருந்த திருமகளும் அதனை நீத்துப் புறம் போயினாள்.

இந்நிகழ்ச்சி இங்ஙனமாக, தந்தை பட்டதும், சேவலும் மயிலுமாய்க் கந்தவேள் புடை சார்ந்ததும் கண்ட மகனாகிய இரணியன், கடலி னின்றும் மேலெழுந்து விண்ணிடை நின்று கீழ்வருமாறு புலம்புவானாயி னான்:—"நன்றென்பதை யுணராய், யானுரைத்த சொல்லினைத்துந் தீதென்றே கொண்டாய். நீ பொன்றுதற்கோ போர் புரிந்தாய்? புர வலனே! என்றோ நான் உன்னை முன்போலக் காண்பது? அன்பு டையனோ இவன் என்று அயலார் என்னை இகழத் துன்புடையன் போன்று துயர்ந்து அயர்கின்றேன். என்னை வளர்த்த நினக்காகப் போரில் என் உயிர் தந்திலேன். எனக்காக உயிர் தாங்கி ஏங்கி நின்றேன் ஏழையேன். பகைவர் வலிகண்டு நின்னை யான் போற்றாது, ஒளித்த இப்பழி என்று தேயுமோ? ஆழியான், பிரமன், அமரர்க்கிறை முதலோர், 'வாழியாய்' என்றேத்த வைகிய நீ, பூழி நிறைமேனிப் புராரி சிறுவன் தேரில், கோழியாய் நின்று விலா வொடியக் கூவு தியோ? ஊகையால் அண்ட உயிர் முழுதும் வந்திறைஞ்ச உற்றிடு நீ வடிவேல் கரத்தினைத் தோகையாய் நின்று சுமப்பதிதுவும் முறையோ?

மாறுபடாப் பழைய உருவத்தினை யிழந்து, வேறுபாடாய் புள் வடிவம் எய்தினேன். ஆதலான், யான் தந்தைக்கு மக்கள் செய்யும் ஈமக்கடன் முதலியவைகளும் செய்யப் பெற்றிலேன். வீணே இவ் வுடலைப் பேணினேன். நின்னிடை யிருந்த சீற்றம், போர்த்திறம், இகல், மானம் ஆகிய அனைத்தும் எங்குற்றனவோ?" பின்னர் இரணியன், பூதர் தன்னைக் காணிற் றின்று சினந் தீர்குவர் என்று எண்ணி, அவ்வுழி யகன்று மீண்டுங் கடலிடைப் புகுந்துவருந்திக் குலக்குருவாகிய புகரோனிடம் புகுந்து, இறந்த தந்தையர்கட்கும், துணைவருக்கும், தாயர்க்கும், மற்றையோர்க்கும் செய்யவேண்டிய கடன்களை விதிமுறை செய்து, செல்வமானது துன்பத்திற்கோர் விதையென்றுணர்ந்து, முழுமுதலாகிய பரமனை மனத்தில் குறித்துக் கதியடைய விரும்பி ஒருபுடை நற்றவ மியற்றி இருந்தான்.

## மீட்சிப் படலம்

அன்னதாகிய காலத்து அறுமுகப் பெருமான், வீரபாகுதேவனை நோக்கி, "மகேந்திர நகரத்தில் சூரன் உறுதியாகச் சிறைவைத்துள்ள தேவர்களை மீட்டுவருதி." என்றியம்பியருளலும், அவன் நன்றென விரைந்து சென்று மகேந்திர புரத்துள்ள சிறைக்கூடம் புக்கான். அவனைக் கண்ட ஜயந்தனை முன்னிட்ட தேவர்கள் ஆர்த்துக் கைகுவித்துத் தொழுதலும், "நும்மைச் சிறைப் படுத்திய சூரன், குமரவேளின் திருக்கரத்தமைந்த கொற்ற வேலினால் விளிந்தனன். நீவிர் வாழ்வுடைந் தீர்கள். நுமது சிறையை மீட்க எம்பிரான் ஆணைதாங்கி வந்தனன்." என்று கூறித் தாள்களிலிட்ட காப்பினை நீக்கி, "வம்மின்கள், வம்மின்கள், வானத்தீர்!" என்று வீரன் கூற, இமையோர் உடல் முத்தி பெற்றார் போன்று மகிழ்ந்து, வீரபாகுவைத் தொடர்ந்து சென்று, செருநிலத்திலுற்ற செம்மலர்த் தாளினை ஜயந்தன் முதலிய தேவர்கள் மும்முறையிற் றாழ்ந்து புகழ்ந்து நின்று, முருகப் பெருமான் முழுவருள் பெற்றிருந்தனர்.

இந்திரன் தனது சுதனைத்தழுவி இன்புற்று, மற்றை அந்தரத்தவரையும் அன்பொடு உசாவினன். சண்முகப் பெருமான், போரில் மாண்ட பூதர்களை உயிர்பெற்று வருமாறு நினைத்தலும், அவர் உயிர்த்தெழுந்து, அமலனைச் சூழ்ந்து ஆர்த்தனர். பின்னரே பன்னிரு தோளினையுடைய பரமன், வருணனை நோக்கி, "தீமை யனைத்தினுக்கும்

இருப்பிடமாகிய இம்மகேந்திர நகரத்தைக் கண்ட நாள் உலகினை யுண்ணும் பரிசின் முடிக்கக்கடவாய்." என்று அருளலும், அவன் அன்னதே புரிகுவன் என்று அந்நகரைப் பல்லுயிரோடும் ஆழிவாய் அமிழ்த்த, அமலன், பூதகணமும், வீரர் குழுவும், தேவர் தொகுதியுஞ் சூழ அச் செருநிலமகன்று இடையிற்பட்ட இலங்கையைக் கடந்து, அளக்கரை யிகந்து திருச்செந்தூரை யடைந்து, பண்டைய கோயிலிற் பரிவொடுமெய்தி, அமரர்போற்ற அரியணை மிசையே அமர்ந்தருளினன். பரிதியும் குடபாற்கடலிற் புகுந்தனன் அக்காலை பன்னிரு திருக்கரத்தனைப் பிரமன் முதலியோர் தொழுது "அண்ணலே! அடியேம் நினது திருவடியை அருச்சிக்கவேணவா வுடையேம்" எனன அமலன், "நன்றே அஃதாகுக" என்றலும், மணமமைந்த புனித தீர்த்தம், சந்தனம், மலர், தீபம், அவிசு, தூபம் முதலிய பூஜைக்காகும் பொருள்களைத் தும் அமரர் கொணர, முக்கண் எந்தை அன்று உமாதேவியாருக் கருளிய குமார தந்திரமென்னும் நான்முறைப்படி தவறு நேராமல், அறுமுகப் பெருமானுக்கு முதன்மைப்பட்ட கும்பம், அக்கினி, பிம்பம் ஆகிய மூவகை இடங்களிலும் மனம் பூரித்து மிகுமன்பாற் பூசனைப் புரிந்தார்கள்.

அவர்கள் அன்பொடு இயற்றிய பூசனை உவந்து, அருளால் நோக்கி "வேண்டும் பொருள் யாது?" என்றருளலும, தேவர்கள், "இக் காயமுள்ள நாள்வரையில் நினது அருமைத் திருவடிகளில் தலையன்பு இருக்குமாறு அருளல் வேண்டும்." என்றனர். அவ்வாறே பெருமான் அருள் புரிந்தான். வேலையங்கதனிற் கங்குல் நீங்கக் கதிரவ னுதித்தலும் கந்தவேள், அமரர் கம்மியனைப் பார்த்து, "முக்கணெந்தைக்கு நின் கைத்தலத் திறத்தால் ஈண்டோர் ஆலயம் அமைக்குதி." என்ன, அவன் அவ்வண்ணம் அமைத்தலும், அச்சினகரத்தில் அறுமுகப் பண்ணவன் இலிங்கத்தைத் தாபித்துக் கோமய முதலிய பஞ்ச கவ்வியங்களையும், வாசனைத் திரவியங்களையும், சிறந்த மலர்களையும் தூய தீர்த்தத்தையும், அமிழ்தினையும், தீபதூபங்களையும் கண்ணாடி முதலியவும் விண்ணவர் கொண்டு வந்து கொடுத்து நிற்ப, முற்றுணர்வினை யுடைய குமார நாயகன், யாவராலுந் தொழப்படுகின்ற பரமன் அருளிய சிவாகம விதிப்படி, ஒப்பற்றுயர்ந்த சிவபெருமான் திருவடிகளில் அன்பின் பெருக்கால் வழிபாடாற்றினன்.

உயுத்தகாண்டம் முற்றிற்று

---

# ஐந்தாவது

## தேவகாண்டம்

### திருப்பரங் குன்றுசேர் படலம்

முதல் இறுதியற்ற முதல்வன் திருவடியை முருகன் வணங்கிய பிறகு, பூதர்கள், அவர் தலைவர்கள், வீரர்கள், தேவர்களாகிய அனை வருஞ் சூழ வெற்றிவேற் பெருமான் பொன்னின் மஞ்ஞையின் யெருத்த மேற்கொண்டு மாலயன் மகவான் ஆகிய மாகர் அனைவரையும் அருளான் நோக்கி, "நீயிர் நுந்தம் ஊர்தி மேலராய் நம் பக்கல் நண்ணுமின்." என்றனன். அவ்வருண்மொழி கேட்ட அப்பெருந் தேவர் முதல் ஏனையோர் தத்தமக் கமைந்த வாகனங்களை யூர்ந்து, அமலன் புடையே வர, அமலன் அப்பதி நீங்கிச் செல்லுங் கால், மதுரை மாநகருக்கணித்தாய், மேற்றிசையின்கண் அமர்ந்துள்ள திருப்பரங்குன்றத்தை எய்தலும், அவ்விடத்து முன் உறைந்த பரா சரன் மைந்தர் அறுவரும், பிரமன் முதலிய யாவரும், எந்தை பிரானை ஏத்தி நின்று, "இப்பதியில் எழுந்தருளல் வேண்டும். இது சிறப்புடைய தானம்." என்றலும், குமாரநாயகன், "யாமும் இவ்வரையிற்றங்க நினைத் தனம். நுமதெண்ணமும் நன்றாயிற்று." என்று வியந்து கூறி, அம்மேத கைய பதியில் உமாபுத்திரனாகிய இளையோன் ஏறியருளினான். பூதப் படைகள் அம்மலையைச் சூழ்ந்து, மேலும் புடையுந் துவன்றி நின்றன. அமரர் கம்மியன் பெருமான் ஆணையால் அக்கிரியில், பலவாகிய வீதி களும், தேவகோட்டங்களும், கோயிலும், சோலையொடு வாவிகளும் சிறப்புற ஆக்கினான். அவையனைத்தையுங் கண்டருளிய மஞ்ஞையூர்தி அவனுக்கு அருள்புரிந்து, படைஞரையும், மற்றையோரையும், அவ் வீதிகளின் இருப்பிடங்கள் தோறும் தங்குமாறு ஆணைபுரிந்து, மயிலி னின்று மிறங்கி, மாலயன் முதலிய தேவர் போற்றக் கோயிலை எய்தி, அவையிற் புகுந்து, அரியணையின் மிசை சிறப்புடன் எழுந்தருளி யிருந்தான்.

பூதசேனைத் தலைவரும், வீரபாகு தேவனும், இலக்கத் தெண் மரும் வந்து மலர்டிக் கருகில் மகிழ்ந்து நின்றனர். ஏவலால் இவர்கள் இவ்வாறாகப் பராசரமுனிவன் மைந்தர், தேவநாயகன் திருவடிகளை

அருச்சித்துப் போற்றி நிற்றலும், சண்முகப் பெருமான் பேரருளினால், இளமதியணிந்த எம்பெருமான் அன்றருளிய அருட்டிறத்தை மனத்தி லெண்ணிப் பராசரன் புதல்வர் தேறுமாறு, நல்லறிவைத் தரும் ஞானப் பொருளனைத்தையும் உயிர்க்குயிராய் விளங்கும் உமைமகன் உபதே சஞ்செய்து அங்கமர்ந் தருளினான். போர்முடித்து நிகரற்ற மகேந்திர நகரை விட்டுத் தரணியிற் போந்த தன்மையை இதுகாறும் கூறினும். இனி அப்பெருமான் மகவான் குமாரியை மணந்த செயலினைக் கூறு வாம்.

## தெய்வயானையம்மை திருமணப் படலம்

இந்திரன், தனது பகையை முடித்துத் தன்னரசுரிமை முதலிய வற்றைத் தனக்களிக்குங் குமார நாயகனுக்குத் தன் அருமை மகளாகிய தெய்வயானை யம்மை என்னும் பெயரினையுடைய பின்தாழ் கூந்தல் இளம்பிடியை மணமுடித்துத்தர மனத்தினெண்ணினான். தன்னுளத்து எண்ணங்கொண்ட இந்திரன், திருமால், பிரமன் முதலிய தேவர்களிடஞ் சென்று; தனது கருத்தை அவர்கள் அறியும் வண்ணம் விளம்ப, அத னைக் கேட்ட அப்பெருந்தேவர் பேருவகை யெய்தி, "நினது மகளாகிய தெய்வயானையம்மை முன்னமே இம்முருகப் பெருமா னைப் பதியாக அடைதற்குப் பொய்கையின்கண் பெருந்தவமியற்றி யுள்ளாள். ஆதலின், இஃது இடையூறின்றி முற்றுப்பெறும். திருமணத் திற்குச் செய்யவேண்டிய முயற்சியை விரைவில் புரிவாயாக." என்றனர். அம்மொழி கேட்ட இந்திரன் மகிழ்ந்து தனது சார்பிலுள்ள ஓர் ஒற் றனை அழைத்து, "நீ விரைந்து மேருமலைக்குச் சென்று அங்கமர்ந் துள்ள நமது தேவியாகிய புலோமசையைப் புதல்வியோடும் இன்றே யழைத்து வருதி." என்றலும், அத்தூதுவன் நன்றெனை ஏகி, மேரு வை யடைந்து, புலோமசையைக் கண்டு வணங்கி நின்று, "அம்மையே! நின் மனமுவக்குமாறு சூரன் வதை முதலிய யாவும் முடிந்தன. வெற்றிவேற் கரத்தனாகிய குமார நாயகன் திருப்பரங்குன்றில் சிறப் புடன் எழுந்தருளி யுள்ளான். அஃது அங்ஙனமிருக்க, நினது நாய கன் நின்னை அருமை மகளோடும் பரங்குன்றிற்கு அழைத்து செல்லு மாறு பணித்தருளினன். ஆதலின், இக்கணமே ஏகுவாய்." என்றான்.

அங்ஙன்மொழி கேட்ட அயிராணி விம்மிதங்கொண்டு, விழுமம் நீங்கி, எம்மையுமில்லா இன்பமொன்றெய்தி, குமாரியைக் கொண்டு,

கொம்மென வெழுந்து, சூழ்ந்த மாதர் போற்றி நிற்பத், தனக்கேமமாகி யுள்ள அயிராவதத்தின்மேல் மடமகள் தன்னெடும் ஏறி இருந்து, விண்ணெறிச் சென்று, தேவர் குழுமிய திருப்பரங்குன்றிடைச் சேர்ந்து, தேவர்கோன் இருப்பதற்கமைந்த மந்திரத் தெய்திக் குமரியோடு குலாவி வைகினாள்.

அவ்வேலை மகேந்திரமாகிய சிறையிற்பட்ட தெய்வமாதரனைவரும், வந்து வணங்கி வாழ்த்தெடுத்தனர். மதலையாகிய ஜயந்தனைக் கண்டு கருணையாற் றழுவி, அன்பு பூண்டு, கவற்சி நீங்கி, வறியவர் முன்னிழந்த பொருளைப் பெற்ற தன்மையை அவள் எய்தினாள். வருந்துகின்ற பசியில் பட்டோர் பெருநிதியைக் கண்ட காலத்து, உவகையால் நிறைந்ததை யொத்துப் பிரிந்திருந்த புலோமசையைக் கண்ட இந்திரன், தலைவியைக் கூடிய தலைவன் தன்மையினையும் எய்தியவனுப் பிறகு தேவர் கூட்டத்தோடு செம்மலருகிற் சென்று, "அடியேம் பகையை முடித்துச் செல்வமும் இறைமையுந் தந்த செல்வனே! ஏழையேன் நினக்குக் கைம்மாறு செய்யநின்ற தொன்றுண்டோ? ஆயினும், அடியேன் தவத்தின் பயனைப் பெற்ற பெண்மணி இவ்வரைக்கண் வந்திருக்கின்றனள். அவளை மணம்புரிந்தருளி, அடியேம் உய்யுமாறு கடைக்கணித்தருளல் வேண்டும்." என்று வணங்கி நிற்றலும், முருகவேள் அமரர்கோனை நோக்கி, "முந்தே அந்நங்கை எம்மை நோக்கித் தவம் புரிந்துளாள். ஆகலான், நீ எண்ணியவாறே நாளை மணம்புரிகுதும்." என்று கூறியருளலும், இந்திரன் என்றுமில்லாத் தருக்கினை எய்தி நின்று, அறுமுகன் திருவடிகளை முடியாற் றீண்டி வணங்கி, அருள்கொடு எழுந்து, வெளியே சென்று, கணத்தில் காவதம் பல செல்லத் தகுந்த ஒற்றரை நோக்கி, "மூவரின் மேலோனாகிய முக்கணன் மேவும் கிரியில் முன்னம் அமர்ந்த முசுகுந்தன் முதலிய காவற்றலைவராகிய புவிமன்னர்கட்கும், விண்ணுறைவோர்க்கும், மாதிரத் தலைவர்க்கும், முனிவர் அனைவர்க்கும், எம்பெருமானாகிய குமார நாயகனுக்குத் திருமணம் நாளையென்று கூறி அன்னோரை இவ்வரைக்கண் வருமாறு அழையுங்கள்." என்று சாற்றலும், தூதுவர் நன்றெனஅக்கணத்துப்பணிந்துசென்றனர். இந்திரன் தேவதச்சனை அழைத்து, "முருகன் திருமணத்திற் கமையுமாறுநின்விஞ்சையின் திறத்தால் ஒரு மண்டபம் இயற்றுதி." என்றலும், அவன் அப்பொருப்பின்

ஒருசாராகஃஙிலப்பரப்பைப் பொன்னால் அமைத்துச் சிறந்த மணிகளால் குயிற்றி, குண்டாக மண்டப மியற்றி, மேலிடத்தைப் பட்டு விதானங்க ளான் மறைத்து, மாலைகள், பலவன்னத் துகில்கள் முதலியவற்றைத் தூக்கி, அதனிடையே சண்முகப்பெருமான் அமருதற்குரிய நான்முறை சான்ற பீடமொன்றமைத்து, வேதநெறி விளங்கவந்த விசாகன் புடையி னின்ற திருமால், பிரமன் முதலியோர் தங்குதற்குரிய சிறந்த ஆசனங் களை அமைத்துக் காலங் கருதாது, யாவர் எப்பொருள் வேண்டினும் வேண்டியாங்கு அவ்வப்பொழுதில் அளிக்குஞ் சோலைகளையும், மலர் வாவிகளையும், சுனைத்தொகைகளையும், மணத்திற் குரிய மிக்க பல பொருள்களையும் அளித்தான்.

தேவதச்சன் வகுத்த அவற்றை இந்திரன் கண்டு மகிழ்ந்து, அத் திருமணத்திற்கு வேண்டும் யாவையும் ஓர் இமைப்பொழுதில் வருவித் தான். தேவராஜன் செய்கை இவ்வாறிருக்கவும், அவனால் அனுப்பப் பட்ட தூதுவர் சென்று உரைத்தலும், முருகன் திருமணத்தைக் காண அவாகொண்ட இப்புவியைத் திகிரியுருட்டி யாண்ட முசுகுந்த னென்னுங் காவலன் வரும் பரிசினைச் சிறிதுரைப்பாம்:—கல்லெனும் ஓசையோடு அருவிகள் இழிதரும் திருக்கயிலை மலைச் சோலையில் உமா மகேசனாக எம்பெருமான் ஒருநாள் எழுந்தருளியிருந்தான். அவ்விடம் வில்லுவமரங்கள் செறிந்திருண்டிருந்தன. அவைகளில், முற்றுமுணர்ந்த முனிவரைப்போன்ற உடல் குவிந்து, கிளைகள் தோறும் தங்கியிருக்கும் முசுவென்னும் ஓர்வகை குரங்கு சாதியில் ஒன்று, அம்மரத்தில் நெருங்கியுள்ள வில்லுவ இலைகளைப்பறித்து மிகுதியாகக் கீழிருந்த பரம சிவப்பெருமான் திருமுடியில் தூர்த்தது. அப்பொழுது அருகிலிருந்த உமாதேவியார் அதனை நோக்கிச் சினங் கொள்ள, எம்பெருமான் தெரி ந்து, "அதனை ஏன் சீறுகின்றனை? நம்மை அருச்சனையன்றோ புரிகின் றது?" என்றருளலும் அம்பிகை அதனிடத்து அருள் நோக்கம் வைத்த னள். அனைத்துயிர்க் குயிராகிய அப்பன், அம்முசுவி னிடத்துள்ள அறியாமை நீக்கி, நல்லுணர்வு வருமாறு திருவுளங் கொள்ளலும், அஃததனையடைந்து, விரைந்து கீழே குதித்து, அம்மை யப்பர்களை வலம் வந்து திருவடி பணிந்து நின்று, அந்த ஆண்முசு, "அடியேன் செய்த பிழையைப் பொறுத்தருளல் வேண்டும்." என்று வேண்டி நிற்ற லும், உமாபதி அருளால் நோக்கி,"நீ செய்தது தவறன்று. எம்மைக் கூவி

ளையின் பத்திரத்தினால் அருச்சனையாற்றினை. அதனால், நீ மண்ணுல கெய்தி, மனு வம்சத்துப் பிறந்து, முழுதுலகாள்வாய்." என மொழிந் தருளினான்.

அவ்வருண்மொழிகேட்ட அம்முசுக்கலை, பெருந் துயரெய்தி, "இறைவனே! அடியேன் அனுதினமும் அன்னை யத்தர்களா கிய நும்மைத் தரிசித்திருக்கும் இப்பெரு வாழ்வினை விட்டுப் புலால் உடல்தாங்கிச் செல்வக் களிப்பில் சூழ்ந்து, கேடுறும் அதனை வேண்டேன்." என்றது. இறையவன், "அன்பனே! யாதும் எண்ணி வருந்தலை நலத்தகநிலத்திடைவைகிப் பின்னர் இவ்விடம் வரக்கடவை." என்ன, அடியேன் "பொய்யுடல் சுமந்து மயங்காவண்ணம் இம்முசுமுக மோடு இருந்து மீளுதற்கு அருள்புரிய வேண்டும்." என்றது அம்முசுக் கலை. அவ்வாறே சிவபெருமான் அருள, அக்கணமே அது திருக் கயிலை நீங்கி, நிலத்திடை இழிந்து, அரசுந் திருவுமிழந்து, ஆராஞரெய்தி யும், அரும்பெறல் உண்மையை உறுதியாகக்கொண்டு அரசினையாண்ட அரிச்சந்திரன் வழித்தோன்றலாம் அம்முசு உதித்தது. சிறந்த முக மொன்றுமே முசுமுகமாக, ஏனைய அங்கங்களெல்லாம் மன்மதன் உறப்பிற் சிறந்து, முசுகுந்தனென்னுங் காரணப் பெயர்பெற்று, முன் னோர் முறைப்படி அம்மனு மரபிற்றிகழ்ந்து, முடிபுனைந்து, உலக முழுதாண்டு, சிறப்பினை யுடைய கருவூரில் மேவியிருந்து, சூரபன்மன் ஆணையைக் கடவாதவனா யிருந்தான். அவ்வாறிருக்கும் போழ்து, சூர பன்மன் மாண்டதை அறிந்து புயம்பூரித்து அரசு செய்திருந்த முசு குந்தனை இந்திரன் தூதுவர் அடைந்து, "எமது இறைவனாகிய இந்திர னுக்கு நண்பு பூண்டுள்ள முசுகுந்த பூபதியே! நினது சுற்றத்தோடு நீடூழி வாழ்வாயாக! நினக்கோர் மங்கலம் இயம்ப வந்தனம் அஃதா வது, அடா நெறி யொழுகிய சூரபன்மனைக் கிளையொடுந் தடிந்த குமரவேள் மகேந்திரத்தை யழித்து, அதன் வட புலத்திற் சென்று, கடலின் குடபால் அமைந்த திருப்பரங்குன்றினில் தேவர் குழுவினோடு பூதர் சூழ வீற்றிருந்தனன். அப்புனிதனுக்கு இந் திரன் தான்பெற்ற தெய்வ யானையம்மையை விதிமுறை மணஞ் செய் தீவது இற்றைப் பகல் ஏகிய பின்னர் ஆதலின், அத்திருமணங் காண நீ நின் சேனையோடு எழுந்து, தென்தமிழ்ப் பரங்குன்றிற்கு ஏகு வாய்." என்று தூதுவர் கூறினார்கள். கூறிய அவ்வொற்றரைத் தழுவித்

கொண்டு, "இம்மங்கலம் உரைத்த நுங்களுக்கு யான் யாது கொடுப்பேன்? இங்குள்ள பெருநிதி அனைத்தையும் கொடுக்கவா? அல்லது என்னரசு முழுமையும் கொடுக்கவா? யாது வேண்டும்?" என்றலும், அவர் உவப்படைந்து, "நீ விரைந்து சென்று இந்திரனைக் காண்குவையாயின், அதுவே போதும், உவந்தோம்." என்று கூறிச் சென்றனர்.

ஏகிய தூதுவா பூதலத் தரசர்களுக் குரைத்து, மாதிரத்தில் மேவினோர்க்கும் விளம்பி, விசும்பிற் படரும் பகலவன் முதலிய விண்ணவர்க்கும் இகலொழிந்த மாதவர்க்கும் இயம்பிப் போந்தனர். அன்னதாகிய காலத்து முசுகுந்தன், அங்கர் உறைவோரும், தன்பெருஞ்சேனையும், வேற்படைக் குமரன் திருமணங்காண முன்னரே ஏக யானைமிசை முரசறையப் பணித்தான். அவ்வாறே முரசறைய, அக்கருவூரின்கண் உள்ளாரும், படைஞரும் எழுந்து கடல்போலப் பேரொலி செய்து, யானைகளின்மீதும், குதிரைகளின் மீதும், சிவிகைகளின் மீதும், அவ்வவர் தகுதிக் கேற்ப ஆடவரும், மங்கையரும் அணிந்து சென்றார்கள். அப்பொழுது தன் கிளைஞரும், தந்திரத் தலைவரும் முன்னொடு பின்னும் பாங்கருமாக மொய்த்துச் செல்லத் தான் ஒரு பொன்னெடுந் தேரிலேறிச் சென்று, இடையே உள்ள காடுகளையும், மருத நிலங்களையும், நாடுகளையும், ஆறுமுதலியவைகளையுங் கடந்து, திருப்பரங் குன்றினையடைந்தான்.

அதன்பிறகு, தரணிகாவலர் அனைவரும், ஒவ்வோர் திசையினின்றும் சேனைகளோடும், பரிஜனங்களோடுஞ் சென்று அங்கண் எய்தினர். விண்ணுறைவோர் அனைவரும் விளங்கிழை மாதரொடு அங்கண் அமைத்த படமாடம் புக்கிருந்தனர். இவ்வண்ணமே அனைவருஞ் சென்று, நெருங்கி அப்பரங் குன்றிலும், சார்பிடங்களிலும் தேவகம்மியனால் செய்யப்பட்ட வாவிகளில் மைந்தரும், மாதரும் நீர்விளையாடியும், சோலைகளில் மலர்களைக் கொய்தும் அன்று பகற்பொழுதைக் கழித்தனர். அருக்கனும் மேற்பாற் கடலிற் குளித்தான். அன்றிரவு, திங்களின் உதயத்தைக் கண்ட மாதரும், மைந்தரும் மனமகிழ்ச்சியோடு தேன்றலையுண்டு உலாவி இருந்தனர். அவர்கள் இவ்வாறிருக்க, முசுகுந்தன் முதலாய அரசர்கள் அக்குன்றினில் ஏறித் திருமணத்திற்கு அமைக்கப்பட்ட மகாமண்டபத்தின் அழகு முழுமையுங் கண்டு, தேவராஜன் அடிகளில் விழுந்து பணிந்து, பெருங்

களிப்படைந்து நிற்க, இந்திரன் அவர்களுக்கு முகமன் கூறி மேவினன்.

பின்னர் விண்வழிச் செல்லும் அருக்கன், மதி முதலிய அமரரும், மாதிரத்தரும், மாதவத்தரும், பாதலவாணரும் அப்பரங்குன்றை எய்தினர். வெற்றியினையுடைய வரையர மகளிரும், வானமகளிரும், நீரரமகளிரும், திக்குமாதர்களும், நாகர்மாதரும் ஆகிய அனைவரும் மறுவற்ற புலோமசையின் புடையிற் சூழ்ந்தனர். சூரரமகளிராய அனைவரும் தொல்லையிற் பேரரசு புரிந்த இந்திரன் மனைவியின் அடிகளைப் பணிந்து, தெய்வயானை யம்மையின் அருகு சென்றிருந்து, "தெய்வயானை அம்மையே! நீ சூரனைத்தடிந்த வெற்றிவேலுடைய முருகப் பெருமானுக்கு மனைவியாவாய். ஆகவே, அனைத்துலகினுக்கும் நீயே இறைவியாவாய்." என்றுரைத்து, அவள் பதயுகம் பணிந்து துதித்திருந்தனர். கயல் போலுங் கண்ணினையுடைய அப்பெண்மணிக்கு இயற்கையழகு முற்றப்பெற்றிருந்தும், பேதமையால் அவ்வரமகளிர் செயற்கை யழகால் திகழ்விக்க எண்ணி, அவளது பின்னல் பொருந்திய கூந்தல் கற்றையை மெல்லிய நகமமைந்த விரல்களால் மெல்ல நீக்கி, மயிர்ச்சாந்தணிந்த நொய்ம்மையாகிய அக்கூந்தலில் புனுகு நெய்யினையும், புதிய சந்தனக் குழம்பினையும்,குற்றமில்லாக் கற்பூரத்தையும், மணமமைந்த ஏலைப்பொருள்களையும் பூசித்தண்ணிய பனிநீரைக்கொண்டு ஆட்டினர். செந்நிறமாகிய பாம்பொன்று கரும்பாம்பினை வாயில் பற்றுந் தன்மையை யொத்துச் செந்துகில் கொடு, கரிய கூந்தலை ஒற்றி, மாந்தளிரை யொத்த அழகும்,மென்மையும், காந்தியும் எய்தி, எந்நிறத்தினுந் தோய்தலடையாது,தெய்வத்தன்மையால் பவள நிறமமைந்த பூந்துகில் ஒன்றினைப்புனைவுபட உடுத்தினர்.பன்னிருபரிதியும் பரங்குன்றினிற் சென்றமையால், அவற்றினை யஞ்சிய இருள், அவ்வம்மையின் கூந்தலை அரணமாக்கொண்டு புகுந்தாலன்ன அகிற் புகையினை அக்கூந்தலுக் கூட்டி, அழகினைத் தருகின்ற உத்தியென்னும் அணியையும், எதிர்முக மஞ்ஞையென்னுந் தலைக்கோலமும், வலம்புரி மகரப்பகுவா யென்னும் அணிகளையும் முறையினால், தேவர்குலஞ் செய்த தவத்தினை யொத்த அப்பெண்ணின் கூந்தலில் நன்மை புரியும் மங்கலங் கூறி, அணியச்செய்தனர். விரிந்து கொத்தமைந்த கோங்குமவரினையும், வெட்சி மாலினையுஞ்செருகி, மணக்கும் மலர்களை இடையிடையே வைத்துத் தெரியல்,

தொடையென்னும் மாலை விசேடங்களையுஞ் செறியும்படி சூட்டினர். சுரித்த குழலினைச் சுழியற் கொண்டையாக முடித்து, முழுமதியினிடத்து முயற்கறை இருப்பதையொத்து, இருகண்ணும் புருவமுமாகிய இவற்றிடையே கருஞ்சாந்தினால் மதிபோன்ற முகத்திற் றிலகந்தீட்டி, நெற்றிச்சுட்டியை யணிவித்து, புனையும் வன்மையினையுடைய அம்பகளிர் குழைகளில் வல்லிகையென்னும் பெயர் வாய்ந்த காதணிகளையும், சூல்கொண்ட சங்கனைய கண்டத்தில் முத்து மாலைகளையும், தாமரை மலரையொக்க கரங்களிலுந், தோள்களிலும் வெள்ளிய வளையினையுந் தொடியையும் அணிவித்தனர் கூட்டிக்குழைத்த சந்தனத்தை மேனியிற் பூசி, தேன்பிலிற்றும் மலர் மாலைகளையும், மணியாரங்களையும் அணியச் செய்தனர். சிற்றிடையின் தளர்ச்சி ஓராத அம்மாதர், படாம் ஒன்றினைத் தோள் சேர அணிந்து, வீணையின் இசையை யொத்த மழலைச் சொல்லினையுடைய அத்தெய்வயானை யம்மையின் திருவடிகளில், பாடக பரிபுர பாத ஜாலங்களாகியவற்றைச் சூடக் கைகளாற் றொழுது, திருமகள் குமாரியாகிய தெய்வயானையம்மையை வணங்கி நின்றனர்

இவ்வாறு தெய்வமாதர்கள் ஒப்பனை செய்தனர். பிறகு இந்திரன், ஆங்கியற்றிய அமைதியை எடுத்தியம்புவாம். மகபதியானவன், பிரமதேவனை நோக்கி, "அண்ணலே! திருமணச்சாலை செய்தாயிற்று. ஆண்டுத் தேவரனைவரும் வந்திண்டினர். ஆதலால், மாலை தங்கிய மணிமுடி யண்ணலுக்குத் திருமணஞ் செய்யுங் காலத்தை நாடி உரைப்பாயாக." என்றனன். திசைமுகன், "உரைப்பதென்? அவ்வறுமுகத் தொருவன் திருமணத்தினுக்கு எப்பகலும் நற்பகலே ஆயினும், நிகரற்ற நல்ல முகூர்த்தம் இப்பொழுதே." என்றனன். அம்மொழி கேட்ட இந்திரன், "இப்பகல் சிறந்ததாயின், அத்தேவதேவனை மணச்சாலைக்கு அழைத்துவரச் சொல்வது நமது கடமையல்லவா?" என்றனன். உடனே திருமால் பிரமர் ஆகிய பெருந்தேவர்கள் எழுந்து, இந்திராதி தேவர்களும் முனிவர்களும் சூழ்ந்து செல்லச் சென்று, சண்முகன் திருக்கோயிலுட் புகுந்து, பன்னிரு திருப்புயங்களையுடைய பரமனைப் பணிந்து கூறினர். அப்பெருமான் நன்றெனமகிழ்ந்து, அரிமா அணையினின்று இழிந்து, பாங்கர் உள்ள வீரரும், பூதரும் போற்ற, மயில்வாகனத் தமர்ந்தருளித் திருமால், பிரமன் முதலிய தேவர்கள் பணிவுடன் மலர்மாரி தூர்த்துப் புடைதனிற்

செல்ல வீதியில் எழுந்தருளினன். அத்திருமணத்திற்கு எழுந்தருளும் வள்ளலுக்கு, அருகினின்று சந்திரன், சூரியன், வாயு, வருணன், நமன் ஆகிய தேவர்கள் முறையே வெண்கொற்றக் குடையை எடுத்தும், கவரி வீசியும், ஆலவட்டம் அசைத்தும், வாளினை ஏந்தியும் வந்தனர். ஆழிப் படையினையுடைய திருமாலின் கருடக்கொடியும், பிரமனது அன்னக்கொடியும் அஞ்சுமாறு, ஊழிநாயகன் கொடியாகிய செந்நிற உச்சிக்கொண்டையினையுடைய சேவல் ஆரவாரித்தது. தேவர் ஆர்த்தனர், வேதம் ஆர்த்தன. விண்ணோர் மாதரார்த்தனர், மாதவர் ஆர்த்தனர், பூதரார்த்தனர், ஐம்பூதமும் ஆர்த்தன, பூமிநாதர் ஆர்த்தனர். ஆகலான், அம்மலை எதிர்த் தொனியாய் ஆர்த்தது. திண்டி, பேரிகை, தண்ணுமை முதலிய வாத்தியங்களைப் பூதர் அண்டம் விள்ளுமாறு இயம்பினர். தலைக்கோலமணிந்த அரம்பை, உருப்பசி, மேனகை, திலோத்தமையாகிய தேவமாதர் மஞ்சத்தினும், விமானத்தினும் நின்று, வாளையொத்த கண்களில் நஞ்சு பில்க, அமுதினையொத்த பாடலைப் பாடி நடம்புரிந்து வந்தனர். இத்தன்மையாகிய மேம்பாட்டினோடும் அழகிய வீதிகளைக் கடந்து, அமரர்கோன் இயற்றிய மணச்சாலையின் முன்னர், உமாபதியின் திருப்புதல்வன் எழுந்தருளினன். அவ்வருள் மூர்த்தியணைதலும், நிறைக்குடத்துத் தோய்த்த தருப்பையின் புனித நீரை அமலன்மீது தூவி, ஆசிகூறி, அருந்தவ முனிவர் எதிர்கொண்டு ஏத்தி நின்றனர். தேவமாதரும், முனிவர்மாதரும் செவ்விய கரங்களில் அட்டமங்கலங்களை ஏந்தி, எம்பெருமான் முன்னின்று துதித்தனர். பஞ்சொடு நெய்யும், கருப்புரமும், புனுகுநெய்யுங் கலந்தோங்கி, ஒளிவிட்டெரிகின்ற தீப தட்டங்களைப் பெருமான் முன்னர் ஏந்திச் சிறப்பித்தனர். அவ்வண்ணம் நிகழுங் காலத்து, இளம் பரிதியையொத்த எழிலமைந்த குமாரக் கடவுள், மஞ்ஞையம் பரியினின்று இறங்கியருளி, திருமண மண்டபத்திற்கேகும் முதல்வாயிலின் அணைதலும், அரம்பையர் சூழத் தூய்மையினையுடைய அயிராணி வணக்கத்துடன் போந்து, தனது பசுவாகிய காமதேனு புதிதாக அப்பொழுது ஈந்த பாலினை மாணிக்க வள்ளத்துத்தாங்கி, வேண்டுவார்க்கு வேண்டுவனவற்றை யளிக்குங் கருணாநிதியின் திருவடிகளில் அன்போடு அபிடேகஞ் செய்து, பூவும் மாலையுமிட்டு, அவ்வடிமலர்களை வணங்கிப் பல்சுடர் கூட்டியுள்ள தீபக் கலத்தினை மும்முறை சுற்றி ஆராதனைசெய்து,

நாணத்தால் ஒலக, மடமின்னருடன் தன் மந்திரத்தேகலும், அவள் அன்பிற்குவந்த குமாரக்கடவுள், அருள்கூர்ந்து 'ஏகி, அழகிய மணிக ளிழைத்துப் பொன்னரி மாலைகள் தூக்கியுள்ள அவ்வனப்பு மிகுந்த மண்டபத்துட் சென்று, இந்திரனால் இடப்பட்டு ஒளி வீசிக்கொண் டிருக்கும் உயர்ந்த பீடத்தி லெழுந்தருளி யிருந்தான்.

அதன்பின்னர் அவனருளால் திருமால், பிரமன் முதலிய தேவர் கள், அவ்வவர் தகுதிக்கு ஏற்ப அமைக்கப்பட்டுள்ள ஆதனங்களில் அமர்ந்தனர். அவ்வமையத்து அவனியில் அரசுபுரிந்து வாழுகின்ற முசுகுந்தன் முதலிய மன்னர்கள் முன்னர்ச் செய்த நற்றவப் பயனால், சண்முகப் பெருமான் சந்நதி யடைந்து, அவனடி மலர்களை, முடிக ளைத் தாழ்த்தி யன்பாற்றீண்டி, எழுந்து துதித்து நிற்றலும், அவ் வவருக் கேற்ற அருளினைப் பாலித்திருந்தான். அச் சுபமுகூர்த்தத்தில், அரியயனாகிய தேவர்களாலும் காணமுடியாத அரும்பானும், ஞானமே திருமேனிகொண்டு எழுந்தருளி யுள்ளவனுமாகிய சிவபெருமான், பூத சேனைகள் சூழ்ந்து நிற்க, உமாதேவியாரோடு விமானத்தில் எழுந் தருளி விண்ணிடையே தோன்றினன். அம்மையும் தன் அத்தனுமா கிய அவ்விருவரின் அருள் வருகையைக் கண்ட செம்மல், அடங் காப் பெருமகிழ்வடைந்து, விம்மிதங்கொண்டு, மேன்மை யன் பினால் விரைந்தெழுந்தனன். அங்கிருந்த திருமால் முதலிய தேவர்களும், எண்ணிறந்த முனிவர்களும் கதுமென வெழுந்து, "எம் பிரான் இங்கு நண்ணினன். யாமும் உய்ந்தனம்." என்று மகிழ்ந்து, கை தொழுது ஏத்தி நின்றனர். முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் உமாதேவியாரோடு விமானத்தி னிழிந்து கணங்கள் சூழச் செம்மணி குயிற்றிய திருமணச் சாலையினுள்ளே எழுந்தருள, அறுமுகப் பெரு மான் அருகிற்சென்று, சிவபெருமான் உமாதேவியாராகிய இருவர் திருவடிகளையுந் தனது திருமுடிகளில் பரிதியுந் தாமரையும் ஒன்றுபட்டாங்குச் சூடியருளினன். அம்மதலையை அவ்விருவருந் தமது திருக்கரங்களால் எடுத்துத் தனித்தனி மார்போடணைத்து, உச்சி மோந்தனர். திருமாலும், பிரமனும், புரந்தரனும், முனிவரும், ஏனைத் தேவரும் ஈண்டி, அகில உலகங்களையும் ஈன்றவர் பதங்களைப் பணிந்து வலம் வந்து, "வினையிற்பட்டு மாழ்கிய அடியேம் புன்மைநீங்கி வாழ்வுற் றனம்." என்று வழுத்தினார்கள். நினைத்தற் கரிதாகியும், அனைத்துயிர்க்

குயிராகியும் அமைந்த சிவபெருமானை மலைமகளோடும் பொன்னினாற் புனைந்த புதிய திருமண மண்டபத்தினுள் குமாரக் கடவுள் அழைத்துச் சென்றனன். அப்பொழுது இறைவன் ஆணையால் விண்ணிருந்து ஓர் மணித்தவிசு ஆங்கிழிந் தமைய, அதனிடை உலகீன்ற அம்மையோடு பராபரனாகிய சிவபெருமான், எழுந்தருளி இருந்து, குமாரமூர்த்தியைப்பார்த்து,"இங்குவருதி" என்று அன்பால்அழைத்துத்தனது திருக்கரங்களால் எடுத்து அணைத்துத் தங்களிடை வைத்துத் தண்ணளி புரிந்தனன். பிரமன் கைகுவித்து நின்று, "முன்னொரு ஞான்று அவுணரைத் தடிந்து வருதியென்று ஆணைதந்து இவ்வறுமுகனை விடுத்தாய். அவ்வண்ணமே சூர்முதலறுத்து, நென்னல் அமரர் சிறையையும் நீக்கி அருள்புரிந்தனன். அப்பெருநன்றியை மதித்து அடியேம் புரியும் கைம்மாறு ஒன்றுமில்லையேனும், உள்ளத்தெழுந்த அன்பினால், வேற்படை முருகற்கு இன்று அமரர்கோன் தன் மகளைக் கொடுத்திட நினைந்தான். அழிவற்ற கருணையோடு ஆருயிரனைத்தையும் நித்தலும் அளித்தருளுகின்ற உமாதேவியும், நீயும் இற்றைப்பொழுதினில் வந்தால் சிற்றடியேங்கள் செய்த செயல் சிறப்படையுமன்றோ?" என்று நான்முகன் இசைத்தனன். சிவபெருமான் நன்றென மகிழ்ந்து, "நாமும் இது காணும்பொருட்டு மணங்கமழ் கூந்தல் மாதுமையோடு வந்தனம். இனி இத்திருமணத்திற்கு உரியவற்றைச் செய்க." என்றனன். நான்முகனும் திருமாலும் மகிழ்வெய்தி, வாசவனைப் பார்த்து, "வேதவிதிப்படி குமாரக் கடவுள் திருமணஞ் செய்துகோடற்கு உன்றன் புதல்வியை அன்பொடு அழைத்து வருதி." என்று கூறினார்கள்

அவ்வமையத்து இந்திரன், இசைவுகொண்டேகி, பைந்தொடியணிந்த பாவையர் வைகும் மந்திரஞ்சென்று, அம்மையைக்கண்டு "அன்பினால் நம்மைக் காத்தருளவந்த நங்கையே வருக." என்று அழைத்தனன். தெய்வயானையம்மை எழுந்து, அரதன நூபுரம் அரற்றா நிற்பவும், மேகலை ஒலியாநிற்பவும் நடந்து, திருமகள், கலைமகள் ஆகிய இருவரும் போற்றவும், மகிழ்ந்து நிற்கும் இந்திரன் அருகிற் சென்றாள். மகபதி அத்தேவகன்னிகையைத் திருமணமண்டபத்தின் எதிரே யழைத்துச் செல்ல, அங்கிருந்ததேவரும், முனிவரும், "அன்னையே வாழி." என்று அடிமலரைப் போற்றினார்கள். அவ்வம்மை அப்பெரிய அவையி

னிடத்திருந்த உமையம்மையையும், சிவபெருமானையும் வணங்கி, வேற் படையினையுடைய வள்ளலாகிய குமாரமூர்த்தியைப் பார்த்துப்பொருக் கென நாணினாள். வணங்கிய அத்தவக் கன்னிகையைச் சிவபெரு மான் அருளால் நோக்கி, அம்பிகையைக் குறித்து நோக்கலும், அவ் வுமையம்மை தனது செவ்விய கரத்தினை நீட்டி, அத்தெய்வக் களிற் றின் முதுகினைத் தடவியருளித் திறல்மைந்த முருகப்பெருமானையும், தெய்வயானை யம்மையையும், பெரியதாய்ப் பொன்னின் மணிகள் குயிற் றிய திருமணப் பீடத்தில் எழுந்தருளி இருக்கச் செய்தனள்.

சிவபெருமான் உமாதேவியாரோடு எழுந்தருளி இருத்தலும், எதிரில் வீற்றிருந்த மணமகனும், மணமகளும் அவ்விருவருடைய பிரதி பிம்பம்போன்று தோன்றினார்கள். அப்பொழுது அனைவரும் தொழுது துதித்தனர். அம்மையும் அத்தனுமாகிய இருவரும் அருள் கூர்ந்தனர். அண்டர்கோன் அவர்கள் கோலத்தினைக் கண்டு புகழ்ந்து, உச்சிமேற் கரங்குவித்துத் தேனுண்ட வண்டினை யொத்து, மகிழ்வி னுள் ஆழ்ந்து நிற்கத் தனது ஆணையால் மஞ்சனம், மலர் முதலிய பொருள்களைக் கொண்டு இந்திராணி வந்தனள். அதுகொண்டு இந் திரன் முறைப்படியே முன்னின்று முருகன் திருவடிகளைப் பூசிக்கத் தொடங்கினான். நாணி ஒல்கிய புலோமசை, உயர்ந்த கரகத்திருந்த புனலால் அபிடேகிக்க, இந்திரன் குமாரக் கடவுளின் திருவடிகளைத் தொட்டு விளக்கிச் சந்தனக் குழம்பினைப் பூசி, மலர் அணிந்து, அகிற் புகை காட்டித் தீபாராதனை செய்து, இவ்வண்ணமாகப் பூசனை இயற்றிய தும், செவ்வேற் பெருமான் திருவடியாட்டிய புனித தீர்த்தத்தினை எடுத்து, அயிராணி ஓர் தூய பாத்திரத்தில் இட்டு வைத்தனள். அச் சுபமுகூர்த்தத்தில் இந்திரன், சண்முகப்பெருமானுடைய திருக்கரத்தில் தெய்வயானை யம்மையை அளித்து, "நினக்கு அடியேன் இவளை யளித் தேன்." என்று கூறிக் கமண்டல நீரைத் தாரையாக வார்த்தனன்.

இந்திரன் வேதவிதிப்படி தாரை வார்த்துத்தர, அதனை ஒருத்தி யின் பொருட்டுத் தனது திருக்கரத்தினால் ஏற்றருளினன் அடியவர்க் களைத்தையுந் தந்தருளும் அமலன்.

செங்கமலத்தயன் சிந்தையால் ஆக்கிக்கொடுத்த மங்கலநாணை அறு முகவள்ளல் தெய்வயானையம்மையின் திருக்கழுத்தினில் அணிவித்து, முடியில் நல்ல மலர்மாலையைச் சூட்டி யருளினான். அப்பொழுது

மாங்கனி, வாழைக்கனி, பலாக்கனி, இனிய கரும்பு, செவ்விய தேன், காமதேனுவின் பால் ஆகியவற்றை அமரர்கோன் ஏந்தி, அறுமுகனை அருத்தினன். அக்காலை மத்தளம், தக்கை, வலம்புரிச்சங்கு முதலிய வாத்தியங்கள் முழங்கின ; நவவீரர்களும், கணநாதர்களும், குமார நாயகனை வணங்கி ஆரவாரம் செய்தனர். தண்டுழாயண்ணல், சரோருக மேலோன், எண்டிசைப் பாலகர், இந்திரன்,ஏனையோர் ஆகிய அனைவரும் ஆங்கவர் கோலத்தினைக்கண்டு கட்புலன் சிறந்ததென்று கூறினர். அப்பகலில் நான்முகன் தீயினிடமாக உபகரணங்களைக் கொணர் வித்து, முருகப்பெருமானைக் கொண்டு இயற்ற, வேண்டுவனவற்றை முறைப்படி அருகிலிருந்து செய்வித்தனன் குமார நாயகன் தெய்வ யானை யம்மையோடு தீயை வலம் வந்து, அவ்வம்மையின் சிறிய திரு வடியை அம்மியாகிய சிலையின்மீது வைத்தருளினன். திருமகள், கலைமகள், மாலினி, காளி ஆகிய பெண்கள் சூழ்ந்து வாழ்த்தெடுப்பக் குமாரநாயகன், அத்தெய்வயானை யம்மையோடு அருந்ததியைப் பார்த் தருளினன். இவ்வாறாக விவாகச் சடங்குகள் அனைத்தும் முடிந்த பின் னர் அம்மையையும் அத்தனையும், தெய்வயானை யம்மையோடு முருகப் பெருமான் வலம் வந்து மும்முறை சேவடிகளை வணங்கினன். திருவடி களில் விழுந்த மக்களை இருவரும் எடுத்தணைத்து, அருள்புரிந்து தம் பக்கத்தில் இருத்தி, "உமக்கெமது முதன்மையைக் கொடுத்தனம்." என் றனர். அங்கிருந்த தேவரனைவரும் மற்றையோரும் வணங்கித் துதித்த னர். பன்னிரு தோளனையும், மணமகளையும் அவையத்தோர் வணங்க லும், அவர்க்கருளி உமாதேவியாரோடு சிவபெருமான் கணங்கள் சூழ மறைந்தருளினன்.

வேதமுதல்வன் உமையம்மையுடன் மறைந்தருளலும், அங்குள்ள தேவர், முனிவர் அனைவரும் காணாமையால் வருந்திச் சண்முகப் பெரு மானைத் தரிசித்தலால் உள் மகிழ்வடைந்தனர். அவ்வுழி உமையம்மை யோடு சிவபெருமான் அமர்ந்த மணியாசனத்தில் தெய்வக்களிற்றினொடு சண்முகப்பெருமான் எழுந்தருளியிருக்க, அதனைக்கண்ட அனைவரும், "அடியேம் பெருந்தவம்." என்றடிபணிந்தனர். முருகப்பெருமான் அவ் வணையினின்றுமிழிந்து, அனைவருஞ்சூழத் தனது கோயிலுக்கு அம்மை யோடு ஏகி, மாலயன் முதலியோர்க்கு முறையின் அருள்புரிந்து அவ்வவர் இடங்களுக்கு ஏகுமாறு பணித்துத் தனது பரிஜனங்களைக் கடைமுறை

போற்றும்படி அருளிச்செய்து, அறுமுகத்தமலன் அகிலமீன்ற அன்னை தன்னொடும் அமளியின் மேவிப் புவனம் உய்ந்திட முயங்கி வைகினன். இந்திரன் காமதேனுவால் தரப்பட்ட பலவிதமாகிய உணவுகளைக் கொண்டு முசுகுந்தன் முதலிய புவியாசர்களை உபசரித்துப் பட்டும், பொன்னுடையும் ஆகிய உடைகளும், ஆரம், ஆபரணம், அரதளம் முதலியவைகளையுங் குறைவறக் கொடுத்து அனைவரையும் விடை கொடுத்தனுப்பினன் மன்னர் யாவரும் அகன்றதற்பின் மகவான், தன்னில்லறக் கிழத்தியோடு இன்னல் தீர்ந்த போகமுண்டிருந்தனன். இன்னதன்மையில் பல பகல் கழிந்தன.

## விண்குடியேற்றுப் படலம்

அன்னதாகிய பலபகல் அகலலும், அணங்கினோடு உறைந்த அறுமாமுகன், இந்திரன் குறையை நீக்க விரும்பித் தன் கோயிலின் முன்கடையில் எய்தி நின்றருளினன். அம்மையோடு வந்த அப்பெரு மானை வீரர்களும், பாரிடர்களும் வணங்கித் துதித்து ஆரவாரித்தனர். அவ்வோசையைக் கேட்ட அமரர் அனைவரும் அறுமுகன் எழுந்தருளி னன் போலுமென்று எழுந்து, விரைவில் வந்து நெருங்கி முறை முறை வணங்கி நின்றனர். அவர்களுள் வாயுதேவனைப் பார்த்து, குமாரக் கடவுள், "நமது தேரினைத் தருதி" என்றருளலும், அக்கால் மனத் தினும் விரைந்து செல்லுந் தேரினைக் கொண்டுய்ப்ப, அச்செம் பொற்றேர்மிசை வாசவன் மகளொடு சண்முகப் பெருமான், வைய மனைத்தினுக்கும் அருள்புரியும் ஈசனும் உமையும் போன்று இருந் தருளினன்.

தேவர்கள் அன்பு மேலீட்டால் பூமாரி பொழிந்தனர். பூதவீரர் களும் போர்ப்படை மன்னரும், முனிவர் மைந்தரும் அறுமுகற்கு ஆம் பணியியற்றி அருகிற் சூழ்ந்தனர். விண்ணவர் பணியும் மணி முடிக் கருகில் வேலவன் அருளால் முன்னின்ற தம் மஞ்ஞைசெய்த தவம் சிறந்ததன்றோ? நாரணன் நான்முகனாதியரை நம்பி நோக்கி, "நீவிர் நும் ஊர்திகளின்மீது எம்முடன் விண்ணுறுக வருதிர்" என்றலும், நாரண னாகிய உலகளிக்கும் ஒருவன் கருடன்மீதும், பிரமன் அன்னத்தின் மேலும், மகபதி அயிராவதத்தின் மிசையும், ஏனையோர் தத்தமக் கமைந்த வாகனங்களிலும் விண்ணிற்றுவன்றி, அறுமுகன் தேரினுக் கணியராயினர். வள்ளல் இவ்வாறாக வானுலகம் செல்லுகின்றானெனப்

பலர் கூறலும், கூளிகளின் வெள்ளம் விரைந்தெழுந்தன. குடமுழா, பணை, தண்ணுமை முதலிய வாத்தியங்களை இடிபோல இயம்பினர். அப்பொழுது முருகவேள் அப்பரங்குன்றினை யகன்று கனைத்தெழுந்து, மகபதியாளும் வானுலகை நொடிப்பொழுதிற் கடந்து, தன் மாதுலனுகிய அமரர்க்கிறைவன் முன்னர் வாழ்ந்திருந்த அமராபதி நகரினை எய்தினன்.

அந்நகரம் பானுகோபனால் அழிக்கப்பட்டுப் பொடிபட்டிருப்பதையும், அந்நகர் வளம் எய்த எண்ணிய இந்திரன் கருத்தையும் நோக்கிய குகப்பெருமான், அருகினின்ற சிற்பநூற் றெளிவுடைய தேவதச்சனை நோக்கி, "துன்பமொழிந்த தேவராஜன் இன்புற்று இனிது வைகுமாறு, முன்னையினும் வனப்பமைய இந்நகரை நொடிப்பொழுதில் ஆக்குவாய்." என்றருளலும்,நன்றென்று வணங்கிப் பெரிதுவந்து சென்று,அவ்வமராபதியினிடத்து நூன் முறைப்படி விண்ணோங்கிய மாமதிலமைத்து, அதன் நான்கு திக்கிலும், நான்கு வாயிலை வகுத்து, அதனிடை ஏழ் நிலைகளையுடைய கோபுரங்களை யமைத்து, அம்மதிலுக்குள்ளிட்ட இடத்தில், சக்கிரவாளகிரியாற் சூழப்பட்ட உலகம்போலத் திகழுமாறு, எண்ணிறந்தனவாகிய வீதிகளை மாளிகைகளோடு அழகுபெற அமைத்துப் பூமேலுறையும் பிரமனும் நாணுமாறு,அந்நகரினிடை அரசமாளிகையொன்றமைத்து, அமரர்கோன் விரும்பி ஆடத்தக்கக் காவிகள் மல்கிய கயங்களும், வாவியும் பொய்கையும் வளம்பட இயற்றி, செய்குன்றங்களையும் வரம்பிலவாக ஆக்கி, மாடமாளிகை மண்டபம் ஆகியவற்றில் அரியணைகளையும், அகன்ற இடங்களில் தேவகோட்டங்களையும் அமைத்தனன். பின்னர் சிறப்பமைந்த இந்திரன் இருக்குங் கோயிலும், அறுமாமுகப்பிரான் அமர்ந்தருள் கோட்டமும், திருமால் பிரமருக்குயர்ந்த மந்திரங்களும், வேறுளார்க்கு இருக்கைகளும் அமைத்துத் திருமாலின் பதியாகிய வைகுந்தத்தினும், மலரயன் பதியாகிய மனோவதியினும் வனப்பமைய, அமராவதி என்னும் நகரினைச் சிற்பநூல் முறைப்படி இயற்றி முடித்தான்.

பொன்னினுக்குப் புகலிடமாகும் வான் மன்னனுக் கமைத்த அவ்வள நகரின் தன்மையை, என்னால் இயம்ப இயலுமோ? கலைமின்னினுக்கும் இயம்புதல் அரிதே. இவ்வளப்ப மனைத்தையும் இமைப்பொழுதில்நினைத்துச் செய்த நிலைமையை நோக்கித் திருமால் பிர

மன் சிந்தையின் மகிழ்வெய்தினர்கள். பிரமன் தேவகம்மியனை நோக்கி, "நகர் வளம்பட அமைத்தற்கு நின்னை நேர்பவர் ஒருவருமிலர்." என்றலும், இந்திரன் மகிழ்ந்து அக்கம்மியனை உவகையால் தழுவிக்கொண்டனன். அப்புனைவன் அறுமுகப்பண்ணவனிடத்துச்சென்று அடிபணிந்து நிற்றலும், அவற்கருளிய பெருமான் துணைவர் சூழ எழுந்தருளினன். அவ்வமையம் பொன்னின் ஆய விமானத்தேறி அரம்பையர்சூழ இருந்த அயிராணி இந்திரன் மாளிகையை அடைந்தாள். அறுமுகப்பெருமான், ஆந்நகருக்கிடை அமைத்த கோயிலின் முன்னர் எய்தியதும், தேவர்கள்தத்தம் ஊர்திகளினின்றுஇழிந்தார்கள். சண்முகப்பெருமான், மயிலின் சாயலைப்போலுஞ் சாயலினையுடைய தெய்வயானையம்மையோடு இரதத்தினின்று இறங்கி, பொன்னினும் மணியினும் புனைந்த பெருங் கோயிலிற் புகுந்து அரியாசனத்து அமர்ந்தருளினன்.

பிறகு திருமால் பிரமன் முதலிய தேவர்களைக் கருணையால் நோக்கி "இந்நகரின் இருந்தரசாள இமையவர் இறைக்கு மணி முடி விரைவிற் புனையுங்கள்." என்றலும், நன்றென இசைத்து, அதற்கு வேண்டும் பொருள்களாகிய அட்டமங்கலங்கள், மங்கலமமைந்த கவரி, ஒள்ளியவாள், மணிமுடி, வெண்கொற்றக்குடை ஆகிய இவையும், பிறவும் கொண்டு சார்ந்து, கங்கை முதலிய தீர்த்தங்களால் இந்திரனை அபிடேகஞ்செய்து ஒள்ளிய ஆடைகள், ஆபரணங்கள், சந்தனம், மலர்மாலை ஆகியவற்றைக்கொண்டு புனைந்து, சிங்கந்தாங்கிய பெரிய ஆதனத்தன் ஏற்றி இருக்கும்படி செய்து முறைமைப்படி மகுடஞ் சூட்டினர்கள். மணிமுடிதரித்து அரியணையமர்ந்த அமரர்கோன் அடிகளைத் தேவர் முடிக்கணிந்து வணங்கவும், முனிவர்கள் ஆசிகூறவும், அரம்பையர் நடிக்கவும், வித்தியாதரர் யாழிசை எடுக்கவும், அச்சுதன் மாவென்னும் சபை பொலிவுபெற்றிருந்தது. இந்திரன் அப்பொழுது எழுந்து சென்று,சிவகுமார திருவடிகள் வணங்கி ஏத்தி நின்று,"வளப்பம் நிறைந்த சுவர்க்கபூமியை முன்போலாக்கி அளித்தனை! அடியேன் உய்ந்தனன். இதனினும் பெறும் ஊதியம் உண்டோ?"என்றலும், அண்ணல் அருள்புரிந்து, அமரர்தங்களை அவ்வவர் இடஞ் செல்லப் பணித்துத் தோகையுந்தானும் தன் பெருங் கோயிலில் எழுந்தருளினன்.

குறிலும் நெடிலுமாகிய அளவினையுடைய பூதர்களும், வீரர்களும் வாயில் காத்திருக்க முருகவேள் திமனியகத்துப் பல்வேறு ஆடல்

புரிந்து வைகினன். அறுமுகன் வைகுதலும், அமரர் தத்தமக்கமைந்த மாளிகைகளில் இன்புற்றிருக்கவும், இந்திரன் தன் பெரிய யோகத்திலாழ்ந்து அரசுபுரிந்தனன். அந்நகரவாசிகளாகிய தேவர்கள், அவ்விந்திரலோகத்துப் பொருளேயன்றி அனைத்து உலகத்துப் பொருளும் பெற்றுலொத்து, மனமகிழ்ந்து இருந்தனர்.

## கந்தவெற்புறு படலம்

இவ்வண்ணம் சில வைகல் செல்லா நிற்ப, ஓர் நாள் முருகவேள் கந்தவெற்படைவது கருதித் தெய்வயானை யம்மையோடு கோயிலினின்றும் புறம் போதர, அதனை யறிந்த மால் முதலிய தேவர்கள் சூழ்ந்து வணங்கினார்கள். வெற்றிவேலினையுடைய பெருமான், மால் முதலிய தேவர்கள் விரைவில் தத்தம் பதிகளை எய்துமாறு விடையளித்தருளி, அவ்வமராபதியில் இருந்து வானநாட்டையாள இந்திரனை நிறுத்தித் திருந்திய இழையினை யணிந்த தெய்வயானை யம்மையோடு இரதத்திலேறி யருளலும், அப்பெருமான் ஆணையால் வீரபாகுதேவன் முளவுகோல்பற்றி இரதத்தை நடாத்த,வீரரும் பூதருஞ்சூழச்சென்று, அனைத்துயிர்க் குயிராகிய சிவபரஞ்சுடர் வைகும் திருக்கயிலையைச் சேர்ந்தான். அடைந்த குமாரமூர்த்தி விரைந்து சென்று பரமன் சன்னதிஅடைந்து, உமையம்மையையும் சிவபிரானையும் வலம் வந்து வணங்கி, அவர்களிடத்து அருளொடு விடையும் பெற்று மீண்டு ஏகி, கந்தகிரியெய்தித் தன் ஆலயத்தில் புகுந்தருளினன். ஆலயம் புகுந்த அமலமூர்த்தி, திறலமைந்த வயவர் கடைதோறும் போற்றியிருப்ப, தெய்வயானை யம்மையோடு மேவி, மிக உயர்ந்த இரத்தினபீடத்தில் வீற்றிருந்தருளினன்.

"துய்யதோர் மறைகளாலுந் துதித்திடற் கரிய செவ்வேள்
செய்யபே ரடிகள் வாழ்க சேவலும் மயிலும் வாழ்க
வெய்யசூர் மார்பு கீண்ட வேற்படை வாழ்க வன்னான்
பொய்யில்சீ ரடியார்வாழ்க வாழ்கவிப் புவன மெல்லாம்."

## இந்திரபுரி படலம்

பூமி மெச்சுங் கந்தகிரியில் தேசுருவாகிய முருகவேள் சேர்ந்த செய்கையை இதுகாறும் பேசினோம். இனிப் பொன்னகரிருந்த மகபதி செய்கையும், மற்றவும் கூறுவாம்:—அவுணர் வேரறுத்த ஆண்டவன், அருளினால் அமரர்கள் போற்ற அரசுவைகிய இந்திரன், பகைவர் இட்ட குற்றேவல் செய்ததும், அளவற்ற உகங்கள் மறைந்தொதுங்கி

இருந்ததும், அவ்வொளியின் கண் உற்ற தீமையும், பெற்ற துன்பமும், பிறவுமாயவற்றை எண்ணி, இந்திராணியோடு சேர்ந்து வாழும் வாழ்க்கையை மறுத்துச் செல்வத்தை வெறுத்து அரசுரிமையையுஞ் செறுத்து, தவத்தினையியற்றி வீடடைகுவன் என்று துறத்தலை எண்ணினன். இந்திரன் எண்ணத்தை யறிந்த தனது மந்திரியும் புரோகிதனுமாகியுள்ள'. வியாழபகவான் தனது மனத்தினில் இன்னதொரு வஞ்சனையை எண்ணி, இந்திரன் பக்கல் சென்று வைகி, அவனை நோக்கி, "வச்சிரபாணியே! கேட்பாயாக. இந்திரப் பதம் நில்க்கவேண்டும் என்றெண்ணிய வியாழன் அதற்கு வேண்டியதொரு பொய்யை மொழிந்தனன். ஆனவாற்றால் அஃது பொய்யன்மை யறிக. அன்பற்ற சூரபன்மனாற் பட்ட துன்பத்தினை எண்ணிச் சுவர்க்கலோகத்தரசையும், இன்பமிக்க வாழ்வையும் வெறுத்தனையாகிப் பின்பு சென்று நோற்றுப் பெறும் பயன் யாது கொல்? மொழிகுதி. சிந்தையிற் பெருந்துயர் எய்தியவரன்றோ திருவும் அந்தமில் வாழ்க்கையும் அடைகுவர்? இது நின்னளவன்று. மூன்றுலகங்களிலும் வழங்கிய இயற்கை விடாது தவ முயன்றவர்களில், உலகத்துள்ள தேவர்களில், யாதலத்தில் மூவரென்றிசைக்கப் படுபவரில், எவர் மங்கையரை விழையாது அவர் தம் போகத்தை நீத்தவர்? உடலை வருத்திப் புலனைந்தையும் அவித்து, மோக முதலிய குற்றமாறனையும் போக்கி, யோகஞ் செய்திருக்கின்றோர் அடையும் பெரிய பயனை உரைக்குமிடத்துப் போகமன்றி வேறில்லைகாண். காணப்படுகின்ற புலனைந்தும் ஒடுங்குமாம். அந்தக் கரணங்களும் இல்லையாம். கைக்கொண்ட செயல்களும் ஒழியுமாம், யாக்கையும் போமாம், அவ்விடத்து ஓர் பேரின்பம் உண்டென்பர் அதனை யறிந்தவர் யாவர்? ஈண்டுக் கண்டதே மெய்யென்பர் உலகுளோர் யாவரும். பொய்ம்மை தங்கிய கானல் மெய்யான நீரெனக் கருதிக் கையகத்திருந்த அமிழ்தினை விடாகத்து உகுத்தாற் போன்று, மெய்ம்மை போலுஞ் சிலர் கூறும் வீடுபேற்றை விரும்பி இம்மைப் பயனை இழக்கின்றனை. நினது எண்ணம் நன்றாயிருக்கின்றது. மங்கைமாரிடத்துள்ள இன்பமே இன்பம். அம்மங்கையரோடு கூடி ஈண்டு வாழ்வுறும் வாழ்க்கையே முதன்மையாகிய வாழ்க்கை. அவ்வனிதயரைப் பெறுஞ் செல்வமே செல்வம். அவர் தம்மை முயங்கா வறுமையே கொடிய வறுமை. குற்றமற்ற மதிபோலும் முகத்தினையுடைய மகளிர் இன்பத்தினைச் சிறிய 'இன்பமென்றுரைப்பர் அறி

விலார். அதனது சிறப்பை அறிகுவாராயின், அன்னதே பேரின்பமாகும். மன்னனே அதைக் கேட்பாயாயின், செவ்வனே மொழிகுவன்.'' என்று குரவன் கூறினன். குலிச பாணியாகிய இந்திரன் நகைத்து, ஓமகுண் டத்திற் பெய்யும் இழுதென உள்ளுடைந்து, காமமிக்க மனத்தினனாய், "உடலிற் பொருந்திய குற்றத்தினைப் போக்கி நல்ல விளக்கத் தைத் தரும்படியாகிய மருந்தினை யொத்த குரு மூர்த்தியே! மடந்தை யர் சிறப்பையும், திருத்தமாகிய காம இன்பத்தினையும் நீ எனக்கு இன்னாள்வரை உரையாதிருந்த காரணமென் சொல்?'', என்று வெற்றுடலிடத்து விழித்தொகை பெற்ற சிற்றறிவினன் செப்பினன். மையலுற்றிவன் மதிமயங்கினனென்று, கற்றுணர்ந்த மந்திரி, "மன்னனே! பெண்களின் உயர்வினை விளக்கும் மதனாகமம் கூறு கின்ற உண்மையை ஆழ்ந்துணர்கின்ற காதலில்லா வழிக் கூறுதல் செய்யார். ஆகலான், நினக்கு இந்நாள்காறும் உரைத் தேனில்லை. மதியினைக்குடையாக உடைய மன்மதனுடைய மாட்சிமை யமைந்த நூலெனும் கடலை எனது நெடிய புத்தியால் உணர்ந்தேன். அதனைக் கேட்பாயாக. சமயபேதங்கள் அளவற்றன வென்று கூறி னார்கள். அவற்றிற் கேற்ப நூல்களையும் உரைத்தனர். மெய்ம்மைச் சம யங்கள் ஆறென ஓதினர். மேற் கூறிய தொகையுள் அமிழ்தத்திற்குச் சமானமாக அனுபவிக்குந் தன்மையினையுடையார்க்கு மிக்க இன்பத் தினைக் கொடுப்பதும், இம்மையின் முத்தியளிப்பதுமாகிய உலோகாயத மென்னும் ஒரு சமயம் உண்டு. அச்சமயநெறி நின்று வீட்டினை யடைந்து இன்புறுபவராவார், மெச்சும் உறுப்பிலக்கணம் வாய்ந்த ஆட வர். அவ்வீட்டின்பத்தினைத் தருபவர் நஞ்சொத்த கருங்கண்ணியர். அம்மாதர் தன்மையும், அன்னோரை அடையுந் தன்மையும், அம்மக ளிடை இன்பநுகரும் ஆடவர் தன்மையும் ஆகிய அனைத்தையும் மனு கமம், உண்மையின் உரையா நிற்குமென்று, அம்மதன நூலின் முறை யனைத்தையும் முன்னர்த் தொகுத்துரைத்து, அதன் பின்னர் வகைப் படுத்தியும், முடிவில் விரித்தும் உரைத்த வியாழ பகவான் செம்மொழி யைக் கேட்ட இந்திரன், அத்துறை ஓர்ந்து பெருமயலெய்தி, இன் பந்துய்க்க அயிராணியை விழைந்து, மனங்கலங்கிக் குரவனை வணங்கி, "எந்தையே! நீ சொற்ற பான்மையைத் துணிவாக மனத்திடைக்கொண் டேன். மற்றொரு பொருளும் விரும்பேன். வரம்பற்ற இன்பத்தினைப் பெற்றேன்.'' என்று பெருமகிழ்ச்சியோடும் போயினன்.

கடல் போலும் பரந்த காமநூலினை விரித்துரைத்து, வியாழபக வான் உவப்புடன் செல்லா நிற்ப, மாலை தாங்கிய வேந்தன், விண்ணுலக அரசினை மைந்தனாகிய ஜயந்தனிடம் வைத்துச் சென்று, தண்ணிய முகத்தினையுடைய அயிராணியைக் கூடி, மறுமையின்பமெய்தினும் கைக்கும் கருத்தினையுடையவனாய் மதன நூலின் துறையினை நாடிக் காம இன்பத்தையே நுகர்ந்திருந்தான் அன்னதாகிய நாட்களில் ஓர் நாள் அரசுரிமையைத் தாங்கி விண்ணுலகத்தைக் காக்கும் வேந்தன் புதல்வன் தன்னயற் சூழ்ந்துள்ள முனிவருந் தேவருமாகிய குழுவி னுள் எதிர்முக மிருந்த குரவனாகிய வியாழ பகவானை நோக்கி, "எந் தையே! மலரயன் ஆதியாய விண்ணவரும், அந்தமற்ற முனிவரும் ஆற்றலமைந்த சூரனால் வெந்துயருழந்து, மேன்மையுமிழந்து, தாழ வந்த காரண மென்கொலோ?" என்ன, அந்தணன், 'விண்ணவர்க்கும், மேதகு முனிவர்க்கும், நண்ணலனாகிய சூரனால் வந்த தீமை யெல்லாம் புரத்தினையட்டபுங்கவனின்றித் தக்கன் மகத்தினை யாற்ற, அம்மகத்திற் சென்ற பாவப் பெருக்கால் விளைந்தன.'' என்றான். ஜயந்தன், "ஏது இலைதாரின் அப்புல்லிய தொழிலினையுடைய தக்கன் வாழ்க்கையை யும், புராரி இன்றிச் செய்த வேள்வியையும், அவ்வேள்வியிற் பட்ட செய்கைகளையும் விடாது உரைத்தருளவேண்டும்." என்றனன். வியாழ பகவான் மனஞ் செருக்கடைந்து, "மைந்தனே கேட்பாயாக" என்று நயமொழிகளால் அத்தக்கன் கதையை உரைக்கத் தொடங்கினான்.

தேவகாண்டம் முற்றிற்று.

---

## ஆறாவது

## தக்ஷகாண்டம்

### உபதேசப் படலம்

உலகங்களுக்குள் மேலதாகி ஓங்கிய பேரொளியுள்ளதாய், வானின் மேல் தலைமையாய்த் தங்கிய சத்திய உலகத்தில் அறிவினை யறிந்த முனிவரும், தேவரும், புதல்வருஞ் சூழ்ந்து புடையிற் போற்றியிருக்க மலர் மிசைக்கடவுள் தனது ஆஸ்தான மணிமண்டபத்தில் மேதக வீற்றிருந்தான். அப்பொழுது முன்னர்ப் படைப்புத் தொழிலைச் செய்தல் வேண்டி, பெற்றபுதல்வர் பதின்மருள்ளுஞ் சிறந்த அறிவினையுடைய தக்கனென்பவன், அறிய தவத்தின் வழியால் "தேவருள் தலைவனும் ஞானத்தின் முதன்மை பெற்றவனும், முத்தேவரின் மேற்பட்டவனும், அழியாதவனும், உயிர்தொறு முயிராயுறைபவனும் ஆகிய ஒப்பற்றவனை யானுணருமாறு எந்தையே உரைத்தருளுவாய்." என்று தன் பிதாவை வினவினன்.

இவ்வினைவைக் கேட்ட பிரமன் புதல்வனை நோக்கி, "நன்று கேடபாயாக. அன்று நாரணனும், யானும்போர்புரிகையில், தீப்பிழம்பாயெழுந்து இடையே நின்று, எம்மை யுணர்த்திய சிவபெருமானே யாவர்க்குந் தலைவன். நீ யுணர்வாயாக." என்றனன். தக்கன், "இருதொழில் இயற்றும் நீங்கள் ஏதிலராகப் பின்னர் ஒரு தொழிலியற்றும் ஈசன் உங்களுக்குத் தலைவனாக வந்த காரண மென்னை?" என்று அகந்தைகொண்ட அம்மகன் கேட்கவும், சிவபெருமான் திறங்களை அவனருளால் உணர்ந்த பிரமன், சத்தரூபமாகிய வேதங்களைத் துகளறக்கற்று அவற்றின் பொருளை நன்குணர்ந்த அவன்திறம் நன்றாயிருந்தது என்று நகைத்து, "அழித்தற்றொழில் ஒன்றுடையானைத் தலைவனென்று எவ்வாறுரைப்ப தென்றனை எமது படைப்பளிப்புக்களை எம்மோடும் இறுதியில் அழிப்பவன் அவனாயின், ஆதியில் அனைத்தையும் படைத்தவன் அவனே யன்றோ? அவ்விறுதிக்காலத்து அவன் ஒருவனாய் நின்று அனைத்துயிரையும், முன்னர் வந்த முறையே ஒடுக்கி, நிலைத்துப் பின்னரும் உயிர்கட்கு அம்மையப்பர்களாக இருந்து வினைக்கேற்ற உடல்

களை உயிர்களுக்களிக்கும் முக்கண் எந்தையின் செய்கையை, இத் தகையதென உரைக்கவும் இயலுமோ?''

"திருமாலையும் என்னையும் திண்ணிய புயங்களினின்றும் நல்கிக் காத்தல் படைத்தல்களாகிய தொழில்களைக் கொடுத்து அவனே எம் முள்ளுமிருந்து நடத்துகின்றான். அவனன்றி எம்மால் ஆவதொன்று மில்லை; எம்மில் ஒருவனைத்து இறுதியைப் புரிய ஒருவனாகியும் பொருந்துவன்; உலகுயிர்களாகிய எல்லாப் பொருள்களின் கண்ணும் நீக்கமற நிறைந்திருப்பன்; வேதம் முதலிய கலைகளனைத்தையும் முன்னு ளில் எங்களுக்கு உரைத்தவன்; மயங்கிய காலத்து அருளால் வந்து தெருட்டுவன்; இதனை நீ அவ்வேதத்துள்ளும் அறியலாம்; அனைவரையும் ஒன்றாகக் கருதுகின்றனை; நீ பெரிதும் பேதையாயினை." என்று பிரமன் வலித்துக் கூறினான்.

தக்கன், "சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளிய வேதம், பூதத் திறத்தையும், உயிர்களோடு யாவரையும் பிரமமென்றுரைப்பதென்னை? அதனால், என் மனம் கவற்சி யுறுகிறது. ஆதலின், கடிதின் உரைப் பாய்." என்றனன். அதற்குப் பிரமன், "அவ்வேதங்களுட் கூறும் உறுதியைக் கேள். அழிவற்ற சிவபரஞ்சுடரைக் குறித்துரைப்பது அனைத்தும் உண்மையே; ஏனைய அனைத்தும் உபசார மொழியெனக் கொள். பிரமன் முதலாகி நின்ற யாவரையும் நீக்கி நின்ற சிவபெரு மானே விரும்பினார்க்கு முத்தியளிப்பனென்று அவ்வேதம் கூறு மாயின், எவரோ தலைமைத் தேவராவர்? அச்சிவபிரானைச் சுட்டி யுணர்த்தும் உண்மை மொழிகளை யான் உகம் பல இருந்து மொழியி னும், அவை முற்றுறா. யாங்கள் இப்படைப்பளிப்பாகிய அரசினைச் செலுத்த, சிவபரஞ் சுடரின் திருவடிகளை அருச்சித்துத் துதித்த ஆலயம் பலவற்றையுங் கண்டு வேதத்தில் கூறியவற்றைத் தெரிந்து கொள்ளுவாய். அவனருள் பெறாது முத்தியடைந்தாரில்லை; அவனரு ளின்றி வாழும் அமரருமில்லை; மற்றையோருமில்லை; அவனருள் எய் தினார் எய்தாப் பொருளொன்றில்லை; இதனை ஆணையிட்டு உரைக்கின் றேன்; அவனினுந் தலைவனில்லை. அவனையே நீ அடைவையாக." என் றனன்.

## தக்கன் தவஞ்செய் படலம்

படைப்புத் தொழிலினையுடைய சரோருகத்தவன் புதல்வனுக்கு இவ்வாறு வகுத்துரைத்ததும், அம்முக்கண்ணன் பெருமை அனைத்தை

யுங் கேட்டுணர்ந்த தக்கன், வீட்டினை யடையுங் கருத்தினைக் கொள்ளாது, மலரயன் முதலினோரினும் மேம்பாடுடையனுய், எல்லையற்ற பெருவளத்தையும், அதிகாரத்தையும் எய்துவன் என மனத்தில் எண்ணித் துணிந்து, துன்பம் பயக்கும் தீவினையிற் பட்டுழலும் ஊழிற் பட்ட அவன், "நீ கூறிய சிவபெருமானை முதல்வனென்று அறிந்தேன். அவனிடத்து ஒப்பற்ற வரங்களைப் பெற நினைந்தேன் ஆகலான், யான் அவனைக் குறித்துத் தவமியற்றற்கு ஏகுவன். அதற்காமிடத்தினை இயம்புவாய்." என்றனன். பிரமன், "முன்னுளில் மனத்தாலாக்கியுள்ள அம்மாதை மடுவிற் கேகுவாய்." என்றனன். தக்கன் அத்தண்ணிய மடுவின் ஓர் சார் எய்தி இருந்து, வீசுங்காற்று, மழை, வெயில், பனி முதலியன தன் மீதுபட அவற்ருல் மெலிவடைந்து, பாசத்தை நீக்கும் தவத்தினர் போன்று அருந்தவத்தை ஆற்றினன்.

அவன் பிராணவாயுவை நேராக ஓட்டி, மூலக் கனலை எழுப்பி, போகங்களை வெறுத்துத் தன்னுருவிற் பொருந்துமாறு, அன்பினுல் மஞ்சனமாட்டி, மலர்களைச் சூட்டி, மனோபூசை இயற்றி, தூய்மை யாகிய தன்னுள்ளம் ஒருமைப்பட இத்திறத்தினுல் எம்பிரார்க்கு அருச்சனை செய்து, உள்ளத்திடை அவாது திருநாமத்தை விதிமுறை சொல்லி, ஆயிரமாண்டு அரிய தவத்தினை இழைத்தான். அத்தக்கன் தவத்திற்குப் பயனுய் நல்ல வளங்களைத் தரும்பொருட்டு உமையம்மை யோடு வெள்ளேற்றின்மிசை அனைத்துயிர்க்கும் உயிராகிய அமலன் தோன்றியருளினுன். அஃதுணர்ந்த தக்கன், சிவபரஞ்சுடர் அருளவந் தனன் என்றெழுந்து, எண்ணமுற்றியது என்னுங் களிப்புடன், கீழே விழுந்து பணிந்து ஏத்தி நின்றனன். சிவபெருமான், "உனது வழி பாட்டினை உவந்தாம். நீ பெற விரும்புவது யாது?" என்றனன். தக்கன் பிறவியைமாற்ற நினையாதவனுய், பழைய வினைவழியே புத்தியும் செல்லுதலால் பெருமானைநோக்கி, "பரந்த பூமியும், வித்தியாதரர், கந்தருவர் முதலியோர் பொருந்திய விண்ணுலகும், அரி பிரமர்களின் உலகங்களும், திசையெட்டும் ஆகிய இவ்விடங்களில் என்னுணை தடையின்றிச் செல்லுமாறு அருள் புரிவாயாக. அன்றியும் உன்னை வணங்குவோர் யாவரும் என்னை வணங்கவும், பின்னர் யான் நின்னையன்றி வேறு பாலரையும் மனத்தாலும் வந்திக்காத தன்மையும் ஈவாய். தேவர்களும், அசுரர்களும் யான் ஏவியவற்றைச் செய்யவும், எனக்கு நல்ல புதல்வர்

களும், பெண்களும் மாய்தலின்றி மல்குமாறு நல்குவாய். அனைத்துயி ரையும் ஈன்ற அம்மையாகிய பராபரை யான் பெற்ற மகளாகவும், நீ மறையவனுகி வந்து காதலால் கடிமண முடிக்கவும் நல்குதி." என்று வணங்கிக் கேட்டனன். சிவபெருமான், "அவ்வாறே ஆகுக. அனைத்தை யும் நல்கினம். நன்னெறியில் நிற்றியேல் இச்சீர் நிற்கும்." என்று உரைத்து மறைந்தருளினன்.

தக்கன் யாவராலுங் கூறுதற்கரிய பெறுங்களிப் படைந்து தன் பிதாவை நினைக்க, அவன் சிவபெருமான் அருளிய அனைத்தையும் உணர்ந்து, பின்னர் அவற்றாலெய்தும் அனைத்தையும் உணர்ந்து, தன் புதல்வன் பண்ணுளியற்றிய தவம் நன்றாயிற்று என்று நகைத்து, "அவன் வீடடைதற்குரிய மார்க்கத்தினைக் கருதிச் சிவபெரு மான் தலைமையை எடுத்துரைத்தேன். இவ்வாறு தவத்தைப் பாழாக் கினேன்." என்று இரங்கி அறியாமையைக் கொண்ட தக்கனிடம் சென்று ஆசிகூறி நின்றான். அவனது வருகையைக் கண்ட தக்கன் "அப்பனே! இவ்விடத்துக் கடிதின் ஓர் நகரத்தை ஆக்குவாய்." என் றியம்பினன்.

பிரமன், அவன் கூறியபடியே அவன் கருத்தினை உணர்ந்து, தன் நகரத்திற்கு உவமையாம்படி அழகிய நகரமொன்றனை ஆக்கி, அந்நக ரினுக்குத் தக்கமாபுரி என்னும் பெயரினை இட்டு நல்கினன். புவியின் கண் அமைத்த அந்நகரிடை சென்று தனக்கென அமைத்த பெருங் கோயிலில் வைகி, முனிவர்களும், தேவர்களும் வணங்கித் துதிக்க, அசுரர்கள் அடங்கி நடுங்க, அரிகள் தாங்குந் தவிசின்மிசை இருந்து, உண்மை யுணராத தக்கன் தன்னுணை உலகனைத்தும் செல்லுமாறு அரசு புரிந்தனன். அவனுக்கு தேவியாயினவள், பிரமன் காலடியிற் பிறந்தவளும், சிறுத்த இடையும் அருந்ததியின் கற்பும் அமையப் பெற்றவளாய், வேதவல்லி என்னும் பெயர் பெற்று அனைத்துலகிற் கும் முதல்வியாயினள். அந்நல்லாளோடு பொருந்தித் தக்கனென்ப வன், பணிக்கின்ற மணிகளீன்றதொத்து, ஆயிரம் புதல்வர்களைப் பெற் றான். அப்புதல்வர்கள் தகுதியாக வளர்தலும், அவர்க்குச் செய்யவேண் டிய பூணூல் அணியுஞ் சடங்கினை முறைப்படி முடித்து, வேதங்களை யும் செவ்வனே கற்கும்படி செய்து, அதன்பின் அவர்களைப் பார்த்து, "நீங்கள் மானத தடாகத்திற்குச் சென்று, சிவபெருமானைக் குறித்து

அருந்தவமாற்றிப் படைப்புத் தொழிலைப் பெற்று வாருங்கள்." என்ற
னன். அப்புதல்வர்கள் அவ்வாறே சென்று மானதத் தடாகத்திடை
மூழ்கிக் கடுந்தவம் பன்னாள் புரிந்தனர்.

அவர்கள் தவம் புரிதலை யுணர்ந்த நாரதன், ஓர் நாள் அத்தடத்
திற் சென்று அவர்களை அன்பால் அழைத்து, "நீவிர் இவ்வாறு தவ
மியற்றற்கு ஏது வென்னை?" என்று வினவலும், அவர்கள், "படைப்புத்
தொழிலைப் பெறும் விருப்பமுடையோம்." என்றனர். அத்தூய மைந்
தர் உரைத்த சொல்லினைக் கேட்ட முனிவன், "எல்லாம் வல்ல இறைவ
னிடத்துப் பெறவேண்டிய முத்தியை விடுத்துத் துன்பத்திற்கு இடமா
கிய இத்தொழிலை விரும்பினீர் போலும்! உமது தந்தையின் கட்டளை
நன்றாயிருந்தது. நீவிர் அதனை விட்டு முத்தியடைய அருந்தவம் இயற்
றுதிர்." என்று அவர்கள் மனத்தை முன்னையினும் வேறாக்கி, அந்
நற்றவத்திற்காகும் மந்திரங்களும், செயல்களும் உபதேசித்து, அவ்
வண்ணமே இருந்து தவஞ்செய்து முத்தியடையுமாறு கூறி, விண்
ணிடை ஏகினன்.

அம்மைந்தர் அவ்வாறே நற்றவ முயற்சியினின்று வீட்டினை எய்
தினர். தக்கன் தவஞ்செய்யச் சென்ற மக்கள் செய்கையைத் தெரிந்
திலேனென்று ஞானத்தால் உன்னிப் பார்த்து, நாரதன் சூழ்ச்சியால்
நற்றவமியற்றி அனைவரும் வீடெய்தினர் என்றுணர்ந்து மனம் மிகக்
கவன்று, மீண்டும் ஆயிரம் புதல்வர்களைப் பெற்று, அவர்கள் சடங்கினை
முடித்து, வேதம் அறிவுறுத்தி, அவர்களை நோக்கி, "நீவிர் முக்கண்
ணனை நோக்கிப் படைப்புத் தொழில்பெற மானதசரவில் தவமியற்
றுங்கள்." என்றனன். அப்புதல்வர்கள் நன்றெனச் சென்று, மானதமடு
வில் கயமுனிக் கூட்டம் போன்று நீரிடை இருந்து தவம் புரிந்தனர்.
அஃதுணர்ந்த நாரதன், அத்தடத்தருகிற் சென்று, மைந்தரைக் கூவி,
"நீவிர் இத்தவம் புரிதல் எதன்பொருட்டு?" என்றனன். அவர்கள்
படைப்புத் தொழில் பெறற் பொருட்டென்றனர். நாரதன் நகைத்து,
"தீவினைப் பிறவியிற் பட்டுழல நினைத்தீர் போலும்? முடிவற்ற இன்ப
மாகிய முத்தியை அடைகுதிர். நும்முன்னோர் ஆயிரவரும் தந்தை கூறி
விடுத்த தவறாகிய நெறியினை விட்டு, நன்னெறியைக் கைப்பற்றிய
தனால் பெறுதற்கரிய முத்தியைப் பெற்றனர். நீவிரும் அவ்வாறடைய
விரும்புவீராயின், அதனை உணர்த்துகின்றேன்." என்றான்.

அந்நன்மொழி கேட்ட தக்கன் புதல்வர், தந்தைசொல்லைக் காட்டிலும் அஃது உயர்வுடைத் தாயிற்றென்று எண்ணி, அனைவரும் ஒன்று சேர்ந்து, "அடியேம் முத்தியில் அவாவுடையேம். அடியேங்களுக்கு அருள்புரிய வேண்டும்." என்று தாழ்ந்து நின்றனர். நாரதமுனிவன், அவர்களும் தக்கனுக்குப் புறத்தராய் தனது நெறியை அடைந்தனர் என்றுவந்து, சிவகாம விதிப்படி அவர்கள் உணருமாற்றால் உபதேசஞ் செய்து, அவ்வாறே சிவயோகத்தில் மோனமோடிருந்து முத்தியடையுமாறு . விண்ணுலகம் சென்றான். அவ்வண்ணமே அத்தக்கன் புதல்வர் ஆயிரவரும் மோனமிருந்து முத்தியடைந்தனர். சென்ற புதல்வர் நெடுநாளாகியும் வாராமையால், தக்கன் "என் புதல்வர் எங்ஙனம் ஏகினர்? இன்னும் வரக் காண்கிலேன்." என்றயர்ந்து ஓதியால் நோக்கி யுணர்ந்தான். அப்பொழுது அவனிடத்து வெகுளி கிளம்பிற்று; உள்ளம் பரிதபித்தது; துன்பமாலை விரிந்தது; மேனி, தோள்கள் இரிந்தன; ஞாலமெல்லாம் இரங்கி நின்றன; இவ்வாறாக இருந்து, தன் புதல்வர் செய்கையையும், நாரதன் புணர்ப்பையும் எண்ணி, "என் மக்களை முத்தியிற் செலுத்திய அந்நாரதன் இவ்வுலகிடைத் திரிந்தலையக் கடவன்." என்று முனிவனைச் சபித்தான். பின்னர் அவன், "யான் ஆண்மக்களைப் பெற்று நன்மை யடைந்தது போதும். இனி யான் பெண்மக்களைப் பெறுவன்." என்று எண்ணி, இருபான் மூவராகிய பெண்மணிகளைப் பெற்று, அவரைத் தருமன், பிருகு, மரீசி, புலத்தியன், அங்கிரா, புலகன், வசிட்டன், அத்திரி, பித்ரா என்னும் இம் முனிவர்களுக்குப் பகுத்து விதிமுறை யளித்தான். அவர்களிடமாக ஆண்மக்களும், பெண்மக்களும் வழிவழியே மல்கி வந்தனர்.

## சந்திர சாபப் படலம்

இவ்வாறாகப் பரந்த கிளையொடும் இராநின்ற தக்கன், பின்னர், நாண்மீன் கூட்டத்து இருபத்தேழெனும் தொகையினைப் பெற்ற கன்னியரைப்பெற்று, வேதவிதிப்படி அழகிய சந்திரனுக்கு மணஞ் செய்து கொடுத்தான். அவன் சந்திரனை நோக்கி, "நீ இப்பெண்களிடத்து எஞ்ஞான்றும் ஒத்த அன்போடு கூடிவாழுதல் வேண்டும். சிலரிடத்து அன்பு மிகுந்தும், ஏனையோரிடத்து அன்பு குறைந்தும் ஒழுகுதல் கூடாது." என்று கூறித் தன் பெண்மக்களைச் சந்திர

ளோடு கூட்டி அனுப்பினன். அவ்வாறே நடந்துகொள்ள ஒருப்பட்டு அழைத்துச் சென்ற சந்திரன், அப்பெண்களை அணைந்து, ஓர் பகற்கொருவர் பாலாகப் போகம் நுகர்ந்து, வைகலுங் களித்து, இன்பக் கடலில் ஆழ்ந்திருந்தான்.

அவ்வாறு இன்புற்ற திங்கட்கடவுள், தன் பன்னியருள் பேரழகு வாய்ந்த கார்த்திகை, உரோகணி என்னும் இருவரிடத்தும் மிக்க காதலுடையனாய், அவர்களையே விழைந்து, இன்பம் நுகர்ந்து, ஏனையோரிடத்துப் புணர்ச்சி வெஃகாது வெறுத்திருந்தனன். அத்தன்மையை நோக்கிய மற்றைப் பெண்கள் முனிவுகொண்டு, தக்கனாகிய தந்தைபால் ஏகி, நிகழ்ச்சியைக் கூறி வருந்தினார்கள். தக்கன் சினமடைந்து, "அச்சந்திரன் கலைகள் முற்றும் தேய்ந்தொழிந்து பொலிவு அழிக." என்று கடிய சாபம் புகன்றனன். இட்ட சாபத்தினால், என்றும் விளக்கமுற்றிருந்த மதியின் கலைகள் வைகலுக்கோரொன்றாக பொய்யுடைய பெருஞ் செல்வத்தினன் புகழைப்போன்று குறைந்தன. அவ்வாறு பதினைந்து நாட்களில் பதினைந்து கலைகள் தேய்ந்து, சந்திரன் அவனே என்று சான்று கூற இருப்பது போன்று ஓர்கலை இருக்க, அதனைக் கண்ட சந்திரன், மனந்திகைத்து தேவராஜனிடஞ் சென்று, "தக்கனிட்ட சாபத்தினால் என் கலையனைத்தும் நீங்கி, இக்கலை யொன்றே உளது. ஈதும் இன்று இறக்குமாயின், என்னியல்பு குன்றி, என் பெயர் தொலைந்து, புகழொழிந்து, வசையே நிற்கும். ஆதலின், இதற்கோர் தீர்வு கூறுதல் வேண்டும்." என்று வருந்திக் கூறினன். தேவராஜன் அவனைத் தழுவி "எனது நண்பனே! நீ முன்னொரு காலத்தில் விநாயகப் பெருமான், முதிரையுண்ட வயிற்றையும், மோதகம் தங்கிய கரத்தையும் நோக்கி நகை செய்தாய். அதன் பொருட்டு அப்பெருமான் சினந்து, யாவரும் நின்னைக்கண்டு இகழ்ந்து அகல, நீ நீசரைப் போல ஆகக் கடவை என்றனன். அப்பெருஞ் சாபத்தால் யாவரும் நின்னை எள்ள, அதனால் விண்ணிற் செல்லாது மறைந்தனை. அதற்கிரங்கிய பிரமன் முதலிய தேவர்கள் வெள்ளிவெற்படைந்து, விநாயகப் பெருமானை வேண்டி நிற்க, அப்பெருமான், "சூரியனது மேட வீதியிலுள்ள ஆவணித் திங்களின் முதற் பாலில் நாலாம் வைகலில் உலகினர் நமக்குப் பூசனை யாற்றுவா. அந்நாளொன்றினில் இவ்விகழ்ச்சி

அடையக் கடவன்.'' என்றலும், அக்குறையை இன்றுகாறும் அடை ந்துள்ளாய். அஃதன்றி, மேலும் இது கொண்டனைபோலும்! நின் மதி நன் மதியே! இதனைப் பிரமன்பாற் சென்று புகன்றனையாயின், அவன் தன் மகனை வேண்டி ஈதகற்றுவன்.'' என்று கூறினான். திங்கட்புத்தேள் அன்னதே புரிவேன் என்று விரைந்து சென்று, பிதாமகனை யடைந்து அவனடி வீழ்ந்து, வருந்தி, உற்ற துரைத் தலும், பிரமன், "அத்தக்கன் தன் மனஞ் சென்ற வழியிற் செல்லா நின்றான், முன்னையன் அல்லன். இதுபொழுது யாவர்க்குந் தலைமை எய்தியுள்ளான். என் சொல் கொள்ளான். யானும் அவனிடம் செல்லேன். வேறு சில மொழிவதென்? சிவபெருமான் தலைமை யனைத் தையும் பண்டை நாளில் யானுணர்த்தியும், பெருந் தவம் புரிந்து, இப்பெருஞ் செல்வத்தை வெஃகி, இங்கு வைகி, அச்சிவபெரு மானை மதியாதிருக்கின்றான். எப்பொருளும் அடைய சிவபெரு மானிடத்துச் சென்று வேண்டுவரே யன்றி இத்தக்கன்பாற் சென்று இரப்பரோ? கண்ணும், அறிவும் இழந்தவன் அதன் மேல் கள்ளினை யுண்டு களித்தக்கால் அவன் நடக்கும் வழி நடையினை யொத்து இத்தக்கன் செல்வக் களிப்பில் ஆழ்ந்து, தீமை யுள்ளத்தனுய்க் கண் ணற்ற காரியுங்களைப் புரியா நிற்கின்றான். இவனிறத்தலே யன்றி இவனொடு நம்மனோர் பதங்களும் அழிவெய்துதலைக் கருதாது, சிவபெரு மான் இத்தீயோன் வேண்டிய வரமனைத்தையும் நல்கினான். நிற்க, யாம் அவனை வேண்டுவோமாயினும், அவன் எம்மை வெகுண்டு இகழ் தலுஞ் செய்தலன்றி, நின் சாபத்தை யொழித்தலுஞ் செய்யான். ஆதலால் ஒன்றுரைப்பதுண்டு. அதாவது, அடைந்தார்க்கருளும் அருள் மூர்த்தியாகிய சிவபெருமானை யடைந்து, நின் குறையை இயம்பு வையாயின், அப்பெருமான் அருள்புரிகுவன். அவனால் முற்றுப் பெறாத காரியம் உலகின்கண் உண்டோ? நீ அயர்ந்தனை போலும்! அன்று மறைச் சிறுவன்மீது வந்த கூற்றுவனுக்குக் கூற்றுவனா னன் பதங்களைப் பணிகுவை. ஈதே துணிபு." என்று பிரமன் விடுத்த னன். சந்திரன், "அவ்வாறே விரைந்து சென்று, பரமனிடத்து விண் ணப்பிக்கின்றேன்." என்று அவ்விடம் நீத்து, அன்புருவாகிய அண் ணல் வைகுங் கயிலையை அடைந்து, நந்திபால் அருள்பெற்றுச் சென்று, அமலன் அடிகளில் வீழ்ந்து அரற்றினான்.

கங்காதரன், "இரங்கி யாதுவேண்டினை?" என்றலும், சந்திரன் "தக்கன் சாபத்தால் இவ்வொன்றொழிந்த கலை பதினைந்து மாண்டன. பொலி விழந்தேன். இவ்வொரு கலையொடு இறந்த கலைகளை அருள வேண்டினேன்." என்றனன். அஞ்சலையென்று கரமமைத்து, அவ்வொரு கலையினைத்தனது அருமைத் திருக்கரத்தினால் வாங்கித் தனது சடையின் கண் அணிந்தருளலும், தக்கன் சாபம் அக்கலையைச் சார்ந்திலது. அப்பொழுது சிவபெருமான் சந்திரனைப் பார்த்து "நீ எதற்கும் அஞ்சலை. எமது முடியிற் சேர்த்திய இச்சிறப்பினால் அழிவின்றி இக்கலை இங்கு இருந்திடும். அதனால் நின்கலை யனைத்தும் நின்பால் நாடோறும் மரபால் வந்து தோன்றும். நினது பழைய கலைகள் பதினைந்து தினங்களில் நிரம்பிப் பின்னர் அம்முறையே குறைந்து வந்து, ஓர் கலை பிரியாது இத்தன்மையே எக்காலமும் நிகழும்." என்றுரைத் தருளினன்.

அவ்வருளைப் பெற்ற மதிக்கடவுள் வணங்கி ஏத்தி மீண்டு சென்று, தனது பதியிடைப் பண்டையின் இருந்தான். சந்திரன் செயலனைத்தையும் தூதரால் அறிந்த தக்கன், "யானிட்ட சாபத்தை என் பிதா பிரமனும், அவன் பிதாவாகிய திருமாலும் நீக்கிற்றிலர். அன்றியும் என்பால் அவர்க்குள்ள அச்சத்தினால் என்னிடம் வந்து வேண்டி நீக்கவும் நினைந்திலர். அத்தன்மை இருக்கத் தாயுந்தந்தையுமில்லா ஒருவனோ நீக்குபவன்? நன்று, நன்று. அனைத்துயிரையும் யாமே அழித்துப் பின்னர் ஆக்கி எங்கும் நிறைந்திருந்து ஐந்தொழிலை இயற்றுவோமென்று அச்சங்கரன் அகந்தை கொண்டனனோ? அஃதன்றித் தன்னிகரற்ற தக்கன் தவத்தால் என்னால் திருவடைந்தவன் தானே என்று கருதி எளிமையின் என்னுரை தடுத்தனனோ? யாமளித்த செல்வத்தினால் திகழும் தக்கன் தன்னை வணங்காதிருக்கிறான் என்று கருதிகொல் யானுரைத்த சாபத்தினைத் தடுத்தான்?" என்று இன்ன கூறி வெகுண்டனன்.

அவ்வாறு வெகுண்டு கூறிய தகுதியற்ற தக்கனை நோக்கிய புலகன், "நீ இவ்வாறு சிவபெருமானை நிந்தித்தல் தகுதியல்ல. உன்னை எல்லோரும் இகழ்வர். அஃதேயன்றி நினது திருவும் நில்லாது." என்று கூறினன். தக்கன் அதைக்கேட்டு, "என்னை இகழ்வார் யாவர் உளர்? திருமால் முதலியோர் என் பணியின் நிற்கிறார்கள். எனது தவத்தினால் வந்த இத்திரு அழுலுமோ?" என்றனன். புலகன்,

"சீருந்திருவும் பொன்று எனினும், நினக்கன்று அருள்புரிந்த சிவபெருமானைப் பழிப்பது தகுதியோ?" என்று கூறினான். தக்கன், "தவத்தினால் யான்பெற்ற திருவை இடையே நீக்கு வானல்லன். விளைக்கீடாக வன்றி அதிகரித்து அச்சிவன் ஒன்றுஞ் செய்யான். ஆகலான், வன்மை கொண்டு என்மாட்டு அவ்வான் செய்வ தென்னை?" என்றனன். புலகன், "நீ கூறியது உறுதியாயினும் அச் சிவபெருமானை இகழ்ந்தவர் உய்யார். மறைகளின் துணிவும் அஃதே. ஆதலின், இனி நீ அவனை மனத்தொடு வழிபாடாற்றுவாய். அன்றியும் அச்சிவபெருமான், யாவர் எக்குறையைக் கூறி வேண்டினும் அவர் களுக்கு அவ்வண்ணமே யருளுவது இயற்கை. அங்ஙனமாதலின், சந்திரன் தனது குறையைக் கூறி அருள்பெற்றான். அவன் நினது மருகன். நீ உரைத்த சாபத்தையும் சிவபெருமான் ஒருவாறு நிலைப்படுத் தினான். இனி அவனை முனிவதென்? அச்சிவபெருமானும் நினக்கு மரு களைப் போகிறான்." என்று மொழிந்தனன். தக்கன் சினம் மாறி மலரா யன் முதலோர் புகழாநிற்பப் பன்னெடுநாள் அரசுபுரிந்து வைகினன். பின்னர் உலகீன்ற பராபரையானவள் அவனுக்கு மகளாய் வருதலை இனிக் கூறுவாம்.

## உமை கயிலை நீங்கு படலம்

மாலயன் காணாத மாதொருபாகன், அன்பினர் காணுமாறு அம்பி கையோடு அருங்கயிலையில் அமர்ந்தருளி யிருந்தான். அப்பொழுது அருகிலிருந்த அம்பிகை, "ஐயனே! நினது உண்மையை உரைத் தருளுக." என்றனள். பேரன்பினால் பரமன் உருவம், குணம், செயல் ஆகிய யாவும் இன்றி நிருமலமாய்ச் சிவம் நிறைந்து நிற்கும் தன்மையும், விரிந்த உயிர்த்தொகையின் பந்தத்தைப் போக்கு தற்கு நிகரற்ற ஏகசத்தியாய் எண்ணப்படுவதும், சத்தி ஐந்தனை யாக்கியதும், அருவுரு தாங்கி அனைவருஞ் சிந்தித்து உய்ந்திடச் சதாசிவ உருவைந்துற்றதும், இருபத்தைந்து கேவல உருவமாக இருத்தலும், குடிலையின்வழி ஆக்கிப் பின் அருள்புரி மூர்த்திகளாகிய பேதமும், மாயைகளை முதலாகக் கொண்டு முப்பத்தாறு தத்துவங் களைத் தோன்றச் செய்ததும், முறைப்படி ஐந்தொழிலை உளத்திற் கொண்ட கருணையால் நடாத்துகின்றதும், மூவகை உயிர்த் தொகை யும், தத்துவக் கூட்டமும், அதிற்பொருந்திய கணங்களும் ஆகிய அனை

வரும் தோன்றிய முறைப்படி ஒடுங்கச் செய்து, தான் ஒரு தன்மை யாய் மன்னி நிற்றலுமாகிய இயற்கைகள் அனைத்தையும் உமையம் மையார் கேட்கும் வண்ணம் முன்னர்த் தொகுத்தும், பின்னர் வகுத் தும் விரித்துக் கூறியருளினன்.

அரன்மொழி கேட்ட அம்மை, "இறைவனே ! நினக்கு உருவமே இல்லை என்றனை. அவ்வாறிருக்க ஐந்தும், பலவுமாகிய உருவங்களைக் கொண்டதென்னை?" என்று கேட்டனள். பெருமான், "எமக்கு உருவ மில்லை என்றே அறிதி. நீ உரைத்த அவ்வுருவமனைத்தும் அருளுருவ மாம்." என்றனன். அதனைப் பொருளாகக்கொண்ட அம்மை மிக மகிழ்ந்து, "அச்சதாசிவாதி உருவனைத்தும் அருளுருவென்றமையா னும், என்னை உனதருள் என்று நீ கூறுதலானும், அவ்வுருவனைத் தும் என்னதே." என்று தன்னை வியந்துரைத்தாள்.

அம்மையின் மொழிகேட்ட அண்ணல், "நங்கையே! நின்புகழை நாடி நம்முன் புகழ்ந்துரைத்தாய். இருளுருவாகிய மலத்தில் கட்டுண்டு கிடக்கும் உயிர்தொறும் இருந்து தெருட்டுவம். அத்தொழிலினை விடுவமாயின், மருளுறு சடமாகி மாயும். நின்னிடத்தும் யாம் பொருந் தாதிருப்பின், உனதுயிரும் உணர்ச்சியை அடையாது. அதனை நீ உணருமாறு காட்டுகின்றேம். காண்பாயாக." என்று அண்ணல், பிரமன் முதலிய தேவரிடத்திருந்து செய்யுஞ் செயல் நீங்கி நின்றனன். முழு முதற் கடவுள் செயலற்றிருந்தமையான், உலக முதல் புவனங்களி லுள்ள அனைத்தும் உயிர்த்தொகை செயலற்றுச் சடங்களாய்ச் சித்திர மொப்ப அறிவிழந்து கிடந்தன. எதுபோலுமெனின், ஆட்டுகின்றவன் தன் தொழிலைச் செய்யாவிடத்துப் பாவைகள் நிலைகுலைந்து வீழ்தலைப் போலும். இவ்வாறு உயிர்த்தொகை மயங்கிச் சடமாய் வீழ்ந்ததைக் கண்ட உமையம்மை அஞ்சி, அரனடி பணிந்து, "எம்பெருமானே ! அனைத்துயிர்க்குயிராகி இருத்தலையும், எங்கும் நிறைந்திருத்தலையும் யான் உணர்ந்திலேன். அடியாள் பொருட்டு அவ்வுயிர்த் தொகையை ஒருவி நின்றனை. நினக்கு ஈதோர் கணப்பொழுதாயினும் மற்றை யோர்க்கு உகம் பலவாயிருக்கும். ஆதலின், அடியாள் பிழையைத் திருவுளத்துக் கொள்ளாது, உயிர்கள் தெளிந்து மல்குமாறு அருளு வாய்." என்று பன்முறை வணங்கித் துதித்து நின்றனள். நின்மலன்

அம்மைக்கருள்புரிந்து, ஆவிகள் முன்னைபோலிருந்து வினைப்பயன் நுகருமாறு கருணைகொண்டு திருவுளத் தெண்ணினன்.

தனதருள் அடைந்த பலதிற உருத்திரக் குழாத்தினுக்கு முனனா அருள் பாலித்தவழி, அவர் தாண்டவமூர்த்தியாகிய சிவபெருமானை நினைத்து, அச்செயல் யாதெனக் கருத்தில்ஆராய்ந்தனராகிச் சிவபெருமானது செயலெனத் தெரிந்து, இறந்து கிடக்கின்ற உயிர்த் தொகையை எழுப்ப நினைந்து, அச்சிவபிரானது பழைய சுடர் வானத்து இன்மையால், பூவுலகத்தில் திருவிடைமருதூரை யடைந்தனர். அடைந்த உருத்திரர் எவ்விடத்தும் இருள் நெருங்கியுள்ள அக்காலம் இரவு போலும் என்றெண்ணி, அவ்விரவில் சிவபெருமானுக்குரிய அருச்சனையைப் புரிகுவோமென மனத்திடை எண்ணி, முக்கண்மூர்த்தி கொண்டருளிய ஐந்து மூர்த்தங்களாகிய உருத்திர தேவர்களுக்கு மூவகை முறைமையால் அன்னோர் மண்டல விதியால் உருவமமைத்து, பதினாறு வகையாகிய உபசாரப் பொருள்களை அன்பினுல் உய்த்து, அயன் மால் இயற்றும் இரவு பூசனையை அன்பின் மேலீட்டால் செய்தலை மேயினர். சோடசகலைப் பிரசாதத்துடன் பஞ்சாக்ஷரத்தையும் ஜெபித்து, நீறும் கண்டிகையும் அணிந்து, இறைவன் தன்மையை உள்ளே நினைத்து, வேறாகிய முறையனைத்தையும் விதிப்படி இயற்றி, வில்லுவம், தாமரை, மல்லிகை, நந்தியாவட்டமாகிய மாலைகளைக்கொண்டு நான்கு யாமத்தும் இறைவன் பெயரைக் கூறி அருச்சனைபுரிந்து, உயர்ந்த பயறு, பால் முதலிய கலந்த ஓதனத்தையும், சுத்தான்னத்தையும் அமைத்து நான்கு யாமத்தும் சிவபெருமானுக்கு நிவேதனஞ்செய்து துதித்தனர். அவர்கள் பின்னுஞ் செய்ய வேண்டியவற்றைச் செய்து முடித்தலும், முக்கண்ணனாகிய எந்தை, அவ்வுருத்திரர் எதிரே தோன்றி அவர் வேண்டியவாறே அருளித் தொன்மைபோல் எல்லா உயிர்களையும் ஆக்க நினைத்தலும், மாலயன் ஆகியோர் எழுந்தனர். பிறகு இந்திரன் முதலிய தேவர் எழுந்தனர். முனிவரும், ஏனையோரும் எழுந்தனர். பிறவும் எழுந்தன. இருளும் நீங்கிற்று. இரவிடைத் துயின்ற உயிர் மெல்லென உணர்ச்சிபெற்று, அயர்ச்சி நீங்கி எழுவதைப்போன்று, எல்லையற்ற உயிர்த்தொகை உணர்ச்சிபெற்று எழுந்தன. புவனங்களுக்கு வேண்டிய அத்தகைய நிகழ்ச்சியைக் கண்ட உருத்திரர், எழுந்தருளிய சிவபெருமான் திருவடிகளை வணங்கி நிற்றலும், இறை

வன், "ஞமதெண்ணத்தை முடித்தனம். இன்னும் நீங்கள் விரும்பியவற்றைக் கூறுங்கள்." என்றனன். அவர்கள், "நாள்தொறும் இரவில் எம்மைப்போல் நினது திருவடியை அன்போடு யாவராயினும் அருச்சிப்பராயின், அவர்களுக்கு மாசித்திங்களின் அமாவாசையின் முதல் நாளான சதுர்த்தசியின் இரவாகிய மகாசிவன் இரவின் பூசனைப்பயனை அளித்தருளவேண்டினம்." என்றனர். அவ்வாறே சிவபரஞ்சுடர் அவர்க்கருள்புரிந்து மறைந்தருளினன்

ஏகன் எழுந்தருளலும், உருத்திரர் தத்தம் பதஞ்சார்ந்து வைகினர். அப்பொழுது பிரமன் முதலிய தேவர்கள் திரண்டு சென்று, திருக்கயிலையை அடைந்து, பரமன் சன்னதியை நந்தி அருள்கொண்டணைந்து, பரமனைப் பணிந்து, "அடியேம் உணர்ச்சியற்று இருளிடைக் கிடந்த பாவத்திற்குத் தீர்வு புரிந்தருளவேண்டினோம்." என்றனர். சிவபெருமான், "வேத ஒழுக்கத்தினைத் தவிர்ந்து, செயலற்ற உங்களிடம் அணையும் பாவமனைத்தும் உமையினிடத்துச் சேரும். நீங்கள் இன்று முதல் உங்கள் கடன்களை இயற்றுங்கள்." என்றனன். அவர்கள் இறைவனை வணங்கி, ஏகினர். அவ்வுழி அரனிடத்திருந்த உமையம்மை, "உயிர்களிடத்துச் சேரவேண்டிய வினை என்னையடையக் காரணமென்னை? அதனை அருள்புரியவேண்டும்" என்றனள். சிவபெருமான், "நங்கையே! நீ உன் புகழுரைத்து உன்னை வியந்தனை. அதனால் யாம் வெகுண்டு, உன் பொருட்டினால் உயிர்களின் உணர்ச்சியைப் போக்கிப் பின் உணர்த்தினம். ஆகலான், அவ்வுயிர்களை எய்தும் பாவமனைத்தும் நின்னை எய்தும். உயிர்களனைத்தையும் பெற்ற நீ அனுபவிக்கும் அப்பெரும் பாவத்தைத் தாங்கும் வன்மை அவ்வுயிர்களுக்கு உண்டோ? ஆகலான், நீ அதனை ஏற்றுக்கொள்." என்றருளினன். அத்தீமையைக் கேட்ட அம்பிகை நடுக்கமுற்று, பெருமான் திருவடிகளில் வீழ்ந்து, அப்பாவத்திற்குத் தீர்வு புரிந்தருளல் வேண்டுமென்றலும், இறைவன், "விடம் போலும் கரிய நிறமும், அமிர்தம் போலும் இனிமையும் வாய்ந்ததாய், உலகிடை ஒழுகுகின்ற காளிந்தி யாற்றிற்கேகிப் பிரணவ ரூபமாகிய வலம்புரி சங்காயிருந்து, உலகினை யருளுங் குறிப்புடன் நோற்றல் செய்வாயாக. அக்காளிந்தி நதியில் பற்பகல் சென்றதும், அயன் புதல்வனாகிய தக்கன் உன்னைக் கண்டெடுத்ததும், குழவி யுருவாகி இருந்து,

பின்னர் அவன் மனைவி வேதவல்லியினிடமிருந்து வளர்வாயாக. நினக்கு ஆண்டைந்து கழிந்ததும், நீ எம்மை விரும்பித் தவம்புரிவாய். யாம் வந்து நின்தவங் கண்டு மணமுடித்து, ஒருவரும் அறியா வண்ணம், இத்திருக்கயிலைக்கு உன்னை அழைத்து வருவேம்." என்றுரைத்தருளினன். அம்பிகை அதைக்கேட்டு அப்பெருமானை வணங்கித் திருக்கயிலை நீங்கி, உலக மியற்றிய பெருந்தவத்தால் அக்காளிந்தி யாற்றை யடைந்து, வேத மூலத்தின் உருவினைக்கொண்ட வலம்புரியாகித் தாமரைத் தவிசின் வீற்றிருந்து, சிவமந்திரத்தைச் சிந்தித்துப் பற்பகல் தவமுஞற்றி இருந்தாள். இஃதிவ்வணம் நிகழவும், அக்காளிந்தியை யடைந்து, தக்கன் அம்பிகையை எடுத்துச் சென்ற விஷயத்தை இனி உரைக்கத் தொடங்குவாம்.

விண்ணிடைச் செல்லும் காரும் கண்டறியாத கடலிது வென்று கூறும் பெருமை வாய்ந்து, உலகிடைச் செல்லும் அக்காளிந்தி நதியில், மாசி மகம் நீராடுதலை வேண்டி உலகின்கண் உள்ளார் செல்லுதலும், அந்நாளில் தனக்கு நிகரின்றி உலகங்களை ஆளும் தக்கன், தன் மனைவியைப் பரிஜனங்களோடு அந்நதியில் நீராட முன்னர் அனுப்பிப் பின்னர் அரியணையிருந்து அரசாளுதலை விட்டு, வினையின் விளைவால் நீராடக் கருதிய அவன், தேவர் முனிவர் சூழ்ந்து போற்றச் சென்று யமுனை ஆற்றை அடைந்தான். காளிந்தியை அடைந்த தக்கன் அந்நீரில் படிந்து மீளுகையில், ஓர் தாமரை மலரில் சங்குருவாயிருந்த அத்திருவுருவத்தைக்கண்டு, தனது கையை நீட்டி எடுத்தலும், அஃது ஓர் குழந்தையாயிற்று. அவன் அதனை விம்மிதங்கொண்டு ஏந்தி, இறைவன் திருவருளால் அம்பிகை அவ்வடிவ மெடுத்து வந்தனள் போலுமென்று உணர்ச்சியாலறிந்து, தேவர் குழுவினை நீத்து, முன்னரே தன் பணியால் அரம்பையர் சூழ நீராடவந்திருக்கும் வேதவல்லியை யடைந்து, அப்பெண்மகவை அவள் கரத்தளித்தான். அவள் தன் கணவனால் அளிக்கப்பட்ட அக்குழவியைத் தழுவி முத்தமிட்டுக் கொங்கை நின்றிழி பாலருத்தி, அரம்பையர் போற்றக் கடிநகரெய்தி, மாளிகையில் புகுந்தாள். தக்கன், தேவர் குழாத்தினோடும் தன்னகரடைந்து, அரியணை இருந்து அரசுபுரிந்து வைகினன்.

அனைத்துயிரையும் அருளிய பராபரையானவள், மகளாய் எய்த, அக்குழந்தையை வேதவல்லி மிக்க அன்புபாராட்டி வளர்த்து

வந்தனள். அக்குழந்தைக்கு ஆண்டைந்து நிரம்பி, ஆறுவதாகிய ஆண் டெய்துதலும், அது வேதவல்லி, தக்கன் என்னும் தாய் தந்தையரை நோக்கி, "யான் அருளுருக்கொண்ட சிவபெருமானைப் பதியாக எய் தற்கு அரியதவத்தினைச் செய்ய எண்ணினேன். அதற்காகும் தனித்த மாடமொன்று அமைக்கவேண்டும்." என்று கூறிற்று. தக்கன் உவந்து அவ்வாறே தன்னகர் சார்பில் ஓர் மாடமமைத்துப் பல சேடியர் கூட்டத் தோடு அம்மை அருந்தவம் புரியுமாறு விடுத்தான். அருளுருவாகிய அப் பெண், பரமனைக்குறித்து முறைமையில் தவறாது அருந்தவமியற்ற, அவ்விமலையாகிய பெண்ணுக்கு ஆண்டு பன்னிரண்டு ஆயிற்று. அப்பொ ழுது சிவபெருமான் அம்பிகையின் தவத்திற்கு உவந்து மறையவன் திருவுருக்கொண்டு, அத்தக்கமாபுரி அடைந்து, அம்மையிருந்து நோற் கும் அக்கோட்டத்துள் நுழைந்து, அம்மையின் உபசார பூசையைப் பெற்ற பின்னர், "யான் ஒன்றைக் கருதி ஈண்டடைந்தேன். அதனை முடிக்கவல்லைகொல்?" என்று கேட்டனன். அம்மை, "இயலுமேல் ஆகும்." என்றனள். மறைவடிவங் கொண்ட சிவபெருமான் "நின்னை யான் மணம்புரிய வேண்டினேன்." என்றனன். சங்கரியாகிய அம்மை "நின்னைப் பெரியனென்று கருதினேன். இத்தீய மொழியை இங்கு ரைத்து இருந்தனை. யான் அன்புருவாகிய சிவனை வேண்டித் தவமியற்று கின்றேன். ஆகலின், இவ்விடம் விட்டு விரைவில் அகலுதி." என்று சீறி யுரைத்து ஓர் புறம் ஒதுங்கி அகன்றாள். அவளது செய்கையைக் கண்ட பரமன், "அரிக்கும், அயற்கும் எட்டாப்பரமன் நின் தவத்தைப் பொருட்படுத்தி ஈண்டெய்துவன்கொல்? வீணே உடலை வருத்துகின் றனை." என்றனர். அம்மை, "யானியற்றுந் தவத்திற் கெய்தாவிடின், அவனைக்கருதி என்னுயிரை வலிந்து நீப்பன் இது சத்தியம். நீ எழுந்து போதி." என்றனள். அண்ணல் உவந்து தன்பழைய உருவத்தை அம்மை யொருத்தி காணுமாறு காட்டியருள, அமலை கண்டு மெய் பனித்து, "ஏதிலாரென்று இகழ்ந்தனன். அனைத்தையும் பொறுத்தரு ளல்வேண்டும்." என்று கூப்பியகரத்தோடு கண்ணீர்வார நின்றுதுதித்த லும், அருகிலிருந்த தாதியர், "இம்மறையோன் மாயை வல்லன் கொல்? அன்றி இவள் முன்னர்க் கருதிய மூர்த்தியோ இதனைப் பின் னர் அறிகுவம்." என்று மொழிந்து, அவருள் சிலர் சென்று; அர சனுக் குரைப்ப, அவன் ஞானத்தாலுணர்ந்து, திருமணத்திற்குரிய நாள்

அன்றேயாக, அதற்கு வேண்டுவன யாவும் அமைக்கச் செய்து, திரு மால் முதலியோரை வரும்படி தூதுவரைப் போக்கினன். பின்னர் அவன் பொன்னாலாகிய தன்னகரினைப் பொலம் பட்டித்திருத்தித் தன் மனை நீங்கி, அம்மை இருந்து நற்றவம் புரியும் அச்செல்வக்கோட்டம் புக்கு, அருள்மூர்த்தியைக் கண்டு, அவனடி பணிந்து, "பெண்ணின் தவத்தைப் பெரிதுவந்த பெரும! என்னில்லிடைச் சென்று இக் குமரியை மணம் புரிய வேண்டினேன்." என்றனன். அண்ணல் அதற்கொருப்பட்டு, அவனது அரச மாளிகை ஏகி, அட்ட மங்கலந் தாங்கி எதிர்வர, மணத்திற்கமைத்த மண்டபம் புக்கு, அரியயன் ஆதி யரும், ஏனையரும் சூழ அரும் பெறல் ஆசனத்து மணவணி முற்றிய மங்கையோடு வீற்றிருந்தருளினன். கின்னராதியோர் கீதங்களிசைத் தனர்; தேவ வாத்தியங்கள் இயம்பின; வான மங்கையர் வாழ்த் தொலி இயம்பினர். அனைய காலையில் தக்கன் மந்திரமியம்பித் தன் மனையவள் சிரக நீர் வார்க்க அமலனடிகளை விளக்கி, மலர் முதலிய வைகளால் பூசனை நிரப்பிப் பின்னர் ஞானரூபனாகிய சிவபெருமான் திருக்கரத்தின் மீது சங்கரியின் திருக்கரத்தை வைத்து, "செல்வனே! இவளை நன்று போற்றுதி. நினக்கு இவளைத் தந்தனன்." என்று கூறி கரகந்தருபுனலோடீந்தனன். அச்சுபமுகூர்த்தத்தில் தேவரனைவரும், முன்னவனையும் அம்மையையும் தரிசித்துப் பெறத் தகும் பேறு பெற்றனர். அது பொழுது பிரமன், திருமணச் சடங்கிற்கு வேண்டும் பொருளைக் கொண்டு, நூன் முறைப்படி சடங்கனைத்தையும் முற்றுச் செய்ய, திருமால் முதலியோர் இறைவன் உண்மை வசனங் களாகிய வேதங்களை ஓதினர். அது பொழுது சிவபெருமான் அம் மையோடு வீற்றிருந்த மணத்தவிசினின்றும் அருள் கருதி தன் னுருவத்தை மறைத்தருளினன். அருகிலிருந்த அம்பிகை இறை வனைக் காணாது இரங்கி ஏங்க, இலக்குமி முதலிய மாதர்கள் சூழ்ந்து தேற்றத் தெளிந்து, முன்போல் அப்பெருமானை அடையத் தவமியற்றுவேனென்று அத்தவக் கோட்டமெய்தித் தவமியற்றினள். அங்குத் தக்கன் ஈசன் மறைந்த செயலைக் குறித்துத் தேவர்களோடு வெறுத்துக் கூறி சினம் கொண்டிருந்தான். அங்குத் தவக்கோட் டத்தில் நோற்றிருந்த அம்பிகை காண அருந்தவ முனிவனைப்போ லேகி நிற்க, அம்பிகை வணங்கி நின்றனள். அப்பொழுது அவள்

காணுமாறு இடபாரூடராய் நின்று, அன்பால் அணுகிய அவளைத் தன் திருக்கரம் நீட்டித் தன்னிடது பக்கத்தில் இடபத்தில் இருத்தித் திருக்கயிலையடைந்து, அத்தாணி மணிமண்டபத்தில் அம்மையோடு அமர்ந்தருளினன்.

அவ்வண்ணம் அழைத்து ஏகியதைக்கண்ட பாங்கியர் ஓடிச்சென்று, தக்கனுக்கு உரைப்பத் தக்கன் பெருஞ்சினமடைந்து, சூழ்ந்திருந்த தேவர்களைப் பார்த்து, "அச்சிவன் முன்னாளில் மறைச்சடங்கு முடிவதற்கு முன்னரே ஒளித்ததன்றி, இந்நாள் என்னை வந்து காணாது, என் மகள் தவமிருந்த இடத்திற்கேகி அவளை அழைத்துச் சென்றான். அந்நாள் மணம் வேண்டி என் மகளை இரந்து கேட்டதை யான் கேட்டு மகளை மணம் புரிவித்தேன். இந்நாள் அதைக் கருதினனில்லை." என்று பலவாகிய சிவநிந்தைகளை எடுத்துக் கூறவும், தேவர்கள் அஞ்சினவராய்த் தக்கனைப் பார்த்து, "நீ சிவநிந்தை செய்வதால் நன்மையில்லை. அன்றவன் அமரும் திருக்கயிலைக்கேகி நின் புதல்வியையும் பெருமானையும் கண்டு வருவாய்." என்றனர். அவர் மொழி கேட்ட தக்கன், பிரமனாதியரை அவ்வுழியே நிறுவி, யான் கயிலை சென்று, மீள்வேன்." என்று இயம்பி, மெய்காப்பாளரொடு திருக்கயிலை சென்று, நந்தி யெம் பெருமானால் காவல் போற்றப்படும் கீழ்த்திசைவாயிலையடைந்தான். அப்பெருங் கோயிலின் கீழ்த்திசைக் கோபுரவாயிலைக் காக்கும் பூதர்கள் தக்கனை உட்செல்லவிடாது தடை செய்தனர். தக்கன் வெகுண்டு, "யான் என் மகளையும், மருகனையும் காணச் செல்லா நின்றேன். நீயிர் ஏன் தடுக்கின்றீர்?" என்றனர். அப்பூதர், "நீ முன் சிவபெருமானை இகழ்ந்துரைத்தனை யாதலின், நின்னை அவர்கள் சன்னதிக்குச் செல்லவிடோம். அன்றியும், நின்னோடு யாங்கள் உரையாடினும் எங்களுக்குச் சிவாபராதம் நேரும். ஆயினும் ஒன்றுரைப்பதுண்டு. நீ உள்ளே சென்று எம்மிறைவனாகிய சிவபெருமானை வணங்கி வேண்டிக் கொள்ளுவையாயின், உள்ளே செல். அல்லை யேல் மீண்டேகுதி." என்றனர். அப்பூதரின் சொற்றிறம் கேட்ட தக்கன் வெகுண்டு, பல்லாயிர பூதர் காக்கும் வாயிலை இகந்து உட்செல்ல இயலாதவனாய், நாணமுற்று வருந்தி, "இறுதியாக செம்பொற் கடைகாக்குங் குழாங்களே! கேண்மின்கள்! நும் இறைவனாகியவன் என் மருகன். அதை நீவிர் அறி

வீர். எந்நாளும் நான் அவனைப் பணிதல் செய்யேன். எப்புவியும் என்னைப் பணியும் அரியயனுதியரும் அப்படியே. அன்றியும் என்னைத் தடை செய்து நீர் இயம்பிய அனைத்தையும் அவ்விருவர் இயம்பத் தகுமேயன்றி நீங்கள் இயம்பத் தக்கவரல்லர். நீங்கள் அன்னோருக்கு அடிமைகள். உங்களுக்கு ஈது தக்கதோ? சிறிதும் ஆராயாது உங்களைக் கொண்டு, என்னை அவமதித்த சிவனை யாரும் வந்து போற்றுதும், பணியாதும், புகழ்ந்து மேன்மை சாற்றுதும் இருக்க என்றும் யாரையும் புரிகிற்பன்." என்று கூறி முன்னையூழ் பிடித்துந்த, மீண்டேகித் தன் பதிபுக்கு அவையிடை யமர்ந்து, மால் முதலிய விண்ணவரிடத்துத் தான்பட்ட குறையினை விளம்பி வருந்தினன். பின்னர் அவன் அத்தேவரை நோக்கி, "இன்று முதல் என்றும் நீவிர் யாவரும் அந்நக்கனையும், உமையையும் பரவி வணங்காமலும், மதியாமலும் இருப்பீர். இதனை மறுத்து நடப்பீராயின், நுந்தமது உரிமைகளை நொடிப் பொழுதில் போக்குவன்" என்று சிவன் வரத்தால் திறமை சான்ற அவன் வெகுண்டு கூறினன். அச்சொற் கேட்ட தேவர் அஞ்சி நடுங்கி, "எங்கள்மீது சீற்றங் கொண்டனையோ? இதுகாறும் நாங்கள் தவறி நடந்ததில்லை. நின் பணி தலைமேற் கொள்வோம்." என்று வணங்கி உரைத்துத் தத்தம் பதி புக்கனர்.

## பிரம யாகப் படலம்

இவ்விதமாக நீண்ட காலம் யாவரும் இத்தக்கன் ஆணையை அஞ்சி, இட்ட ஏவல் புரிதலோடும், பூமேலமரும் பிரமன், சிவபெருமான் திருவருளை முன்னிட்டு, ஓர் வேள்வி இயற்றுவான் சிந்தித்து, அதற்குவேண்டும் பொருள்களைத் திரட்டி வைத்துப் பின்னர்த் தக்கன் ஆணையை நினைந்து, "யான் இறக்க நேரினும் நேருக. இங்க வேள்வியில் சிவபெருமானைச் சிறப்பித்து முன்னர் அவிர்ப்பாகத்தை அப்பெருந்தகைக்கே அளிப்பன்." என்று மனத்தில் உறுதியாக வைத்துத் தன் வழி நிற்கும் புதல்வரை யழைத்து, "நீவிர் திருமால் முதலிய தேவர்களை அவிர்ப்பாகம் கொள்ள அழைத்து வருதி" என்று கூறித் தான் திருக்கயிலை நோக்கி விரைந்து சென்றனன். அங்கு நந்தியருள்கொண்டு சிவபெருமானைத் தரிசித்து வணங்கி [illegible] பெருமான், "வந்த காரியமென்னை," என்றலும், [illegible] "[illegible] ற்றும் வேள்விக் கெழுந்தருள வேண்டும்," என்றனன். [illegible]

"நமதுரு வடைந்த நந்தி ஆங்கு வருவன். நீ போதி." என்றருள, பிரமன், அடிபணிந்து, விரைவில் புவியிடை ஏகித் தக்கனிடஞ் சார்ந்து, "ஐயனே! யான் அவிக்குரிய வேள்வியொன்று ஆற்றுவன். அங்கண் தேவர் முனிவரோடு நீ வருவாய்." என்றனன். தக்கன், "முன்னரே சென்று யாகத்தைச் செய்வாய். யான் வருவேன்." என்றனன். பிதாமகன் மனோவதி நகரடைந்து, அவ்வேள்விக்குரிய கடன்களைப் புரிதலும், திருமால் முதலிய தேவர்கள் தெரிந்து தக்கனை அடைந்தார்கள்.

எய்திய திருமால் இந்திரன் முதலிய தேவரோடும், முனிவரோடும் கலந்து பேசித் தக்கன், முக்கணனுக்குதவும் அவியினைத் தடுப்பதாகத் தீர்மானித்தான். அவ்வாறெனச் சென்ற தக்கன், பிரமனது வேள்விச்சாலை எய்துதலும், பிரமன் எழுந்து ஆசி கூறிப் பாங்கரில் அமைத்த ஆதனத்தில் அமருமாறு உபசரிக்கத் தேவர் யாவரும் சூழ்தர, அதில் இருந்தான். அவன் திருமாலுக்கோர் ஆதனமளித்து,வணங்கி அதிலிருத்தினன். ஏனையோர்க்குந் தகுதிப்படி இருக்குமாறு இயற்றி, வேத ஒலி தழங்கத் தானும் அவர் நாப்பண் ஓர் ஆதனத்தமர்ந்தான். அவ்வமயம் இறைவனாகிய சிவபெருமான், நந்திதேவனை விளித்து, "நான்முகன் இயற்றும் வேள்விக்குச் சென்று, விரைவில் நம்முடைய அவிர்ப்பாகத்தைப் பெற்றுவரக் கடவாய்." என்றனன். நந்தியெம்பெருமான், அடி வணங்கி நன்றெனச்சென்ற, நூற்றுக் கோடிவெவ்விய கணத்தவர் சூழ்ந்துவரப் பிரமன் வேள்விச் சாலையை எய்தினன். பிரமன் துண்ணென எழுந்து வணங்கி, அந்நந்தியடிகளை ஓர் சிறந்த ஆதனத்திலிருத்திப் பின் கணத்தவரைத் தத்தந் தகுதிக்குத்தக இருக்கச் செய்து, தான் வேள்வியை இயற்றினன். தக்கன் எரிஎழவிழித்து, "நாரணன் முதலிய தேவர்களும், திருமகள் முதலிய தேவமாதரும் நிறைந்துள்ள இச்சபையில், புரமெரித்த ஒருவனது மலையினைக் காக்குங் காவலாளனும், அவனைச் சார்ந்த பூதர்களுமோ நடுவணிருப்பது? இது நன்று என்று கனன்று நகைத்து, அன்னோர் ஆண்டெய்த அழைத்தவர் யாவரென மனத்தால் ஆராய்ந்து தெரிந்து, பிரமனை நோக்கி, "ஆதி நான்முகனாகிய நீ அழன்மகமியற்றலை. அப்பேதை பாகனுக்குரைத்தனை. அவன் அனுப்ப வந்த நந்தியை என்முன் காதல்கூர அழைத்து நடுவண் இருத்தினை. நினக்கிது தகுமோ? தாதையாதலின் பிழைத்தனை. அல்லை

யேல் நின்றலை தடிவன். ஆயினும், இனி ஒன்றியம்புவன். அறிவிலியே கேட்டி. ஈமமே இடமாகப் பூதஞ்சூழ நின்ருடுமவனுக்கு முன்னை நாள் போல அவியினை இத்தினம் வழங்கற்க. இத்தினமுதல் அவி அவற் கின்று. என்பையும், விடப்பாம்பையும், தலைமாலையையுந் தாங்கிச் சாம் பரைப் பூசி, அனைத்தையும் நொடிப்பொழுதில் கொல்லும் அந்தப் பித் தனோ அவியினைப்பெற்றற் குரியவன் ? நடந்த இந்நாள்காறும் எத்திறத் தினரும் வேதவொழுக்கமென்று நினைந்து எதையு மறியாமல், தூய்மை வாய்ந்த அவியினைக் கொடுத்தனர். அதனையே தொன்றதொட்ட தென்று கொள்ளத்தகுமோ? மற்றைத் தேவர்களுக்குத் தருதி. மாலையே இன்று முதல் முதலாகக் கொள்ளுதி. அவியினை இவற்கு முன்னர் ஈகுதி. கற்றை யஞ்சடையனைப் பரமாகச் சொற்ற மறைச்சுருதிகளை விலக்குதி. இஃதுனக்குத் துணிவுரை." என மொழிந்தான்.

சாற்றத்தகாத பவமொழிகேட்ட தண்ட நாயகனாகிய நந்திப்புத் தேள், சீற்றமிக்குச் செவியினைக் கரத்தாற் பொத்தி, "இச்சொற் கேட்க வும் அடியேனை அனுப்பினை கொல்!" எனவருந்தி எரிஎழ விழித்தலும், நடுங்கினர் தேவர். ஒடுங்கினர் ஏனோர். மலையும் புவியுஞ் சலித்தன. மாலும் பிரமனும் மயங்கித் திகைத்தனர். இவ்வாருகிய காலத்து நந்தி யம் பகவன், தக்கனைக் கடிந்து நோக்கி, "இறைவனை இகழ்ந்த வாயினை இப்பொழுதே பிளப்பேன். அஃது ஆதியம் பண்ணவன் அருளன்றெனை விடுத்தேன். மறுமாற்றம் உரைக்கின் நின் சிரத்தினை இறக்குவன்." என்று தக்கன் நடுங்கும் வண்ணம் உரைத்தனன். நந்தி பின்னர் அவனை நோக்கி, "மேலும் சிவபெருமானை விலக்கி ஈயும் அவியினைக்கொள்ளுவா னெவனோ? இது முதல் சிவனை யன்றி வேள்வி செய்பவர் சிரம்விரை வில் அறுக." என்று சாபமிட்டனன். பின்னரும் நந்திதேவன், "தக் கனே! சிவநிந்தை செய்த நின் திரு இன்று முதல் அழிக. நின் தலை போய், வேறு சிறுதலை நினக்கமைக. நின் சார்பாகிய தேவர் ஓர் பகல் உயிர் நீங்கிப் பின்னெழுந்து அளப்பிலா உகங்கள் சூரனென்னும் அவுணனால் அலைக்கப்பட்டுத் துயரின் மூழ்க." என்றும் உரைத்துத் தன் கணஞ்சூழ வெள்ளிவெற்பிடை எய்தி, இறைவனுக்கு இவையனைத் தும் உரைத்துக் கீழ்த்திசை வாயில் போற்றி இருந்தருளினன். வேள்வி இடத்திருந்த தேவர் நடுங்கினர். பிரமன் நந்தியின் சாபத்தை அஞ்சி, யாகத்தை முடிக்காமல் இடையே விட்டனன். தக்கன் மனநடுங்கி

உவகையற்று, மாநகர்க் கேகினன். வானவர் நந்தி சாபத்தை எண்ணி எண்ணிப் புலர்ந்து தத்தம் பதி புக்கனர்.

## வேள்விச்சாலை செய் படலம்

அன்று முதல் அளவற்ற காலம் வேள்விச் சடங்குகளைத் தேவர்களேனும், முனிவர்களேனும் செய்தாரில்லை. அதனை அறிந்த தக்கன் ஓர்நாள் தனது சபையின்கண் இருந்த தேவரை நோக்கி, "நீண்ட காலமாக யாககிருத்தியங்களைச் செய்யாமலிருப்பதற்கு ஏது வென்னை?" என்றனன். தேவர், "அன்று நின் தாதை செய்த யாகத்தில் நந்தி இட்ட சாபத்தினை நினைந்து அஞ்சி, இயற்றுது விட்டனம்." என்றனர். தக்கன் அதைக்கேட்டு, "அஃதாயின் முன்னதாக யானேர் யாகத்தைப் புரிவேன். அஃதினிது முற்றமாயின், பின்னர் நீங்கள் புரியுங்கள்." என்று கூறி, அன்னோர் இசைந்ததும், விசுவகர்மனை அழைத்து, "யானேர் வேள்வி செய்யக் கருதினேன். அதற்காகுஞ் சாலையொன்று கங்கையின் கரையில் அமைப்பாய்," என்றனன். அவன் றூன்முறைப்படியே சாலையொன்றினை விண்ணவரும், மண்ணவரும், ஏனையோரும் மெச்சும்படி இயற்றி, அதன் சார்பாக மலர் வாவிகளும், சோலைகளும், பண்ட சாலைகளும், அன்ன சாலைகளும் அடங்கக் கனகலமென்னும் இடத்தினில் அமைத்துத் தக்கனுக்குக் காட்டி உபசரிக்கப்பட்டுச் சென்றான். அச்சாலையை அடைந்த தக்கன், அருகிலிருந்த முனிவர்களைப் பார்த்து, "சமிதை, சாகை, சிருக்கு, சிருவம், யூபஸ்தம்பம், தருப்பைக் கயிறு, யாக பசு, ஞெலிகோல் முதலியவும், முதிரை முதலியவற்றிற்கு வேண்டியன யாவும் விரைந்து கொணருதிர்." என்று அவர்களை யனுப்பிவிட்டான். பின்னர் அவன் காமதேனு முதலியவைகளைப் பார்த்து, "நமது வேள்விக்கு வரும் மறையோர்களுக்கு ஊண் உடையாதிப் பொருள்களைச் சிறப்புடன் நல்குங்கள்." என்று கூறினன். கிளைகளாகிய முனிவர்களை வருவோர்க்கு அன்னம் முதலிய யாவும் குறைவுபாடின்றி அளிக்குமாறு பணித்துப் பின்னும் பலரை அவ்வேள்விக்காகுங் காரியங்களை நன்றுற்றுமாறு பணித்துத் தான் யாகத்தைப் புரிதற்கு, விண்ணவர், முனிவர் முதலியோரை அழைக்கும் பொருட்டுத் தூதரைக் கூவி "சிவனொருவன் நீக்கமாக நின்ற ஏனைய தேவர்களையும், மற்றைய முனிவர்களையும் தவறாது அழைத்து வருதிர். மண்ணுலகி

லுள்ள மறையுணர்ந்தோரையும், ஏனைய எண் திக்கிலுள்ளாரையும் ஈண்டழைக்குதிர்" என்று கூறித் தூண்டினன்

அவர்கள் அவ்வாறே பண்டங்களனைத்தையுங் கொண்டு சென்று நிறைத்தனர்; தூதுவர் அனைவரையும் அழைத்தனர். அப்பொழுது திருமால், திருமகளும், பூமகளும் உடன்போத ஊர்தியிற் போந்தனன். பிரமன், காயத்திரி, சாவித்திரி, சரசுவதி ஆகிய தேவியரோடும் அன்னவாகனம் ஏறிச் சென்றான். இந்திரன், தன் பரிஜனங்களோடு வெள்ளை வாரணமூர்ந்து சென்றான். ஏனைய தேவரும் முனிவர் பலரும் ஒழிவின்றிப் போந்தனர். தக்கன் யாகத்தைக் கண்ணுற்று, அங்குக் கிடைக்கும் அருமையாகிய உணவினை யருந்தி, வேண்டும் பொருள்களை நிரம்பப் பெற்று மீளுவோமென்று பேராவுடன் புவிமறையோர் உள்புக்கிருந்தனர். திருமால் முதலியோர் வருகையைக் கண்ட தக்கன் அவர்களை மரபால் உபசரித்து அழைத்துச் சென்று, தகுந்த ஆதனங்களில் அமர்த்தினன். அழைக்கச் சென்ற தூதுவர்வந்து வணங்குதலும், தக்கன் அவர்களைநோக்கி "நீங்கள் யாவரையும் அழைத்தீர் கொல்? அழைக்கப்பட்டவர் அனைவரும் தவறாது வந்தனர் கொல்?" என்றனன். அவர்கள், "ஐயனே! அகத்தியன், சனகாதியர், அத்திரி, வதிட்டன், பிருகு, ததீசி, துருவாசன், பராசரன் ஆகிய இன்னோர் நம் மகத்தினை இகழ்ந்தனராகி, ஈண்டை யெய்துவார் அல்லர்போலும்." என்றனர். அவர் மொழிகேட்ட தக்கன், "இதனைச் செய்தவர் முனிவருள்ளும் இவர்கள் தாமோ? முக்கண்ணனுக்கு மிக்க நேசமுடையார் போலும்!" என்று வெகுண்டு, கறுவி, தேவர் நடுங்கச் சிரித்தான்.

## ததீசிப் படலம்

அவ்வண்ணம் நிகழுங் காலத்துத் ததீசிமக முனிவன், முனிகணஞ்சூழ அவ்வேள்விச் சாலையின்கண் வந்தெய்துதலும், அவனை நோக்கிய தக்கன், "இவன் சிவனுக்கு அன்பனல்லன். என்னுணையஞ்சி மகங்காண வந்தவனே." என்று கருதி, அவனெதிர் சென்று, உவந்தழைத்துத் தக்க ஆசனத்திலிருத்தினன். அப்பேரவையின்கண் அமர்ந்த ததீசி முனிவன், தக்கனை நோக்கி, "எம்மை நீ அழைத்தது எற்றிற்கு? நீ செய்ய நினைத்ததென்னை? அதனை யான் தெரியுமாறு மொழிவாய்." என்றனன். தக்கன், "யான் பெற்ற மகளை நக்கன்

நண்ணி, மணந்து ஒளித்து, பின்னர் ஓர்பகல் எய்தி என்னைக் காணாது, அவளை அழைத்துக் கயிலை நண்ணினான். அவனைக் காணுமாறு சென்ற என்னைப் பூதர்கள் தடைப்படுத்தினர். யான் மீண்டனன். இதுநாள்வரை என் மகளும் அவன் சார்பினளாய் வைகி, என்னை வந்து கண்டாளில்லை. அப்பொழுது அரியதொரு யாகத்தை எந்தை யாற்றினான். அவ்வுழி அச்சிவன் விடுக்க நந்தி வந்தனன். சிவனுக்களிக்கும் பாகத்தை யான் தடுக்கவும் நந்தி வெகுண்டு சாபமிட்டுச் சென்றனன். பிரமன் அஞ்சி அம்மகத்தை அம்மட்டில் விட்டான். இந்நாள்வரை அந்நந்தி சொற்ற சாப நினைந்தும், என் விரதத்தை நினைந்தும், யாவரும் மகமியற்றாராயினர். ஆன பான்மையை உணர்ந்து, அச்சிவனுக்கு அவியினை மாற்றும் ஆற்றால் ஓர் வேள்வி புரிகின்றனன். வேறோர் பயனையுங் கருதினேனல்லேன். அன்னதற்கே அனைவருந் தொக்கனர். தவத்தான் மிக்கீர்! நுமக்கும் யான் சொல்லி விடுத்தது இதன்பொருட்டே." என்று தன் சொல்லை இறுத்தான்.

அத்தக்கனுரையைக் கேட்ட ததீசி முனிவன் பெருநகை செய்தலும், தக்கன் ஊழிக்கனலொத்து வெகுண்டு, அம்முனிவனை நோக்கி, "நீ அச்சங்கரனுக்கு அன்பன் போலும்!" என்றனன். ததீசி முனிவன், "பிரமனை முதலாகவுள்ள உயிர்களை முன்னாளிற் கருணைகொண்டு உதவிய தாதையாய்க் காத்தழித்து, உலகனைத்துமாகி, ஏகமாகி, உயிர்க்குயிராய், அனைத்திற்கு மேலாய் விளங்கும் பரனை விலக்கியோ யாகமொன்றியற்ற நின்றாய்? தேவரனைவர்க்குங் கொடுக்கும் அவியினைக் கொள்பவனும் அக்கினியின் முதல்வனும், யாகாதிபனும், அருள்பவனும் ஆகிய ஒருவன் சங்கரன் தானேயென்று வேதங் கூறும். அங்ஙனமிருக்க, எச்சக் கருத்தாவாக இங்கொரு தேவனிருந்தால் எழுகவென்று கூறுவாயாக. தேவதேவனும், மகாதேவனும், சிறப்புடைய ஈசனும், மூவரின் முதல்வனும், ஏகனும், முடிவிற்கு முடிவாய் நின்றோனும், ஆவிக்குள் ஆவியாயிருப்பவனும், அந்தணனாவானும், ஆதியும் என்று வேதம் எவரை உரைத்தன? ஆகலான் எவர்க்கும் மேலாகிய சிவபெருமானை இகழ்தல் பேதைமையே யன்றிப் பெருமிதமன்று. அருந்தவ மியற்றினோர் யாவர்? நீ யன்றே! அத்தகைய நீ, வேதவொழுக்கினைவிட்டு யாகஞ் செய்கின்றனை. அவ்வேத உண்மையைத்

தள்ளி நீ வேள்வி செய்யினும் அது முடிவுபெறாது. அன்றியும் அவன் தண்டசக்தியைக் காண்பாய். சிவனை யஞ்சார் யாவரேனும் மாய்வர்; வேதங்களும் தம்முதல்வனென்று கூறித் துதித்தன; ஆகலான், ஆதிமுதலில்லா அவ்வமலனுக்கு அவியை நல்கி, வேள்வி யாற்றுதி." என்னலுந் தக்கன், "சிவனுக்களிக்கும் பாகத்தைத் திருமாலுக்களித்து வேள்வியை முடிப்பேன்." என்றான்.

அம்மொழியை முனிவன்கேட்டு, அனைவரும் புகழுஞ் செவ்வியரை இழித்துச் சிறியரை யுயர்த்தல் உய்யுந்திறமன்று. நும்மனோர் உயிர்க்கெலாம் ஈது இறுதியைத்தரும்." என்றுரைத்தனன். தக்கன், "உனது உருத்திரனை யொத்தவர் பதினொருவ ரிருக்கின்றனர்; அன்றியும் திக்கின் முடிவுகளில் ஈசானர்களிருக்கின்றனர். அன்னோர்க்கு முன்னர் அவியினை நல்கி வேள்வியை முடிப்பேன்."என்றான். அதற்கு முனிவன், "உலக முழுமையு மழித்துத் தன்னிடத்தி லொடுக்கிப் பின்னர்ப் படைத்து, யாவராலும் அறிதற்கரிய தன்மையில் எழுந்தருளியிருக்கும் உருத்திர மூர்த்திக் கொப்பாவரோ அவன் வடிவும் பெயரும் அவனருளாற் பெற்ற அப்பதினொருவர்? உருத்திரமூர்த்தி யென்போன் உயர் பதம் பொருளாய், உள்ளே நடம்புரியும் ஒருத்தன். அவனடிகளைக் கருத்தினில் வைத்தவர் அவனுருவமும் பெயரும் ஆயவற்றைப் பெற்று நிற்பர். அன்னோர் தொகையைக் கணக்கிடக்கூடுமோ? அன்னோர் உருவத்தால் ஒத்திருப்பர் இறைவன் சிவபெருமான் ஒருவனே. ஈசனை அளவில்லாத காலம் இதயத்துன்னி நோற்று இவ்வரிய உருவம் பெற்ற சிவநேசர், இந்திராதியரைப்போல இங்கு வரத் தகுந்தவரல்லர். எம்பெருமானிடத்து நீ அன்பற்றவனென்று உணர்ந்திலர்போலும்?" என்றனன். தக்கன், "மால் பிரமர்களினும் சிவன் சிறந்து முதல்வனாயிருப்பது யாதுகாரணத்தால்? அதனை எனக்கு உரைப்பாய்." என்றனன். "இருவர் தம்மொடும் ஒப்ப எண்ணி மயங்கிய நீ தெரியவேண்டின் சாற்றுவன்" என்றுமுனிவன், சிவபெருமான் பெருமையும், ஏனையோர் சிறுமையும், அவன் இயற்கையிற் பெற்றுள்ள தலைமையும், வேதம் அவனையே சிறப்பித்துக் கூறுதலையும் வகைப்படுத்திக் கூறினன். பின்னர் அவன், "அன்னோனிடத்துத் தவம்புரிந்து பெற்ற திருவினைக் கொண்டு மயங்கி அவனையே இகழ்ந்தாய். இனி அதனைவிட்டு அவியை அவனுக்கு அன்போடு உதவி மகத்தினை முடிப்பாய்." என்று தன்னுரை முடித்தான்.

## ததீசி யுத்தரப் படலம்

இவ்வண்ணம் ததீசிமக முனிவன் இயம்பக் கேட்ட தீவினை யுடைய தக்கன், நகைசெய்து, "இடுகாட்டிற் சிந்திய என்போடு சிரத் தொகையை அணிந்து, தேவர் வெந்த நீற்றையும் பூசுமோ பர னெனும் மேலோன்? உயிர்கழிந்த உடலைச் சுமந்து திரியுமோ? இழிந்த கேசமுந் தாங்குமோ? ஏன எயிற்றையும், ஆமையோட்டையு மணியுமோ? உலகழியும்படி உயிர்களை முடிக்குமோ?" என்று அப்பர மனுக்குள்ள அனைத்தையும் எடுத்து இகழ்ச்சியாகக் கேட்டனன். ததீசி முனிவன், அவ்வகந்தையன் வினாக்களுக்குத் தக்கவாறு அவன் உணரு மாற்றால் உத்தரம் விரித்துரைத்துப், பின்னர்ப் பெண்ணைப் பாகங் கொண்டதும், அருளே அப்பெண்ணுருவானதும், அவனருளே அப் பெண்ணொடு கூடி மால் முதலியோரைப் பெற்றதும், கயமுகனென்னுந் தூய புதல்வனைப் பெற்றதும் முதலாய அவன் வரலாற்றினை விரித்து ரைத்தனன். அனைத்தையுங் கேட்ட வலிமையுஞ், செல்வமும், அத னால் அகந்தையும், அதனால் அழிவும் எய்திய தக்கன் மனம் பொறாத வனாய், "முனிவனே! கேட்பாயாக. நீ இங்குப் பலவும் உரைப் பதிற் பயனென்ன? வெற்றி வெற்பில் உறையும் உனதிறை பகவனே யெனினும், அனையனுக்கு யான் அவியினை நல்கேன் நீயும் இருந்தினி யாதும் மொழியற்க. எழுந்தேகுதி. என்செயல் முடிப்பன் யான்.' என்றனன்.

அக்கணமே முனிவன் கடுஞ்சினங் கொள்ள, அதனைக் கண்ட தேவரும், மற்றையாவரும் நடு நடுங்கினர்கள். முனிவன் சிறிது தணியப் பெற்றவனாய்த் தக்கனைப்பார்த்து, "இங்கு சங்கரனைத் தவிர்த்துச் செய் யும் இவ்வேள்வி யழிவெய்தக் கடவது. நின்னுடன் இங்கிருக்குந் தேவ ரும் விரைவின் அழிக." என்று சாபமுரைத்து, அந்தணரைப் பார்த்து, "அலித்தன்மை யடைந்த வஞ்சகரே! வேதங்களால் துதிக்கப்படும்ஈசனை யும், அவன் விபூதிஉருத்திராக்கத்தையும் எஞ்ஞான்றும் இகழ்ந்துமறை யவராகிப் பூமியிற் பிறந்திறந்து, பல பிறவிகளிலும் உழன்று, அவை திக மார்க்கத்திலிருந்து, பாசத்துட்பட்டு முத்தி யடையாதிருக்கக் கடவீர்." என்று சபித்து, இம்முறையே பல சாபமும் உரைத்துத் ததீசி முனிவன் தன் பரிஜனத்தோடு எழுந்து சென்று, தன் தவச்சாலையை அடைந்தான். சென்ற அம் முனிவன் பின்னரே தக்கன் வரப் பொருமை யனைத்துஞ் சென்றன.

## தானப் படலம்

அத்ததீசி முனிவன் சென்ற உடனே தக்கனுடைய கொடிகள் அறுந்து விழுந்தன. அவ்வேள்வித் தம்பத்தில் காகங்களும் கழுகுகளும் தூன்றின. இவைபோலுந் தீப நிமித்தங்கள் பல உண்டாயின. இவ்வாறு தீய சகுனங்கள் பல தோன்றியும், அவற்றைப் பொருட்படுத்தாமலும், அஞ்சாமலுமிருந்து, தன் பிதாவாகிய பிரமனையும் திருமாலையும் முகமன் மொழிந்து, பூசனைபுரிந்து மற்றைத் தேவர்களுக்கும், முனிவர்களுக்கும் முறைப்படி வேண்டிய பொருள்களைக் குறைவற வழங்கி, அதன்பின் தான் பெற்ற புதல்விகளுக்கும், மருகர்களுக்கும் பெரிதும் சிறப்பு வாய்ந்த மங்கலப் பொருள்களைச் சிறப்புப்பெற அளித்தான். பிரமன் சேய் இவ்வாறு நல்கித் திருமாலும், மற்றையோருங் காத்திடத் தீய தொழிலாகிய வேள்வியைப் புரியும் சமயத்தை நோக்கித் தொடங்கினன். அத்தீயோன் வேள்விச் சாலையில் நிகழ்ந்தவற்றையும் இனிச் சிறிது கூறுவாம்.

முன்னர் தக்கனேவலால் எய்திய காமதேனு அவன் கட்டளையை ஏற்று நின்று, ஓர் வெள்ளி அடுக்கலைபொப்ப அன்னக்குவியலை ஆண்டு ஆக்கியது. அஃதுபாலனைந்த அன்னத்தினையும், அளவிறந்த பேதமாகிய முதிரையாதி உணவுகளையும், அவையன்றி அமைந்த ஓதனங்களையும் நிரலே உலகினில் திகந்தங்களில் அமைந்த குலாசலங்களை யொப்ப வகுத்தது; மணமமைந்த நுண்பொடி தூவி, நெய்யொடு குப்பின் ஆக்கிய வற்றின் ஆவி எத்திசையும் மணம்வீச அவைகளைப் பொரிக்கறிகளாகக் குவித்தது; பல பண்ணிய வகைகளையும், பல கனியின் வகைகளையும் கண்டார் விரும்பத் தொகுத்தது; நெய், பால், தயிறு ஆகியவற்றைக் கடல்களாக ஆக்கியது. அன்றியும் அவ்வான்பசு சாந்தம், பனிநீர், புழுகு, வெற்றிலை, பாக்கு, மாலைகள் ஆகிய இவை முதலியவற்றை உண்டாக்கிற்று. பின்னர்த் தக்கன் ஆணையால் சங்கநிதியும், கற்பகச் சோலையும், சிந்தாமணியும், பதுமநிதியும் அத்தானசாலை யடைந்தது. பின்னர் காமதேனு கணக்கற்ற பரிதிபோலும் ஒளிவீசும் மணிகளை ஓர் புறம் தொகுத்தது; பொன்னை மலைபோல ஓர் புறம் குவித்தது; அணிகளை ஓர் புறம் தொகுத்தது. ஆடைகளை ஓர்புறம் படைத்துத் தொகுத்தது. இவ்வாறு மற்றும் வேண்டிய பொருள்களையெல்லாம் உதவவும், தக்கன் ஏவலின் ஆண்டு நின்ற முனிவர் யாவரும், பூதேவருக்கு

இவற்றையெல்லாம் யாமே வழங்குதும் என்றிசைத்தனர். அவற்றையெல்லாம் முன்னரே யுணர்ந்த முப்புரிநூலினர், நெருங்கித் தம்மனம் ஈர்க்க அவ்வன்னசாலையை யடைந்து, அப்பொருள்களைக் காண்டலும், உவகை மிக்குத் தக்கனை ஏத்தி, இளஞ் சிறாரைப்போன்று பாடியாடி, மார்பிற் குலாவிய வெண்துகிலை வீசியார்த்து, நெருங்கினர். அம்மறையோர்களை முனிவர் கண்டு, "விரைந்து வம்மின்" என்று அழைத்துச் சென்று அரும்பெறல் உணவுகளை அளித்தனர். அது பொழுது அவர் அழிபசி நீங்க ஆரவுண்டு, உண்டவுணவு சாலவும் சுவையுடையதுவாதலின், எண்ணி, எண்ணி அவ்வுணவு மிகவும் இன்னும் வேண்டுமென்று சிலர் ஆர்வமுற்றனர். ஈண்டு ஒரு குற்றமுள்ளது. நான்முகனிடத்துப் பெருந்தவமுயன்று இவ்வுண்டியை அயில, நற்பசியொன்று பெற்றோமில்லை என்றனர் சில்லோர். இவ்வாறு பலபகுதியாய்த் தீஞ்சுவை யமைந்த உணவின் பெருமையைப் பல்லாற்றானும் எடுத்துக் கூறி அவர் அடங்கப் பெறாதவராயினர்.

அதன்பின்னர் அளவற்ற அமுதினையொத்த உணவினை மிக வளிக்கும் இத்தேனுவை வலிய கயிற்றாற் கட்டி ஈர்த்து தம்மூர்க்குப் புகுவோமென உரைத்தனர் நன்றியற்ற சிலர். இவ்வாறு பேரவாக் கொண்டு வறுமையின் இறதிக்கண் நின்ற அம்மறையோர்க்கு வேண்டுவனவற்றை எவ்வாற்றானுங் குறைவின்றியளித்து அம்முனிவர் அருந்தினார்கள். பின்னர் அம்மறையோர்க்கு வாசனை மிகுந்த பனிநீர், சந்தனக்கலவை முதலியவைகளும் வெற்றிலைப் பாக்குடன் மற்றவைகளையும், வண்டுலாவும் வள்ளிய மாலைகளையும் வரிசையின் வழங்கினர். அம்மறையோர் அதன்பிறகு தானசாலையை அடைந்தனர். அங்குள்ள முனிவர்கள் பொன்னையும், ஆபரணங்களையும், ஒளிவீசும் மணிகளையும், கன்னிப் பசுக்களையும், கறவைப் பசுக்களையும் அளித்துப் பொன்னாலாகிய பாதுகைகளையும், குடைகளையும், கமண்டலங்களையும், மற்றும் அவர் வேண்டுவன யாவையும் வேண்டியவாறே கரங்கள் செவப்பேறும் வண்ணம் வாரிக்கொடுத்தனர். இவ்வாறு அம்மறையோர்க்கு ஓர்புறம் மனநிறைவு செய்து நிற்கவும், விண்டு முதலிய தேவர்களின் ஊர்திகள் முழங்கும் முழக்கம் ஓர்புறமெடுக்கவும், ஓர்புறம் விமான வரிசைகள் தோன்றவும், ஓர்புறம் வீணை முதலிய வாத்தியங்களின் இசையொலி நிரம்பவும், ஓர்புறம் அரம்பையர் ஆடல் நிகழவும், அரமகளிர் மலர்

வாவிகள்தோறும் புனல் விளையாடலைப் புரிபவும், வேதவல்லி அரிதிற் பெற்ற ஆசைப் பெண்களும், அழகிய தேவமாதரும், அயிராணியும் யாகப் பெருமையை எடுத்துக் கூறி, அவைகளைக் கண்ணுற்று ஓர் புறத்திலிருந்தனர். இவ்வாறு செயல் பல எவ்வுழியும் நிகழுமாற் ருல் அத்தக்கன் வேள்வி காண விரிகடலனைத்தும் விரைந்தெய்திச் சூழ்ந்தன போன்று மிக்க பேரொலி கலீரென முழக்கங் காட்டியது.

## வேள்விப் படலம்

அரும்பொருள் வளத்தான் மிக்க மேன்மை வாய்ந்த அச்சாலை யின்கண் அகந்தையுற்ற தக்கன் வேள்வி செய்தலும், அவ்வேள்வி யழியவந்த செயலினையும் இனி எடுத்துரைப்போம். துளவமாலை யணிந்த திருமாலும், அவன் உந்திபூத்தோனும் அருகிலிருக்க, யாக கர்த்தனுகிய தக்கன், முன்னர் வரித்துள்ள மேலோரைப் பார்த்து, முறைப்படி முத்தீயினையுங் குண்டங்களில் அமையுங்களென்ன, அவர் நன்றென இசைத்து, செயலுணர்ந்த இருத்விக்குகள், அரணியிற் கடைந்தெடுத்த தீயினை வேதிகைகளில் வைத்துள்ள நெய்விடு கருவி களில் வைத்து, கூறும் மந்திரவிதியினுல் குண்டங்களின் வட்டங்களைச் சுற்றி மற்றுமுள்ள முறையனைத்தையுஞ் செய்து முடித்தனர்.

பிறகு தக்கன், அருகிலிருந்த இருத்விக்குகளைப் பார்த்து, "நீவிர் உங்கள் செயல்களைச் செவ்வையாகச் செய்யுங்கள்." எனவும், பன்னி ரண்டு இருத்விக்குகள் முன்னர் அமைத்துள்ள அவியினையும், வன்னி யாதி சமிதையும், தருப்பையும் இன்னபோல்வன பிறவுங்கொண்டு வழங்கினர். ஒரு இருத்விக்கு யாகத்தை நடத்த, ஒரு இருத்விக்குச் சிவபிரான் நீங்கிய ஏனையதேவர் பெறும் வண்ணம் அவ்வவர்க்குக் கூறிய மந்திரமுரைக்க, அத்தேவரைக் கூவி ஒரு இருத்விக்கழைக் கவும், அவிகளை எடுத்து அக்கினியில் அளித்தும், அம்முறையிற் காலம் பார்த்தும், அதற்கு அம்முதலை யொப்ப நல்லருள் செய்தும் இவ்வாறியற்றிய இருத்விக்குகளோடு மற்றையோரும் இவைகளைச் செய்யுங் காலத்து யாக கருத்தாவாகிய தக்கன், அந்த அந்த தேவர்களை நோக்கி, "அவிகொடுக்குந்தோறும் நீவிர் அவியினைப்பெற்றுண்ணுங் கள்." என்று கூறி அருத்தினன். அவ்வவி, தூய்மையானும், சுவையி னும் அமிழ்தினை யொத்ததாயினும் யிர்க்குயிராகிய சிவபெருமான் இன்றி உண்ணுதலால் அது கொடிய நஞ்சையே ஒத்திருந்தது.

## உமைவரு படலம்

தன் வாழ்வினுக் கிறுதியிட்டுந் தக்கன், புவியின்கண் இவ் வண்ணம் வேள்வி இயற்றுதலை நாரத முனிவன் சென்று கண்டு, "இத்தக்கன் தான் பெற்ற செல்வச் செருக்கால் ஈசனை மதியாது இவ் வேள்வியைப் புரிகின்றனன். இவன் உய்தலுங் கூடுமோ?" என் றெண்ணி, விரைவில் அங்கணீங்கித் திருக்கயிலை யெய்தி, நந்தி தன்னரு ளால் நம்பன் அம்மையோடு வைகும் ஆத்தான மணிமண்டபம் புக்கு, அவரடி பணிந்து நின்றனன். நீலகண்டத்து நின்மலன் நாரதனை நோக்கி, "எங்கு நின்றேகினை?" என்றனன். முனிவன், "காசினியினின் றும் போந்தனன். கங்கையின் கரையில் தக்கன் புதுமைபாய் ஓர் வேள்வி புரிகின்றனன். இஞ்ஞான்று யான் அறிந்ததிது." என்றன னன். அருகிலிருந்த அம்பிகை யெழுந்து, "எனது பிதாவாகிய தக் கன் செய்யும் வேள்வியை யான் சென்று கண்டு மீள அண்ணல், அருள்புரிய வேண்டும்." என்று பரமன் அடி வணங்கினுள். அப்பர மன், "உன் தந்தை உன்னை மதியாது, விண்ணவரோடும், ஏனையோ ரோடும் பொருந்திச் செருக்குடன் யாக மியற்றுகின்றான். நீ அங்குப் போகவேண்டாம்." என்றனன். அதற்கம்மை, அப்புல்லியன் செய்த பிழையைப் பொருத்தருளித் தான் செல்லுமாறு விடையளிக்க வேண்டு மென்று பணிந்தனள்.

அம்மையின் விருப்பத்தை யறிந்த சிவபெருமான், "அத்தக்க னியற்றும் வேள்வியைக் காணும் ஆவல் நினக்கிருக்குமாயின், நீ சென்று கண்டு விரைவின் மீளுவாய்." என்று கூறினன். அம் பிகை விடைபெற்றுச் சேடியர் பலருஞ்சூழப், பூதகணங்கள் புறங் காப்பப், பொன்னின் இயன்ற பெரிய விமானத்தேறி, ஆலவட்டங்க ளும், துவசங்களும், குடைகளுங்கொண்டு அருகில் வரவும், அட்ட மங்கலங்களேந்தவும், பன்னிரண்டு கோடி பூதர்கள் தொடரக் கணதி பணிய சோம நந்தி இடபத்திலேறி முன்னே செல்லவுஞ் சென்று, தக்கனியற்றியுள்ள யாகசாலையை அடைந்தாள். சாலையை அடைந்து உள்ளே செல்லுதலும், தகுதியற்ற தக்கன் அம்மையை வெகுண்டு நோக்கி, "தந்தையுந் தாயுமில்லாத சிவனுக்கன்பு பூண்டு, அவன் மனைவி யாகிய நீ யான் இவ்வேள்வி செய்யும் போழ்து, ஓர் பெண் போன்று எற்றுக்கு வந்தனை? இப்பெரு வேள்விக்கு நீ வருமாறு நினக்கு யான்

கூறிவிடுத்ததுமில்லை. அங்ஙனமாக நீ வருதல் ஆகுமோ? நீ விரைந்து மீண்டு நின் மலைக்கு ஏகுவாய்." என்றான். அக்கடுமொழி கேட்ட ஆருயிர்க்கிறைவி, "மருகர் அனைவருக்கும், என் தங்கைமாருக்கும் தக்க சீர் இங்கு செய்து உறவு செய்தனை. என்னை ஒரு சிறிதளவும் நீ எண்ணுகின்றாயில்லை. அன்றியும் இந்த யாகத்திற்கு வந்த என்னை சிறிப்பார்க்கின்றனை? இது உனக்கு நல்லதா? உனக்கோர் குற்றமேயாகும். உன்னெண்ணந்தானென்னை? அதனை உரைப்பாய்." என்றனள். நன்றி கொன்ற அத்தக்கன், "மூக்குணங்களுள் கொடிய தாமத குணத்தினைச் செய்து, ஈமபடுத்திப் பேய்யாடாடும் பித்தனுக்கு மனைவியாகி நீயும் அவனிலைமை யடைந்தனை. அவனோடு நீ செருக்கி இருந்தமையால் நின்னை இகழ்ந்தேன். உன் தங்கையரை யடைந்த என் மருகர் எவ்வாற்றானும் எனக்கு இனியர். ஆகலான், எல்லா வரிசைகளையும் அவர்க்களித்து, இவ்வேள்வியிலுள்ள நல்ல அவியினையும் அளித்தேன். உலகமுண்ட பெருமாயனும், பிரமனும் வந்தென்னை நித்தலுந் துதிக்கின்றனர். சிவனும் நீயும் ஒரு சிறிதும் மதிக்கின்றிலீர். ஆனவாற்றால், உம்மிடத்து எனக்கன்பில்லை. ஆனேறேறும் நின் கணவனுக்கு வேள்வியில் அவியும் அளியேன்; எனது வன்மையால், சிவனுக்குப் பரத்துவங் கூறும் வேதயாகங்களையும் மாற்றுகின்றேன். அஃதன்றி இங்குற்ற நினக்கு ஒரு சிறிதுஞ் சிறப்பும் செய்யேன்." என்றனன். எம்பெருமாட்டி யாவராலும் ஆற்றற்கரிய பெருஞ் சீற்றத்தைக் கொண்டனள். அப்பொழுது பூமியும், கடலும், மேகமும், திசையானையும் ஆகிய அனைத்தும் நடுக்கங் கொண்டன. அங்குள்ள தேவர்கள் நடுங்கினர். சத்தியின் சினஞ் சிறிதோ? அதுபொழுது அம்மையின் அருகுநின்ற மாதராகிய விமலை அடிபணிந்து, "உலகனைத்தையும் அளிக்கும் அம்மையாகிய நினக்கு அவ்வுயிரனைத்தையும் அழிக்கவல்ல இச்சீற்றந் தகுமோ? தாங்குநர் யாவர்?" என்று வேண்டி அம்மையைச் சினம் தணியுமாறு செய்தனள்.

அங்ஙனஞ் சினநீத்த அம்மை, தக்கனைப்பார்த்து, "நீ இங்கு என்னை இகழ்ந்த தன்மையை உன்னினேனல்லேன். என்னையுடைய நாயகன் சிறப்பினைக் கருதாது இகழ்ந்தனை. அதனால் என்னுள்ளம் பொறாது வருந்துகின்றேன். நீ கூறிய அச்சிவபெருமான் தாமதகுணம் ஒன்றினையுடையவனோ? உயிர்கள் அடைந்த களைப்பை நீக்க அருள்

கொண்டு சங்கரிக்கும் பொழுதுமாத்திரம் தாமதகுணமுடையவன். அஃதும் அருள்கருதியல்லவா? ஏனைய காலங்களில் தாமதகுணம் அவனுக்கில்லை. பேரருளே திருவுருவாக உடையவன், குணரகிதன். காத்தல் படைத்தலைச் செய்யுமவரால் அவ்வழித்தலைச்செய்ய இயலுமோ? முன்னர் அழித்தவாறே பின்னர் எல்லா உயிர்களையும் தோற்றுவிப்பன். இதுவே சிவபெருமானின் உண்மைநிலை குற்றமற்ற வேதங்களையும், ஆகமங்களையும் அருளி, ஆன்மாக்களுக்குக் காப்பாகிய வித்தையனைத்தினுக்கும் இறைவனுகிக் குற்றமற்ற பொருள்களை நல்கும் என் நாயகனை தாமதகுணத்தனென்று கூறவுங் கூடுமோ? வேதமனைத்தும் சிவனே முதற்கருத்தா, சிவனே முதற்கருத்தாவென்று வியந்து அவனையே துதியா நிற்க, நீ அவனை இகழ்ந்து அவனுக்கு அவிகொடுக்காமலிருக்கின்றனை. சிறந்த "சிவ" என்னு மிரண்டெழுத்தினை உரைக்கின்றவர் விரைவிற் கதியடைகுவர். அவனை நீ இகழ்ந்தாய். நின்னையன்றி யாரிது செய்குவர்? நீ எங்ஙனமுய்குவை?" என்று தக்கனைச் சுளித்துப் பார்த்து, "ஓ தக்கனே! இதனைக் கேட்டி. இவ்விடத்தில் ஓர் முகத்தினை வேதநாயகனாகிய சிவபெருமானை விலக்கிச் செய்தனை. ஆதலால் உனக்குத் தண்டம் வந்தடைக." என்று சபித்து, அவ்விடை நில்லாது பொருக்கென அகன்று, தன் பரிஜனங்கள் சூழ விமானமேறி, வெள்ளியங் கிரியையெய்தி, விமானத்தினிழிந்து, உலக நாயகன் வீற்றிருக்குஞ் சன்னிதானமடைந்து, தொழுது நின்று அரனைநோக்கி, "தக்கன் உன்னைப்பெரிதும் இகழ்ந்தனன் அன்னவன் இயற்றும் வேள்வியை அழிப்பாய்." என்று கூறினுள். அதற்கு இறைவன் அருண்மூர்த்தியாதலின், வாளாவிருந்தனன். அதுபொழுது அம்பிகை துன்பங்கொண்டு, "என் நாயகனே! நினக்கு விருப்பும், வெறுப்புமில்லையாயினும், என் பொருட்டு அத்தக்கன் வேள்வியை அழித்தல் வேண்டும்." என்று கூறி வணங்கினுள்

அச்சமயத்தில், நம்மையாளாக உடைய அண்ணல், அம்மையின் அன்பை வியந்து, அவள் சிந்தைசெய்த செயல் முற்றுமாறு சிறிதே தன் மனத்திலெண்ணியருளினுன். எண்ணிய அப்பொழுதே பொன்னிறத்தோடு மேருவின் சிகரத்தை யொத்து, மதியணிந்த மவுலிகளையுடைய ஆயிரஞ்சிரங்களும், குண்டலங்களமைந்த காதுகளும், சிரமொவ்வொன்றிற்கு மும்மூன்று கண்களும், பிறையையொத்த

வாளெயிறுகளும், நாசியிலும் இதழிலும் தீவிழியிற் கக்கிய தீயோ? அல்லது மனத்திடைக் கிடந்த கோபமாகிய தீயோ? என்று பார்ப்பவர் வெருவ எரியைக் கக்கும் முகங்களும், அரவினங்களைக் கடகங்களாகவும, அங்கதங்களாகவும் அணிந்த இரண்டாயிரங் கரங்களுங் கொண்டு ஒரு பெரு வடிவத்துடன் உலகங்களெல்லாம் எடுத்து விழுங்கும் ஆற்றலும், 'வெகுளியு முடையனும் வீரபத்திரனென்னும் பெயரினையுடைய தோன்றல், அச்சிவ பெருமானது நெற்றிக் கண்ணினின்றுந் தோன்றினன். அப்பொழுது உமாதேவியார் தனது சீற்றத்தினால் பெண்களிற்றிண்மை வாய்ந்த பத்திர காளியை உண்டாக்க, அக்காளி ஆயிரந் தலைகளும் இரண்டாயிரங் கரங்களுமுடையவளாகி, உயர்ந்த வீரபத்திரனுக்குத் துணைவியாய் அருகிற் சென்று நின்றாள்.

அவ்வீரபத்திரையுடன், வீரபத்திரன், அம்மையையும் அப்பனையும் வலம் வந்து வணங்கி, "மாலையும் அயனையும் பிடித்துக்கொண்டு வரவா?, மிக்க கொடிய காலனுயிரை முடிக்கவேண்டுமா? அசுரரைக் கொல்லவேண்டுமா? கடல்களை உண்ணவேண்டுமா? உலகங்களை விழுங்கவேண்டுமா? அண்டங்களை நடுக்குவிக்கவா? எல்லா உயிரையுந் தேய்க்கவா? மலைகளை உருட்டவா? இவற்றுள் எத்தொழிலைச் செய்யக் கருதி என்னை யாக்கியது? எது கூறியருளினும் நுந்துணையடிச் சார்பினால் இயற்றுவேன்." என்று கூறினன். இங்ஙனம் இயம்பிய வீரபத்திரனைப் பார்த்துச் சிவபெருமான், "எம்மை மதியாது தக்கனென்பவன் வேள்வி இயற்றுகின்றான். அவ்வேள்விச் சாலையெய்தி எமக்குச் சேரவேண்டிய அவிர்ப்பாகத்தைக் கேள். அத்தீயோன் தருவனேல், மீண்டு ஏகுதி மறப்பனேல் அத்தக்கன் தலையை அறுத்து, அவன் சார்பினரையுமழித்து, அவ்வேள்வியையுஞ் சிதைக்கக் கட்வை. அது பொழுது யாம் அவ்வுழி யெய்துவம். நீ செல்க." என்று ஆணை தந்தருளினன்.

அப்பொழுது வீரபத்திரன அவவிருவர் திருவடிகளையும் பணிந்து, விடைபெற்றுத் தீய தக்கன் இயற்றும் யாகத்தை அழித்திட மனத்தினெண்ணித் தன் திருமேனி முழுவதும் ஆங்காங்கு அநேக ஆயிரமாயிரமாகிய பூதர்களை உண்டாக்கினன். அவ்வாறே வீரபத்திரையும், அநேக காளித் தொகைகளையும், ஏனைய வன்மை வாய்ந்த

பெண்களின் தொகைகளையும் ஆக்கினள். இவ்வாறு தொகுதி கொண்ட அவர், படைகளைத் தாங்கிப் போரினை உவந்து, யாண்டு மாகிப் பரந்து நெருங்கிவர, அக்குழுவிற்கு முன் பானுகம்பன் முத லியோர் பல வாத்தியங்களை இயம்பிச் சென்றனர். இவ்வாறாகப் புறப்பட்டு மிக்க கோபத்துடன் சென்று, தக்கன் யாகமியற்று மிடத்தினை யடைந்து, விண்ணிடியும் நடுங்குமாறு, தனதருகில் வராநின்ற படைத்தலைவரை நோக்கி, "வீரன் பகைவரது புரத் தினை எரித்த நஞ்சிவபெருமானை இகழ்ந்து நீக்கிச் சிற்றினத்தைப் பொருளென மதித்துத் தானிறக்குந் திறத்தாலாற்றுகின்ற இத்தக் கன் வேள்வியின் சாலை வாயில்களைச் சுற்றி நின்று, ஒருவரும் வெளியே போகாவண்ணம் குறி கொண்டு காக்குதிர்." என்றான். உடனே சேனைகள் மதிலின் புறத்தைச் சூழ்ந்தும், விண்ணிடை நெருங்கியும், வாசல்களில் புகுந்தும், தக்கன் சேனையாயினாரைக் கொன்றும், அவர் ஊன்களைத்தின்றும், நமனும் அஞ்சும் வண்ணம் ஆர்த்து நின்றனர்.

பூதர்கள் புறத்தே ஆரவாரிக்க வீரனும், பத்திரையும் உள்ளே புகுந்து அணுகலும், அவ்விருவரை நோக்கிய திசைமுகத்தனாதியர், உள்ளம் திடுக்கிட்டுப் பதை பதைத்து, அச்சங்கொண்டு, மடங்கலைக் கண்டமானினம் போன்றும், இடி ஏறுண்ட அரவினம் போன்றும், உடல் நடுங்கி வன்மையிழந்து, முகப்பொலிவிழந்து, உயிரற்றவரை யொப்ப, ஈசனும் உமையுமே இக்கோலங் கொண்டு வந்தனரென்பர்; அவரது பெருஞ் சீற்றத்தாற் றோன்றியவர் ஆருமென்பர்; இவர் சீற்றமே உருக்கொடு எய்தினர், தம்முயிர் அன்றே இறுதி எய்தும் என்பர். தக்கனும் அற்றைப்பகலில் முடிவெய்துவன்போலும் என்பர். சிவ பெருமானை இகழும் அத்தக்கன் யாகஞ் செய்தல் எற்றிற்கென் பர். தேவர் கூட்டத்தை யெல்லாம் ஒன்று கூட்டி அன்றே முடிக்க விட்டனன் என்பர். வன்மைமிக்க பூதர் சாலையை முற்றினராமென் பர். ஓடவும் அரிதாயிற்று, ஒளிக்கவோ இடமில்லை என்செய்வது என்றிரங்கினராகிக் காட்டுத் தீயாற் சூழப்பட்ட யானைகளை யொத்து வருந்தினர்.

இவ்வாறு மறுக்கமுறுங் காலத்துப் பலபெரும் பூதர் நெருங்கிச் சூழப் பத்திரையுடன் சென்று, தீய தக்கன் வேள்வி செய்தலைக்கண்டு, இடிபோலச் சிரித்துச் சீறி, எரிமுதானறக் கண்களை உருட்டி, விழித்

துப் பதைத்துக் கருச்சனை செய்து, வெற்றிக் கொம்பினை ஊதிக் கடுந் தொனி உண்டாக்கினுன். அவ்வோசையால் மேருமலை பிளந்து விட்டது, உலகம் வெடித்தது, அண்டங்கள் பிளவெய்தின, உயிரனைத்துந் துடித் தன, தேவர் நடுங்கினர். அங்ஙனமெழுந்த ஓசையைக் கேட்டு, இடிவிழு ந்த நாகம்போலத் தேவர்களும், முனிவர்களும் விழுந்தனர்; பதைத் தனர்; வாய் வெருவினர்; ஏங்கி ஓடினர். அப்பொழுது யாகத் தின் எதிரிற்சென்ற வீரனைக்கண்டு தக்கனனவன், சாலவும் நடுக்க மடைந்து, தலைமை நீங்கி, உள்ளந் தளர்ந்து, பூதர்கள் புறஞ் சூழ்ந்த தன்மையும், யாகம் அழிவெய்தும் நிலைமையும், அங்குற்ற வானவர் அலமரும் ஆறும், ஏனைய தீமையாகிய யாவையும் நோக்கிப் பெருந்துயர் உழந்து, பின்னர்த் தேறிப் பெருந்திறலாளன்போல வீர பத்திரனை அணுகி நின்று, "நீ யாவன்? இங்கெய்திய கருமமென்னை?" என்றனன். வீரன், "யான் சங்கரனுக்குப் புதல்வன்; நீ செய்யும் வேள்வியில் அச்சங்கரனுக்கு அளிக்கும் பாகத்தினைக் கொடுக்கக் கடவை. அதனைப் பெறுதற்காக அச்சிறந்தோன் ஆணையால் ஈண் டெய்தினன்." என்றான்.

அதனைக்கேட்ட தக்கன், வீரனை நோக்கி, "உங்கள் அத்தனுக்கு வேள்வியின் அவியினை உலகந்தராது." என்றனன். உடனே அங்கிருந்த நான்கு வேதங்களும், சுத்தமான பிரணவமும் விரைவின் எழுந்து, "முடிவற்ற உயிர்கட்கெல்லாம் இறைவனாகிய அறனொருவனை யன்றி மகத்தினுக்குத் தலைமை எய்தினோன் வேறோர் வானவனும் உண்டோ? வேள்வியில் அவனுக்குரிய பாகத்தை நீ தாமதிக்காமல் வழங்குவாயாக." என்றன. அவ்வேதம் நான்கும், அவற்றின் சிரத்ததா கிய குடிலையும் ஒருங்குகூடி உரைத்துங் கேளாத தக்கன் திண்மையைக் கண்டு, இறைவனை வழுத்தி அவை தத்தம் புகலிடம் போயின. அம்ம றையுங் குடிலையும் மறைந்த பின்னர், வீரன் தக்கனைப் பார்த்து, "வேத மும் பிறவுங் கூறும் விழுப்பொருள் கேட்டனையன்றோ? ஆகலின், எம் பெருமாற்குரிய அவியினை ஈதி!", என்றனன். தீயோன், "சுட லையில் பேதையுடன் நடிக்கும் பித்தனுக்கு அவியினைக் கொடேன்." என்றான்.

அவனுரை கேட்ட வீரபத்திரன், பிரமனை முதலிட்டுப் பாங்கர் அமர்ந்த தேவர் குழுவினை நோக்கி, "நீங்களும் இவன் சார்பிலுள்ளீர்,

இவன் அமலனுக்கு அவியினை மறுப்பது நுங்களுக்கு இசைவாகுங் கொல்?" என்று வினவினான் அவர் முன்னை யூழின் வயத்தால் வீரன் கூறியவற்றைக் கேளாதார் போன்று, ஒன்றும் உரையாராய், ஊமையரை ஒத்திருத்தலும், நின்ற வீரன் நெருப்பெழச் சிரித்துப் பெருங்கோபம் தாங்கி, அண்டம் நடுங்க உரப்பிப் பற்களை நற, நறவென்று கடித்துக் கையிற் பிடித்துள்ள கதாயுதத்தை வலிமையுடன் சுழற்றி, மலையை யொத்த திண்மையுடைய அத்தக்கன் மார்பகம் பிளவுபடும் வண்ணம் ஓங்கி அடித்தனன். அவ்வடியுண்ட தக்கன், நெஞ்சங் கலங்கி எதிரி லிருந்த அரிமுன்னர் அவசமாகி வீழ்ந்தனன். அவன் வீழ்தலும், வீர பத்திரன் அங்கிருந்த மணமலர்த் தவிசோனாகிய பிரமன் சிரத்தில் உருமேறு விழுந்ததை யொத்துத் தனது நெடிய கரத்தை ஓச்சி ஓரே குட்டாகக் குட்டினான்.

அக்குட்டினைப் பெற்ற பிரமன், அங்ஙனே கவிழ்ந்து, அடி பணி வோனைப் போன்று விழுந்தனன். உடனே அவன் நாவின்கண் உள்ள தேவியின் மூக்கும், தனமும் மற்றைத் தேவியரின் மூக்கும் தனமும் தனது வாளினால் ஊழிக்கால உருத்திரனை யொத்த வீரபத்தி ரன் அறுத்தான். இவ்வாறு வீரபத்திரன் இவரை முற்பட்டுச்சாட், அதுகண்டு அங்கண் சார்ந்த இமையோர் யாவரும் ஓடினர், உலந்தார், விழுந்தார், ஒளித்தற் கிடமேதென்று தேடினார், ஒருவரின்றிச் சிதறிக் கதறினார்கள். இம்முறையிற் கடுந் தண்டம் நிகழுங்காலத்து, வீரபத்திரன் இரிந்தோடிய மதிக் கடவுளைப் பிடித் துக் காலினாற் றேய்த்து மாய்த்தான்; அடுத்து ஓடுகின்ற பரிதி யைப் பிடித்து அவன் கவுளிடைக் குத்தலும் பற்கள் தகர்ந்து முற்றிலுஞ் சிந்தின. மற்றொரு பகனென்னும் கதிரவன் கிடைத்தலும், அவனைப் பிடித்து விழிகளைப் பறித்தான். அவ்வுழி நடுங்கியோடின யமன் சிரத்தைத் தன் கரத்து வாளாற் றடிந்தான் குயிலுரு வெடுத்து வெருவி யோடிய இந்திரனைப் பார்த்துத் தன் வாளால் வீசி இருதுணி யாக்கினான். இவ்வாறு அக்கினியைக் கையின்கண் வெட்டியும், கூசா மல் அவியினையுண்ட அவன் ஏழு நாக்களை அறுத்தும், அவன் மனைவி நாசியினை நகத்தாற் கிள்ளி எறிந்தும், இரிந்து சென்ற நிருதியைத் தடுத்து முடித்தும், சரணடைந்த உருத்திரக் குழுவினைச் சீறி வைது செல்ல விடுத்தும், ஈசானனை ஏசித் துரத்தியும், வருணன், வாயு, குபே

ரன் ஆகிய தேவரைக் கொன்றும், அசுரர்க் கிறையாகியவனைக் கொன்றும், மானுருக் கொண்டோடிய மகத் தெய்வத்தின் சிரத்தை ஓர் அம்பினால் அறுத்தும், இன்னவாய தண்டம் பல புரிந்து, வீரன் அவ்வேள்விச் சாலையில் காற்றெனத் திரிந்து வருகையில், அங்கிருந்தவர் பெரும்பாலாரும் தொலைவெய்தினர். அப்பொழுது கலங்கி வீழ்ந்த தக்கன் தெளிந்தெழுந்து, "இவ்வேள்வி என் கண்முன் அழிகின்றதன்றோ? என் பிதா கூறிய மாற்றத்தை எண்ணினேனல்லேன். சிவனை மருகனென்று எண்ணினேன். அவன் அவியினை மறுத்தேன். வீரன் நின்று கேட்டும் என் உறுதியைச் செலுத்தினேன். அச்சிவனளித்த செல்வம் பெற்றும் அவனுக்கு அன்பு பூண்டேனல்லேன் என்னகாரியஞ் செய்தேன்." என்று கூறி இரங்கினான். பின்னர் அவன், "இனி நாம் வெளியே போவதற்கும் வழி கிடையாது. பூதர்கள் நெருங்கினர் ஆதலின், யான் மனத்துணிவுள்ளவன் போன்று இவ்வீரனெதிரே நிற்பேன்" என்று மனம் வலிந்து, தக்கன் வீரபத்திரன் முன்னர் நின்றனன். வீரன் சினந்து, "தேவர்களோடு நீ ஈசனை இகழ்ந்தனை. அதனால் நினக்கு இது தண்டம்." என்று வாளினால் அவன் தலையைத் தடிந்து, அதனைக் கீழே விழாமற் பிடித்து அங்குச் சுழுத்து எரிகின்ற அக்கினியில் இட்டு, "இதனை விரைவில் உண்ணுவாயாக." என்றனன். அத்தீ அத்தீயோன் தலையைச் சாம்பராக்கியது. அப்பொழுது கூந்தல் சரியவும், கைகள் குலையவும் அவ்வுழி அலமந்து அழுதுவந்த வேதவல்லி முதலிய பெண்களைப் பார்த்துப் பத்திரகாளி, முன்னர் அவன் மனைவியாகிய வேதவல்லியின் காதுகளை அறுத்துப் பின் சூழ்ந்துவந்த பெண்களின் தலைகளையும் அவள் பெற்ற அச்சுவனியாதிப் பெண்களின் தலைகளையும் அறுத்தெறிந்தாள்.

இவ்வாறு ஊழிக் காற்றும், ஊழித் தீயும் ஒன்றினாற் போன்று, வீரனும், பத்திரையும் அத்தக்கனால் ஆக்கப்பட்ட வேள்விச்சாலையைத் திரிந்து திரிந்து நாசமாக்கினார்கள். அப்பொழுது புறஞ்சூழ்ந்த பூதசேனை மதிலைத் தள்ளிக்கொண்டு உண்ணுழைந்து, நெருங்கிச் சூழ்ந்து நின்ற தேவரையும், முனிவரையும், உண்டிக்கு ஏங்கிவந்த மறையோரையும் பிடித்துப் பிசைந்தும், எற்றியும், தேய்த்தும், மோதியும், வாரியெறிந்தும், கடித்தும், கிள்ளியும், உதைத்தும், வாளால் வீசியும், அங்கங்களைத் துணித்தும், பெண்களைப் பிடித்து அவர் தன்மையை

அழித்தும், சருவசங்கார காலம் போன்று நாசம் செய்தனர். அச்செயல் கண்ட திருமால் மபக்கம் நீங்கி எழுந்து யாகத்தைத்தான் காத்தது நன்றுபிற்றென்று கூறி கருடனை நினைக்க, அக்கருடன் வீரனால் மாண்டனன். ஆகலின் வாராமையைத் தெரிந்து, மனத்தால் மற்றோர் கருடனை உண்டாக்கி, அவன் மீதேறிப் போருக்கு வீரனை எதிர்த்தான். வீரபத்திரன் ஈசனருளால் எய்திய இரதத்தைப் பிரமன் பாகனை அமைந்து செலுத்த, அதனிடை ஏறித் திருமாலை எதிர்த்து நெடும் போர் இயற்றினன். வீரபத்திரனுக்கு ஆற்றாது திருமால், வீரன் அருகிற் சென்று அவனைப் புகழ, அவன் திருமாலுரைத்த புகழ் மொழியைக் கேட்டு உவந்திருந்த சமயத்துப் பூதர் சூழவும், நந்திதேவர் தோத்தரிக்கவும், உமையம்மையோடு இடபவாகனத்தில் எம்மையாளுஞ் சிவபெருமான் தோன்றினன். வீரன் அப்பெருமானைக் கண்டு, அச்சமும் பணிவுமுடையனாய் அருகில் ஒதுங்கி நின்றனன். திருமால் முதலியோர் தாழ்ந்தெழுந்து நின்று, நீங்கிய தாயினைக்கண்ட குழவியின் நிலையராயினர்.

உமாதேவியார், அவ்வேள்விச் சாலையில் கால் வேறு, தலை வேறு, கரம் வேறு, உடலம் வேறாகத் துணிந்து கிடந்த தேவர் நிலையினை நோக்கி, அருள் பூண்டு, சிவபரஞ்சுடரைப் பார்த்து, "முன்னை யான் வேண்டியதை இவ்வீரனைக்கொண்டு முடித்தாய். இன்று யான் வேண்டுவது இன்னோரை நீ எழுப்புவதே." என்று வணங்கலும், சிவபெருமான் வீரனைப் பார்த்து, "இவர்களை எழுப்புவாய்." என்றான். அவ்வீரபத்திரன், 'எழுவீர்,' என்று கூறுதலும், இறந்த அனைவரும் முன்னையுரு பெற்றெழுந்து, இந்திரனைமுதலிட்ட அத்தேவரும், முனிவரும், மற்றையோரும் உமாபதியின் திருவடி வணங்கித் துதித்து நின்றனர். அக்குழுவினுள் தக்கனைக் காணாத பிரமன் சிவபெருமானை வேண்டி கேட்கவும், அப்பெருமான் ஆணையால் மாண்ட தக்கன் உடலைப் பூதர் கொணர்ந்தனர். அங்ஙனம் துணிக்கப்பட்டு மரித்து கிடந்த அவ்வுடலுக்கு ஆட்டின் தலையைப் புணர்த்தி, வீரன் அவனை எழுப்புதலும், அவன் பெரும் பயமடைந்து வணங்கி ஓர்புறம் நின்றனன். இறைவன், "தக்கனே! அஞ்சற்க." என்றருளினன். தக்கன் அம்மையோடெழுந்தருளிய முன்னவன் திருவடிகளில் விழுந்து பணிந்து, "அடியேன் அறியாது செய்த குற்றமனைத்தையும் பொறுத்து அருள்புரிய வேண்டும்." என்றனன்.

சிவபெருமான் அவ்வனைத்தும் பொறுத்தனம் என்றருளி, பணிந்து சூழ்ந்த மற்றைத் தேவர்களுக்கும் அருள்புரிந்து, வீரபத்திரன் பத்திரகாளியோடு முன்னரேகப் பூதகணஞ்சூழ, உமையம்மை யோடு இடபமேறிக் கயிலையை யடைந்து, அங்கிருந்து கணத் தலைவர் அனைவருக்கும் தத்தம் இடம்புக விடை யளித்தனன். பின்னர் அப்பரமன் அங்கிருந்த வீரபத்திரனுக்கு மேலுலகத்தில் ஓரிடங்காட்டி, அங்கு அவனைத் தன் தேவியோடும், பூதரோடும் இனிதிருக்குமாறு அருள் புரிந்தனன். நந்திமணத்தவர் வாயில் போற்ற உமையம்மையோடு அம்மகா மண்டபத்தில் அரியணையில் எழுந்தருளி இருந்தான்.

இங்கிது நிகழவும், தக்கன் வேள்வியில் இறந்து எழுந்ததைக் கண்ட பிரமன், அவனை நோக்கி, "யான் முன்னர்க் கூறிய அனைத்தையுங் கேளாது விடுத்தாய்; பொருளைப் பெரிதென மதித்தாய்; உன்னை மிக வியந்தாய்; பின்னர் நன்றியை மறந்தாய்; அனைத்துலகையும் ஆள ஆவலடைந்தாய்; பேதை நீஇனிப் நினைக்கிது தகுமோ? முன்னுள்ள தலையை இழந்து, ஆட்டின் தலையை அன்றோ பெற்றனை? அச்சிவ பெருமானை வேதங்கள் பரமென்று கூறவுங் கேட்டிலையே. இனி யாவது அவனை வணங்கி நற்றவ மியற்றி ஞானத்தைப் பெறுவாய். நாங்களிருவரும் முன்னை நாளில் எம்மைப் பரமென்று மதித்து, மயங்கிக் கிடந்தோம். அப்பொழுது அப்பரமன் அக்கினிப் பிழம்பாய் நின்று, திருமாலையும் என்னையும் அடைந்துள்ள அகந்தையை நீக்கியருளினன்." என்றனன். அவ்வுறுதியைக் கேட்ட தக்கன், "நும்மிருவருக்கிடையே வந்து அப்பரமன் உணர்த்திய செயலனைத்தையும் யானுணருமாறு விரித்துக் கூறுவாய்." என்றனன். பிரமன் முற்காலத்தில் இறைவன் அனற் பிழம்பாயிருக்க, அவன் அடியையும், முடியையும் விஷ்ணுவும் பிரமனுமாகிய தாமிருவருந் தேடிய சரித்திரத்தைத் தக்கன் உணருமாறு உரைத்து, அவனறிவை விளக்க, அவன் தெளிவு பெற்று எழுந்து, பிரமன் அடிகளில் விழுந்து பணிந்து, அவ்வாறே அச்சிவபெருமானை அருச்சித்து, முத்தி இன்பத்தினைப் பெறுவனென்று கூறி, விடைபெற்றுக் காசி நகரடைந்தான். அவிமுத்தத்தினெய்திய அத்தக்கன், கங்கைக் கரையில் மணிகன்னிகையின் ஒரு புறத்தில் அமலனுக்கு ஓராலயமமைத்து, அத

னிடை அருளுருவாகிய சிவபெருமானைப் . பூசித்தற்கு அருவுருவத் திருமேனி யொன்றைப் பிரதிட்டை செய்து, சிவபரம்பொருளால் உரைக்கப்பட்ட சிவாகமங்கள் கூறும் முறையானே சிவதீக்ஷா விர தத்தினை யுடையனாகி, சிவபெருமானது திருவடி மலர்களை ஆயிர வரு டங்காறும் முறைப்படி அருச்சனை புரிந்து துதித்தான்.

மாசற்ற தக்கன் அன்பினை யறிந்து சிவபெருமான் எழுந்தருள, அப்பெருமான் திருவடிகளைத் தக்கன் வலம் வந்து, பன்முறை வணங்கி, "அடியேன் செய்த சிவாபராதத்தினால் எய்திய தீவினையைப் போக்கி, அடியேனை நின் திருவடிக் காளாக்கி யருளவேண்டும்." என்று இரந்து வேண்டுதலும், பெருமான் அவனுக்குத் தன் கணத்தலைமை நல்கி மறைந் தான் யாகத்திலிறந்து உயிர்பெற்ற தேவர்கள் தத்தம் பதிபுக்குச் சிவார்ச்சனை செய்து, தம்தம் இறைமையில் இனிதிருந்தனர் என்று வியாழ பகவான் ஜயந்தனை நோக்கிக் கூறுதலும், அச்சயந்தன் சென்னி துளக்கி, கவலையற்று நனிமகிழ்ந்து அரசுபுரிந்து வந்தான்.

## கந்த விரதப் படலம்

சிறப்பமைந்த பகவான் புதல்வன், விண்ணுலகத்தில் அரசு செலுத்தி இருப்ப, இவ்வுலகின்கண் தானை வேந்தனாகிய முசுகுந்த னென்னும் அரசன், முருகப்பெருமானுக்குரிய விரதத்தினை யாற்றிக் கடல் சூழ்ந்த உலகினை யாண்ட ஒன்றை இனி இயம்புகிறபாம். முன் னோர் பகல் முசுகுந்தனென்னும் அரசன், வசிட்ட முனிவன் உறையும் ஆச்சிரம மடைந்து, அம்முனிவனை வணங்கித் துதித்து, "எந்தையே! கந்தவேள் விரதமனைத்தையும் உரைத்தருள வேண்டும்." என்றனன். வதிட்டன், "மைந்தனே! கேட்டபடியாக." என்று அம்முருக வேள் விரதமனைத்தையும் கீழ் வருமாறு உரைக்கத் தொடங்கினான்:—

"குற்றமற்ற ஞாயிறு முதலாகிய எழுவகை வாரங்களுள் வெள்ளி நாள் விரதமே குமாரஸ்வாமியின் விரதமாம். அவ்வெள்ளி நாள் விரதத்தை அனுட்டிக்கும் பெரியோர்கள், தம் உள்ளத்திலெண் ணிய பேறனைத்தையும் பெறுவார்கள். பகிரதன் என்னும் ஓரரசன், ஆண்ட மண்ணுலகமனைத்தையும், கோரனென்னும் வலிய அசு ரன் கைப்பற்றிக்கொள்ளத் தன் மனைவியும் மகனுந் தொடரக் காட்டிற்கேகிப் புகரிடம் புக்குத் தனது குறையை மொழிந்து, நின் றான். அப்பார்க்கவனென்னும் அசுரகுரு, பகீரதனைப்பார்த்து,

"முருகப் பெருமானுக்குரிய வெள்ளிநாள் விரதத்தினை மூன்று வருடங் காறும் நோற்பையாயின், நுங்களுக்குத் துன்பஞ்செய்த அக்கொடியோன் மாய்வன். நீயும் நின்னரசினை எய்துவாய்." என்றனன். பகீரதன் அதனை நன்றென்று கேட்டு வெள்ளிக்கிழமைத் தினமுற்றும் உண்டி துறந்து, முன் பின்னுன வியாழன், சனி ஆகிய இவர்களுக்குரிய நாட்களில் பகலுணவருந்தித் துயில் நீத்து, இம்முறையே மூன்று வருடம் நோற்றலைச் செய்தான்.

நோற்ற அளவில் முருகப்பெருமானுடைய செவ்விய வேற்படை சென்று, மாற்றலன் உயிரை வௌவி ஒல்லையின் மீள, குகப்பெருமான் திருவடிகளைப் போற்றிப் பகீரதன் தன்னூர் எய்தித் தன்னரசினை ஆண்டு வந்தான். இஃதொன்றன்றி மற்றுமோர் விரத முறைப்பாம். மலர்மிசை வதியும் நான்முகன் மைந்தனாகிய நாரதனென்போன், நல்ல விரதமியற்றி, எழுமுனிவருள் உயர்ந்திடு பதமும், மிக்க சீரொடு சிறப்பும் எய்தச் சிந்தனை செய்து, உமையம்மையின் மூத்த புதல்வனாகிய கணேசப்பெருமானை யடைந்து, அடிபணிந்து நின்று, "முதல்வனே! தகுதி வாய்ந்த சப்தரிஷிகளுள் யானே சிறப்புற்று ஓங்க, ஓர் விரதத்தினை அடியேனுக்கு உரைத்தருள வேண்டும்." என்றனன்

அம்மொழிகேட்ட கணேசப் பெருமான், அருள் சுரந்து, "ஆறுமாமுகத்து நம்பியின் பொன்னடி வழிபாடாற்றி, நிகரற்ற கார்த்திகை நாள் நோன்பைப் பன்னிரண்டு வருடங்காறும் புரிகுவையாயின், அதனை உறுதியாகப் பெறுவாய்." என்றருள் புரிந்தான். நாரதன் நன்றென விநாயகப்பெருமான் அடிகளைப் பணிந்து, விடைபெற்றுச் சென்று பூவுலகெய்திப் பரணிநாள் பிற்பொழுதில் ஒருபொழுதுஉண்டு கார்த்திகை நாளிற் செவ்வேற் கரத்தனுக்குரிய நோன்பினைப் புரியத் தொடங்கி, உடுத்த ஆடையுடன் நீரின் மூழ்கித் தூய்மையுள்ள வெள்ளிய ஆடையுடுத்து, ஆசார நியமம் முடித்துச் சிறந்த புலன்களையுடையனைக் குருவின் பதத்தைத் தலைமேலமைத்து, சிவபரஞ்சுடராகிய முருகன் திருவடிகளைப் பூசித்து, அப்பெருமானது புராணத்தையுங் கேட்டனன். பின்னர் நீரினை அள்ளித் தன்னொருகை கவித்து, மும்முறைபுண்டு, பரப்பிய தருப்பையாகிய பாயலிற் படுத்து, இளங்கொடியனைய பெண்களைக் கடுவென நினைத்து வள்ளல் அறுமாமுகன் துணையடிகளை மனத்திலுன்னிக் கங்குல் கழிதருமளவுங் கண்டுயிலாது

இருந்து, அற்றைநாள் அகன்று உரோகணி எய்தியதும், சந்திவந்தனுதி நியமங்களைப் பொருக்கெனமுடித்துக் கந்தவேள் திருவடியைக் காதலித் தேத்தி, சென்ற மாதவரொடு சேர்ந்து பாரணஞ்செய்தான். விரத முடிவில் உண்ணுதலாகிய பாரணத்தினை முடித்தோன் அற்றைப் பகற் போதில் உறங்குமாயின், ஆரணமுணர்ந்த மறையோரில் நூற்றுவரைக் காதிய பாவம் வந்தெய்துமென்று அம்மாயம் வல்ல நாரதன் உணர்ந்து, கண்களைச் சற்றும் இமையாது, மேற்கடலிற் கதிரவன் செல்லுங்காறு மிருந்து, பின்னர்ச் செய்யவேண்டியவற்றைச் செய்து முடிக்கும் நாரதன் இவ்வண்ணமே பன்னிருவருடஞ் செய்து, எழுமுனிவருக்கும் உயர்ந்த பதத்தினைப் பெற்றான்.

இந்த நல்ல விரதத்தை இங்கொருமறையவன் இயற்றி, முதன் மனுவாகப் பிறந்து, உலக முழுவதுந் திகிரியுருட்டி ஆண்டனன். பின்னொரு மறையோன் ஆற்றி மனத்திலெண்ணிய அனைத்தையும் எய்தித் திருசங்குவாயினன். இவ்விடை ஓராசனும், வேடனும் நோற்று அந்திமான், சந்திமானென்னும் பெயரினையுடையவர்களாய்க் கடற் சூழ்ந்த நெடிய உலகினை யாண்டனரென்று கூறுவர். இவ்விரதத்தினை அனுஷ்டித்தவர் பின்னாளில் முத்திபடைவது திண்ணம். இவ்வகை யாகக் கார்த்திகை நாளின் விரதத்தினை யாற்றி, முப்புவனத்தின் வேண்டும் முறைமையை அடைந்த தகுதியினர்த் தொகையினை உரைக்க வல்லுநர் யாவர்? இஃதன்றி நிகரற்ற வேறுமோர் விரதமுண்டு. அதனை உரைக்குதுங் கேட்டி! குன்றினையட்ட குமரவேளினைத் துதித்தத் தேவரும், முனிவரும் துலாமாதத்துச் சுக்கிலபக்கத்து முதற்றினம் முதல் ஆறுதினம்வரை நோன்பு புரிந்தனர். பிரதமை முதல் சஷ்டி இறுதியாக வைகலும் காலையில் நீரின் மூழ்கி, இரண்டாடை யுடுத்துச் சந்திக் கடன்களை முடித்து, இரவில் தம்பவிம்ப கும்பங்களிற் குமர வேளை முறைப்படி பூஜித்து, இனிய பண்ணியங்களை அவருக்கு நிவேதித்து, மற்றமாவன செய்து, அக்குகப் பெருமான் திருப் புகழினைத்துங் கேட்டுச் சிறிதுநீரருந்தி உபவசித்திருந்தனர். ஆரண முனிவரும், அமரரும் அச்சட்டியின் பின்னாள் அறுமுகற்குச் சிறப் புடன் பூஜை செய்து, முறைப்படி பாரணஞ் செய்தனர். இவ்வாறு செய்த விரதத்தினால் புவியிலிருந்த அசுரர் கொண்ட தம் பதத் தலைமை யைத் தாமே பெற்றவர் என்று வசிட்ட முனிவன் கூற, அவற்றைக்

கேட்ட முசுகுந்தன், நன்றெனஅடிபணிந்து, "இவ்விரதத்தினை யான் புரிகின்றேன்." என்று பேருவகை யடைந்து சென்று, அன்று முதல் அளவிறந்த காலம் அவ்விரத மியற்றிக் குமரவேள் குரைகழல் நினைந்திருந்தான். அவ்வாறு நிகழுங் காலத்து, அறுமுகப் பெருமான் அருள நினைந்து, வீரபாகுவும், எண்மரும், ஏனைய இலக்கருஞ் சார்ந்துவர, மஞ்ஞை யேறி அமரர் காண, அங்கு வந்தடைந்தான். அடைந்த கந்தவேளை வலம் புரிந்து அடிபணிந்து, "அளப்பில் காலும் அருந்தவம் உஞற்றுநர்க்கும் எய்தாத மூர்த்தியே! அடியேன் பொருட்டு எய்தினையோ?" என்று பன்முறை துதித்து, நின்ற முசுகுந்தனைப் பார்த்து, "வேண்டுவது யாது?" என, முசுகுந்தன், "அண்ணலே! பாரெலாம் நன்று என் ஆணையின் நடாத்த, வீரபாகு முதலிய வீரரைக் கேண்மையோடு என்படைத் துணைவீரராகத் தந்தருள வேண்டினேன்" என்றான். முருகப்பெருமான், அவ்வாறே அருளுவே மென்றுரைத்து, வீரபாகு முதலிய வீரரைப் பார்த்து, "முசுகுந்தன் நும்மினும் எம்மிடத்து ஏற்ற மிக்க அன்புடையன். ஆதலின், அவன் உலக முழுமையும் அரசுபுரிவான். அவனுக்கு நீவிர் படைத்துணைவராகி, நண்புடன் அமையுங்கள்." என்றலும், அவ் வீரரனைவரும், "அளவற்ற வன்மையாளனாகிய சூரபன்மன் மாவை வேரோடும் அறுத்த திறலுடைய அடியேம், இப்பாரகத்தமைந்த பானுவின் வழிவந்த சிறு மகன் பாங்கராகி, இழிதொழில் புரியகில்லோம்." என்று மானத்தால் மறுத்துரைத்தனர். ஞான நாயகன் அவர் உரைத்ததைக் கேட்டு, 'நீவிர் நமதுரையை மறுத்துரைத்தீராதலின், இம்மண்ணுலகிடை மானிடராய், இம் மன்னன் சேனைக் காப்பாளராய், இவனைப் புறங்காத்துப் பல நாள் வாழுதிர். பிறகு தேவரும் புகழுமாற்றால், நோன்பினை இழைத்து, நம்மிடைச் சாருதிர்." என்று சபித்தருளினன். அவ்வுரை ஏற்ற வீரர் நடு நடுங்கி, மெய் வியர்த்து, மயங்கி, முன்னைய வலிகுன்றி, எம்பிரான் திருவடிகளில் விழுந்து பணிந்து, "எம்மை யாண்டருள வேண்டும்." என்று இரந்து கூறி, விடைபெற்று, முசுகுந்தன் பக்கலிற் சார்ந்து, படைத்தலை வீரராகி, நண்பு பூண்டு, அவனோடு ஏகினர்.

முசுகுந்தனுக்கு விடை கொடுத்தருளிய முருகப்பெருமான் மஞ்ஞை யூர்ந்து, தன்பதி புக்கனன். குமாரமூர்த்தி மறைந்தருள

னும், முசுகுந்தன் மகிழ்ச்சிகொண்டு, சிறந்த கருவூரென்னும் பதியில், அரசின் மேவியிருந்து, அங்கண் அளவிலவாய மாட வீதிகளைப் புரிவித்து, நிலைத்த வீரரை அங்ஙனே இருத்தி, அவ்வீரரனை வர்க்கும் பெறற்கருஞ் செல்வமுடைய தேயங்களையும், யானைத் தொகுதியையும், பரியின் பகுதியையும், ஏனைய வரிசைகளையும், நல்ல ஆட்படையையுங் கொடுத்துச் சேனாபதியாகச் சிறப்பித்தனன். அவ்வாறாகிய காலத்து அரம்பை முதலிய மங்கையர், புவி மன்னரிடங்களிற் பிறந்து வளர்ந்து வருதலும், முசுகுந்த மன்னன் அக்கன்னியரை வருவித்து, வானகமொய்ம்பன் முதலிய வீரர்களுக்குக் கடிமணம் புரிவித்தான்.

அளவற்ற வன்மை சான்ற வீரபாகு தேவன், புட்பகந்தி யென்னும் பெயரினையுடைய பெண்ணை மணந்து, மகிழ்வுடன் அவளைக் கலந்து, சித்திரவல்லி யென்னுஞ் சிறப்பினையுடைய புதல்வியைப் பெற்றுப் பின்னரும் அனகன், சனகன் என்னும் புதல்வரைப் பெற்றனன். அவ்வீர மொய்ம்பன் தன் மகளாகிய சித்திரவல்லியை உலகினையாளும் முசுகுந்தனுக்கு வேதவிதிப்படி மணமுடித்துக் கொடுத்தான். ஏனைய வீரர்களும், முறைப்படி மணந்த மாதருடன் கூடிச் சிறந்த இல்லறம் நடாத்தி, ஆண் பெண் ஆகிய மகவுகளைப் பெற்று, அம்மனு குலத்து ஒன்றி வாழ்ந்தனர் அங்ஙனம் நிகழும் நாளில் சித்திரவல்லி யென்னுஞ் சீருடைய செல்வி, ஓர் கிள்ளையைக் குலாவி வளர்த்தனள். அந்தத் தையின் திறத்தைத் தெரிந்த தருமனது தேவி, அதனைப் பெறுந் திறத்தை விரும்ப, அதனைத் தெரிந்த அந்தமனது தூதுவர் விரைந்து சென்று, சித்திரவல்லியின் கைத்தலத்துற்ற கிளியைச் சடக்கெனப் பற்றிச் சென்று, தண்டகன் தேவி கையிற் கொடுத்தனர். அது பொழுது கிளியைக் காணாது சித்திரவல்லி வருந்தலும், அவள் கணவனாகிய முசுகுந்தன், அக்கிளி யாண்டுச் சென்றதென்று ஆராய்ந்து, இறுதியில் தென்றிக் கிழவன் தேவியின் கரத்ததென்றுணர்ந்து, வீரபாகுதேவன் முதலிய வீரரை யழைத்து, அப்பொழுதே நமனுலகிற் கனுப்ப, அவ்வீரர் நால்வகைப் படையொடும் புறப்பட்டுச் சென்று, தென்றிசையிலுள்ள மேதியன் முதுநகரை முற்றி நின்றனர். அதனையுணர்ந்த தருமன் போர்க்கோலங் கொண்டு நின்று போர்புரிய, வீரர் அவன் வன்மையை ஒழித்து, அவன் மனைவி கையகத் திருந்த வன்ன

மெல்லிளையை அவனாற் பெற்று, மீண்டு சென்று, மின்னற் கொடி போன்ற தங்குல மடந்தை உளமுவப்ப நல்கி, அரசனுக்கு விஜயஞ் செய்தனர்.

சித்திரவல்லி, பின்னர் அரிய கருவினைத் தாங்கிச் சிறந்த கனி, காய் முதலிய கருக்கொண்ட காலத்து மகளிர் வெஃகும் பொருள்களைக் கேட்டலும், அவைகள், அரசனுக்கு அடங்காதார் புலத்திருக்க, அவைகளை வீரபாகு தேவன் முதலிய வீரர்களால் அப்பகையை வென்று அடைந்த அரசன் மனைவிகையிந்து, உவப்பினை யூட்டினான். இவ்வாறு அவன் ஆணை யாண்டுஞ் செல்ல, வெற்றி பளித்து, வீரர் வைகினர். கருமுதிரப் பெறுகின்ற காயர் கற்பகக் கொடி யனைய அச்சித்திரவல்லி, ஒளியினையுடைய அக்கினிவர்மனென்னும் அரிய புதல்வனைப் பெற்றனள். அங்ஙனம் அரிதிற் பெற்ற அப்புதல்வனைக்கண்டு முசுகுந்தன் உளமகிழ்ந்து, பேரரசு புரிந்து வைகினான். அக்காலத்தில் வலாசுரனென்னும் அவுணனொருவன், பெருஞ்சேனையோடு சென்று, இந்திரனை எதிர்த்துப் போர் புரிகையில், பல நாள் அமர்புரிந்தும், இந்திரனுக்கு வெற்றி வாராமையால், பூவுலகில் அரசுபுரியும் முசுகுந்த மன்னனை அழைத்து வருவாயென்று ஒரு ஒற்றனை விடுப்ப, அத்தூதுவன் முசுகுந்த மன்னனை எய்தி, மகவான் உரைத்ததை யுரைக்க, மன்னன் வீரபாகு முதலிய வீரர் சூழ, படையொடும் பெயர்ந்து, விண்ணுலகடைந்து, மகபதியைப் பணிந்து, தேவ சேனையின் தலைமையைப் பெற்று, மான்குழுவிற் செல்லும் மடங்கலை யொத்து, அவுணப்படையைக் கலக்கிச் செறுத்தான். சூழ்ந்து நின்ற அவுணப்படை மாய்தலும், வலாசுரனை இந்திரன் எதிர்த்துச் சில பகல் பொருது, பின்னர் வச்சிரப்படையால் அவனை மாய்த்து, முசுகுந்த மன்னனை அழைத்துச் சென்று, ஒப்பற்ற தனது மாளிகையை அடைந்தான்.

மனையினெய்திய மகவான் முசுகுந்த மன்னனைப் பார்த்து, "காய்ந்தெதிர்ந்த பகைவா வலியைக் கடந்து; என்னை அமரர் வேந்தாக்கினை; வீரமும், மேதகுபுகழும் ஈந்தனை; நற்றுணைவனுமாயினை. இதனால் நீ எனக்கு அந்தரங்கமான உறவினன் அல்லவா?" என்று கூறி, அளவற்ற முகமன்கள் இயம்பித் தன்னில்லிற்குக் கொண்டு சென்று, அரசனுக்கு வேண்டுங் காரியங்களை முடிக்க, அங்குள்ளாரை உபசரிக்குமாறு

பணித்துத் தான் மணமமைந்த நீரின் மூழ்கி, தூய ஆடையணிந்து திருமால் தொழுந்தேவனைப் பூசையியற்றினான். நண்ணார் புரமெரித்த நஞ்சணி கண்டன், இமைய மங்கையும் மைந்தனும் ஓர்புடை மகிழ்ந்து மேவ, திருக்கயிலையின்கண் அமர்ந்தருளி இருத்தல்போல இருத்தலைக் கண்டு, முசுகுந்த மன்னன் அன்பினாற் பரவசமாகித் தன்னை மறந்தான். அதன் பின்னர்த் தெளிந்து, ஆடியும், பாடியும், அடிகளை முடிமேற் சூடியும், உருகியும், துள்ளியும், சுருதிபாடியும், காங்கொட்டியும், பகரொணா உவகைகொண்டு, மொழி குழறி, உடலிற் புளகம் உண்டாக நின்று, சிறந்த வெற்றி வெற்பில் எழுந்தருளும் பரமனை நெடுநாளாக மறந்தனன் கொல் தீயேன் என்று, அவனை மறவாதிருத்தற்கு அவனையே வேண்டி, அப்பொழுதுடைய அம்முசுவின் முகத்தொடு மனு குலத்திற் பிறந்தரசனாகி வந்த அம்முசுகுந்தன், தேவதேவனாகிய சிவ பெருமானை நோக்கித் தொழுது, பலவாறு துதித்து நின்றனன். எம் பிரான் கருணைசெய்து அவன் முகத்தை நோக்கி, "மன்னனே! எம்மைச் சக்கரப்படையினையுடைய மாயோன் எல்லையற்ற காலம் மன மகிழ்ச்சியால் பூசைசெய்து, பின்னர் தேவராஜனிடத்து வைத்தனன். நீ நம்மைப் பூவுலகத்துக்கொண்டு சென்று பூசனை புரிவாய்." என்றருளினான்.

இவையனைத்தையும் இந்திரன் கேளாவகை முக்கண் மூர்த்தி முசுகுந்தனுக்கு உரைத்தருளலும், மன்னவன் மகிழ்வடைந்து, "தேவரீர் திருவுளம் இஃதாயின், அடியேன் உய்ந்தனன்.' என்று விம்மிதமுற்று நின்றனன். அதன்மேல் சிவபெருமானுக்குரிய பூசனையை மரபின் முடித்து வந்த இந்திரன், அக்கினி காரியம் முடித்து, ஏனைய கடன்களையும் ஆற்றி, வேறோர் மாடமணைந்து, சுராபியை விளித்து, வெந்திறல் வாய்ந்த வீரனாகிய முசுகுந்தனுக்கு அந்நாள் விருந்து செய்வித்தனன். பின்னர் விசித்திரமான ஆடைகளையும், பூண்களையும் ஒளி தரும் மணிகளையும், முத்துக்களையும், உவந்து நல்கி, தெய்வப் படைகளையும் ஈந்த பின்னர், பரிவானோக்கி, "வேண்டுவ இன்னும் பகருதி." என்றனன். முசுகுந்தன், "எவரும் அறியா இமையா முக்கண் எந்தையை, யான் பூவுலகத்து வைத்துப் பூசனை புரிதற்பொருட்டு, இப் பாவையோர் பாகன் தன்னைப் பரிந்தெனக்கீதி." என்றனன். அதனைத் தேவர்கோன் கேட்டு, "உந்தியால் உலகினைப்பெற்ற உயர்வுடை முசுகுந்

தன், முன்னர் மைந்தரின்மையால், மன்னுயிர்த் தொகைக்கு ஒரு தனி முதல்வனாகிய பரமனை உன்னிப் பலகாலம் தவமுஞற்றினன். அத்தவத்தினை உவந்த சிவபெருமான், பூதப்புணரி சூழ, அருளுருவாகிய அம்மையோடு அவ்விடைத்தோன்ற, அவனியுண்ட அண்ணல் அவன் சரணடைந்து, வணங்கித் தொழுதெழுந்து ஏத்தி நின்றனன்.

மங்கையோர் பாகன் மகிழ்ந்தருளி, "நெடும்பகல் பெருந்தவம் ஆற்றினை, யாது வேண்டினை? அதனைக் கூறுதி." என்றனன். திருமால் "அந்தமில் ஆயுளும், ஆருயிர் அளிப்பும், செந்திரு உடனுறை செல்வமும் முற்பகல் ஈந்தனை. இப்பகல் மகவின்றி வருந்தினேன். ஆதலின், இவ்வின்னலைப் போக்கி யருளவேண்டினேன்." என்றனன். சிவபரஞ்சுடர் சிரித்து, குற்றமற்ற ஓர் புதல்வனை நினக்களித்தனம்." என்றான். குன்றமேந்திக் கோவினங்காத்த அம்மாயவன், அரனரு கிருந்த அருளுருவாகிய அம்மையை யாது காரணத்தாலோ வழிபடாம லும், எதிர்முகம் தந்து பேசாமலும் உபேக்ஷையாயிருந்தனன். அவ்வாறு நின்ற அரியை நோக்கிய அம்மை, வெகுண்டு, "நீ அமலனிடம் வரத்தாற் பெற்ற புதல்வனும் ஐயன் வெகுளியால் முடிந்திடுக." என்று வெவ்வுரை விளம்பிப் பரமனை நோக்கி, அளவிலா மானுடப் பசுக்களை மருட்டி, ஒப்பற்ற பரப்பிரமம் யானதில்லை என்று திரிதரும் வஞ்சகன் முன் ஞானிகளின் அறிவான் அன்றி எய்தாத தேவரீர் எய்தி நிற்பது அழகோ? ஊழி முதல்வ! செல்லுதும் வருக." என்று அண்ணலை அழைத்துச் செல்லுதலும், அச்சுதன் கண்டு, அச்சமுற் றயர்ந்து, கடலின் கரையை அண்மிய கலத்தை நிரம்பிய பொருளொடு கவிழ்த்து நின்ற வணிகனுமெனப் பேரஞருடைய னாயினன்.

அவ்வின்னலுற்ற திருமால் அம்மையால் இவ்விடையூறுற்ற தென்று கருதி, எம்மையாளுடைய இறைவன் தன்னையும், இறைவி தன்னையும், இளங்குமரன் தன்னையும் செவ்விய உருவொடு பிரதிட்டை செய்து, வேதாகம விதிப்படி மெய்யன்பு கொண்டு, பல்லாயிரங் கோடி வருடம் நோற்றிருத்தலும், உலகிற்கு அம்மையப்பர்களாகிய பார்வதியுஞ் சிவபெருமானும் அங்குக் காட்சி தந்தருளினர். திருமால் கண்டு, அம்மையின் திருவடிகளில் முன்னர்ப் பணிந்து, எம்பெருமானைப் பின்னர் வணங்கி ஏத்தி நிற்றலும், சிவபெருமான்

அருள்கூர்ந்து, அம்மையை நோக்கி, "நீ யருள் புரிக." என்றனன். அம்பிகை, "நம் ஐயன் ஓதிய வாய்மையும், யான் வெகுண்டு கூறிய மாற்றமும் ஆகிய இரண்டும் பேதப்படா ஆகலான், அப்புதல்வன் எம்பிரான் வழிபொறி கனலான் மாய்ந்து, மேன்மை போய்ப் பின்னரும் முன்பு போற் றோன்றி இருக்க." என்று மொழிய, "அன்னதே யாகுக." என்று கூறிச் சிவபெருமான் அம்மையோடு மறைந்தருளினன்.

ஆழிப்படை யண்ணல் அகமகிழ்ந்து, தன் உறையுளை யெய்தி மன்மதனை மனத்தாலழைக்க, அவன், கரும்பு வில்லும், பூங்கணையுங் கொண்டு வளர்ந்து, வானினுள்ளாரையும, மண்ணினுள்ளாரையும், யாண்டுமுள்ளாரையும், எவற்றையும் மயக்கி, கருணையங் கடலின் கட்கனலால் மாய்ந்து, பின்னர் அவனருளா. அருவும், உருவும் பெற்று மன்னினன். இஃதித்திறம் நிற்க, திருமால், தானருச்சித்த உலகீன்ற அம்மையோடு குமரனையும் பாங்கர் கொண்ட அச்சிவபெருமானைத் தன் மார்பிற்றாங்கிப் பணிப்பாயலிற் பாற்கடலிற் பன்னாள் துயின்றான். அக்காலத்தில் அசுர மன்னனாகிய வாற்கலி என்பவன் என்னொடு போர் புரிந்து, தேவரை வருத்தப் பின் தோல்வியுற்றி, அத்திருமாலை யடைந்து, நிகழ்ச்சியை விளம்ப, அவன் எனக்கு அபயமளித்து, இந்த சோமஸ்கந்த மூர்த்தியை என் கரத்தளித்து, இம்மூவரையும் பூசித்து நின் வினைத்தொடர்பு அறுப்பாயென்று அன்றிந்து, பின்பு பாற்கடல் நீங்கித் தில்லையை யடைந்து, திருநடம் புரியும் செம்மலைக் கண்டு, பரவாசமாகித் தாழ்ந்தவன், ஈரிரு திங்கள் காறும் எழாதவனாப் பின் துரிய நீங்கிச் சாக்கிரத்தை உயிர் அடைதலும், ஆண்டெழுந்து நடராஜப்பெருமானைத் துதித்து, விடை பெற்றுச் சென்று, அவ்வசுரனை மாய்த்து, எனக்கும் தேவர்களுக்கும் விடையளித்துப் பண்டையிற் பாற்கடல் துயின்றான்."

"அன்றுமுதல் இம்மூவரையும் விதிமுறையான் அருச்சித்து வந்தேன். மன்னர் மன்ன! நீ வழிபடுதலைக் கருதித் தன்னொப்பிலாதாரைத் தருக வென்றனை இவர்களைத் தருதல் என்னிச்சை யன்று. அத்திருமால் இசைவு உனக்குண்டாயின், பின்னைத்தந்திடுவன்." என்றனன். முசுகுந்தன் அங்ஙனமே நன்றென்று பாற்கடலெய்தி, மாயனைவழிபட்டு ஏத்தலும், அந்நாரணன் வினவி, "அவ்வண்ணமே நீ அம்மூவரை

யும் பெற்று பூமியிற் சென்று பூசனை புரிவாய்." என்றனன். மன்னன் அம்மாயோன் அடிகளைப் பணிந்து விடைபெற்றுச் சென்று, வாசவனை யெய்தி உற்றதுரைத்தான். வாசவன் மனங்கலங்கித் தாயினைப் பிரியும் கன்றினையொத்து, கவன்று தன்னுள் ஓர் சூழ்ச்சியை எண்ணின வனாய்த் தெய்வகம்மியனை அழைத்து, மூன்றுருவங்களையும் ஆறு முறை வேறாக யாவரும் வியக்கும் வண்ணம் இயற்றச் செய்து, மன்னன் கரத்தினில் அளிக்க, அதனை வஞ்சமென்றோர்ந்த முசுகுந்தன், முதலில் தேவதச்சனால் ஆக்கப்பட்ட அவ்வாறு சோமாஸ்கந்த மூர்த் தங்களையும் பெற்று, அத்திருவுருவம் போலிருந்தும், யாதும் உரையா வகையினால், இவர் அவரல்லர் என்றே கூறினன். சிறப்பினையுடைய முசுகுந்தன் உரைத்ததைக் கேட்ட இந்திரன், "ஆழிப்படையோன் மார்பிலிருந்த அம்மூவர் திருவுருவத்தைக் கொண்டு சென்று இவ ராமோ?" என்றனன். இமையவர் இறை இவ்வாறுரைக்க, இமையா முக்கண் எந்தை, முசுகுந்தன் முகநோக்கி, "நின்பால் வந்தனம். எம்மை மாநிலத்திற் கொண்டு சென்று, புந்தி மகிழும் பூசனை புரிவாய்." என்று பகவான் உணராவகை யுரைப்ப, மிக்க உவகை யெய் திய மன்னன், பணிந்தேத்தி "ஆழியான் பூசனையை உவந்தவராகிய இவரை, வாழி நீ தருவாயாக." என்று வணங்கினன். பின்னர் இந்திரன் முசுகுந்தனை நோக்கி, "இப்பெருமானை இவ்வாறு மூர்த்தங் களுடன் புவியிற் கொண்டேகித் திருவாரூர் முதலாகப் புகலுந் தலங் களில் வைத்து, வழிபடுவாயாக." என்றியம்பி, விடைகொடுத்து அனுப் பினன். நன்றென்று பெற்றுச் சென்ற முசுகுந்தன், புவியில் இறங் கித் தென்திசையிலுள்ள ஆரூரில் சிவபெருமான் உவந்தருளி இருக் கும் பூங்கோயிலெய்தி, விண்டுவின் திருமார்பிலிருந்த மூவரை அரியணை யில் விதிமுறை வழாமல் தாபித்து, ஏனைய மூர்த்திகளைத் திருநாகை, திருநள்ளாறு, திருக்காறாயல், திருக்கோளரியூர், திருவாய்மியூர், திரு மறைக்காடு ஆகிய ஆறு தலங்களிலும் அமர்வித்தான். இப்படி ஒருபா விலே ஏழு திருவுருவத்தையுந் தாபித்து, உண்மை யன்பினால் பூசனைபுரி வித்து, யுகம்பரவும் ஆரூர் எம்பெருமானுக்கு விழாவினை யாற்றித் தரி சித்தற்கு முசுகுந்தன் மனத்தில் எண்ணினன். அப்பொழுது இந் திரன் அருச்சனை செய்த திருவுருவத்தை மன்னனிடங் கொடுத்த பாவத்தினால் விண்ணாட்டுச் செல்வமிழந்து, புலையனுருவடைந்து,

தெய்வக் களிற்றினை யூர்ந்து, திருவாரூரையெய்திச் சிவபெருமான் திருவிழாவைத் தரிசித்தற்குப் பாரூரும் பல வூரும் வருகவென்று கூறித் தேரூரும் வீதியினிற் களிறேறி முரசறைந்தான். அன்னதற் பின் பூங்கமலாபுரியின் வைகும் புராரிக்கு விழாவாற்றி, ஏனைய மூர்த்திகளுக்கும் அவ்வாறே நிகழ்வித்து, அம் முசுகுந்தன், பாங்கரில் வந்த வீரரோடு பாருலகம் புரிந்து வந்தான்.

ஆண்டு பல அவ்விழவினைத் தரிசித்துத் தக்க தவத்தினை யாற்றி அம்மகவான், கடைஞர் உருநீங்கிப் பண்டையுருப்பெற்று, அண்டருலகினை ஆண்டிருந்தான். விண்ணவர்கோன் சென்ற பின்னர், முசுகுந்தன் கருவூரில் எண்ணிறந்த காலம் அரசு புரிந்திருந்து, தன் புதல்வனாகிய அங்கிவன்மனுக்கு மணிமுடி சூட்டித் தான் தவமியற்றித் தொன்மையிற் கயிலை யெய்தினன். முசுகுந்தன் ஏகலும், வீரபாகு முதலிய வீரர் தங்கள் சிறப்பனைத்தையுந் தங்கள் தங்கள் புதல்வருக்களித்து, அரசினைப்போற்ற இருத்தித் தாந்தவமுயன்று மானிட யாக்கை நீத்து, முந்திய வன்மை பெற்றுக் கந்தகிரியெய்தி, வேற்படைக் கடவுளின் திருவடிப் பத்திமையின் வழாதிருந்தனர். ஆகலான், அயனுமறியாத அருமறையின் மூலப்பொருளை யுணர்ந்த ஏகநாயகனாகிய குமாரமூர்த்தியின் விரதத்தினை யாவராயினும் போற்றுவரேல், அவர் எண்ணிய எண்ணியாங்கெய்தி, விண்ணவரும் வந்து அடிபணியுஞ் சிறப்பினை எய்தி வாழ்வர்.

## வள்ளியம்மை திருமணப் படலம்

திருக்கயிலை மலையின் ஓர் சாருள்ள கந்த வெற்பின் மணிப்பெருங் கோயிலில் தெய்வயானை யம்மையோடு இனிதமர்ந்து அருளியிருக்கும் வெற்றிவேற் பெருமான், பூவுலகின்கண் வேடர்களால் வளர்க்கப்பட்ட வள்ளி நாயகியைத் திருமணஞ் செய்த முறைமையை இனி எடுத்துக் கூறுவாம். நற்பொருளனைத்துந் துன்றிய நானிலவளப்பம் பொருந்திய தொண்டை நாட்டிடை பெருமை மிக்கதாய் விளங்கியது மேற்பாடி என்னும் பதி. அப்பழைய ஊரின் அருகில், திருமாலின் நெடிய உருவம் போன்று உயர்ந்து, ஓர் மலை சிறப்புற்றிருந்தது. அம்மலை, தன் சிகரத்து, அரவு, மதி, ஆறு, ஆத்தி, சூரா, கொன்றை, வில்வம் ஆகிய இவற்றைக் கொண்டு நிற்குந் தன்மையால், தேவர் போற்றும் கண்ணுதற் பெருமானையும் ஒத்து விளங்கியது. தேன்பிலிற்றும்

கடப்பமலர் மாலையை யணிந்த குமரவேள், பன்னாள் விரும்பித் திரு விளையாடல் புரிதற்குரிய வள்ளிநாயகியைத் தன்பாலுடைய அவ்வள்ளி மலையின் பெருமையைப் பகரவும் ஆமோ? இன்னன பல வளஞ்சான்ற அக்கிரியில், எயினர் நெருங்கி வாழும்படியாகிய சிற்றூரொன்று, அறு முகத்தையன் பின்னர்த் தன்னிடத்து எழுந்தருளுதற்குரிய பெரிய தவத்தினையுடையதாய் விண்ணகரம் போன்றிருந்தது. அத்தகைய குறிச்சியில் வாழும் வேடர்களுக்கு அரசனும் நம்பி என்னும் பெய ரைத் தாங்கித் தவத்தாற் சிறந்து பொலிபவன், சில ஆண்மக்களைப் பெற்று, மற்றும் பெண்மக்களைப் பெறக்கருதித் தன் வழிபடு கடவுளைத் துதித்திருந்தனன். அக்கிரியின் சாரலில் ஐம்புலன்களையும் ஒரு வழிப் படுத்தும் முறையினையுடைய சிவமுனியென்னும் ஒரு பெரியோன், சிவ பெருமானை நோக்கி, ஆண்டுத் தவமுளுற்றி வைகினன். அத்தவத்தின் சாரலில், சிறந்த பெரிய கண்களும், சிறிய தலையும், ஒலிக்குஞ் சிறிய வாயும், நெறிப்புறு காதுகளும், புள்ளிவாய்ந்த புனிதயாக்கையும், புன் மயிர் குளப்புக்காலும் ஆகிய அழகிய அங்கங்களையுடையதாய் ஓர் பொன்னிறப் பெண்மான் அங்கண் புதுமையின் வந்துலவியது. முருகப் பெருமான் திருவருளால் அங்ஙனமடைந்த அப்பெண்மானைத் தவத்தாற் சிறந்த அத்தூயோன் கண்டு, இளஞ்செவ்வி வாய்ந்த பிரமன் மனைவியைக் கண்ட தூர்த்தனைப்போல மையலெய்திக் காமத்தால் மனந் தளர்ச்சியடைந்தான். பொன்னிற வடிவொடு வந்த அப்புதிய மானி டத்துக் காம இச்சை வைத்துக் கவலையால் அவலமெய்தி, ஒன்றுந் தோன்றாத நிலைமையாகிய உன்மத்தமெய்தி இருந்த அவன், மாத ரிடத்துத் தேவர்கள் நுகருங் காட்சி இன்பம் போன்று, புணர்ச் சியால் அம்மானின்கண் வைத்த மையலைப் போக்கிப் பண்டைய உணர்வடைப் பெற்றுத் தவமுயன்றிருந்தான். நற்றவனது காமக் காட்சியினால், அந்நவ்விபால் கருப்பஞ் சேர, அதனையறிந்த திருமாலுதவும் பாவையாகிய சுந்தரி முன்னர்ச் சரவணத்தில், தன் தவத்திற்கு வந்தெய்திக் கூறிய குமாரப் பெருமானுடைய அருள் வழிப் படி அம்மானின் கருப்பத்திற் புகுந்தாள். அனைய காலத்து அப்பொன் மான் தினைப்புனமெங்கணும் உலவிச் சுனை நீருண்டு, ஓர் குழலி லிருந்து, மலைமீதேறி வேடர் மகளிர், உரித்தலையிட்ட கோலால் வள்ளி யின் கிழங்ககழ்ந்து பொள்ளல் செய்துள்ள அப்புன் புலத்திற் சென்று,

தோன்றலுக்குத் துணைவியைச் சுமந்து, தளர்ந்து, தளர்ந்து வருந்தி, வயிறு நொந்து, வள்ளியகழ்ந்த அக்குழியில் அக்குழவியை ஈன்றது.

ஒப்பற்ற அச்சுந்தரி, பழைய குழையும், சிறு தொடியும், கோல் வளையுமாகிய அணியொடு புதிய தழை ஆடை புனைந்து, தன் பண்டை யுணர்விழந்து, அம்மான் வயின் உதித்தனள். அணியொடு திகழும் குழவியை நோக்கிய அப்பிணை, அஃது தம்மினத்ததன்று, வேற்றுருக் கொண்டிருந்ததென்று மருண்டு, அகன்று அப்புறம் போயது. ஈன்ற அவ்வரிணம் ஏகியதும், தலைவியாகிய அக்குழவி வீணையின் இசையோ கலைமகளின் இன்னிசையோவென்று ஐயுறுமாறு ஏங்கி அழுதனள். அப்பொழுது முருகன் திருவருளால், வேட இராஜனாகிய நம்பி என்பவனும், அவன் மனைவியும் பரிஜனங்கள் சூழ, அப்புனம் அடைந்தனர். கொடிச்சியொடு புகுந்த வேடர்கோன், அவ்வோசையைக் கேட்டு, அவ்வின்னோசை எங்கிருந்து வருகிறது என்று மனைவியை வினவிக்கொண்டு அவ்வழிச் செல்லுதலும், வள்ளியின் கிழங்ககழ்ந்த குழியில் அழுதுகொண்டிருக்கும் அக்குழவியைக் கண்டு, உவந்து தம் பெருந்தவப் பயனென்று எடுத்து, மனைவி கையில் கொடுத்து, வில்லைக் கீழேயிட்டு, எழுந்து குதித்து, ஆரவாரித்துக் களிப்பெனுங் கடலில் மூழ்கி முன்னைத் தவத்தை வியந்துரைத்தான்.

கொற்றத்தினையுடைய அக்கொடிச்சி அக்குழந்தையைக் கையில் வாங்கி, அப்பொழுதே சூலும், உளைவும் உடையளாய்ப் பெறுவாள் போன்று, பேணிப் பெரிதும் மகிழ்ந்து, கனதனத்திலூறிய அமுதினை ஊட்டினள். அக்குன்றவன் தன் வெற்றிச்சிலையை எடுத்து, அக்குழவியைப் பெற்ற மனைவியோடும் அப்புலமகன்று சிற்றூரெய்திச் சிறு குடிலிற் புக்கனன். விண்ணமுதம் போன்ற பெண்மணியைப் பெற்ற உவகையால், கொறியை மாய்த்துத் தங்குழுவினரொடும் உண்டு, தொண்டகமார்ப்பக் குரவை தூங்குவித்தான். அதன் பின்னர், முருகவேட்கு ஆகும் முறையின் விழாவினை நடத்தி, வெறியாட்டு நேர்வித்தான். இன்னன பலவும் புரிய வேடர்கோன் மனைவியாகிய அருந்ததியனையாள், அவ்விளமகட்குக் காப்பிட்டு, கான மயில் சிறையைப் பரப்பிய பூந்தொட்டிலில் அவளையேற்றி, நாத்தளர்ந்து, சோர்ந்து, நடுக்கமுற்றுப் பற்கழன்று மூத்து, நரைத்த மூதாளர் சென்று நெருங்கி,

வள்ளிபட்ட குழியில் வந்திடலால் அவட்குப் பெயர் வள்ளியென்று இட்டனர். தம் மரபிலுள்ள முதியார் இம்முறையால் ஆராய்ந்து, இயற்பெயர் புனைந்துரைப்ப, அக்கொடிச்சியும் நம்பியும் இறைவி யாகிய அவளைத் தம்மகளென்று உவந்து வளர்த்தனர். முல்லைப் புற வத் திறையோன் திருமடந்தை, கொல்லைக் குறிச்சிக் குறவன் மக ளாகி, புல்லினை வேய்ந்த அச்சிறு குடிலில் வளர்ந்தது எதுபோலு மெனின், தந்தையாகிய திருமால், அரசகுலத்திற் பிறந்து இடையர் குலத்தில் வளர்ந்தது போலும். அவ்வள்ளிநாயகி, பொற்றொட்டில் விட் டுப் புவிமிசை தவழ்தல் கற்று, தளர்நடையுங் காட்டி, வேங்கைமர நிழ லுள்ள வீட்டின் முன்னுலவி, முற்றத்தான் மணி கொழித்து, சிற்றில் கோலி, சிறு சோறட்டு, முன்னை யுணர்வின்றி இம்முறை மகிழ்ச்சி யால் ஆடலைச் செய்து வளருங்கால், எந்தையாகிய முருகவேளின் தோளினைப் புல்லுதற்கு இப்பருவம் தகுமென, ஆண்டு பன்னி ரண்டு ஆயிழைக்குச் சென்றன. அத்தகைய பருவத்தை யறிந்த ஆயும், அத்தனும் தங்குல முறைமையால் வள்ளிநாயகியைக் காட்டில் எளிதாய்க் கிடைத்த தெய்வ மணியாகிய ஒன்றைக் கொணர்ந்து, கூட் டிலுள்ள இருளை யோட்டக் குரீஇயிளம் வைத்தாங்குச் சுடர்வேற் கும ரன் தேவியாகிய தெள்ளமுதைச் சிலைக்கை வேடர் தினைப்புனம் காக்க வைத்தனர்.

அவள் அங்கண் அழகுபெற அமைத்த ஏணியிட்ட அப்பரண்மீ தேறி, எத்திசையுங் காணுமாறு இருந்தனள். அந்நிலத்திற்குரிய கிளி மயாமு மயாலணறிப் பிற நிலத்திற்குரிய பறவையும், விலங்கும் அவ்வள்ளி மலைப்புனத்தில் வந்துற்றன. பிற நிலத்து மாவும், புள்ளும், மயங்கல் பொருளுறால் துணிபாகலான், அவ்வேடர் கைத்தலத்தால் அமைத்த அப் பரண் மீதிருந்த நங்கை, தட்டையுந் தழலுந் தாங்கித் தினைப்புனத்தைக் கிட்டலுறு வகையால் கிளிமுதற் புள்ளோட்டி, எய்யும், இரலையும் கொய்யாத் தினைக்குரலைக் கொள்ளாதவாறு, மணிக் கற்களைக் கவணில் இட்டுக் கையால் கடிதோச்சி வீசினள். "பூவைகாள்! செங்கண்கள் வாய்ந்த புறவங்காள்! ஆலோலம்; தூவிமா மஞ்ஞைகாள்! சொற் பயிலுங் கிள்ளைகாள் ஆலோலம்; கூவுகின்ற குயிலினங்காள்! ஆலோலம்; சேவல்காள்! ஆலோலம்," என்றனள் அத்திருந்திழையாள்.

இம்முறையால் அவள், ஏனற்புனங் காத்திருப்ப, அதுபொழுது அவளுக்கு அருளுமாற்றால் முருகப்பெருமான் கந்தவெற்பிகந்து, கடி கமழ் பொழில் சூழ் தணிகைவரை எய்தித் தனித்து வீற்றிருந் தருளினன். அப்பெருமான் அம்மலையின்கண் அமருங்காலத்து வார் தல், வடித்தல், உந்தல், உறழ்த்தல் ஆகிய முறையால் யாழினை வல்ல நாரத முனிவன், பூவுலகெய்தி வள்ளியங்கிரியை அடைந்து, தினைப்புனம் காக்கும் புளினர் பாவையைக் கண்ணுற்றுக் கரங் குவித்துப் போற்றித் தன் மனத்திடை, "அன்னையாகிய இவர் பேரழகைப் பன்னாள் மொழியினும் முடியுமோ? நம் அத்த னாகிய செவ்வேளுக்கு மனைவியாக முன்னர்ப் பெருந்தவமியற்றிய மாது இவள்." என எண்ணி வணங்கி, மூர்த்தம் ஒன்றி னில் மூன்று சாவிகள் பூத்திடுஞ் சுனையினையுடைய தணிகை வரைக் கண் எய்தினன். அவன் அங்கமர்ந்த அறுமுகன் துணையடியைத் தன் முடிமேலிட்டு வணங்கி எழுந்து, "மோன நற்றவச் சிவ முனியின் புதல்வி, மான் வயிற்றிற் பிறந்து வள்ளி மலையில் வேடர் மகளாகி, தினைப்புனங் காத்து, இதனில் இருக்கின்றாள் ஐயனே! அவளுடலழகு திருமாதிற்குமில்லை, இது புனைந்துரையன்று. சிறிபோன் இதுபொழுது கண்டு வந்தேன். சென்று நீ காண்பாய். தாயாகும் அத்தையல், முன்னர் நின்னைப் பதியாக அணைய விரும்பி நற்றவம் முற்றியுள்ளாள். ஆகலின், அடியேன் கூறிய இடத்திற்கேகி, அம்மாதுக்கு அருள்புரிதி." என்று வணங்கினன்.

அவ்வுரை கேட்ட முருகன், "ஏதமற்ற காட்சியை யுடையாய்! இது நன்று, நன்று. நீ போதி." என்றுரைத்து அவனைப் பொள் ளென அனுப்பி, அதன்பின் கன்றுங் காம நோயாகிய கவலை யைத் தன்னுள் வைத்தான். குறவர் மகள் உய்யுமாற்றால் அருள எழுந்த அவ்வண்ணல் தன் பெருவடிவு நீத்து, மானிட வடிவத்தொடு சிலையேந்திக் கச்சினை இறுக்கி, மாலையணிந்து, கழலார்த்து, வேட்டுவக் கோலங் கொண்டு, கிளியின் மொழிபோலும் மொழியினையுடைய வள்ளிநாயகியினிடத்து வைத்துள்ள மோகமானது தன்னுள்ளிருந்து தள்ள, அத்தணிகைவரை நீங்கி, மண்ணினோர் புகழும் சீரினையுடைய வள்ளி மலையின் மேற் போய்த் தினைப்புனத்தில் இருக்கும் இறைவியை, முன்னர்ப் புதைத்து வைத்த பொருளைக் கருத்தொடு சென்று,

கண்டடைந்தானென்ன . விருப்பம் மிகுதியால் கண்டருளினன். அழகிய மேகத்திலுள்ள மின்னலோ என்று கருதும்படி தினைப்புனங் காக்கின்ற, காம இன்பம் நுகருதற்கேற்ற பருவத்தினையுடைய வள்ளி நாயகியைக் கடப்பமலர்த் தாரினன் கண்டு, காமத்தீ சுடச் சோர்ந்து, மெய்ப்பி மயங்கி, அப்பாரணினுக்கு அணித்தாகச் சென்று, "வாளினை யொத்த கண்களையுடைய மாதே ! இவ்வுலகத்து மாதர்க் கெல்லாந் தலைவியாகிய நின்னை இத்தினைப்புனங் காக்க வைத்த வேடர்களுக்குச் சிறிதும் அறிவு வைத்தானில்லையோ அப்பிரமன் ? வார்ந்து விளங்கும் கூந்தலையுடைய பெண்ணே ! உன்னைக் கண்டமையால் மதி தளர்வுறும் எனக்கு, உன்னுடைய பெயரினை உரைப்பாய். அஃதுரையாயெனில் உன்னூரினை யுரைத்தி. ஊரும் உரைக்கமுடியாது என்னில் சிறந்த நின்சிற்றூருக்குச் செல்லும் வழியேனும் உரைப்பாய். மொழியொன்றும் புகலாயாயின், புன்முறுவலும் புரியாயாயின், விழி நோக்கும் வையாயாயின், விரகமிக்குழலும் யானுய்ய வழியொன்றுங் காட்டாயாயின், என்பால் மனஞ் சற்றும் உருகாயாயின், நின்பால் பழிவந்து எய்தும். ஆகலான், பராமுகம் தவிர்தி." என்றான்.

இவ்வாறு கலங்கும் நீரில் மதியிருந்து அசையுந் தோற்றம் போன்று, உலைப்பட்ட மெழுகு உருகுமாறு மனங்கரைந்து, ஒருத்தி காதல் வலைப்படுகின்றவனைப் போன்று, வருந்தி இரங்கி நின்று, திருமகள் குமரி முன்னர்த் தன்மையால் மிகுதி காட்டி, இவை உரைத்திடும்காலத்தில், முட்பன்றிகளும், கரடிகளும், யானைகளும் ஏனையவும் வெருவி யோடும் வண்ணம், கொம்புகளை ஊதிக்கொண்டு வேடர் சூழ்ந்து வரத் தந்தையாகிய நம்பியென்னும் வேடன் அத்தினைப் புனத்தினை அடைந்தான். அப்பொழுது அடிமுதல் வேதங்களாகவும், உயர்ந்த நடுவிடமெல்லாம் சிவாகமங்களாகவும், கிளைகளனைத்தும் கலைகளாகவும் ஆகி, ஆங்கோர் வேங்கை மரம் உருவங்கொண்டு வேற்படை வீரன் நின்றருளினன்.

வேடர் அரசன, அவவுழி விரைந்து வந்து, தம் குலமகளாகிய வள்ளிநாயகியைக் கண்டு, தேனும், கடமான் பாலும், கிழங்கும், மாவுமாகிய பல் உணவுகளை அவளுக்கு அன்போடு கொடுத்து, அவ்வேனற் புனத்துப் புதிதாயிருந்த அவ்வேங்கை மரத்தினைக் கண்டான். அவன் சார்பிலுள்ள வேடர், அவ்வேங்கையின் நிலைமையை நோக்கி, வியப்படைந்தவராகி, "ஈங்கிது முன்னுற்றதன்று. இவ்வாறு புதிதாகத்

தோன்றிய காரணத்தால் தீங்கு வருதல் திண்ணம்." என்று வெகுண்டு, அப்பொழுதே நெருங்கி இருண்டு தழைத்துள்ள அம்மரத்தினை முறித்திடுங்களென்றும், வேரொடும் பறித்திடுங்களென்றும், கணிச்சியால் தறித்திடுங்களென்றும் கூறினார்கள். அத்தீயோரை விலக்கி, நம்பியானவன், தன் மகளாகிய நங்கையை நோக்கி, "புதிதாக இம்மரம் இங்குற்றதென்னை? உண்மையை உரைக்குதி." என்ன, வள்ளிநாயகி அச்சமுற்று, "ஐயனே! இது வந்த வரலாற்றை யானறியேன். முன்னுளில்லை, இந்நாளிற் புதிதாகத் தோன்றியுள்ளது. யான் இதனைக் கண்டு நடுங்கி இருந்தேன். இதுவே நிகழ்ச்சி." என்றனள். வேடராஜன், "நங்கையே! நீ அஞ்சற்க. இவ்வேங்கை மரம் நினக்கினிய துணையாக இத்தினைப் புனத்துத் தோன்றியுள்ளது." என்று கூறி, வேடர்களோடு அப்புனம் அகன்று, அப்பாலேகினன். பின்னர் முருகப்பெருமான் வேங்கையின் வடிவம் நீத்து, பழைய வேட்டுவக் கோலம் அடைந்து, வள்ளிநாயகியின் எதிரில் சென்று, நின்று, அளவற்ற காமமெய்தி இரங்குவோனைப் போன்று, அருளினால் கீழ்வருமாறு மொழிகுவானாயினன்:— "கோங்கரும்பினை யொத்த கொங்கைகளை யுடைய குறவர் மாதே! இங்குன்னைப் புகலாக அடைந்தேன். நின் அடித்துணை யல்லாது வேறு பற்றுக்கோடு இல்லை. உன்னை விட்டு என்றும் நீங்கேன், நீங்கேன். மான் விழிபெற்ற மடந்தையே! நின்னை யான் விட்டுப் போக வன்மையுடையனோ? உயிரைவிட்டு உடல் அறிவோடு பொருந்தி எழுந்து செல்லுமோ? நீயே புகலுதி. குன்றவர் குல மாதே! நீ நீராடுஞ் சுனையும், பூசுஞ் சாந்தமும், சூடும் மலர்களுமாகி இருந்து, நின்னைப் பொருந்தப் பெற்றிலேன். இனி யான் செய்யுந் திறமென்னை? மெல்லியல் வாய்ந்த மாதே! இப்புல்லிய தினைப்புனங் காத்தல் நினக்குச் சாலவும் இழிபு. என் பின் போதருவாய். நின்னை வானுலக மாதர் போற்றத் தலைமை தந்து பேரின்பம் நுகருமாறு ஆக்குவன்." குறவர் மாதாகிய வள்ளிநாயகி அக்காளையை நோக்கி, அவர் திறம் நன்றென்று நாணி, "இழிகுலத்து எயின மாதாகிய என்னைத் தழுவுதல் உன்னி, முழுதுலகளிக்கும் முதல்வராகிய நீர் தாழ்ச்சி செப்பி இரத்தல் பழியன்றித் தகுதியாமோ? ஏனற் புனம் காக்கும் பேதையேன் யான். நீர் உலகளிக்கும் அரசர் குலத்து வந்தீர். என் கலவியை விரும்புதல் முறைமையன்று. புலி பசித்தும் புல்லை

அயிலுமோ ?'' என்று . இன்னன பலவும் ஏந்திழை இயம்பி, நின்ற சமயத்து, அவள் நெஞ்சம் வெருக்கொளத் தொண்டகம், துடி முதலிய இயம்பிக் குன்றவர் சூழ நம்பி அங்கெய்தினன்.

அத்தன் வருகையைக் கண்ட அம்மாது மயங்கி, அக்கடவுளின் செய்ய முகத்தினை நோக்கி, "வெந்திறல வாய்ந்த வேடுவர் மிகக் கொடியர். ஆகலின், இங்கு நீர் நில்லாது உய்ந்திட விரைந்தோடுமின்." என்றாள். அவள் உரைத்த மொழியினைக் கேட்டு, பெருமகிழ்ச்சியெய்தி. அங்கு நின்ற குமாரமூர்த்தி, சைவ நெறியினில் நின்று, நற்றவம் இயற்றும் விருத்த முனிவன் வேடங்கொண்டு, எதிரே வந்த அவ்வேடராஜன் முன் சென்றருளினன். சென்ற கிழவோன், குன்றவர் செம்மல் எதிர் நண்ணிப் பரிவொடு நின்று, திருநீறு நல்கி, "நினக்கு வலிய திறல் மிகுக. வாகையும் பெரிதாகுக. பெரிய எவ்வளங்களும் ஒல்லையின் நின்னை எய்துக'' என்று ஆசி கூறினன். கானவர் கோன் கிழவனை வணங்கித் திருநீற்றை அன்புடன் வாங்கி அணிந்து, சீரிய இம்மலையிற் கிழவராக வந்தோரே! உமக்கு என்னால் எய்துவது உளதேல், அதனை விரைந்து மொழிமின்." என்று வணங்கிக் கூறினன்.

அதனைக் கேட்ட இளையோன், "ஆண்மைத் தொழில் வாய்ந்த அண்ணலே!. யான் எய்தியுள்ள முதுமை நீங்கவும், மனத்தின்கண் அமைந்த மருள் நீங்கவும், இங்குள்ள நும் வரைக்குமரியை அடைந்து, இனிதே ஆடுதற்கு விரும்பி, மெலிவடைந்து விரைந்திவண் உற்றனன்.'' என்றனன். அதனைக் கேட்ட வேடராஜன், "நன்று, நீர் நவின்ற தீர்த்தம் வைகலும் ஆடி, தமியளாயுற்ற எங்கள் நேரிழைக்கு ஓர் தனித்துணையாகி இங்ஙனே அமருவீர்." என்று கூறினன். அத்தவமுதியோன், அஃதே அழகு என்றனன். இவ்வாறாகிய காலத்துத் தந்தை அவ் வள்ளிநாயகியின்பால் ஏகி, தினையொடு, கிழங்கும், மாவும், தீங்கனி முதலியனவும் நல்கி, அம்மாதினுக்கு அருந்துணையாக அவ்வருந்தவனை வைத்து; வில்வேடரோடும் விரைந்து மீண்டனன். நம்பி மீண்டதை அம்முதியோன் கண்டு, அப்புனை இழையினை நோக்கி, "நானினிச் செய்வதென் சொல். பசி நோய் நலியா நின்றது." என்றனன். அவ்வள்ளி நாயகி, தேன், கனி, மா ஆகியவற்றைத் தன் செங்கையால் கொடுப்ப, வள்ளல் அத்கைய கரத்தால் அமுதென உவந்து வாங்கி உண்டனன். பின்னர், எம்பெருமான், "வேனில் முடுகியவாற்றால் உண்

ணீர் நசை பெரிதுடையேன்." என்ன, அம்மாற்றத்தினை இறைவி கேட்டு, "இப்புறவரைக்கு அப்பால் எழுவரை கடந்தால், அவற்றிற் குப் புறமே ஓர் சுனை இருக்கின்றது. அவ்விடை ஏகி வெப்பு நீங்க நீரருந்திப் பின் வருதிர்." என்றனள். அவ்விருத்தன், "வேடர் பாவையே! யான் புலர்ந்து நீர்வேட்டனன்; அஃதன்றி விருத்தன். வெற்பிடைச் செல்ல வழி சிறிதும் அறியேன். ஆகலான், நின் சீரடி வருந்துமென்று மறுத்துரையாது, விரைவின் என்னுடன் ஏகி, அச் சுனை நீர் காட்டுதி." என்றான்.

அம்முதியோன் மொழியை அம்மொய்குழல் கேட்டு, "அண்ணலே! வருக!" என அன்பால் அழைத்து, முன் சென்று அவ்வரையெலாம் கடந்து, மலர்மணம் கமழுஞ் சுனைநீர் காட்ட, அவன் வேனிலால் வெப் புற்றான் போல் பெரிதும் பருகிப் பின்னர், "கார்மேகம் ஒத்த கருங்குழ லினை யுடையாய்! என் ஆகத்தை வருத்திய அரும் பசியினை அவித்தாய். தெண்ணீர்த் தாகத்தையும் தவிர்த்தாய். ஆயினும், தவிர்ந்திலது இன்ன மும் தளர்ச்சி. வினையேன் கொண்ட மோகத்தைத் தணித்தியாயின், முடிந்தது என்குறை." என்று இறுதியற்ற முதியோன் இரந்து, மதி மயங்கிக் கும்பிட்டு நின்றனன். தேன் பிலிற்றும் மலர்க் கூந்தல் செழுந்திருவினையாள், நகைத்து, உயிர்த்து, சீறி, நடு நடுங்கி, "தினப்புனங் காப்பேனைத் திருத்தமுடை மாதவத் தீர்! என் மெய் தழுவ உன்னி, உரையாதன உரைத்துக் கைதொழுது நிற்றல் நுமக்கு முறையோ? இச்செய்கை குன்றவர் அறிந்தால், தீது வந்தொன்றுமே. சங்கையொத்த நரைமுடியீர்! நல் லுணர்வு சற்றமில்லீர். எற்றுக்கு மூத்தீர்? இழிகுலத்தேனை விழைந்து, பித்துற்றாற்போல பிதற்றுகின்றீர். வேடர் கொத்துக்கெல் லாம் ஓர் கொடும் பழியைச் செய்தீர். யான் காக்கும் தினைக்குரலைச் சேவலொடு புள்ளும் மாவுங் கூடிக் கவர்ந்துண்ணும். ஆகலான், விருத் தரே! நீர் மெல்ல நடந்தருளும். யான் முன் செல்வன்." என்று அப் புனையிழை விரைந்து தனித்து நடந்தாள்.

தன்னேரிலா வள்ளிநாயகி தனித்து ஏகலும், அவ்ள் திறம் நோக்கிய அருந்தவன், "இனி யான் செய்வதென்னை?" என்று வருந்தித் தனித்து விளங்கும் தந்திமுகத்து எந்தையை நினைத்து, "என் முன் னோனே! இவள் முன் வருவாய்." என்று வேண்டினன். அப்பொழுது

அறுமுகத்து இளவலுக்கு இரங்கி, முந்தி விரைந்து செல்லும் மொய் குழலுக்கு முன்னதாய், வேழமுகத்து விநாயகப்புத்தேள், தனி வாரணப் பொருப்பாய் முழக்கத்துடன் எதிர்த்து வந்தனன். அவ் வேழம் விரைந்து வருதலைக் கண்ட வள்ளிநாயகி அச்சமடைந்து, மீண்டேகித் தவவேடத்தின் மறைந்து நின்ற புங்கவன்பால் அணுகி, "இவ்வேழம் என்னை வருத்தாமல் காத்தருள்வீராக. யான் தேவரீர் மொழிந்தவாறு செய்வேன்." என்று அக்கிழவனை ஓர்புறம் சேர்த்துத் தழுவிக்கொண்டனள்.

அவ்வாறு நிகழ்ந்த காலத்து, அறுமுகப் பெருமான் முன் புறத் தில் அந்த முதிய யானையின் கொம்பு படவும், பின்னொரு புறத்தில் பிடியை யொத்த வள்ளிநாயகியின் கொங்கையாகிய மருப்பூன்றவும், இடையே வயிரத் தூண்போன்று நின்றருளினன். அந்தப்பொழுது அக்கந்தக் கடவுள், வந்தெய்திய களிற்றை வந்தனைகள் செய்து வழுத்தி, "நீ வந்திடலால் என் மனமருள் ஒழிந்தேன். இவ்வாயிழை யும் சேர்ந்தனள். ஆதலின், எந்தையே! நீ மீண்டெழுந்தருள்க." என்று மொழிந்தான். அவ்வாறு மொழிந்த இளவல் குறிப்பினை யுணர்ந்த யானைமுகத் தெந்தை அங்கு நின்றெழுந்தருளலும், அக்குமரன், வள் ளியைக்கொண்டு சென்று, ஓர் கடிகாவினில் புகுந்து, ஐம்புல இன்பம் ஆரத் துய்த்துப் பண்டைய திருவுருவத்தினைப் பரிந்து அவட்குக் காட்டி யருளினன். பன்னிருதோளும், முகமீராறும், கொன்னுடை வடிவேல் முதலிய படையுந் தாங்கிப் பொன் மயிலாகிய புரவிமேல் ஏறித் தினைப்புனங் காக்கும் வள்ளி கண்களிக்க, வனப்புடன் காட்சி தந்து, நின்றருளினன.

கூரிய வேற்படையோன் திருவுருவினைப் பார்த்து வணங்கித் துதித்து, விம்மிதத்தளாய் நடுக்கமுற்றுச் செங்கை குவித்து, வியர்த்து அடங்காக் காதல்கொண்டு அம்மை, "மின்னலை யொத்த வேற் படை ஏந்திய வீரரே! இவ்வுருவத்தினை முன்னரே காட்டி என்னை முயங்காமல் இத்துணைக் காலமும் வறிதே கழித்து ஆடல் புரிந்தீர். யான் செய்த குற்றமனைத்தையும் பொறுத்தருள்வீர்." என்று வணங்கினள். பெருமான், "முற்பிறப்பில் நீ உலகினை உண்ட பெருமாயன் திருப்புதல்வி. நம்மை அடைதற்கு வேண்டிய நற்றவ முடித்தனை. ஆயினவாற்றால், இப்பிறப்பில் நின்னை அடைந்தேம்,"

என்று மொழிந்து, நம்மன்னை தன்னைத் தழுவி அருள் புரிந்தான். பின்னர் குமரவேள் அம்முதல்வியை நோக்கி, "நீ தினைப் புனத்துறைந்திட முன்னர் ஏகுதி. யாமும் பின்னர் அவ்விடம் அணைவேம்." என்று மொழிந்தருள, அவ்விடைபெற்று அடிபணிந்த நங்கை ஏகினள்.

வளைந்த சிலையினையொத்த நுதலினையுடைய அவ்விறைவி, பூங்குரல் ஏனற் புனத்துப் புக்கு அமர்தலும், அயற்புனங் காக்கும் இருளை வந்து, அவ்வள்ளிநாயகியின் அடிமுறை பணிந்து, அருகில் நண்ணி, மணமும், உருவும், ஒழுக்கமும், சொல்லும், செயலும், மனமும் ஆகிய இவையும், ஏனைய யாவும் வேற்றுமை எய்தலால், புதிதின் எய்திய நுகர்ச்சியைக் குறிப்பானுணர்ந்த அப்பாங்கி இத் தினைப்புனம் அழிதர எங்கண் ஏகினை? எனக்கதனை செப்புதி" என்றனள். அப்பாவை நாணி, "வேனில் மெலிய வெதுப்பலான், வரைப்புறத்துள்ள தெண்ணீர்ச் சுனையாடப் புக்கனன்." என்றனள். பாங்கி, "மைக்கண் சிவப்ப, செவ்வாய் வெளுப்ப, மெய் வியர்வெய்த, கொங்கைகள் விம்ம, கரவளை நெகிழக் காட்டுந் தண்சுனை எவ்வுழியுள்ளது? எனக்கு இயம்புதி." என்று கேட்டனள். வள்ளியம்மை அவளைச் சுளித்து நோக்கி, "உற்ற நற்றுணையதாய் உன்னைக் கொண்ட யான் இங்ஙனே இருந்தனன். இங்கு வந்து நீ எனக்குமோர் குற்ற முரைத்தனை. கொடியை நீ அல்லையோ?" என்று தலைவியும் பாங்கியும் இன்னன பகர்ந்து புனத்திலிருந்தனர். அதனை யுணர்ந்த அறுமுகேசன், அதுவே நல்ல சமயமென்று அவ்வேனற்புனம் எய்த நினைந்து, வளைந்த வில்லும் அதிற் பூட்டிய அம்பும், தீட்டிய சுரிகை சேர்த்துக் கட்டிய கச்சும் உடைய இளவீரனாகி, வேட்டைத் தொழிலில் இளைத்த வல்லுநனைப் போன்று, இரு திருவடியும் செம்மையுறத் தனித்து அங்குச் சென்று அவ்விருவரைக் கண்டு, "காந்தளம் கரத்தீர்! யான் எய்த கணையால் உதிரம் சோர, பெரு முழக்கம் கொள்வாய்ப் பகுவெய்த, புண்படு மேனியை உடையதோர் யானை, இந்நெறிச் சென்றது கொல் புகலுதிர்." என்று மொழிந்தான்.

இன்னன பல வினவி, வெற்றிவேல் கரத்தன் அச்சிற்றுருக் கொண்டு, அங்கு நிற்றலும், பாங்கி உணர்ந்து, "நம் வன்மையை நமக்கு நோக

ளார் மாட்டு உரைப்பதன்றி, அஃதிலாப் பேதையேம் மாட்டுப் பகர்வ தெற்றிற்கு?" என மொழிந்தனள். அவள், "இவ்வையன் வேட்டமாடுத லும், இத்தையல் புனங்காத்தலும் உண்மை, உண்மை இவ்விருவர் கண் களும் உறவாடுதல் நன்று, நன்று. இவ்விருவரின் இடைக்கிடந்த காதலை இவர் கண்களே உரையாநின்றன." என்று அறிந்து, பாங்க ருள்ள புனத்துக்கேகி இதணிலிருந்தனள் அன்னதோர் பொழு தில் சினக்கரியைத் தேடி வந்த செம்மல் அவ்வயற்புனம் புக்கு அத்தோழியை நோக்கி, "களப்போற் கருத்த கூந்த லினையுடையாய்! கேட்குதி. எனக்குற்ற கேளிரும் நீரே. நீங் கள் விழையும் பொருளனைத்தையும் தரவல்லேன். நும் பணி அனைத் தையும் வழுவாது செய்வேன். நீங்கள் என்மீது சினம் கொள்ளாது, சிறிதே அருள் புரிகுதிர்." என்று அண்ணல் கூறிய அனைத்தையும் தோழி உணர்ந்து, "இவ்வையருடைய எண்ணம் இதுவோ? இவர் எம் பெருங்கிளைக்கு இப்பெரியதோர் இழுக்கை மண்ணகத்து நாட்டவோ வந்தனர்." என்று உன்னி, அவரை நோக்கி, "பெரியராவார் குறவர் தம் பேதையைக் காமுறுவரோ?" என்று கேட்டாள்.

அதைக்கேட்ட சிவகுமாரன், "திருமறுமார்பன் பெற்ற திருந்திய அமுதினை, எயினர் செய்த தவத்தினை, வனிதையர்க் கரசை, எனக்குக் காதல் நல்குங் காரிகையைக் குறவர் பேதையென்று நீ பேசுவது பெரும் பேதைமையே." என்றனன். அவன் மொழி கேட்ட பெருமித முடைய அப்பாங்கி, "இவ்விடையில் குன்றவர் கூடி வருகுவர். அன் னோர் மிகக் கொடியர்; நன்று தீது உணரகில்லார். நம்மை ஈண்டு ஒருங்கு காணின், நம்முயிரினைப் போக்குவர். அன்றியும், நீர் இங்கு நின்று ஆவதென்? போமின், போமின்." என நெறிப்படுத்து உரைத்த னள். அங்ஙனம் மொழிந்த பாங்கியின் உரையினைக் கேட்ட குகப் பெருமான், "காதளவுலவுங் கண்களை உடையாய்! நின் துணைவியாய தோகையொடு என்னைச் சேர்த்தல் ஒழிவையேல், யானவள் உருவினைப் படத்திலெழுதிப் பனைமடற் பரிமீதேறி, அப்புரவியை நும்மூர் மரு கிடைச் செலுத்துவன் இது நாளை யான் செய்யுந் தொழில்." என்று மொழிந்தனன். அத்திறத்தினைக் கேட்ட அம்மாது, மனநடுக்குற்றுத், "தண்பனை மடலேறுந் தகைமை ஐயர்க்குத் தகுமோ? நீர் தளிர்த்துக் குளிர்ந்திருண்டிருக்கும் இம்மாதவ நீழலில் மறைந்தினிதிருப்பீர்,

என் காதல் மங்கையைக் கடிது ஈண்டுத் தருகுவல்,'' என்றுரைத்து அவள் கடிதின் ஏகினள். அதுபொழுது அறுமுகப் பெருமான், அக மகிழ்ச்சியோடு இனிதே சென்று, மங்குல் தவழும் அம்மாதவிப் பொங்கரில் தங்கித் தனித்திருந்தருளினன்.

விரைந்து சென்ற தோழியானவள், அயற்றினைப் புனத்தெய்தி, வள்ளிநாயகியின் திருவடிகளை வணங்கி, மான்வேற் குமரன் மனக் கருத்துரைத்து, அவளது உள்ளத்தைத் தேற்றி, ஒருப்படச் செய்து, அவ்வனப்பு வாய்ந்த மாதினை உடன்கொண்டு, அம்மாதவிப் பந்த ரெய்தி, அவளை நோக்கி, "அன்பு மிக்க பாவையே! இவ்வரை சுற்றி ஏகி, நீ சூடுதற்குரிய காந்தண் மலரினைப் பறித்து வந்து, நின் கூந்தலுக் களிப்பேன். அதுகாறும் இங்கிருப்பாய்.'' என்று குறியிடத்தினில் உய்த்துச் சென்றனள். அணிமுற்றிய அத்தோழியானவள், தான் பிரிதற்காம் வகை கூறி அவ்விடத்தினின்று நீங்கக் குறவர் மாதாகிய கோகில மொழியாள், ஆண்டு நிற்கப் பெருமகிழ்வெய்திய சண்முகப் பெருமான், தொன்மை போலவே தோன்றி நின்றனன். வடுவினை யொத்த விழியினையுடைய வள்ளிநாயகி, எம்பிரான் துணையடிகளை வணங்கி நிற்றலும், அப்பெருமான் அவளைத் தனது திருக்கரத்தாற் றழுவி, ஆயிடை இன்ப நுகர்ந்திருந்து, பின்னர் அத்தேவியை நோக்கி, "குறவர்கோனும் ஏனையோரும் நின்னைத் தேடுவர். ஆகலான், சென்று தினைப்புனம் சேவல் போற்றற்கு உன் பைந்தொடி பாங்கியொடு அடைதி. நான் ஆங்கு நாளை வந்திடுவன்.'' என்றருளி மறைந்தனன். அத்தையல் ஐயன் பிரிவினை ஆற்றாதவளாய் வருந்தி, அம்மாதவிப் பொதும்பரை இகந்து செல்லலும், பாங்கி எதிரே வந்து, "நங்கையே! நின்குழற்கு யான் குற்றி வந்த மலர் இவை.'' என்று சில அணிந்து, அவளை அழைத் துச் சென்று, ஏனற்புனமெய்த, ஆங்கு யாழினை யொத்த இன்சொல் நங்கை தோழியோடாடிச் சேவல் காத்து, ஐயனைக் கருத்தில் எண்ணி, ஆங்குற்றாள்.

வளந்தரு தினைப்புனத்து, வள்ளிநாயகி, வதனமாறுடையோன் வருகையைக் காணாது வாடியிருப்ப, அவ்வமயம் தினைக்குரல் முற்றி விளைவினையடைய, வேடர் அது கண்டு விரைந்தவணுற்று, சிற்றிடை வள்ளியை நோக்கி, "துன்னிய தினைக்குரல் செவ்வனே விளைந்தன. அதனை வேங்கைகளும் மலர்ந்துரைத்தன. ஆகலான் அம்மையே!

இந்நாட்கள் றும் வருந்திக்காத்தனை. இனி நீ உன் சிற்றூருக்கு ஏகுவாய்." என்றனர். எயினர் உரைத்த சொல்லைக் கேட்டு அப்பாவை, எறி வேற்பட்ட புண்ணிடை எரி நுழைந்தாலொத்து, வருந்திய மனத்தினை யுடையளாய், அப்புனம் நீத்துத் தோழியொடு சிற்றூருக்கேகுமவள், மானினங்களையும், மயில்களையும், கிளிகளையும், புறாக்களையும், மற்று முள்ளவற்றையும் நோக்கி, "யாங்கள் சிறு குடிலுக்குச் சென்ற தொன்றை, இங்கு வரும் புங்கவற்குப் புகலுதிர்." என்றுரைத்து, இரங்கிச் சென்றனள்.

சென்ற அத்தையல் தன் மனையெய்தி, எண்ணம் வேறாகி, பாவை யாட்டும், கழங்காட்டும், மற்றவும் நீத்துப் பண்டை மடவாரைப் பிரிந்து, பேசாது தனித்திருந்தனள். அப்பொழுது செவிலியும், நற்றாயும், மகளாகிய வள்ளிநாயகியை நோக்கி, "உனக்கு மேனி வேறா கியது. இத்தகைய குற்றம் நேர ஏதுவென்னை ?" என்று கடுமொழி கூறிச் செயிர்த்து, அவளை இற்புறம் போகாவண்ணம் ஆணையிட்டு, உள் ளிருத்தலாகிய இற்செறித்தலைச் செய்தனர். அவள் வேற்கை வள்ளலைக் கூடிப் பிரிந்தமையால், உடல் வருந்தி, உள்ளம் வெதும்பி, உயிரிலா தாள் போன்று அவசமாகி மயங்கிவீழ, ஆண்டிருந்த வேடமாதர் அவளை விரைந்தெடுத்து அணைத்து வருந்திச் சூழ்ந்தனர்.

அவள், சூர்ப்பகைவன் தொட்டமையால் அடைந்த உடலின் துவளுதலையும், கைவளை கழலுதலையும், கூரிய கண்கள் நீர்துளித் தலையும், குணவேறு பாட்டையும், அச்சத்தையும், நோக்கிய மாதர், தம் மலைச்சாரிலுள்ள தெய்வம் தொட்டதென்று மயங்கிக் கருதினர். தந்தையரும், குறவர்களும், தமர்களும், ஏனையரும் ஒருங்கே ஈண்டி, சிந்தை நொந்து, தெரிவையின் செயலைக் கண்டு, முன்னாள் போன்று தேவராட்டியுடன் முருகனை முறையால் விளித்து, வெற்றிவேற் பெரு மானுக்கு வெறியாட்டென்னும் விழவினைச் செய்வித்தனர். அவ்விழா எடுக்குங்கால் வேலனாகிய வெறியாட்டாளன் மீது குமரவேள் தோன்றி, 'இவளுக்குண்டாகிய இது, மற்றோர் செயலுமன்று. இந் நங்கை தமியளாகி ஏனற்புனத்து இருந்த போழ்து யாமே தொட் டாம். ஆகலான், இவள்மாட்டு மாறாகிய இக்குணங்கள் தோன்றின. எம்மனம் மகிழுமாற்றால் பூசையைப் புரிவீராயின், குறையனைத்தும் நீங்கும்." என்று குறிப்பிற் பகர்ந்தான். வீரவேல் அண்ணல் விளம்

பிய மாற்றம் காதில் நுழைதலும், கையாறு அகன்று அக்காரிகை கடிதின் எழலும், அதனைக்கண்ட செவிலித்தாய் முருகற்குப் பூசனை முறையின் முடிப்பேமென்று பரவித் துதித்தாள்.

இவ்வாறு வள்ளிநாயகி இல்லிடை இருக்க வேடர், முதிர்ந்த ஏனலைக் கொய்த பின்னர், முருகவேள் அவ்விடை யெய்தி, அருமை நாயகியைக் காணாது வருந்தி, முகில், தினைப்புனம், மயில், கிள்ளை, புறவு முதலிய பொருள்களைப் பொருள்படுத்தி, "என் அருமை நாயகியைக் கண்டீர்கொல்? அவள் எங்ஙன் ஏகினாள்? யான் அறியுமாறு விளம்புமின்." என்று ஆவலித்து, வருந்தி, அன்று பகற்பொழுதை அப்புன்புலத்துக் கழித்தருளினான். இஃதவ்வறுமுகற்கு ஓர் ஆடல் போலும்! அப்பகல் கழிந்து இரவடைதலும், அந்நள்ளிரவிடை நம்பி இராஜனது ஊருக்கேகி, அவன் சிறுகுடிலுக்குப் பின்புறஞ் சென்று நின்றருளினான். நின்ற அக்குமரனைப் பாங்கியானவள் கண்டு பணிந்து, "நீர் கங்குலில் இவ்விடை வருதல் தகாது. இறைவியும் நும்மைப் பிரியின் உய்யாள். நீவிர் இருவிரும் இவ்விடத்தில் கூடத் தக்கதோர் சூழலுமில்லை. ஆகலான், அடிகளே! அவளை உடன்கொண்டு விரைந்து செல்லுதிர்." என்றிவை கூறி, இறைவனை ஆங்கே நிறுவி, தன் துணைவியாகிய மாதை யெய்தி, "உன் தலைவர் உன்னைக் கொண்டு செல்ல இற்புறம் எய்தி நின்றார். வருதி." என்றனள். நல்லதென்று சம்மதித்த அந்நங்கையைப் பாங்கியானவள், தாயரின் துயிலை யறிந்து, தங்கள் உறவினர் துயிலை யறிந்து, தூங்காத நாயின் துயிலளவறிந்து, அந்நகரோர் துயிலினை யறிந்து, கொடிய பேயும் உறங்கும் அந்நடு நிசியின்கண், வாயிற் கதவைத் திறந்து, வள்ளிநாயகியை அழைத்துக் கொண்டு சென்று, அண்ணலிடத்து உய்த்தாள்.

அறுமுக அண்ணலை நோக்கிய வள்ளிநாயகி அடிபணிந்து, "தீயனேன் பொருட்டு இச்சிறியர் ஊரில் நறுமலர்ப் பாதம் வருந்த நடந்தீர். இந்நள்ளிரவிடை இறைவர் நீர் நடப்பதோ?" என்றிரங்கித் தொழுது நிற்பப் பாங்கி வள்ளலை நோக்கி, "தீத்தொழில் எயினர் காணிற் றீமையாய் முடியும். ஆகலின், இவளைக் கொண்டு நும் மேதக ஊரிற் சென்று இம்மாதுக்கு அருள்புரியும்." என்று கூறி அவளை அடைக்கலமாக நேர்ந்தாள். வள்ளியை அன்போடு ஈந்து மொழிந்து வணங்கி நின்ற பாங்கியை அப்பன் நோக்கி, "நீ எம்பால் வைத்த கரு

ணையை எககாலும் மறக்க கில்லேன்." என்று கூறி உவந்து, அருள் புரிந்தான். அப்பாங்கி வள்ளிநாயகியைப் பணிந்து தழுவி, "அன்னையே! விரைந்து செல்லுவாயாக." என்று குமாரமூர்த்தியின்பாற் கூட்டிப் பின்னர் அவரிடம் விடைபெற்று, மீண்டுக் கவரி வேய்ந்துள்ள கூரை யினையுடைய சிறுகுடிலுட் புக்கிருந்தனள்.

வேற்படை வீரன், வள்ளிநாயகியோடு நடந்து, அச்சிற்றூரைக் கடந்து, மன்மதன் படைபெற்றுக் குலவுகின்றதோர் பசிய இளமாக் காவினுட் சேர்ந்து, வள்ளிநாயகியோடு இன்புற்றிருந்தனன். வைகறைப் போது செல்லாநின்றது. அப்பொழுது வேடராஜன் மனைவியானவள் உறக்கம் நீத்து எழுந்து, தொடியணிகரத்துத் தூய்மொழிமானை எங் கணுந் துருவிக் காணாளாகி, பெட்புறு தோழியைப் பின்னர் வினவ, அத்தோழி, "அவளும் யானும் நேற்றைய இரவில் ஒப்ப வைகி உறங்கிய துண்டு. அன்னையே! பின்னர் அவள் செய்ததை அறியேன்." என்றாள். பிறகு நற்றாய், தன் மகளின்மையை நம்பிராஜனுக்குரைக்க, அதனைக் கேட்ட வேடர்கோன், மனஞ்சுழன்று வெகுண்டு, பொங்கி, "நம்மனைக் காவலுங் கடந்து, நன்னுதல் மடந்தையை, நாம் அறியாவகை கொண்டு சென்றான் யாவனோ?" என்று வீரம் பல மொழிந்து, வாட்படை மருங் கிற்கட்டி, வெற்றிவில் வாளியொடு ஏந்தி, குமரியைக் கவர்ந்து சென்ற கள்வன் செல்லும் நெறியை நாட ஒல்லையிற் செல்வனென்று சீற்ற மொடு சென்றான். அதனைச் சிற்றூரின்கண் உள்ள எயினர் அறிந்து, "காப்பு மிக்க இச்சிற்றூரில் நள்ளியாமத்தேகி, வள்ளியைக் கவர்ந்து சென்ற அக்கள்வனைத் தொடர்ந்து பற்றுவாம்." என்று அக் கானவர் பலரும் பொள்ளெனச் சிலையையுங் கோலையும் பற்றி, போர்த் தொழிற்கமைந்து விரைந்தெழுந்து, வேந்தனொடு குழுமி இரலையூதி, நெறிகள் தோறும் ஓடி, பொதும்பரெல்லாம் புக்கு, புனங்கள் தோறும் நாடி, காற்சுவடு நோக்கி, இடங்கள் தோறும் நடந்து திரிந்த கானவ ரோடு நம்பிராஜன் சென்றனன். அங்கணித்தாகிய ஒரு தண்ணிய சோலையில் களவொழுக்கத்தினால் கந்தனொடு சென்ற வள்ளிநாயகி அதனையுணர்ந்து, அறுமாமுகத்து வள்ளல் அடிகளில் விழுந்து, பொரு மிப் புகலுவாள் :—"எம்பெருமானே! வேடர் பலருங் குழுமி, அம் பொடு வில்லும் ஏனைய படையுங் கொண்டு, இடந்தோறும் நம்மைத் தேடிச் சென்று, இதுபொழுது இச்சோலையின் அருகிலும் வந்தனர்.

அதனால், என் சிந்தை நடுங்குகின்றது. மேற்செய்வ தெனையோ? அறிகிலேன். உரைத்தருளுக." என்றனள். குமரன், "நல்லாய்! வருந் தலை. கிரவுஞ்ச வரையொடு சூரன் உரந்தனைக் கீண்ட செவ்விய வேல் நங்கரத்துள்ளது. நும்மனோர் விரைந்து அமர்புரியச் சூழின், அவரை ஓர் கணப்பொழுதில் வீட்டுதும். உவந்து நோக்கி என் பின்னிருப் பாய்." என்றருளினன். அம்மொழி கேட்ட மடந்தை, ஆறுமாமுகன் புறத்தினில் நிற்ப, அத்திறத்தினை யுணர்ந்த அச்சிற்றூர் எயினர், சீறி வெய்துயிர்த்துப் பொங்கி, அக்காவினை வளைந்து கொண்டனர்.

அவ்வேடர்கோன் அதனைக் கண்டு அத்தண்டலையிற் சென்று, "நங்குமரியைக் கவர்ந்த கள்வன் சிறிதும் அவ்விடம் விட்டுப் பெயர் கின்றானலன். நமது வன்மை முதலியவற்றை அறியான் போலும்? இனி அவனது வன்மையை யாம், முளிபுற்கானில் எரி நுழைந்தாங்கு அழிக்குதும்." என்று கூறினான். பின்னர் அவனும் எயினரும் ஆர்த்துச் சிலையினைத்தையும் வளைத்துச் செஞ்ஞாயிற்றை முகில்கள் மறைத்தாங்கு, முறை முறை அம்புமாரி தூர்த்து முருகனை வளைந்தார்கள். அவ்வொன் னலர் விட்ட வெவ்விய படைகளெல்லாம் தேன்ததும்பிய மென்மலர் போன்று, கட்டழகுடைய காளையாகிய அக்கந்தன் மீது படுதலும், பின்னர் நின்ற பைந்தொடி பதைபதைத்து "நெடிய அம்புகளை நேர் பட எய்து நிற்கும் கிழோராகிய எயினரைச் சுடர் நெடு வேலால் கொல்லுதல் வேண்டும். அரியும் அடுந்தொழில் குறியாதென்னின், மறையும், மானும், கேழலும், பிறவும் அச்சமின்றி அணைந்தெதிர்த்தல் இவ்வுலகில் இயல்பன்றோ?" என்று இன்ன பல குமரி செப்ப, எம் பெருமான் அருட்குறிப்பால் நிகரற்ற கொடியாய் அமைந்த கோழி யானது நிமிர்ந்து எழுந்து ஆரவாரிக்க, எயினர் கோனும், அவன் மதலையரும், கிளைஞரும், அணைந்த பிறரும் வலியழிந்து இறந்து துண் ணென அவனியில் வீழ்ந்தனர்.

தந்தையும், முனைம்மாரும், தமாகளும் வீழ்ந்திறந்தமையை வள்ளிநாயகி நோக்கிப் பதைத்திரங்கிச் சோர்வடைய, ஆறுமுகன் அத் துணைவியின் அன்பினை அளவிடக் கருதி, அக்கடி மென்காவை நீத் துச் சிந்தையில் அருளைத் தாங்கி ஏக, அவனிடத்துத் தலையன்புள்ள அத்தோகையும் தொடர்ந்து சென்றனள். அப்பொழுது யாழினில் வல்ல நாரத முனிவன், அண்ணலெதிரே வந்து வணங்கி நின்று, "நின்

செய்கை யெல்லாம் செப்பியருளுக." என்றனன். அம்முருகன், மயில் போலுஞ் சாயலினையுடைய வள்ளிநாயகியைக் கண்டது முதல் வெவ் விய வேடரை வீட்டியதிருகவுள்ள அனைத்தையும் வகையே மொழிந்த னன். முனிவன் கேட்டு, "பெற்ற தந்தை தன்னையும், மற்றுமுள்ள சுற் றத்தினரையும், செற்றத்துடன் கொன்று நீக்கி, அவர்க்கு நல்லருள் புரியாது நங்கைதனைக் கொண்டேகுதல் எந்தைபிராற்கு இயலுமோ?" என்று கூறினன். வள்ளல், "நீ கூறியதே முறைமை." என்று அக் குளிர்ந்த சோலையிடத்து மீண்டு சென்றருளித் தன்னிடத்து மிக்க அன்புடைய வள்ளிநாயகியின் முகத்தினைநோக்கி, "நம்மிடத்துப் பகைத்துப் போரியற்றி பட்ட நுங்கிளைஞரை யெல்லாம் எழுப்புதி." என்று கூறினன். இனிதென வணங்கி அக்கிளிமொழியாள், "உயிர் நீத்து வீழ்ந்த நங்கேளிர் யாவரும் எழுதிர்." என்று கூறியருள லோடும், நிலத்திடை உறங்குவோர் தொல்லுணர்வு பெற்று எழுமாறு போன்று, சூழ்ந்த தமரொடு அவ்வெயினர்கோன் எழுந்தான்.

அன்னோர் எழுந்தகாலை எம்பெருமான், கருணை வெள்ளம் பொழியும் வதனமாறும், எவரும் புகழும் திறற் புயமீராறும், வேலும் ஒழிந்த படையுங் கொண்டு, ஞானியர் காணும் நற்றிரு உருவினை அக் கானவர் காணும் வண்ணங்காட்ட, அக்குறவர் கண்டு பணிந்து போற்றி, விம்மிதமுடையராய், "திறலமைந்த எயினர் வாழும் சிற் றூரினைக் காக்கும் நீயே எங்குல மடந்தையைக் கனவினில் வெஃகி, எங்குல வரம்பினை யழித்து, நெடியதோர் பழியினை இத்தரையிடை நிறுவினை. தூயம் பெறும் மக்கள் மாள விடத்தினை யூட்டுந் தாயரும் உளரோ? நிற்க, எங்குலப் பெண்ணை யாங்கள் உணராவகையே காதலால் கவர்ந்து, காவல் நீங்கி இவ்விடைக் கொணர்ந்த எந்தையே! இனியெஞ் சிற்றூர்க்கு இவளொடும் ஏகி, கனல் சான்றாக விதிமுறை வேட்டு, நின்னூருக்கு அழைத்துச் செல்வீர்." என்று கூறினர்கள்.

முருகன் அம்மாதுலன் முதலோர் மொழிந்த அவ்வதுவை மொழிக் கிசைந்து, பெருங்கருணை புரிந்து, அப்பெண்ணையும் உடன் கொண்டு யாழ் முனியோடும் அக்காவினை நீங்கிப் பதமலர் நோவப் பருப்பதச் சிற் றூர் புக்கனன். தந்தையும் சுற்றத்தினரும் சண்முகப்பெருமான் பாங்கர் நின்று, மனமகிழ்ச்சியோடும் ஆங்குற்றசிறுகுடியோரைநோக்கி, "முரு கனே நமது மனதைக் கவர்ந்தனன். அவனே நமது மவணடலால்,

மணத்தினுக் கிசைந்து மாதொடு மீண்டனன். இதுவே நடந்தது." என்றனர். சங்கரன் மதலையே தமது தையலைக் கவர்ந்து மங்கல வதுவை முடிக்க அங்ஙன் வந்தனனென்று தங்கிளைஞர் கூற, அச் சிற்றூரார் உற்றோர், பொங்கிய சினமும், நாணும், மகிழ்ச்சியும் தோன்ற நின்றனர். குன்றவர்கோன் சரவண முதல்வனை மங்கையொடு மரபினால் அக்குறிச்சியின் முதன்மைபான தன் அழகிய மனையின் உள்ளுறைத் துச் சென்று, பொலிவமைந்த புலித்தோலில் இருத்தினன்.

அவ்வமயத்து முருகப் பெருமான், அருகிலிருந்த மடமகளை அருளொடும் நோக்க, அக்கொடிச்சியர் புனைந்த வேட்டுவக் கோலம் நீங்கி, முந்துள்ள தெய்வதக் கோலம் முழுமையும் ஒருங்குற்றது. கவலை நீத்த தாதையும், அளவிகந்த கிளைஞரும், செவிலியும், நற்றாயும், பாங்கியும், மற்றை மாதரும் கேடற்ற கற்பாற்றிகழும் தம் புதல்வியின் வனப்பை நோக்கி, "இம்மாது எம்மிடத்து வந்திருந்தது யாம் முன்னர் புரிந்த பெருந்தவமே." என்று போற்றினர். அந்நல்ல மூர்த்தத்தில், அன்பினையுடைய குறவர் கோமான், கந்தவேள் திருக்கரத்தில் அக் கன்னிகை திருக்கரத்தை வைத்து, "எமது தவமாகி வந்த நங்கையைப் பெரு விருப்பால் இன்று தந்தனன். கொண்டருள்க." என்று தடன் ணிய நீரினால் தாரை வார்த்தனன். நல்ல தவத்தினையுடைய நாரதன் அக்கொற்றவேற் பெருமான் குறிப்பினால் தீயொடு ஏனைய பொரு ளுந் தந்து, மணத்தின் சடங்குகள் நாடி ஏதமுறுவண்ணம் அரு மறை விதியாற் செய்ய, அன்னதோர் பொழுதில் அரியும், நான்முக னும், வானோர் இறையொடு பிறருஞ்சூழ, மலையான் மகளொடு அத் தேவதேவன் வந்து விண்மிசை நின்று, தனது அரும்புதல்வன் அறுமா முகத்தோன், பாவையை வேட்கும் பரிசினைக் கண்டான்.

கண்ணுதற் பெருமானும் கவுரியும் கண்டு களித்துத் தண்ணளி புரிந்து நிற்றலும், தண் துழாய் முடியோன், ஆதிய தேவர், உவகை மிக்கு, நறு மலர்மாரி வீசி, அறுமுகத்து அண்ணலை வழிபட்டு ஏத்தி, அஞ்சலி கரத்தொடு ஆரவாரித்தனர் சண்முகப்பெருமான், அத்தகுதி நோக்கி, அச்சிற்றூரின் கண்ணுள்ளார் சிறிதும் அறியாவண்ணம், இமாசலப் பாவையொடு கறைமிடற்று இறைவனைக் கைதொழுது, ஏனை யோர்க்கு முறையான் உவகையொடு முழுதருள் புரிந்தான். அது பொழுது அரிமுதல் அமரர்சூழ, அருந்தவத்தார் தம்மொடும் மங்கை

பார்த்திபன் மறைந்தருளினான். சிவபரஞ் சுடர் எழுந்தருளிய எல்லையில் நிகரற்ற நாரத முனிவன், தானியற்றிய சடங்கு முற்றுதலும், கானவர் கன்னியொடு அம்மான வேலனை வணங்கி ஏத்தினான். மாதுலனாகிய நம்பி என்பவன், வள்ளிதன்னை மணந்த வேலவன் வதுவைக்கோலம் நோக்கி, "இவ்விழியாற் பெறும் பயன் ஒருங்கே இன்று பெற்றனன்." என்றான். அவ்வெயினர் உவகையின் அளவைக் கூறுவார் யாவர்? சிற்றிடையில் தழையுடை கொண்ட அக்கொடிச்சியர் குழுமி, "நிகரற்ற சீர்மலிந்த மருகனும், மின்னேரிடை மென்மயிலும் இன்னேபோல் வைகலும் வாழ்க." என்று ஆசி கூறி, தூமலரொடு கலந்த அறுகினைத் தூர்த்தனர். பிறகு அக்கானவர் செவ்விய தினைமாவும், தேனும், இனிய கனி பலவும், காயும், கிழங்கும் பிறவுமாகிய நல்லுணவினை இலையாலமைத்த கலமாகிய கல்லையிலிட்டு, எம்மானும் நீயும் பரிவுடன் நுகருதிர்." என்று கூற, அதற்கு ஐயன் அருள்புரிந்தனன்.

குறவர் மங்கையும் எயிலெரித்த புங்கவன் குமரனும் கலந்து, அச் செல்லுணவினை மிசைந்திடும் தன்மை முகுந்தனை முதலிட்ட தேவர்பாலும், முனிவர்பாலும், ஏனைச் சராசரங்கள்பாலும் யாண்டுஞ் சார்ந்துளது. குன்றெறிந்த குமரவேள் பின்னர் எழுந்து நின்று, வில்வேடருக்கு இறைவனாகிய நம்பியை நோக்கி, "இந்நங்கையொடும் யாம் சென்று, திருத்தணிகை வரையில் இனிது வைகுவேம்." என்றலும், அம்மாதுலன் நன்றென இசைந்தான். தாயாரும், பாங்கியும் அத்தையலை நோக்கி, 'நங்காய்! நின் அருமை நாயகன் பின்னர் செல்வாயோ.' என்று நவின்று, உவந்து தழுவி, அன்புடன் ஆசிகள் பல கூற, அவள் உவந்து அவர்க்கருளி, வேற்படை வீரனொடு விரைந்து செல்லத் திருவுளங் கொண்டனள். அப்பாவையொடு குமரன், குறவர்கோன் மனையை நீத்து, அந் நம்பி என்னும் அரசனை விளித்து, "தேவரும் புகழும் இச்சிற்றூரில் அரசியல் நடாத்தி, இவ்வுழி இனிதிருத்தி."என நவின்று, ஆண்டு நின்றெழுந்தருளி, அவ்வள்ளியின் சில்பு நீத்து, மின்னும் பரிதியும் இயைந்ததொத்து, விண்ணூறுகச் சென்று, தன்னையே நிகர் தணிகை வரையின் எய்திப் பண்டையின் தேவர் கம்மியன் இயற்றிய கோவிலுட் புகுந்து, வனசரர் பாவையொடு ஒன்றி இச்சகத்து உயிர்களாவும் இன்பமுற உய்யத் தான் இன்பந் துய்த்து, இனிதமர்ந்தருளினான்.

அக்காலத்தில் வள்ளிநாயகி அறுமாமுகன் அடியிணைப் பணிந்து, "இம்மலையின் இயற்கையை இயம்பி யருளுக." என்றலும், பேரருளாளனாகிய பெம்மான், "சூர் முதலிய அவுணர் போரி னும், ஏனல் போற்றும் எயினர் போரினுந் தணிவடைந்து சென்று, யாம் இங்கிருத்தலால் இம்மலை, செருத்தணியென்று ஓர் மங்கலப் பெயரினை எய்தியது. அன்றியும் மால்வரை மங்கை பரமனை உன்னிப் பெருந்தவம் இழைத்துப் பின்னர்ப் பெட்புடன் தழுவிக் குழைத்து, மாமூலத்தில் எழுந்தருளியிருக்கும் அக்காஞ்சிமாநகரின் அருகில் நின்றிடலால் சொல்லலாவதோ இம்மலையின் தூய்மை? மலைகளிற் சிறந்த இம்மலையில் யாம் என்றும் உவந்து, இன்னிசை முழக்கத்துடன் ஆடலைப் புரிவேம். எமக்கு இம்மலை பெரு உவப்பினைத் தரும். அதற்குச் சான்று விண்ணவர்க்கிறை வைகலும் நமக்குச் சாத்துதற் பொருட்டு, இம்மலையின் கண்ணுள்ள தண்ணிய சுனையில் மூன்று காவிகளை வைத்துள்ளான். காலைப்போதினில் ஒருமலர், பரிதி உச்சி சேரும் போதினில் ஒரு மலர், விண்ணிருள் மயங்கும் மாலைப் போதி னில் ஒரு மலர் ஆக நாலப்போது மூன்று ஒழிவின்றி நித்தலும் மலரும் மதிமுகத்து மாதே! உலகம் திரியுஞான்றும் இச்செயல் மாறாதிருக்கும். இம்மலையின் பெருமையை வகுக்கும் வன்மையுடையவர் யாவா? இக் கிரியைத் தொழுதுளார் பவமெலாம் ஒழியும். சிந்தையால் அன்பு கொடு ஏகி, இச்சுனையிடை விதிமுறை மூழ்கி நம்மைத் தொழுவோர் நம்பதமடைகுவர். ஐந்து வைகல் இம்மலையினை அடைந்து, எம் அடி யிணைப் புகலெனக் கருதி வழிபடுந் தவத்தினையுடையார் உள்ளத்தில் எண்ணியாங்கெய்தி, இம்மை இன்பமுற்றி இறுதியற்ற வீட்டின்பத் தினையும் எய்துவர்." என்று அவ்வரையின் பெருமையை, வீரவேற் பெருமான் விரித்துரைத்தலும், வணங்கிக் கேட்ட வள்ளிநாயகி, "உன் திருவருளால் உணர்ந்து உய்ந்தனன்." என்றாள்.

பின்னர் அம்மலையின் ஒரு சாராக மாலயன் உணரா வள்ளலின் ஐவகை உருவின் ஒன்றாகிய சிவலிங்கத் திருவுருவத்தை ஆகம முறைப் படி பிரதிட்டை செய்து, அம்மையொடு வழிபட்டு, விரும்பிய அரு ளும் பெற்று, அந்நங்கையொடு சின்னாள் அங்கண் வைகி, ஒருநாள் விழைவின் மிக்கி அத்தணிகையினின்றும் வள்ளியொடு ஒரு விமானத் தெழுந்தருளி, வெள்ளி மலைக்கருகிலிருக்கும் தன் கந்த வெற்பிற்

சென்று, விமானத்தினிழிந்து, எல்லையற்ற பூதர் போற்றும் அப்பொன் னாலயத்தில் வள்ளிநாயகியொடு புகுந்து, இந்திரன் மகளாகும் ஏந்திழை வாழும் அம்மந்திரத்தினில் வனிதையொடு புகுந்தருளினன்.

வேதமும் அறிதற்கரிய அப்பெருமான் எழுந்தருளுதலைக் கண்ட தெய்வயானையம்மை உவப்புடன் வந்து, வந்தனை செய்த லும், அவளை மார்புறத் தழுவித் தான் விட்டுச் சென்றதால் எய்திய தனிமையின் துயரினை நீக்கியருளினன். அருகினின்ற வள்ளி நாயகி அமரர்கோன் பாவையை வணங்க, அவள் அவளை எடுத்துப் புல்லி, "தனித்த எனக்குத் துணைவியாயுற்றனை. நன்று நன்று." என்று பரிவு கூர்ந்திருந்தனள். செவ்வேல் முருகன், துணைவியர் இருவரோடும் மணி யிட்டிழைத்த மடங்கலாதனத்து அமர்ந்தருளி இருக்கும் சமயத்து, மகவான் மகள் அக்குகப்பெருமானை நோக்கி, "எந்தையே! இங்கிப் பாவையின் வரவினை இயம்புதி." என்ன, சண்முகப் பெருமான், பேருவகைபூத்து, "உலகளிக்கும் திருமாலின்பால் முன்னர் நீங்களிரு வரும் தோன்றினீர். ஆண்டு பன்னிரண்டாமளவும் எம்புயந்தோய வேண்டி நின்று விழுத்தவம் இயற்றினீர். யாம் உங்கள் பால் எய்தி, நீவிர் விண்ணினும், மண்ணினும் வேறு வேறாகித் தோற்றுவீர். யாமும் உங்களை வருபவத்துடன் மணந்து சேருதும். என்றருளினும். சொன்னதோர் முறையால் முன்னை நீ முகிலூர்தியின்பால் யாமக ளாகி வளர்ந்தனை. அப்பொழுது உன்னை அன்பொடு வேட்டனம். பிறைநுதற் பேதையே! நின் இளையளாகிய இவள், யாம் உரைத்த தொன்றை யோர்ந்து நீக்குளித்துப் பழவடிவினை நீத்துச் சூக்கும உடலுடன் எழுந்து, வள்ளிமலையிற் சென்று, சிறப்புறத் தவ மிழைத்து இருந்தனள். அங்குச்சிவமுனியின் காட்சி இன்பத்தால் கருவெய்திய அந்நவ்வியின்பால் பிறந்ததுமுதல் வேடரிடம் வளர்ந்து, ஏனல் காத்திருந்து, தன்னிடம் அணைந்து வரைந்தெய்தித் தணி கையிற் றங்கிக் கந்த வெற்படைந்தது இறுதியாக அத்தெய்வக் களிற்றினுக் குரைப்ப, அதனைக் கேட்ட அவ்வம்மை, "முன்னையின் முராரியுரல் தோன்றிய எம்மிருவரிடை நேர்ந்த பிரிவினை அகற்றி, நும்முடன் ஒருங்கே கூட்டிய நும்பெருந் தகுதிக்கு யாம் செய் கைம்மாறும் உண்டுகொல்!" என்றனள். அருகிலிருந்த வள்ளி நாயகி "முற்பிறப்பில் இளையளாகிய யான் இப்பிறப்பிலும் நின் தங்கையாகி,

இங்குற்றேன். என்னைக் காக்குதி." என்று தாழ்ந்தனள். தெய்வயானையம்மை அவளை எடுத்தணைத்து, "நின்னை இனிய துணையாகப்பெற்றேன். எம்பிரானது அருளும் பெற்றேன். ஆதலின் எனக்கரியதென்? என்னை இவ்வாறு அவ்விருவரும் அளவளாவி அன்புடன் [illegible]மும், மலரும் போன்று கலந்து, வேறுபாடின்றிச் சரவணத்து ஐயனைச்சேர்ந்து, போற்றி யொழுகாநிற்ப, வெற்றிவேள் பெருமான் உவந்து, வீற்றிருந்தருளினன்.

உமையம்மையை இடத்தினிற் கொண்ட சிவபெருமானது ஒரு முகத்தினில் கண்ணொரு மூன்றும் வைகுங் காட்சியைப்போல மாதும், வானவர் மாதும் ஆகிய இருவரும் இருபுறங்களின்மேவ, அண்ணலாகிய குமரவேள் அவர்க்கு அருள்புரிந்திருந்தனன். சேவற்கொடியும், கொடி மான்றேரும், சிறையணி மயிலும், தொன்னாள் வேள்வியிற்றோன்றிய தகரும், சூரருரங்கிழித்தவேலும், ஏனைய படையும், யாவும் முருகவேள் மொழியும் பணிகளையாற்றிக் கோயிலின் மருங்கும் முன்னும் குழுமி வைகியிருந்தன.

"ஆறிருதடந்தோள் வாழ்க வறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்கக் குக்குடம் வாழ்க செவ்வேற்
ஏறியமஞ்சை வாழ்க யானைதன் னணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க சீரடியாரெல்லாம்"

"புன்னெறி யதனிற்செல்லும் போக்கினை விலக்கிமேலா
நன்னெறி யொழுகச்செய்து நவையறு காட்சி நல்கி
யென்னையு மடியனாக்கி யருவினை நீக்கி யாண்ட
பன்னிரு தடந்தோள் வள்ளல் பாதபங்கயங்கள் போற்றி"

"என்னாயகன் விண்ணவர் நாயகன் யானைநாம
மின்னாயக னான்மறை நாயகன் வேடர்நங்கை
தன்னாயகன் வேற்றனி நாயகன் றன்புராண
நன்னாயகமாமெனக் கொள்க விஞ்ஞாலமெல்லாம்"

"பற்று வருள்சேர் குமரேசன் வண்காதை தன்னைச்
சொற்றாருமாராய்ந் திடுவாருந் துகளாறுமே
கற்றாருங் கற்பான் முயல்வாருங் கசிந்துகேட்க
லுற்றாரும்வீடு நெறிப்பாலி னுறுவரன்றே"

"பாராகி வனைப் பொருளாயுயிர்ப் பன்மையாகிப்
பேராவுயிர்கட் குயிராய்ப் பிறவற்றுமாகி
நேராகித் தோன்றலிலதாகி நின்றான் கழற்சே
யாராத காதலொடு போற்றி யடைது மன்றே

கந்தபுராணம் முற்றிற்று

PRINTED AT THE B. N. PRESS, MOUNT ROAD, MADRAS.